# “பிரேமாஞ்ச[illegible]”



## கிளை-1.

பல்லவ வல்லரசின் எழில் மிக்க காஞ்சிநகர். நகரின் தெருக்கள் தோறும் கல்லில் இழைத்த ஓவியங்களைப் போன்ற கோவில்கள்.

நகரின் நடுநாயகமாய்த் திகழ்கிறது மன்னர் கோட்டம். அற்புதமான சிற்ப வேலைப்பாடுகளுடன் கம்பீரமாக விளங்கும் அந்த அரண்மனையின் முன் மக்கள் கூடிக் கொண்டேயிருக்கிறார்கள். எல்லோரும் ஊர்வலம் புறப்படும் நல்ல வேளையை எதிர்பார்த்துக் கொண்டு நிற்கிறார்கள்.

அரண்மனையின் பிரம்மாண்டமான வாயலில் பட்டத்து யானை நின்று கொண்டிருக்கிறது. அதன் நெற்றி, கழுத்து எல்லாம் சில ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றன. உடல்மீது மிக விலையுயர்ந்த பட்டுத் துணி போர்த்தப்பட்டிருந்தது. அதன் கரைகளிலே சரிகைப் பூக்கள் ஜொலிக்கின்றன. மாவுத்தனும், வேறு ஆயுதபாணிகளாகிய அரசரின் சேவகர்களும் அந்த யானையின் அருகே எதையோ எதிர்பார்த்தவர்களாக நின்று கொண்டிருக்கின்றனர்.

அதே நேரத்தில் கோட்டத்தின் உட்பகுதியில் கலா மன்றத்தில் அறிஞர்களும், கலைஞர்களும், ரசிகர்களும் ஏராளமாகக் கூடியிருந்தனர். அவர்களில் சிலர் மன்றத்தின் மத்தியிலே ஒரு தங்கப் பீடத்தைப் போட்டனர். மற்றொருவர் தலைக்கோல் ஒன்றை பய பக்தியுடன் தாங்கியவராய் அப் பீடத்தின் அருகே வந்தார். பீடத்தின் சமீபமாக இருந்த பெரியவர்களில் ஒருவர் முன்வந்து தலைவணங்கி அத் தலைக் கோலை வாங்கினார். பின்பு அந்த அழகிய பீடத்தில் அதை வைத்தார்.

எல்லோரும் அத் தலைக் கோலை ஒரு கலைத் தெய்வமாகவே பாவித்தனர். ஏனெனில் இந்திர சபையில் என்றோ ஒரு நாள் நடந்த ஒரு நிகழ்ச்சியை அது ஞாபகமூட்டிக் கொண்டிருந்தது. ஒரு சமயம் அகத்தியர் இந்திரன்

அவைக்குச் சென்றார். அவரை கௌரவிக்க அன்று ஊர்வசி நடனமாடினாள். ஆனால் அவள் அங்கிருந்த இந்திரன் மகன் சயந்தன் மீது கொண்ட ஆசையால் ஆடலில் தவறினாள். மிக உன்னதமான கலை, ஆசையால் அபசாரப்பட்டதை அறிந்த அகத்தியர் சயந்தனையும், ஊர்வசியையும் பூமியில் பிறக்கும்படி சாபமிட்டார். சயந்தன் மூங்கிலாகப் பிறந்தான். ஊர்வசி நாடகக் கணிகையாகப் பிறந்தாள். மூங்கிலாகப் பிறந்த சயந்தனையே தலைக்கோலாகப் பாவித்து அதைப் பழைய கால அரசர்கள் கௌரவித்தனர். அதை வணங்குதற்குரிய கலைப் பொருளாகவும் மாற்றிவிட்டனர்.

அத்தகைய சிறப்பு வாய்ந்த அத் தலைக் கோலை பீடத்தில் வைத்த பிறகு அங்கிருந்த சிலர் மந்திரங்கள் ஓதினர். ஆடலாசிரியர், இசையாசிரியர், குழலாசிரியர் முதலியோர் புனித நதிகளின் நீர் நிறைந்த பொற்குடங்களை ஏந்திக் கொண்டு முன் வந்தனர். கண்களைப் பறிக்கும் சித்திர பூவேலைப்பாடுகள் நிறைந்த அப் பொற்குடங்களில் உள்ள தண்ணீரை தலைக் கோலின் மீது ஊற்றினர். இந் நீராட்டு வைபவம் முடிந்ததும், பற்பல மலர்களினால் தொடுக்கப்பட்ட வண்ணப் பூமாலையை அக் கோலுக்குச் சூட்டினர். அப்பொழுது அக் கலா மண்டபம் எங்கும் நறுமணம் மிக்க புகைச்சுருள்கள் அலைமோதிக்கொண்டிருந்தன.

மாலையுடன் விளங்கிய அத் தலைக் கோலை பெரியவர் ஒருவர் தாங்கிக் கொண்டு அங்கிருந்து புறப்பட்டார். மற்றவர்களும் அவரைப் பின் தொடர்ந்தனர். அரண்மனைக்கு வெளியிலே உள்ள அகன்ற இடத்திற்கு அவர்கள் எல்லோரும் வந்து சேர்ந்தனர். அங்குதான் பட்டத்து யானை காத்துக் கொண்டிருந்தது. பெரியவர் கையிலிருந்து ஆடலாசிரியர் தலைக் கோலை வாங்கினர். இதற்கிடையில் அரசரின் ஐம்பெருங் குழுவினர்களாகிய அமைச்சர், புரோகிதர், சேனாதிபதியர், தூதுவர், ஒற்றர் முதலியோர்களும் தகுந்த உடை அலங்காரத்துடன் அங்கு வந்து சேர்ந்தனர். ஊர்வலத்துடன் செல்லுவதற்குரிய அழகிய தேரும் அங்கு நின்று கொண்டிருந்தது.

தலைக் கோலை வாங்கிய ஆடலாசிரியர் கஜேந்திரன் முன் சென்று நின்றார். நீண்ட தந்தங்களையுடைய யானை தன் துதிக்கையைத் தூக்கி, நெற்றியில் பட வைத்து வணங்கியது. உடனே உதிர்ந்த மலர்களை அதன்மீது பொழிந்தனர். சிற்ப சௌந்தரிய மிக்கச் சிறிய பீடம் ஒன்று அதன் முதுகில் வைத்து நன்கு கட்டப்பட்டிருந்தது. வாழ்த்துடன் அத்தலைக் கோலை அப் பீடத்தில் வைத்தனர். உடனே மூன்று வகையான முரசுகள் முழங்கின. அம் முழக்கத்துடன் வேறு பல வாத்தியங்களின் ஓசை எழுந்து எங்கும் பரவியது. மக்கள் உற்சாகமுடன் ஆரவாரம் செய்தனர்.

அக்கணமே தலைக்கோல் ஊர்வலம் அங்கிருந்து புறப்பட்டது. இருபக்கங்களிலும் தமிழ் நாட்டின் மறவர்கள் பல ஆயுதங்களை ஏந்திச் சென்றனர். அவர்களுக்குப் பின்பு வீரப் பார்வைமிக்க புரவிகள் போய்க்கொண்டிருந்தன. அவற்றின்மீது போர்க்களங்களில் பல வெற்றிகளை ஈட்டிக் கொண்ட மகா வீரர்கள் நெஞ்சு நிமிர்ந்து அமர்ந்திருந்தனர். பல விருதுகளைத் தாங்கிய காவலர்களில் பலர் இருபக்கங்களிலும் பிரிந்து நின்று ஒரே மாதிரியான நடையில் போய்க் கொண்டிருந்தனர்.

பல்லவ மன்னனிடம் தோற்றுப்போன ஓர் அரசனின் வெண்குடைக் காம்பிலிருந்து செய்யப்பட்ட அந்தத் தலைக்கோலின் ஊர்வலம் தேர் சகிதம், நகரின் முக்கியமான தெருக்களின் வழியாகச் சென்றது. அங்கங்கே மக்கள் அந்த ஊர்வலத்தில் கலந்து கொண்டனர். எல்லோர் முகத்திலும் உற்சாகம் உற்சவம் கொண்டாடியது. அவர்கள் அன்றைய தினம் மன்னர் கோட்டத்தில் நடக்கப்போகும் நடன அரங்கேற்றத்தைப் பற்றியே பேசிக் கொண்டே போயினர்.

“ஆடல், பாடல், அழகு எல்லாம் அவளால் ஒரு புது அழகு பெறும் என்பதில் ஐயமில்லை” என்றார் ஒருவர்.

“சந்தேக மென்ன? அவள் தாய் சோழநாட்டைச் சேர்ந்தவள். மகா கலாவதி. அவள் ஆடி நான் பார்த்திருக்கிறேன். அவளுக்குப் பிறந்த இச் சில்பகாரிகையும்

மிக நன்றாக ஆடுவாள் என்று சொல்லவும் வேண்டுமோ? இன்றைய அரங்கேற்றுபடி அருமையான கலை விருந்தாக இருக்கப் போகிறது" என்றார் இன்னொருவர்.

"அந்தோ! பாவம்" என்றார் பக்கத்திலிருந்த ஒரு மனிதர் அனுதாபத்துடன்.

"நல்ல விஷயத்தைப்பற்றி பேசும் போது அமங்கலமாக எதற்கு, ஐயா, பேசுகிறீர்?" என்று மற்றவர்கள் ஏக காலத்தில் கேட்டனர்.

"இன்று அரங்கேறும் யுவதியின் தாய் இல்லையே என்றுதான் கவலைப்படுகிறேன். துரதிர்ஷ்டவசமாக அவள் பாலியத்திலேயே தன் தாயை இழந்து விட்டாள் என்பது உங்களில் சிலருக்குத் தெரியாமலிருக்கலாம். ஆனால், நல்ல காலமாக செவிலித் தாய் ஒருத்தி அப் பெண்ணை வளர்த்து, ஐந்து வயதிலேயே தகுந்த ஆசிரியர்களிடம் நடனக் கலையைக் கற்றுக் கொள்ள ஏற்பாடு செய்தாளாம். அவளுடைய முயற்சி வீண் போகவில்லை. நாட்டிய நன்னூல் பிசகாமல் ஆடவும், பாடவும் அவள் கற்றுக் கொண்டுவிட்டாளாம். அழகே உருவெடுத்த அவளுடைய ஆடல்கள் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் என்று எதிர்பார்ப்பது மிகையல்ல" என்று மூச்சுவிடாமல் பேசிக் கொண்டே போனார்.

" அவள் நடனத்தைப் பார்ப்பதற்கு முன்பே புகழ்வது உகந்ததல்ல. கேள்விப்பட்டதை வைத்துக் கொண்டு இப்பொழுதே பாராட்டவேண்டாம்" என்று இன்னொருவர் குறுக்கிட்டுச் சொன்னார்.

"சரி, இன்று அவள் ஆடலைப் பார்க்கத்தானே போகிறோம். பார்த்த பிறகு நீயே நான் முன்கூட்டிச் சொல்லியுள்ளதை ஒப்புக் கொள்ளுவாய். அவள் கலைப் பரம்பரையில் வந்துள்ள செல்வி. ஆண்டவன் அழகையும் அமோகமாக அளித்திருக்கிறான். அழகுக் கலையாகிய நடனம் அவளது கலைத் திறமையினால் ஒரு புது சௌந்தரியத்தை நிச்சயம் பெறப்போகிறது" என்று முதலில் பேசிய மனிதர் தன் கருத்தை வற்புறுத்தினார்.

இவ்விதம் பலர் சம்பாஷித்துக் கொண்டே அவ்வூர் வலத்தில் சென்று கொண்டிருந்தனர். ஊர்வலம் பல முக்கிய தெருக்களைக் கடந்து மறுபடியும் அரண்மனையை நோக்கித் திரும்பியது. முன்னும் பின்னுமாகச் செல்லும் மக்களுக்கு மத்தியிலே அந்தப் பட்டத்து யானை, தன் உடலை இங்கு அங்குமாகத் தாளம் பிசகாமல் அசைத்துக் கொண்டே போய்க் கொண்டிருக்கிறது. வாத்தியங்களின் இசை அலைகளும், தோல் கருவிகளின் லயப்பூர்வமான முழக்கமும் வானளாவி எழுந்தன.

இன்னும் கொஞ்சந் தூரந்தான் இருக்கிறது. விரைவில் ஊர்வலம் அரண்மனையை அடைந்துவிடும்.

## கிளை-2.

பாணர்கள் வசிக்கும் அழகிய தெரு அது. அத்தெருவின் திலகங்கள் போல பல மாளிகைகள், இல்லங்கள் திகழ்கின்றன. மாளிகைகளுடன் இணைந்த வேயா மாடங்கள் (நிலா முற்றங்கள்) தனி அழகுடன் விளங்குகின்றன.

அவ்வீதியின் 'உயிர்' ஆடலும், பாடலுமே. எப்பொழுதும் இசைத் தென்றல்தான் அங்கு வீசிக் கொண்டிருக்கும். கலையின் எழிலும், களிப்பும், பூரிப்பும் அங்கு "நிரந்தர வாசிக"ளாய் விட்டன!

கலைப் பண்புடன் எழுப்பப் பட்டிருந்த அம்மாளிகை அத் தெருவின் 'கன்னிகை'க் காட்சியளித்தது. கந்தர்வக் கோபுரமோ என்று அதைக் கண்டவர்கள் மலைத்து நிற்பது சகஜம்.

மனதை அள்ளும் அம் மாளிகையின் உட்புறம் பல கட்டுகளால் பரிமளித்துக் கொண்டிருக்கிறது. ஒரு புறம் அலங்கார மண்டபம். அதன் சுவர்களிலே வர்ண அலைகள் கலந்துறவாடும் உயிர் பெய்த ஓவியங்கள். அவை சிந்தனைக்குச் சிறகளித்தன.

இதழ்களை விரித்த தாமரையைப் போன்ற அடிப் பீடங்களுடன் ஓங்கி உச்சியை முத்தமிட்டுக் கொண்டு நிற்கின்றன கம்பங்கள். அம்மண்டபத்தைத் தாங்கி நிற்

கும் அவைகளின் 'சிரசு' பாகம், "என்னை மட்டும் பார்த்ததுடன் நின்று விடாதீர்கள். தமிழ் ஓவியர்களின் கைத்திறனை, கலா உள்ளத்தின் உயர்வை, இதோ, இந்தச் சித்திரப் பூவேலைகள் நிறைந்த விதானத்தில் காணலாம்" என்று சொல்லுவது போல் தோன்றியது!

ஒரு பக்கம் பெரிய நிலைக் கண்ணாடி. அதன் மேல் பகுதி விளிம்பின் இருபுறங்களிலும் தோகை வளைந்த அழகிய மயில் உருவங்கள் செதுக்கப்பட்டிருந்தன. அம் மயில் உருவங்கள் அக் கண்ணாடியின் பொதுத் தோற்றத்தில் அழகை அள்ளித் தெளித்துக் கொண்டிருந்தது.

எதிரே வனப்பு மிக்க பளிங்காசனம். அதைச் சுற்றி வேறு பல சிறிய பெரிய பீடங்கள், வெள்ளியினாலான முக்காலிகள், ஆசனங்கள் காணப்பட்டன. உயர்ந்த பீடமொன்றில் குங்குமக் குழம்பிலிருந்து பல நிறமான வண்ணப் பொருள்களும், பூசுவதற்குரிய வாசனைப் பொடிகளும் வைக்கப்பட்டிருந்தன. மற்றொரு பீடத்தில் பல வித பூக்கள், பூமாலைகள், புகைப் பொருட்கள், சந்தனக் குழம்பு முதலியவை "எங்களை அண்டியவர்களை மகிழ்ச்சிக் கொள்ளச் செய்வோம்" என்று சொல்லாமல் சொல்லிக் கொண்டிருந்தன. இன்னொரு வடிவான அகண்ட பீடத்தில் நவரத்தினங்களால் இழைக்கப்பட்ட பல ஆபரணங்களும், தங்கத்தாலான அணிகளும் ஒளிவிட்டுக் கொண்டிருந்தன.

அங்கு ஒரு மூலையில் பெரிய வெண்கலக்கிண்ணி ஒன்றிலிருந்து அகிற் புகை வட்டங்கள் மேலெழுந்து கொண்டிருக்கின்றன. அக் கிண்ணியின் அருகே முதுகைக் காட்டிக் கொண்டு ஒரு வனிதை அழகிய ஆசனமொன்றில் அமர்ந்திருக்கிறாள். கார்முகில் போலக் கறுத்திருந்த அவளது கேசஜாலங்களை மற்றொரு யுவதி தன் கரங்களின் மேல் படரத் தாங்கி, கிண்ணியிலிருந்து எழும் அகிற் புகையில் அவற்றை உலர்த்திக் கொண்டிருக்கிறாள்.

நீண்ட கூந்தலையுடைய அவ்வனிதை சொல்லில் அடங்காத அழகெனும் அமுதத்திலே பூரித்தெழுந்த கந்

தர்வக் கொடியைப்போல் திகழ்ந்தாள். மாந்தளிர் போன்ற அவளது மேனியிலே இன்பம் சிறகடித்துக் கொண்டிருந்தது. யௌவனத்தின் சோபை ரதியின் அணுக்களை எல்லாம் அம் மின்னாளின் ஏகபோக உரிமை யாக்கிவிட்டது. அவளது அகண்ட கண்களிலே அழகின் உயிர் உல்லாசமாக உலாவிக் கொண்டிருக்கிறது. "என் அருமைக் கண்களே, உங்கள் பாதுகாப்புக்கு இரு பாங்கி களாக நாங்கள் அரண்செய்து கொண்டிருக்கிறோம்" என்று அவளின் நீண்டு வளைந்த அழகிய புருவக் கொடி கள் சொல்லிக் கொண்டிருந்தன! புன்னகையோ இரு பவளத் துண்டங்களாக மாறி, அந்த அணங்கின் இரு அதரங்களாய் அமைந்துவிட்டன. ஊடல், கூடலில் உவக்கும் காதலர்களைப் போல தோன்றும் அந்த உதடு கள், அசையும்போது. சுருக்கத்தில் அக்காலத்திய தமிழ்ச் சிற்பிகளுக்கு அவளது வடிவம் ஒரு கலை ஊற்றாக விளங் கியதெனலாம்.

"கூந்தல் உலர்ந்துவிட்டது" என்று அவளின் உயிர்த் தோழி கூறினாள். உடனே அம்மின்னாள் திரும்பி, அங்கிருந்து எழுந்து மற்றோர் ஆசனத்தில் அமர்ந்தாள். அக்கணமே அவளுடைய உயிர்த் தோழி வாசனைத் தைலத்தை கையில் ஊற்றி, அவளது கூந்தலில் பக்குவமாகத் தடவி, சீவினாள்; எழில்பெற அக்கேசங்களைப் பிரித்து சடையாகப் பின்னினாள். பின்பு சடையின் அடிப்பாகத் தில் கல்லிழைத்த பூக்கவசத்தால் கவரப்பட்ட பட்டுக் குஞ்சத்தை இணைத்துக் கட்டினாள். தன் உள்ளம் உவக்க, கண்கள் மலர அத்தோழி, சௌந்தரியத்தின் வளைவு குழைவுபோல மின்னிக்கொண்டிருந்த அச் சடையைப் பிடித்து லளிதமாக இழுத்துவிட்டுச் சொன்னாள்: "இதோ [illegible] மன்மதன் இங்கு வந்துவிடுவான். சந்தேகமேயில்லை!". அப்பொழுது அவளது அழகிய வதனத்தில் குறும்புத் தனமான சிரிப்பின் ரேகை தன்னொளி காட்டியது.

"மன்மதனா? ஏன்? அவனுக்கு இங்கென்னவேலை? ...." என்று சொல்லிக் கொண்டே அந்தச் சுந்தரியாகிய பிரேமாவதி எழுந்து நின்றாள். பட்டு இரப்பைகள் வனப்

பின் சுரக்கட்டைகளைத் தட்டுவதுபோல தொட்டுக் கொண்டன.

"அதுவா? இதோ, உன் சடைதான் என் உடைவாள். உடைவாளை இழந்த என்னால் என்ன செய்யமுடியும்? என்று இங்கு வந்ததும் மதனன் கூறுவான் என்பதில் எனக்குச் சிறிதும் ஐயமில்லை" என்றாள் தோழி.

"அப்படியா சொல்லுகிறாய்? இங்கு மன்மதன் தன் உடைவாளைத் தேடிக் கொண்டு வந்தால் நான் என்ன சொல்லுவேன், தெரியுமா? ஹே, காமதேவா, என்வேணி உன் உடைவாள் அல்ல; ஆனால், அதை உன் உடைவாள் என்று நினைக்க உன்னை மயக்கிய கலைப் பெண் இதோ நிற்கிறாள்! இவளுடைய கைவண்ணத்தை மெச்சி இவளின்மீது உன் கிருபையைச் செலுத்து என்று நான் கூறிவிடுவேன்"—இவ்விதம் சொல்லிக் கொண்டே சிரித்தாள் பிரேமாவதி. 'தின்பதற்கல்லாது தின்னப்படுவதற்கே' அமைந்த அந்த அணங்கின் பற்கள், இரத்தம் போன்ற சிவந்த உதடுகளின் அசைவினாலேற்பட்ட இடையிலே தலைகாட்டி, அழகுக்கு நிலவுக் கோடுகளை இழுத்துவிட்டு மறைந்தன.

"சரி, விவாதத்திற்கு இப்பொழுது நேரமில்லை, சீக்கிரமாக நடனத்திற்குரிய ஆடைகளைத் தரித்துக்கொள். பின்பு ஆபரணங்களை நான் உனக்கு அணிவித்து அந்த மதனனை மூர்ச்சைப்போட்டு விழச் செய்கிறேன்!" என்றாள் தோழி.

"கோதை, உன் குறும்புத்தனத்தை மாத்திரம் விடமாட்டாய்" என்று தன் மலர்க் கரத்தால் கண்ணாடி போன்ற கோதையின் கன்னத்தில் தட்டிவிட்டு, கவிதையின் எழில் நடையில் சென்றாள் உடை அறைக்கு. நடனத்திற்கென்று விசேஷமாகத் தயாரிக்கப்பட்ட விலையுயர்ந்த புதுப் புடவையைக் கட்டிக் கொண்டாள். அப்புடவையில் சரிகைப் பூக்கள், மயில், மான்கள், அன்னங்கள் முதலியவற்றின் உருவங்கள் வெவ்வேறு பக்கங்களில் அழகுற அமைந்திருந்தன. கோதை பக்கத்தில் நின்று அப்புடவையை அழகுற கச்சிதமாகக் கட்டிவிட்டாள். அவ்வுடைக்கு எடுப்பாக பிரேமா மார்க் கச்சையைத் தரித்துக் கொண்டாள்.

"வா, வா இந்த அழகுக்கு அழகு செய்யவேண்டும்" என்று கோதை பிரேமாவதியின் மலர்க் கரங்களைப்பற்றி இழுத்துக் கொண்டே நிலைக் கண்ணாடியின் முன்னிருந்த பளிங்காசனத்தின் முன் வந்து, அவளை அதில் உட்கார வைத்தாள்.

"சரி, இன்று நான் உன் கைப் பொம்மை" என்றாள் பிரேமாவதி தன் எழில் வடிவத்தைக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டே.

"கைப் பொம்மை இருக்கட்டும், முதலில் இப்படித் திரும்பு" என்று கூறிக் கொண்டே, பக்கத்தில் உயர்ந்த பீடத்திலிருந்த ஆபரணங்களிலிருந்து ஒவ்வொன்றாக எடுத்து பிரேமாவதிக்கு அணிவித்தாள் கோதை. இதற்கிடையில் பிரேமா முதலில் நீலக் குதம்பைகளை காதுகளில், தானே போட்டுக் கொண்டாள். கைகளை நீட்டச் சொல்லி கோதை, சித்திர வேலைப்பாடு மிக்க சூடகம், செம்பொற்வளை, வல்வளை முதலியவைகளைப் போட்டாள். பின்பு அவளது கால்களில் பாடகம், சதங்கை, பாதசாலம் முதலிய அணிகளை அணிவித்தாள். கால் விரல்களில் பீலி, இன்னும் வேறு சில அணிகளை மாட்டினாள். சட்டென்று எழுந்து பிரேமாவதியின் தலையில் அழகு தரும் சில நகைகளைப் போட்டு, அவைகளைச் சரி செய்தாள். அழகின் கம்பீரத்தைப் போன்ற அந்த மங்கையின் தோளில் தோள்வளைகள் மாட்டப்பட்டன. பிறகு கோதை, வீர சங்கிலி, சரப்பளி, மணியாரம் போன்ற பல ஆபரணங்களை எடுத்து வடிவாக பிரேமாவதியின் கழுத்தில் போட்டாள். அச்சங்கிலிகளின் ஒன்றின் கல்லிழைத்த முகப்பு, பிரேமாவதியின் பிடரியை வடிவாக மறைத்துக் கொண்டிருக்கிறதா என்று பார்க்க அவளைத் திரும்பி நிற்கச் சொன்னாள் கோதை.

"இதோ, திரும்பிவிட்டேன். அலங்காரம் முடிவதற்குள் என்னை ஆட்டி வைத்துவிடுவாய்ப் போலிருக்கிறதே!" என்றாள் பிரேமா.

"நானா உன்னை ஆட்டி வைத்தேன்? இன்று உன்னை அரசர் முன் ஆட்டி வைக்கப் போகிறவள் நான்? நட்டுவனார் காதில் விழுந்தால், என்னை சும்மா விடமாட்டார்,

பிரேமா" என்று புன்னகையுடன் கூறிக் கொண்டே "சரி, இன்னும் பாக்கி என்ன ஆபரணங்கள் இருக்கின்றன?" என்று திரும்பி தன் நயனங்களை பீடத்தின் மீது படர விட்டாள் கோதை. துடையணியும், 32 முத்துவடங்களால் செய்யப்பட்ட மேகலாபரணமும், பலதினுசான மோதிரங்களும் இருந்தன. முதலில் துடையணியையும், பின்பு சேலை மீது மேகலாபரணத்தையும் பிரேமாவுக்குத் தரித்தாள். அமுதத்தில் தோய்ந்த அவளின் எழிற் கைவிரல்களில் மின்னும் மோதிரங்களையும் போட்டாள். "பார், கண்ணாடியில். ரதியின் பொறாமையிலிருந்து உன்னை நம் ஆடும் தெய்வமாகிய நடராஜர் காப்பாற்றுவாராக" என்றாள்.

"உனக்கு எப்பொழுதும் பரிகாசந்தான். நான் என்ன அவ்வளவு அழகா?" என்றாள் பிரேமா கண்ணாடியில் பார்த்துக் கொண்டே.

"அதைப்பற்றி தீர்ப்பு கூறுவதற்கு உனக்கு உரிமையில்லை. ஆனால் கோதையின் தீர்ப்பில் தவறு இருக்காது. இன்று அரங்கேற்றுபடி முடிந்த பிறகு அறிஞர்களும், கலைஞர்களும், பொது மக்களும் உனது ஆடலையும், பாடலையும், அழகையும் பற்றி யுக யுகத்திற்குப் பேசிக் கொள்ளாமலிருந்தால் என் பெயரை மாற்றி வைத்து 'தைகோ' என்று கூப்பிடு."

"அடி என்னருமை 'தைகோ', இன்றுதான் முதன் முதலாக 'வேத்தியல்' (வேந்தன் முன் ஆடும் நாட்டியம்) முறைப்படி "தாம் தி தையா" என்று காலைத் தட்டி ஆடப் போகிறேன் என்பதை மறந்து விட்டாயா? அரச அவையை நினைக்கும் போது—அங்குவந்து கூடும் அறிஞர்களையும், கலைஞர்களையும் நினைக்கும்போது என்னை அறியாமலேயே உள்ளத்தில் அச்சம் தோன்றுகின்றது. இந்தச் சமயத்தில் என் அன்பான அம்மா இல்லையே என்று என் மனம் தேம்புகிறது. பாலியத்திலே அவளை இழந்த அபாக்கியவதியாகிவிட்டேனே! உம். இன்று நான் எப்படி நல்ல பெயர் எடுக்கப் போகிறேனோ? ஆடலாசிரியரும், மற்ற ஆசிரியர்களும் நான் நடனக் கலையின் திறமையை நன்கு பெற்றுவிட்டேன் என்று தீர்ப்பு அளித்

துவிட்டார்கள். மன்னரிடம் அறிவித்து அரங்கேற்றத் திற்கும் ஏற்பாடு செய்து விட்டார்கள். நானும் அங்கு ஆடு வதற்குச் செல்ல ஆயத்தமாகிவிட்டேன். ஆனால், என் உள்ளத்தில்..........."

"பிரேமா, இந்தமாதிரி சிந்தனைக்கு இது நேரமல்ல. உன் தாயார் இல்லாமல் போனாலும் அவளது ஆத்மா உனக்குப் பக்கத் துணையாக இருந்து ஆசிதரும் என் பதில் ஐயமில்லை. நீ வணங்கும் நடராஜர் உன் கலையின் வல்லபத்தை உலகறியச் செய்யப்போகிறார். அதில் துளி யும் உனக்குச் சந்தேகம் வேண்டாம், உற்சாகமாக இரு."

"கோதை, இன்னொன்று என் மனத்தை உறுத்திக் கொண்டேயிருக்கிறது" -பிரேமாவின் நிலவுப் பொழியும் முகத்தில் சந்தேக முகில் தோன்றி படர்ந்தது.

"அதென்ன?"

"இன்று மன்னர் சபைக்கு அவரும் வருவாரா?"- ஆவல் அவளது முகத்தை உயர்த்தி அதில் ஓர் ஏக்கத் தை படரவிட்டது.

"அவரா? யார் அவர்?"- தெரியாதவள் போல் சிரித் துக் கொண்டே கோதை கேட்டாள்.

"அறிந்தும் அறியாதவள்போல் பேச இதுவா சமயம்?"

"பிரேமா, அவரும் வருவார் என்றுதான் நினைக்கி றேன். ஆனால், நிச்சயமாக வருவார் அல்லது வரமாட் டார் என்று சொல்ல நான் சோதிடம் கற்றுக்கொள்ள வில்லை."

"மறுபடியும் பரிகாசமா?"

"பரிகாசமில்லை, வேடிக்கையுமில்லை, வினையாகவே ஒன்றை உன்னிடம் கூறப்போகிறேன். கவனமாய்க் கேள்"—உண்மையிலேயே கோதையின் முகத்திலுள்ள குறும்புத்தனமும் புன்முறுவலும் மறைந்தன.

"அவரை எதிர்பார்க்காதே என்று சொல்லப்போகிறாய். அவ்வளவுதானே?"

"பிரேமா, அவர், அவர் என்று பிராணனைவிடாதே. அந்த நினைவு தயவு செய்து இன்று மாத்திரம் வேண்டாம். அரங்கேற்றமுடிந்த பிறகு சதா அவரைப்பற்றியே நினைத்துக் கொண்டிருக்கலாம். தலைவனுக்குப் பாங்கியையோ அல்லது பாங்கனையோ தூதுவிடலாம். ஆனால் இன்று உன் உள்ளம் கலையை விட்டு ஓர் அங்குலமும் அகலக்கூடாது........"

"அவரும் கலைஞர் என்பதை மறந்து விட்டாயா?" என்று குறுக்கிட்டுக் கேட்டாள் சில்பகாரிகை பிரேமாவதி.

"மறக்கவில்லை. அவருடைய தன்மையையும் நீ மறக்கக்கூடாது. 'எண்ணும் எழுத்தும், பண்ணும், பண்ணின்ற கூத்தும்' கற்றுத் தேர்ந்த உனக்கு நான் அந்தக் கதையை ஞாபக மூட்டவேண்டுமா, என்ன?"

"எந்தக் கதை?"

"தலைக்கோல் பிறந்த கதைதான். கலையை ஆசையின் மூலம் அபசாரப் படுத்தியதினால் ஊர்வசியை நாடகக் கணிகையாகவும், இந்திரன் மகன் சயந்தனை மூங்கிலாகவும் பிறக்கும்படி அகத்தியர் சாபமிட்ட கதையை மறந்துவிட்டாயா? அவரைப்பற்றி நீ இன்று சொல்லும்போது எனக்கு அந்த ஊர்வசியின் ஞாபகந்தான் வருகிறது. விரகதாபத்தால் கலையின் புனிதத்தைக் கெடுத்து மறுபடியும் நீ நாடகக் கணிகையாகவே பிறக்கலாம். ஆனால், உன் செயலால் அவரை ஏன் மூங்கிலாகப் பிறக்கும்படிச் செய்யவேண்டும்? உண்மையான உன் காதலுக்கு அது அழகல்ல. உம். அதெல்லாம் கதை. இன்று யார் இருக்கிறார்கள் அகத்தியரைப் போல சாபமிட என்று நீ கேட்கலாம். ஆனால், அவர் மீது கொண்டுள்ள நாட்டத்தால் இன்று ஆடலில் தவறினால் அகத்தியர் போன்ற அறிஞர்கள் மாத்திரமல்ல, தமிழ் மக்கள் எல்லோருமே உன்னை சபிப்பார்கள். புனிதமான கலையை விகாரப்

படுத்தினுள் என்ற கெட்ட பெயர் உன் தலையில் வந்து சுமந்துவிடும். அதற்கு நான் இடங்கொடுக்க மாட்டேன். நீயும் இடங்கொடுக்கக்கூடாது" என்று கோதை பிரசங்கம் புரிய ஆரம்பித்து விட்டாள்.

பிரேமா பெருமூச்சு விட்டுக் கொண்டே இருளிலிருந்து ஒளிப்பகுதிக்கு வந்தவள்போல், "கோதை, என் கண்ணைத் திறந்து விட்டாய். உண்மையை இப்பொழுது உணர்கிறேன். காதலைவிட கலை உயர்ந்ததென்று நீ சொல்லாமல் சொல்லிவிட்டாய்...." என்றாள்.

கோதை குறுக்கிட்டு, "ஆனால் காதலை கைவிடவேண்டும் என்று நான் சொல்லவில்லை" என்று சிரித்தாள்.

"தர்ம சங்கடமான நிலையில் தள்ளி என்னைப் பரீட்சிக்கிறாயா? கோதை, சௌந்தரியத்தில் மறைந்துள்ள சத்தியமாகிய கலை என்னைக் காப்பாற்றும். கலை இச்சைக்குரியதல்ல; உபாசனைக்குரியதென்று படித்தறிந்த உண்மையை மறந்தேன். ஆனால் அத் தவறை உணர்ந்து விட்டேன். என் இச்சையால் கலையை எச்சல் படுத்த மாட்டேன். இது நிச்சயம். நாட்டிய நன்னூல் தவறாமல் இன்று ஆடி எல்லோரிடமிருந்தும் பாராட்டுதலைப் பெறப் போகிறேன், பார்" என்றாள் பிரேமாவதி. அவள் சொல்லில் உறுதி காணப்பட்டது. ஆசை வெள்ளத்திற்கும் விவேகத்திற்கும் நடந்த போராட்டத்தில் பிரேமா முதலில் திணறினாலும், முடிவில் ஓர் அமைதியை அடைந்தாள்.

"அப்பாடா! இப்பொழுதுதான் என் மனம் நிம்மதி அடைந்தது. நன்றாக ஆடி இன்று மன்னரிடமிருந்து தலைக்கோலி பட்டத்தையும் பெற்றுவிடவேண்டும். அப்புறம் பாரேன், அவர் உன்னைத் தேடிவந்துவிடுவார்" என்று கோதை பிரேமாவின் புஷ்பக் கன்னத்தில் தட்டினாள். அதே க்ஷணத்தில் "அடடா! திலகம் சரியாக அமைய வில்லையே" என்றாள். பின்பு பிரேமாவின் முகத்தைத் திருப்பி வடிவாக நெற்றிப் பிரதேசத்தில் திலகமிட்டாள். மறுமுறையும் அழகாக நீண்ட விழிக் கோணத்தில் மையிட்டாள். இந்த அலங்காரமெல்லாம்

முடிந்ததும் அங்கிருந்த மலர்மாலையை எடுத்து அவள் சடையிலும், தலையிலும் வனப்பாகச் சுற்றிவிட்டாள்.

"கோதை, இன்னுமா சிங்காரித்துக் கொண்டருக்கிறாய்? நல்லா இருக்கு. புறப்படும் நேரம் வந்துவிட்டதே" என்று சொல்லிக்கொண்டே ஐம்பது வயதுள்ள அழகம்மை அங்கு வந்தாள். அவள்தான் பிரேமாவின் செவிலித்தாய்.

"இதோ, நாங்கள் தயார். அரண்மனையிலிருந்து பல்லக்கு வந்துவிட்டதா?" என்று கோதை கேட்டாள்.

"இதோ, வந்துவிடும். முதலில் சிலம்பக்கூடத்திற்கு வாருங்கள். புறப்படுவதற்கு முன்பு குலதெய்வம் நடராஜரை வணங்கவேண்டும்" என்று கூறிக்கொண்டே அழகம்மை மளமளவென்று அங்கிருந்து அம்மாளிகையின் மற்றொரு புறத்திலுள்ள சிலம்பக் கூடத்திற்குச் சென்றாள். அவளைப் பின் தொடர்ந்து பிரேமாவதியும், கோதையும் சென்றனர். பிரேமா சிலம்பக் கூடத்தில் நுழைந்தபோது அவள் காலில் கட்டியிருந்த சலங்கை கலீர் கலீர் என்று சப்தித்தது!

நாட்டியப் பயிற்சிக்கென்றே கட்டப்பட்ட அழகிய சிலம்பக்கூடம் அது. அது நீண்டு விளங்கியது. அதன் ஒரு புறத்தில் உயர்ந்த பீடத்தில் வெண்கலத்தினால் உருக்கி வார்க்கப்பட்ட மிக அழகான நடராஜர் விக்கிரகம் வைக்கப்பட்டிருந்தது. அதன் கழுத்தில் மலர் மாலைகள் காணப்பட்டன. இரு பக்கங்களிலும் வடிவான பாவை விளக்குகள். அவற்றில் உள்ள நெய்யை இழுத்த வண்ணம் எரிந்து கொண்டிருந்தன திரிகள். அந்தக் குளிர்ந்த ஒளிக் கதிர்கள் அங்கு ஒரு புனித சூழ்நிலையைப் பரப்பிக் கொண்டிருந்தன.

விக்கிரகத்திற்குமுன் பூஜைக்குரிய மற்ற பொருள்கள் இருந்தன. அந்த ஆடுந் தெய்வத்தை அடுத்து சுவர் ஓரமாக இருபக்கங்களிலும் பேரியாழ், மகர யாழ், சகோடயாழ், செங்கோட்டு யாழ் முதலிய நான்குவகை யாழ்களும், தோலினால் செய்யப்பட்ட வேறு பல கருவிகளும் வைக்கப்பட்டிருந்தன. முன்னிலையில் காணப்பட்ட தூபக்

காலிலிருந்து நறுமணப் புகை கிளம்பி அந்தக் கூடம் எங்கும் வியாபித்தது.

அழகம்மை அத் தூபக்காலை எடுத்து நடராஜர் விக்கிரகத்தின் முன் பயபக்தியுடன் காட்டினாள். பின்பு நெய் தீபமொன்றை எடுத்து தீபாராதனை செய்து வணங்கினாள். திருநீறு, குங்கும் முதலியவற்றை பிரேமாவின் நெற்றியி யிலும், கோதையின் நெற்றியிலும் சிறிது தடவிவிட்டு "பிரேமா, உன் தாயாரைவிட நீ பேரும் புகழும் பெற வேண்டும். யாதொரு விக்னமுமின்றி இன்றைய அரங்கேற்றுபடி முடிந்து நல்ல பெயர் எடுக்க அருள்புரியும்படி கடவுளை வேண்டிக் கொள்" என்றாள்.

பிரேமாவதி மனத்திற்குள் எதையோ சொல்லிக் கொண்டவளாய் கண்மூடி நடராஜரை வணங்கினாள் கோதையும் நமஸ்கரித்தாள்.

கடவுளை வணங்கிய பிறகு அழகம்மையை பிரேமா நமஸ்கரித்தாள்.

"பகவானே, நீதான் இவளுக்குப் பக்கத்துணையாக இருந்து நாட்டியக் கலையில் நல்ல பெயர் எடுக்க உதவ வேண்டும். பிரேமா, கலைதான் உன் உயிர் என்று நினைத்துக்கொள். இன்று ஊரெல்லாம் உன் அரங்கேற்றுபடியைப் பற்றியே பேசுகிறார்கள். அவர்கள் ஆசியை நீ கட்டாயம் பெறுவாய்" என்றாள் அழகம்மை. நன்கு அலங்கரிக்கப்பட்டு விளங்கிய பிரேமாவின் அழகைக் கண்டு அவள் அப்படியே பூரித்துவிட்டாள்.

பின்பு அம்மூவரும் சிலம்பக் கூடத்தைவிட்டு நடுக் கூடத்திற்கு வந்தார்கள். அப்பொழுது அம் மாளிகையிலுள்ள பணியாள் முன் ஓடிவந்து "அம்மா, அரண்மனையிலிருந்து பல்லக்குகள் வந்திருக்கின்றன. உடனே புறப்படவேண்டுமாம். தலைக்கோல் ஊர்வலம் அரண்மனையை நெருங்கிவிட்டதாம். பல்லக்குடன் வந்துள்ள இராச சேவகர்கள் இதைத் தெரிவிக்கும்படிச் சொன்னார்கள்" என்றான்.

"பார்த்தாயா, நான் சொன்னபடியே பல்லக்குகளும் வந்துவிட்டன. என்ன, கோதை, புறப்படலாமா? இன்

னும் சிங்காரிப்பில் ஏதாவது பாக்கி வைத்திருக்கிறாயா?" என்று அழகம்மை சிரித்துக் கொண்டே கேட்டாள்.

"பாக்கி இருக்கிறது, அம்மா" என்றாள் பிரேமா வைப் பார்த்து சிரித்துக் கொண்டே கோதை.

"சரியாகப் போயிற்று, நல்ல வேளை நெருங்குகிறது. சிங்காரிப்புபோதும், புறப்படுங்கள்" என்றாள் அழகம்மை.

"உம், உங்கள் மகள் கவலை உங்களுக்கு. நான் சிங் காரித்துக் கொள்ள வேண்டாமா?" என்று நகைத்தவண் ணம் பிரேமாவின் மலர்க் கரத்தைப்பற்றி இழுத்துக் கொண்டே மாளிகையின் வெளிப்புறத்தை நோக்கி நடந்தாள் கோதை.

மனம் நிறைந்த ஆனந்தமுடன் அழகம்மையும் பின் தொடர்ந்தாள்.

## கலை - 3.

தலைக்கோல் ஊர்வலம் அரண்மனை வாயிலை அடைந் தது. அந்த ஊர்வலத்துடன் சென்றிருந்த பெரிய மனிதர் களும், அரசாங்க உத்தியோகஸ்தர்களும் முதலில் அரண் மனைக்குள் நுழைந்தனர். அதே சமயத்தில் பட்டத்து யானையின் முதுகிலிருந்து தலைக்கோலைக் கீழே இறக்கி னர். கீழே நின்று கொண்டிருந்த வயோதிகர் ஒருவர் அதை வாங்கிக் கொண்டு மன்னர் கோட்டத்திற்குள் புகுந்தார். மற்ற மக்களும் அவரைப் பின் தொடர்ந்தனர்.

அரண்மனையில் வழி நெடுக விசேஷ அலங்கார அமைப்புகள் காணப்பட்டன. தோரணங்களும், திரைச் சீலைகளும் தொங்கின. சில இடங்களில் மலர்களினால் பல வேலைப்பாடுகளைச் செய்திருந்தனர். இத்தகைய விசேஷ அலங்காரங்களுக்குக் காரணமென்ன? அன்றுதான் புல் லவ மன்னர் சந்திரவர்மரின் பிறந்தநாள் கொண்டாட் டம். அத்துடன் பிரேமாவதியின் நடன அரங்கேற்றமும் அன்றே நடைபெற ஏற்பாடாகியுள்ளது.

சிற்ப எழில் நடனமாடும் அரசர் அவை. அதன் விதானத்தில் சித்திரத் தாமரைகள். அவற்றின் நடுவே கீழே நோக்கித் தொங்கிக் கொண்டிருக்கின்றன வெண்கலத்தாலான பூச் சரவிளக்குகள். அவை அங்கு எங்கும் ஒளியைப் பரப்பிக் கொண்டிருக்கின்றன. அம் மண்டபத்தின் இரு பக்கங்களிலும் ஒழுங்கு பந்தி பந்தியாய் நின்று கொண்டிருக்கும் கம்பங்களின் 'பாதாளிக'ங்களில் வார்த்தெடுக்கப்பட்ட வடிவான பாவை விளக்குகள் சுடர் விட்டு எரிந்து கொண்டிருக்கின்றன.

நடுநாயகமான இடத்தில் நவரத்தினங்களால் இழைக்கப்பட்ட தங்கமயமான அரியாசனம் ஜொலித்துக் கொண்டிருக்கிறது. அச் சிங்காசனம் இருந்த மேடைக்கு இரு புறங்களிலும் வேறு பல ஆசனங்கள் வரிசைக் கிரமமாகக் காணப்படுகின்றன.

அதோ, அச் சபைக்குள் நுழைகிறார்களே, அவர்கள் தான் ஐம்பெருங் குழுவினர் (அரசன் அவையில் இருப்போராகிய ஐவகையான பெரியவர்கள்). அவர்களைத் தொடர்ந்து வந்து கொண்டிருப்பவர்கள் எண்பேர் ஆயத்தினர் (அரசனுக்குத் துணைபுரியும் எட்டு வகையான பெரியோர் கூட்டம்.) அவர்கள் எல்லோரும் தங்கள் தங்களுக்குரிய ஆசனங்களில் அமர்ந்தனர்.

தலைக்கோல் ஊர்வலத்துடன் வந்திருந்த பல மக்கள் அரச அவையில் மற்றொரு பகுதியில் கூட்டமாகக் கூடினர். எல்லோருடைய கவனமும் அங்கு மன்னர் உட்காரும் அரியாசனத்திற்கு எதிர் புறமாக விசேஷ வேலைப்பாடுடன் அமைக்கப்பட்டிருந்த நடன அரங்கத்தின் மீது திரும்பியிருந்தது.

நாட்டிய இயலில் சொல்லப்பட்டுள்ளபடி அந் நடன மேடை சிருஷ்டிக்கப்பட்டிருந்தது. அது ஒரு சிறிய "கந்தர்வ மண்டபம்" போல் திகழ்ந்தது. அம்மேடையின் ஆபரணங்களைப் போல விதவிதமான திரைச் சீலைகள் காட்சி அளித்தன. அத் திரைச் சீலைகள் அசையும்போது அழகிய கண்களின் இரப்பைகள் அடித்துக்கொள்ளுவது போலத் தோன்றின! அவற்றில் மிதக்கும் ஓவியங்களின் எழில் மின் வெட்டியது.

அரங்கத்தின் மேற்கட்டு, மனத்தைக் கவரும் சித்திரங்களால் செழிப்புற்று விளங்கியது. அம் மேற்கட்டியின்று பலவிதமான முத்துமாலைகள் தொங்கின. அவை அசையுந் தோறும் வனப்பு-அலைகளை மோதவிட்டன! அன்றலர்ந்த பல நிறப் புஷ்பங்களாலான ஆரங்கள் முத்துமாலைகளுடன் போட்டி போடுவதுபோல அவைகளின் பக்கத்தில் அழகாக ஊஞ்சலாடின. அம் மேடையிலே ஒரு மேனிடத்தில் நாலுவகைப் பூதங்களின் படங்கள் சம்பிரதாயப்படி வைக்கப்பட்டிருந்தன. அரங்கத்தில் எங்கும் ஒளிக் கதிர்களைப்பரப்பும் கண்கவர் நிலை விளக்குகள் காணப்பட்டன. மேடைமீது நிழல் படராத விதத்தில் அவ்விளக்குகளை வைத்திருந்தார்கள்.

எங்கும் மணிகளினலும், மலர்களினலும் அலங்கரிக்கப்பட்டிருந்த அந்த இராஜ சபையில் திடீரென்று ஆரவாரம் கிளம்பியது. எல்லோரும் மறுபக்கம் திரும்பினர்.

அரண்மனைக்கு வெளியே முரசொலி கேட்டது. வாத்திய நாதமும் கலந்தோடிவந்தது.

ஏக காலத்தில் எல்லோரும் "மன்னர் வாழ்க" என்று உற்சாகமுடன் மூன்று முறைகள் கூறினர். சபையிலிருந்த அத்தனைப் பேரும் நின்றனர்.

பல்லவ மன்னர் சந்திரவர்மன், பணியாட்கள் சாமரம் வீசிவர சபைக்குள் பிரவேசித்தார். மக்களின் அன்பின் ஆரவாரத்தைக் கண்டு உள்ளம் மகிழ்ந்து நமஸ்கரித்துக் கொண்டே அரியாசனத்தை அடைந்து அமர்ந்தார். அவரைப் பின் தொடர்ந்து இளவரசன் இராஜசேகர வர்மன் வந்தான். அப்பொழுதும் மக்கள் "வாழ்க இளவரசர்" என்று வாழ்த்தினர். இளவரசன் கைகுவித்தவண்ணம் முன் சென்று தன் ஆசனத்தில் அமர்ந்தான். அவனுடன் வேறு இரு வாலிபர்களாகிய அவனுடைய தோழர்கள் சென்று பக்கத்தில் உட்கார்ந்தனர். அரசனுக்குப் பக்கத்தில் முதல் அமைச்சரும், குல குருவும் காணப்பட்டனர்.

ஆரவாரம் அடங்கியதும் அவையில் நிச்சப்தம். இப்பொழுது மறுபடியும் எல்லோருடைய கவனமும் நாட்டிய அரங்கத்தின் மீது திரும்பியது.

அச்சபையில் மன்னருக்கு எதிர் புறமாய் சமீபத்தில் மூன்று பூதகணங்கள் மண்டியிட்டபடி வார்த்தெடுக்கப் பட்ட வெண்கல உருவங்கள் ஒன்றை ஒன்று ஒட்டி முக் கோணத்தில் அமர்ந்திருந்தன. அவற்றின் தலைகளுக்கு மேலே சித்திர வேலைப்பாடுகள் நிறைந்த ஓர் அழகிய தாம்பாளம் இணைக்கப்பட்டிருந்தது. அதில் இலையாலும், பூவாலும் சேர்த்துக் கட்டப்பட்ட மணங்கமழும் மாலை ஒன்று இருந்தது. அத்துடன் பொற்கிழியும் காணப் பட்டது.

மக்களின் கவனம் நாட்டிய மேடையின் பக்கம் திரும்பியபோது ஒரு வயோதிகர் சபையின் முன் வந்தார். அவர் கையில் ஊர்வலமாக எடுத்துச் சென்ற தலைக் கோல் இருந்தது. சபையில் நுழைந்து தூரத்தில் நின்ற படியே மன்னருக்கு வணக்கம் செலுத்திவிட்டு நடன அரங்கத்தின் அருகில் சென்றார். அங்கு நின்றுகொண்டி ருந்த ஆடலாசிரியர் (நட்டுவனார்) கையில் அதைக் கொடுத் தார். அவர் அதைப் பயபக்தியுடன் வாங்கி அவையின் முன் வந்து மன்னருக்குத் தலைவணங்கிவிட்டு அங்கிருந்த பூதகணங்களின் உருவங்களுடன் விளங்கிய பீடத்தின் நட்டில் அத் தலைக்கோலை வைத்தார். பிறகு அங்கிருந்த படியே பின்னுகவே நடந்து அரங்கத்தை அடைந்தார்.

மேடையில் ஒரு பக்கத்தில் ஆடலாசிரியன், இசையா சிரியன், நாட்டியக் கவிஞன், குழலாசிரியன், தண்ணுமை ஆசிரியர்கள் (தோல் கருவிகளை வாசிப்பவர்கள்) முதலி யோர் ஏறுகின்றனர். நான்குவித யாழ்கள், குழல், மத் தளம் இன்னும் வேறு பலமாதிரியான தோல்கருவிகள் முக்கியவாத்தியங்களாக விளங்கின. அவைகளை அவர்கள் சுருதி சேர்த்தனர்.

அதே சமயத்தில் அந் நடன அரங்கத்தின் பின் பக் கமாக இருந்த ஒரு மறைவான இடத்தில் இரு யுவதிகள் மெதுவாகப் பேசிக் கொண்டிருந்தனர். அங்கு வந்த அழகம்மை "பிரேமா, புறப்படு. அவர்கள் வாத்தியங்களை எல்லாம் சுருதி சேர்த்துவிட்டார்கள். நல்ல வேளையில் மேடையிலேறி விடவேண்டும்" என்றாள்.

"இதோ, போகிறேன், அம்மா" என்று புறப்பட்டாள் பிரேமா.

"பிரேமா, நம் குல தெய்வம் நடராஜரை நினைத்துக் கொள். சபையைக் கண்டு அச்சப்படாதே. சொல்லிக் கொடுத்தவைகளை எல்லாம் மறக்காமல், சிறிதும் தவறாமல் ஆடி நல்ல பெயர் எடுக்கவேண்டும். இன்று தலைக் கோலையும், தலைக்கோலிப் பட்டத்தையும் பெற்று இராஜ சபையின் நர்த்தகி என்ற அந்தஸ்தையும் அடைந்தால் தான் என் மனம் குளிரும். உன் தாயாரின் ஆத்மாவும் சாந்தியடையும். என்ன, தெரிந்ததா?" என்றாள் அழகம்மை.

"என்ன அம்மா, நேரமாய்விட்டது, வேளை வந்து விட்டதென்று சொல்லிவிட்டு நீங்களே வளவளவென்று பேசுகிறீர்களே?" என்றாள் சிரித்துக்கொண்டே கோதை. அதே நொடியில் பிரேமாவின் கரத்தைப் பிடித்திழுத்து அவள் காதின் அருகில், "என்ன, நான் சொன்னதெல்லாம் ஞாபகமிருக்கிறதா? இன்று நீ பெரிய பரிசோதனையில் தேறவேண்டும். உள்ளம் பிசகினால் உடல் பிசகும். உடல் பிசகினால் ஆடல் கெடும்; பாவம் பேசாது. இன்று உன் முழுகவனமும் கலையிலிருக்கவேண்டும்; காதலில் அல்ல! அவர் வந்திருந்தாலும் சரி, வராவிட்டாலும் சரி, அதைப்பற்றிய சிந்தனையை தயவுசெய்து அரங்கேற்றம் முடியும் வரையிலாவது ஒத்திவைத்துவிடு. என்ன நான் சொல்லுவது சரிதானே?" என்று கேட்டாள்.

"கோதை, அவர் வந்திருந்தாலும், வராவிட்டாலும் என் ஆடல் பிசகாது. ஆரம்பத்திலேயே நான் கலையை அபசாரப் படுத்துவேன் என்றா நினைக்கிறாய்? என் உள்ளம் உறுதி கொண்டுவிட்டது. எல்லா பாரத்தையும் கடவுள் தலையில் போட்டுவிட்டேன்" என்றாள் பிரேமா.

"அம்மா, கோதை, நல்லா இருக்கிறதடி உன் செய்செய்கை. என்னைச் சொல்லிவிட்டு, அவளிடம் காதைக் கடித்துக் கொண்டிருக்கிறாயே. பேசியது போதும், அவளை மேடை அருகில் விட்டு விட்டு வா" என்றாள் செவிலித்தாய் அழகம்மை.

"இதோ, அழைத்துப் போகிறேன்" என்றாள் கோதை.

அக்கணமே அவ்விடத்தைவிட்டு அவ்விருவரும் மேடையின் அருகே வந்தனர். அரங்கத்தின் பக்கத்தில் பிரேமாவை விட்டுவிட்டு கோதை பின் சென்று அழகம்மையுடன் ஓரிடத்தில் அமர்ந்தாள்.

வானத்திலிருந்து வழுக்கி விழுந்த மின்னற் கொடி போலப் பிரேமா ஜொலித்தாள். அவள் தரித்திருந்த ஆபரணங்கள் ஒளி வீசின. "மின்னிடுங்காரின் வரவு கண்டு உவக்கும் நாடகமயிலென" அவள் நடந்து முன் சென்றாள். கைகுவித்து பொதுப்பட அவையை நோக்கி நமஸ்கரித்தாள். சபையில் விசேஷமாக யாரையும் அவள் குறிப்பிட்டுப் பார்க்க முயற்சிக்கவில்லை.

அங்கு கூடியிருந்த அத்தனைப் பேர்களின் நயனங்களும் அவளையே வட்டமிட்டன. அக்காலத்திய (பல்லவ) சிற்பிகளின் கற்பனையெல்லாம் ஐக்கியமாகி உருவெடுத்த ஒரு தங்கச் சிலையைப் போல அவள் திகழ்ந்ததைக் கண்டு எல்லோரும் வியந்தனர்.

சில்பகாரிகை பிரேமா வதனத்தில் புன்முறுவல் நடமாட முதலில் வலதுகாலை முன்னே வைத்து மிதித்து மேடையிலேறினாள். பின்பு மேடையின் வலது பக்கத்திலுள்ள தூணைச் சேர்ந்து நின்றாள். அம்மேடையில் காணப்பட்ட இடது தூண் பக்கம் நடனத்திற்கு உதவும் ஆடல் பாடல்களில் திறமை மிக்க மகளிரில் சிலர் நின்று கொண்டிருந்தனர்.

பிரேமா முதலில் தன் நட்டுவனாரை நமஸ்கரித்து விட்டு மேடையின் நடுவில் வந்து நின்றாள். யாழ், குழல், மத்தளம் முதலியவை இசைந்து இனிமையாக ஒலித்தன. ஆடலாசிரியரின் தாளத்துவனி கேட்கத் தொடங்கியது. சம்பிரதாயப்படி கடவுள் வாழ்த்துக்குரிய 'நடனாஞ்சலி' ஆரம்பமாயிற்று.

நடனாஞ்சலிக்குரிய 'அலாரிப்பை' பிரேமா ஆடத் தொடங்கினாள். அழகிய இரு கைகளையும் உயரத் தூக்கி

வனப்புடன் தலைக்கு மேலே குவித்து, முகாரவிந்தத்தை எழில் ஒளி மின்ன 'அட்டிமை' மூலம் அசைத்து, பின்பு கரங்களைப் பிரித்து சமமாக நிறுத்தி முன்னும் பின்னுமாக அடுக்கு வரிசைகளை லயப் பிசகில்லாமல் பட்டு தத்தரித்தமாதிரி தச்சிதமாக ஆடினாள். பிறகு வேறு பல நடனங்கள் தொடர்ந்தன. ஒவ்வொரு ஆடலும் அழகின் ஓவியமாக விளங்கியது. சௌந்தரியத்தின் சாம்ராஜ்யம் போன்ற அவளது முகத்தில் பாவம் பேசியது. அவள் காட்டிய எழிற்கையும், தொழிற்கையும் நடனங்களுக்கு உயிர் ஏற்றின. நாட்டியக் கலையில் வல்லவர்கள் அவளது கலைத்திறமையைக் கண்டு அதிசயித்தனர். நாட்டிய நன்னூலிற் சொல்லியபடி தவறின்றி, கலைத்திறமை ஓங்க ஆடும்போது அவள், மன்மதன் தன் புஷ்பப் பாணத்தையே சித்திரச் சலாகையாகக் கொண்டு, அதை அமிர்தக் குழம்பில் தோய்த்து எழுதிய மாசற்ற ஓவியம் போல எல்லோருடைய கண்களுக்கும் காட்சி அளித்தாள். சபையிலிருந்த அத்தனைப்பேரும் "ஆகா! ஆகா!!" என்று தலை அசைத்து ரசிக்கத் தொடங்கினர்.

பல்லவ இளவரசனும் வைத்தகண் வாங்காமல் பிரேமாவின் ஆடல்களில் லயித்துவிட்டான். அவளது ஆடல்களை விட, அமிர்தத்திலிருந்து வார்த்தெடுத்த அவளின் எழில் உருவம் அவனின் வாலிப உள்ளத்தில் கிளர்ச்சியை உண்டாக்கியது. அவன் பக்கத்தில் உட்கார்ந்திருந்த தோழன் மெதுவாக "இளவரசே, கொஞ்சம் இப்படி 'அடியேன் மீது பார்வையைத் திருப்புங்கள். ராஜ திருஷ்டி பொல்லாதது என்பார்கள். பாவம், முதன் முறையாக ஆடும் இந்தப் பெண்மீது அது படாமலிருக்கட்டும்" என்று கூறி புன்னகைத்தான்.

உடனே இளவரசன், "ஆனந்தா, கேலிக்கு இது இடமல்ல. மேலும் பிசகு என் மீது இல்லை. பிரேமாவின் அழகும் கலையும்........" என்று சொல்லிக்கொண்டிருக்கும் போது தோழன் குறுக்கிட்டு, "உங்கள் கண்களைக் கட்டிப்போட்டு விட்டன. அப்படித்தானே?" என்று கேட்டான்.

"அதிலென்ன பிசகு?"-இது இளவரசன் கேள்வி.

"பிசகில்லை. ஆனால், பரந்தாமனைக் கேட்டுப் பாருங்கள். அந்தமாதிரி கட்டுக்கு தான் ஆளாகமாட்டேன் என்று கூறுவான்" என்றான், கேலியுடன் ஆனந்தன்.

அவன் பக்கத்திலிருந்த பரந்தாமன், "ஆனந்தா, கண்ணைக் கட்டிப் போட்டுவிட்டால் கலையை ரசிக்க முடியாது. இளவரசே, சிறிது நேரத்திற்கு இவன் வாயைக் கட்டிப் போட்டால் நல்லதென்று நினைக்கிறேன்" என்று புன்னகைத் தொடர கூறினான் பரந்தாமன். ஆனந்தன் உடனே "கண்ணே கலையாகி, அக்கலையில் ஒரு பெண்ணே எதிர் வந்து நிற்கும் போது என் வாயைக் கட்டிப் போட்டு என்ன பயன்?...." என்று சொல்லிக் கொண்டிருக்கும் போது இளவரசர் குறுக்கிட்டு, "ஆனந்தா, விமர்சனத்தைப் பிறகு வைத்துக் கொள்ளுவோம். அங்கே பார், இந்தக் கலைப் பெண் அமர்ந்து எவ்வளவு லளிதமாக அபிநயம் பிடிக்கிறாள்! ஆத்மா, பரமாத்மா பேச்சில் பிரியமுள்ள பரந்தாமன் கூட இவள் ஆடலில் லயித்த பிறகு...." என்றான்.

உடனே பரந்தாமன், "இளவரசே, கலை தெய்வம்-அதற்கு என் வணக்கத்தைச் செலுத்துகிறேன். அவ்வளவுதான். அதில் பிசகொன்றுமில்லை" என்றான்.

இளவரசன் மேலும் பேச்சைத் தொடராமல் பிரேமாவின் அழகில் மறுபடியும் கவனம் செலுத்தினான்.

நடன அரங்கு முடியும் கட்டத்தை நெருங்கிவிட்டது. அரை மணி நேரத்திற்கெல்லாம் 'வைத்தியம்' முடிவு பெற்றது. சபையில் இருந்த அத்தனைபேரும் உள்ளம் மகிழ்ந்து கரகோஷம் செய்தனர். எல்லோரும் அவளது கலைத் திறமையை மெச்சிப் பேசிக் கொண்டனர். சபையிலிருந்த புலவர்களும், கலைஞர்களும், அறிஞர்களும் பிரேமாவின் நடனக் கலையின் உன்னதத்தை உணர்ந்து பக்கத்தில் உட்கார்ந்திருந்தவர்களிடம் புகழ்ந்து ஏதோ சொல்லிக் கொண்டிருந்தனர்.

கலாப மயில் போல பிரேமாவதி மேடையை விட்டு இறங்கி பல்லவ மன்னர் முன்பு வந்து நின்றாள்.

அவைக்கு நடுவே முழு நிலவு பூத்தது போல அவள் தோன்றினாள். அச்சமயம்தான் அவளுடைய கவனம் வேறு பக்கம் திரும்பியது. அழகின் வாழ்வு போன்ற அவளின் இரு விழிகள் யாரையோ பார்க்கப் பறந்தன! முதலில் அக் கண்கள் இளவரசன் உட்கார்ந்திருந்த பக்கம் திரும்பின. இளவரசன் பூரித்துப்போனான். அவன் நேத்திரங்கள் ஆசையினால் விழுங்கப்பட்டவைபோலத் தோன்றின. ஆனால், அந்த அவையில் பிரேமா கண்கள் தங்கள் குறியிலக்காகப் பாவிக்கவில்லை; மேலே சென்றன. ஆனந்தனுக்குப் பக்கத்திலிருந்த அவரை உள்ளங்குளிர நோக்கின! அவரும் தன் அலைப் பார்த்துவிட்டார் என்பதில் அவளுக்கு சந்தோஷம். அந் நிலை நீடிக்க அங்கு இடமில்லை. அந்த அழகுக் கண்கள் சட்டென்று பழைய நிலைக்குத் திரும்பிவிட்டன. இதெல்லாம் நொடியில் ஓடிய நிகழ்ச்சியே!; உள்ளம் கண்ணைக் கொண்டு நீட்டும் எழிற் கோடுகளே.

மன்னருக்குப் பக்கத்திலமர்ந்திருந்த இராஜகுரு எழுந்தார். அவர் முகத்தில் எல்லையற்ற ஆனந்தம். எதிரே இருந்த பீடத்தின் அருகே சென்றார். பச்சை இலைகளும், பூக்களும் கலந்து கட்டப்பட்டிருந்த மாலையை எடுத்துக் கொண்டு சபையை நோக்கிப் பேசத் தொடங்கினார்:-

“மகா ஜனங்களே, அறிஞர்களே, கலைஞர்களே, இன்று நம் மன்னர்பிரானின் பிறந்த நாள் கொண்டாட்டம் பிரேமாவின் ஆடலினால் ஒரு விசேஷ அழகு பெற்றுவிட்டது. பிரேமாவின் தாய் நாட்டியக் கலையில் மகா மேதை என்பதை நீங்கள் அறிந்திருக்கலாம். அவள் இச்சபையின் கலைக் கோவிலாகத் திகழ்ந்தவள். அவளையும் கலையில் பிரேமா மீறிவிட்டாள் என்றே எனக்குத் தோன்றுகின்றது. இவளது கலை விசேஷம் நாழில் பெற்று விளங்குகிறது. ஆரிய நாகரிகமும், தமிழ்ப் பண்பாடும், வடமொழியும், தமிழ் மொழியும் நெருங்கி உறவாடும் உன்னதமான காலம் இது. இதற்கு உகந்த முறையில் இவளது நாட்டியக் கலை புது மலர்ச்சியையும், சிறப்பையும் பெற்று விளங்குகிறது. வருங்காலத்தில் இவள் இக் கலையில் நன்கு புகழைப் பெறுவாள் என்

பதில் ஐயமில்லை. நம் மாமன்னர் சார்பாகவும், உங்கள் சார்பாகவும் இக் கலாவதியை ஆசீர்வதிக்கிறேன். எல்லாம் வல்ல இறைவன் திருவருளால் இவள் மேலும் மேலும் பெரும் புகழும் பெற்று பிரகாசிப்பாளாக."

இவ்விதம் கூறிவிட்டு தன் கையிலிருந்த மாலையை பல்லவ மன்னர் கையில் கொடுத்தார். அம் மாலையை வாங்கிக் கொண்டு அரசர் எழுந்துநின்றார். சபையில் உடனே கரகோஷம் கிளம்பியது.

பல்லவ வேந்தர் சந்திரவர்மன் அம் மாலையை பிரேமாவிடம் அளித்து அணிந்துகொள்ளும்படிக் கூறினார். பிரேமா தலைவணங்கி அதை வாங்கி கழுத்தில் போட்டுக் கொண்டாள். அப்பொழுது மற்றொரு முறை அவளுடைய கண்கள் வேறு பக்கம் திரும்பி காதலனைப் பார்த்தன. அவள் உள்ளத்தில் இடம்பெற்றுள்ள அவன் புன்னகையுடன் தன் பார்வையை வேறு பக்கம் திருப்பிக்கொண்டான்.

இராஜகுரு அடுத்தபடியாகப் பீடத்திலிருந்த பொற்கிழியையும், தலைக்கோலையும் எடுத்து வேந்தரிடம் அளித்தார். அவற்றை வாங்கி முதலில் பொற்கிழியை பிரேமாவதியிடம் கொடுத்தார். பின்பு "மகா ஜனங்களே, பிரேமாவின் கலைத் திறமையைப்பற்றி அதிகம் சொல்லவேண்டியதில்லை. சற்று முன்பு நீங்கள் எல்லோரும் அவளது ஆடலை நேரில் பார்த்து தெரிந்து கொண்டிருக்கிறீர்கள். நம்முடைய சபை இக் கலாவதியினால் பெருமை அடைகிறது. இதோ, இத் தலைக்கோலை அளித்து இவளுக்குத் தலைக்கோலி என்ற பட்டத்தையும் சூட்டுகிறேன். இன்று முதல் பிரேமாவதி பல்லவ சமஸ்தானத்தின் தலைக்கோலியாகிறாள். நீங்களும் இதை ஆமோதிக்கிறீர்கள் என்று நம்புகிறேன்...." என்று மன்னர் பிரான் சொன்னபோது சபையினர் கரகோஷத்தின் மூலம் தங்கள் சம்மதத்தைத் தெரிவித்தனர். கரகோஷம் அடங்கியதும் அரசர் "இறைவன் திருவருளால் தலைக்கோலி பிரேமாவதி இந் நடனக் கலையில் மேலும் கீர்த்தி பெற்று பிரகாசிப்பாளாக" என்றார். அதே சமயத்தில் தலைக்கோலை அவளிடம் அளித்து ஆசீர்வதித்தார்.

வேந்தர் இதைச் சொல்லி முடித்ததும் அங்கு நின்று கொண்டிருந்த இரு இராஜ சேவகர்கள் கைகளில் பிடித்திருந்த தங்கக் கம்புகளை அசைத்துக்கொண்டு "பல்லவ சக்ரவர்த்தி சந்திரவர்மர் அரசாங்கத் தலைக்கோலி பிரேமாவதி வாழ்க" என்று மூன்று முறை கோஷித்தனர்.

பிரேமா தலைக்கோலை வாங்கிக்கொண்டு அங்கு நின்றபடியே தலைவணங்கினாள்.

மறுபடியும் அவையில் கரகோஷம்.

சபையுங் கலையத் தொடங்கியது.

பிரேமா நடன அரங்கத்தின் அருகே ஓடினாள். போகும்போது அவள் கவனம் மறுபடியும் காதலன் பக்கம் திரும்பியது. ஆனால் அவன் அவள் கண்ணில் படவில்லை. பிரேமா மனத்தில் சிறிது ஏமாற்றம். அதை வெளிக்குக் காட்டாமல் அரங்கத்தை அடைந்தாள். உடனே அழகம்மை ஓடிவந்து அவளுக்குத் திருஷ்டி முறித்து ஆசீர்வதித்தாள். "இப்பொழுதுதான் எனக்கு உயிர் வந்தது. வயிற்றில் பால் வார்த்தாய்" என்றாள் அழகம்மை.

கோதை அவளைக் கட்டிக்கொண்டு, "கலைக்கு இன்று இணையற்ற வெற்றி. காதலுக்குப் படுதோல்வி!" என்று சொல்லி நகைத்தாள்.

"ஆம், படுதோல்விதான்."

"உன் கண்ணைப் பார்க்கும்போதே தெரிகிறது."

"உன் கேலிக்குச் சமயச் சந்தர்ப்பமே தெரிவதில்லை."

"கேலியில்லை. பிரேமா, உள்ளத்திற்கு உணவு கலை, கண்ணுக்கு உணவு காதல். கலைக்கு வெற்றி கிடைத்து விட்டது. காதலுக்கு இன்று தோல்வி; ஆனால் அது தான் நாளை வெற்றிக்கு விதை. கவலைப்படாதே.

அவரும்தான் உன் கலையில் மயங்கிவிட்டுப் போயிருக்கிருரே, நான் சற்று தூரத்திலிருந்தாலும் எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டுதானிருந்தேன்."—சிரித்தாள் கோதை கலகலவென்று.

"என்னடி பேச்சு? நேரமாகிறது. புறப்படுங்கள்" என்று அவசரப்படுத்தினுள் அழகம்மை.

## கிளை-4.

ஆகா! லாவண்யத்தினுலேயே கடைந்தெடுக்கப்பட்ட மாதிரி இருபக்கங்களிலும் பந்திபந்தியாய், சாய்ந்தும், நிமிர்ந்தும் சல்லாபச் சாயலில் நிற்கிருர்கள் நடன சுகுமாரிகள். கச்சைகட்டிய நிமிர்ந்த மார்பகங்கள், பார்க்கும் கண்களிலே 'மோகன மயக்க'த்தை மூட்டுகின்றனவோ என்ற சந்தேகம்.

சிலர் கைகளிலே வளைந்த காம்புகளுடன் ஒடிந்து விழும் தாமரைப் பூக்கள். இன்னும் சிலர் கைகளில் மலர்களின் சம்மேளனமாகிய மாலைகள். அதோ, இடது வரிசையில் நிற்பவர்களின் கரங்களிலே அமிர்தக் கலசங்களோ? ஓ! இச்சுந்தரவதிகள் நர்த்தனத்திற்கு ஆயத்தமாய் நிற்கிருர்களோ? அல்லது ஆட ஆரம்பித்து விட்டார்களோ? இல்லை, ஆடாமல் அசையாமல் நிற்கிருர்களே; ஆனுல், பாவனை இருக்கிறது; பாவம் கூடத் தெரிகிறது! பேசாமல் பேசும் கீறிவிட்ட கண்கள்! ஒவ்வொன்றும் ஒவ்வோரு ரசத்தைச் சொல்லுகிறதே! அந்தோ! பேச வாய் இருந்தும் இவர்கள் ஏன் மௌனப் பதுமைகளாய் விட்டார்கள்? தெய்வீக நடனத்தை கேவலம் மானிடர்கள் கண்டு களிக்கக் கூடாதென்று இவர்களைக் 'கல்லாகப் போங்கள்' என்று போகியாகிய இந்திரன் சபித்துவிட்டானே? இல்லை. இவர்களைச் சிருஷ்டித்தவர்கள் தமிழ் நாட்டின் 'பிரம்மா'க்களாகிய சிற்பிகள். அந்த அழகான கற்றூண்களை விட்டு அப்படி இப்படி அசையவிடாமல் 'மந்திரம்' செய்துவிட்டு போய் விட்டார்கள்!

இந்த நடன மங்கைகளின் உருவங்களுடன் விளங்கும் கம்பங்கள் நிறைந்த இம் மண்டபம் பல்லவ மன்னரின் மகத்தான அரண்மனையின் ஒரு பிரத்யேக மான பகுதி.

தூண்களின் அடிவாரத்தில் வெண்கலக் கிண்ணி களை ஏந்தி நிற்கும் எழிலுள்ள பீடங்கள். அவைகளிலி ருந்து ஜனித்தெழும் புகை ஜாலம் ஒடிந்தும், மடிந்தும், சுழன்றும் சுருண்டும் மேல்நோக்கிப் போய்க் கொண்டி ருக்கிறது. அது கண்ணை எரிக்கும் வெறும் புகையல்ல; கருத்தைக் கிளறும் நறுமணம் கமழும் புகையே.

விதவிதமான அலங்கார நங்கைகளைப்போல வார்க் கப்பட்டுள்ள வெண்கலச் சிலைகளின் கரங்களிலே அகண்ட நெய் விளக்குகள் குளிர்ந்த பிரகாசத்தைக் கொடுத்துக்கொண்டிருக்கின்றன.

மண்டபத்தின் பிரதானமான இடத்தில் தெரிகிறது, அன்ன உருவத்தைப்போல தங்கத்தால் சிருஷ்டிக்கப் பட்டு, தங்கத் தகட்டால் 'தாலிப்பட்டம்' கட்டப்பட்ட ஒரு சாய்மான ஆசனம். அதை அணைத்தும், வளைந்தும் போடப்பட்டிருக்கின்றன வேறு பல பீடங்கள்; ஆசனங்கள்.

மூவர் மிகவும் சுவாரஸ்யமான சம்பாஷணையில் ஈடு பட்டிருக்கிறார்கள்.

ஹம்ஸ ஆசனத்தில் அமர்ந்திருந்த வாலிபன் உற்சாக புருஷனாக விளங்குகிறான். யௌவனம் அவன் முகத்தின் மூலமாக தனக்கு நிகர் இல்லை என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறது. போர்க்களத்தில் யானைப் படைகளையும் எதிர்க்கும் தேகக்கட்டு. சுருண்டு அலை மோதும் கேச ஜாலங்கள். இன்பமே எங்கள் உயிர் என்று சொல்லும் கண்கள். கம்பீரத்தின் கொலுபீடம் அந்த முறுக்கிவிட்ட அழகிய மீசை. இதுவரையில் துன்பத்தை அறியாத இருதயம். சுகத்தையே சதா சுவைக்க விரும்பும் உதடுகள். அச் சுகத்தைத் தடுக்க வரும் ஒழுக்கத் திட்டங்களைக் கேலிசெய்யும் சுபாவம்

கர்வத்தைக் கவ்விய ஆண்மை. போரிலே வீரம். பெண்மையான மோகனத்திலே 'பெட்டிப் பாம்பு'. அந்த வடிந்த காதுகளிலே குண்டலங்கள். கழுத்திலே வீர வளையம். மணிக்கட்டுக்கு மேலே சிங்க முகக் கங்கணம். இடுப்பிலே பட்டு வஸ்திரம். புஜங்களிலே புரளும் பீதாம்பரம். ஆம், அவன்தான் பல்லவ மன்னன் சந்திரவர்மனின் சிரேஷ்ட குமாரன்; இளவரசன்; வருங்கால பல்லவ சாம்ராஜ்ய சம்ராட்--ராஜசேகர வர்மன்.

அவன் கேட்கிறான்: "ஆனந்தா, இந்த உலகத்தில் மிகவும் சக்திவாய்ந்தது எது?"

"நான் தான்!"—ஆனந்தன் சிரித்தான்.

"விளையாடாதே!"

"விளையாடவில்லை. உண்மையைத்தான் சொன்னேன். என் பெயர் ஆனந்தன் அல்லவா? ஆனந்தத்தின் 'ஆத்மா' சிரிப்பு. ஆகவே சிரிப்புத்தான் சக்தி வாய்ந்ததென்று சுட்டிக் காட்டினேன்."

ஆனந்தன் இளவரசனின் ஆப்த நண்பன்; சமஸ்தான கவிஞரின் குமாரன். ஹிம்சையை லட்சியமாகக் கொள்ளாத குறும்புத்தனம் அவன் ரசா அணுக்களில் ஒன்று. அவன் கலைஞன்; நல்ல சரஸி. வேடிக்கையாகப் பேசுவதில் விருப்பமுள்ளவன்.

"நான் ஹாஸ்ய ரசத்தில் கேட்கவில்லை" என்றான் இளவரசன்.

"அப்படியானால் சோகரசத்தில் பதில் சொல்ல வேண்டுமென்று எதிர்பார்க்கிறீர்கள் போலும்! நீங்களும் நானும் சிரிக்கும் சிரிப்புக்கு அத்தகைய மதிப்பு இருப்பதாக நான் சொல்லவில்லை. சிருங்கார ரச திருஷ்டியில் பெண்களின் சிரிப்பு; சோகரச திருஷ்டியில் பெண்களின் கண்ணீர். இவ்விரண்டுந்தான் உலகத்தில் மகத்தான சக்திவாய்ந்தவை."

"கற்பனைக்குக் கண் இல்லை. கற்பனையால் ஸ்வீகரிக்கப்படும் கலைஞனும் கபோதி யாகிவிடுகிறான். ஆனந்தா, அதற்கு நீ அத்தாட்சி."

"இளவரசே, மன்னிக்கவும். அவசரத்திற்குத்தான் கண் இல்லை. இந்த உலகத்தின், ஏன், சர்வ சராசரங்களின் 'கண்களை'த் திறந்து விடுகிறவன் கலைஞனே என்பது ஞாபகமிருக்கட்டும். என்னைப் பொறுத்த வரையில் எனக்கு வேண்டியவை மது, மங்கை, காவியம். இவைகள் இல்லா உலகத்தில் என்னால் அரைக்ஷணங் கூட மூச்சுவிட முடியாது. வறண்ட வாழ்க்கையில் அமிர்தத்தை ஊற்றுகிறவை இவைதான். இன்னும் ஒருபடி மேலேபோய்க் கூறுகிறேன். ஏன்? ஹிமயமலையின் உச்சியிலிருந்தும் நான் சொல்லத் தயார். மது, மங்கை, காவியம். இவையே உலகத்தில் சக்திவாய்ந்தவை. இதோ மௌனமாகவே உட்கார்ந்திருக்கும் பரந்தாமனையும் கேட்டுப் பாருங்களேன்." இவ்விதம் கூறிவிட்டு ஆனந்தன் கேலி உணர்ச்சியின் ஒளி விளங்கும் கண்களுடன் அங்கிருந்த பரந்தாமனைப் பார்த்தான்.

பரந்தாமனின் முகத்தில் புன்னகையின் 'லீலை.' பரிசுத்தமான பிரம்மசாரி என்பதை அவன் வதனத்திலே பிரதிஷ்டையாகியிருந்த திவ்ய தேஜஸ் எடுத்துக் காட்டியது. உதடுகளைச் சிறிது அசைத்துவிட்டு பரந்தாமன் ஆனந்தனைப் பார்த்தான்.

"பரந்தாமா, உனக்கு இந்த விஷயம் பிடிக்காமலிருக்கலாம். நீ பாரமார்த்திக மாணவன் என்பதை நான் மறக்கவில்லை. ஆனால், ஆனந்தனுக்குப் பதில் சொல்லாமலிருப்பது அழகல்ல' என்றான் கிண்டலுடன் ராஜசேகரவர்மன்.

"என் மௌனமே பதில்" என்றான் பரந்தாமன்.

ஆனந்தன் குறுக்கிட்டு "மௌனம் சர்வார்த்த சாதகம்" என்ருன்.

"ஆனந்தா, உன் கற்பனைக்குக் கண் இல்லை என்று இளவரசர் சொன்னது சரி. சற்று முன்பு நீ சொன்ன வியாக்கியானம் அருமையானதே. ஆனுல், அது அற்பாயுள் பெற்ற ஒரு கவிதையைப்போல. அதில் மதுவின் மயக்கமும், மங்கையின் மாயையும், காவியத்தின் ரசனையும் உண்டு என்பதைக் காட்டிக் கொண்டு விட்டாய். உன் கற்பனை தோன்றி மறையும் துர்ப்பாக்கியங்களைப்பற்றி கவிபாடுகிறதே என்றுதான் வருந்துகிறேன்" என்ருன் பரந்தாமன்.

"ஆனந்தா, நீ சற்று சும்மா இரு" என்று கூறிவிட்டு பரந்தாமனை நோக்கி ராஜசேகரவர்மன் கேட்டான்: "இவ்வுலகத்தில் சக்திவாய்ந்தவை எவை என்பதைப் பற்றி உன் அபிப்பிராயம் என்ன?"

"கேள்வியைத் திருத்துவது நல்லது. எவை என்பதை எது என்று கேட்டால் இன்னும் பொருத்தமாக இருக்கும்" என்ருன் பரந்தாமன்.

"ஒருமையில் பன்மை! உலகத்தை ஏமாற்றும் வித்தை. ஆனுல், சிருஷ்டியின் இரகசியம் பன்மையில் தானிருக்கிறது. அசேதனத்திலிருந்து சகலவற்றையும் பரிசோதியுங்கள். பன்மையின் மகிமையை உணரலாம்......." என்று ஆனந்தன் சொன்னுன்.

"போதுமே. கொஞ்சம் பேசாமல் இரு என்றுதானே சொன்னேன். பரந்தாமனைக் கேட்கிறேன், உன்னைக் கேட்கவில்லை" என்ருன் இளவரசன்.

ஆனந்தன் வாயைப் பொத்திக் கொள்ளுகிருன்.

"இளவரசே, என்னைக் கேட்டால் உலகத்தில்

மகத்தான சக்திவாய்ந்தது சத்தியம் என்பேன்" என்றான் பரந்தாமன்.

"அசத்தியம்" என்று குறுக்கிட்டான் ஆனந்தன்.

"சத்திய உபாசகனாகி விட்டாயோ?"—பரிகாசமுடன் கூறினான் இளவரசன்.

"இல்லை, சக்தி உபாசகன்" என்றான் ஆனந்தன்.

"யார்?" என்று கேட்டான் இளவரசன்.

"பரந்தாமன் அல்ல; நான்தான்" என்று பலமாகச் சிரித்தான் ஆனந்தன்.

பின்பு திடீரென்று "எங்களை எல்லாம் கேட்ட கேள்வியை அப்படியே உங்களிடம் திருப்பினால் நீங்கள் என்ன பதில் சொல்லுவீர்கள்?" என்று இளவரசனைக் கேட்டான் ஆனந்தன்.

"ஆனந்தா, நீ குறும்புக்காரன். என்னையா கேட்கிறாய்? என் அபிப்பிராயத்தில் வீரமும், அவ் வீரத்தின் உபகரணமாகிய வாளாயுதமும் என்று சொல்லுவேன்."

"வாளாயுதத்தை நம்பும் வீரம் கோழைத்தனம்" என்றான் பரந்தாமன்.

"வீரம், வாளாயுதம், இவ்விரண்டையும் விட சக்தி வாய்ந்தது வாள்விழி" என்றான் ஆனந்தன்.

"அதைவிட சிறந்தது.......?"

"கேட்பானேன்? காதல் விழி."

"எந்தக் காதல் விழியோ? காதலுக்குத்தான் விழியே இல்லை என்கிறார்களே!"

"ஏன்? நமது அரண்மனையின் நாட்டியப் பெண்ணின் காதலுக்கு 'விழி' உண்டு!"

"ஏன் அப்படிச் சொல்லுகிறாய்?"

"குறிப்பு அறிந்துதான் சொல்லுகிறேன். நேற்று நடந்த நமது மகாராஜாவின் பிறந்த தினவைபவத்தின் போது ஆடல் அரங்கத்தில் அவள் நாட்டியமாடிய வேளையில் தாங்கள்தான் வைத்தகவிழி வாங்காமலிருந்தது எனக்கல்லவோ தெரியும்!"

"பரிகாசம் செய்யாதே-ஆனந்தா, பிரேமாவதியின் ஆடல் என் உள்ளத்தையே ஆட்டிவிட்டது. இசை என் உணர்ச்சியை இன்ப வேதனையிடம் தள்ளிவிட்டு வேடிக்கைப் பார்த்தது. அவள் ஆடல் பாடலைப்பற்றி நீ என்ன நினைக்கிறாய்? பரந்தாமா, உனது அபிப்பிராயம் என்ன?"

"பிரம்மசாரிக்கு—அதுவும் சதா ஆசிரமமே கதி என்றிருப்பவனுக்குக் கலையைப்பற்றி என்னதெரியும்? அதிலும் சத்திய உபாஸி. பரந்தாமன் ஆத்மா, பரமாத்மா என்று ஆயிரம் யுகத்திற்கு வேண்டுமானாலும் பேசிக் கொண்டேயிருப்பான். மதுர கலையாகிய நடனம் ஒழுக்கத்தை அரிக்கும் கறையான் என்பது அவன் அபிப்பிராயமாக இருக்கலாம்" என்றான் ஆனந்தன்.

"நாம் எல்லோரும் பிரம்மசாரிகள் என்பதை மறந்து விட்டாயா?" என்றான் இளவரசன்.

"உண்மை. ஆனால், பரந்தாமனே இலட்சிய பிரம்மசாரி. பிரம்மசரிய ஆசிரமம் அவனைப்பார்த்து தனது நியம நியதிகளை கற்றுக்கொள்ளுகிறது!" என்றான் ஆனந்தன்.

"ஆமாம். மனோவாக்கு காயங்களினாலும் பிரம்மசரியத்தை இம்மியும் தவறாமல் அனுஷ்டிக்கிறவன் பரந்தாமன். வித்துக்கேற்ற மரம்! பரந்தாமன் தந்தை-நமது ராஜகுரு நிர்மலானந்த அடிகள் கிரகஸ்தராக இருந்து மனைவி இறந்த பிறகுதான் துறவு நிலையை மேற்கொண்டார். பரந்தாமனே இப்பொழுதே துறவு நிலையை அடைய தீர்மானித்துவிட்டான் என்று நினைக்கிறேன்" என்றான் இளவரசன்.

அக்கணமே ஆனந்தன் பரந்தாமனைப் பார்த்து "பீஷ்மராகிவிடாதே" என்றான்.

பரந்தாமன் அமைதியும் சாந்த அழகும் சொட்ட சொன்னான்: "எனக்கு இப்பொழுது நன்றாகத் தெரிகிறது; நாம் மூவரும் மூன்று பாதைகளைத் தேர்ந்தெடுத்திருக்கிறோம். இளவரசர் பலிவாங்கும் வீரத்தையும், கத்தியையும் நம்புகிறார். அது இராஜ இலட்சணமாக இருக்கலாம். ஆனால், ஆத்ம இலட்சணமல்ல. ஆனந்தா, நீயோ மது, மங்கை, மதுரகலைகளைத் தேர்ந்தெடுத்திருக்கிறாய். அது கலைஞனுக்கு அழகாயிருக்கலாம். ஆனால், ஆத்மாவின் அமைதியில்லை. நானோ சத்தியத்தின் பாதையைத் தேர்ந்தெடுத்திருக்கிறேன். வழியில் நான் தவறி விழலாம். ஆனால் பாதை தப்பானதல்ல. சத்திய உபாசகனால் தனக்கு மாத்திரமல்ல, உலகத்திற்கே கதிமோட்சம் தேடமுடியும் என்பதில் எனக்கு நம்பிக்கை உண்டு."

பரந்தாமன் அங்கு இருக்க மனமில்லாதவனாய்ப் புறப்பட்டான்.

உடனே இளவரசன், "பரந்தாமா, அவசரப்படாதே. என் தங்கையின் மாளிகையில் இன்னும் கொஞ்ச நேரத்தில் பிரேமாவதி யாழை வாசித்துக் கொண்டே பாடப்போகிறாள். அங்கு நாம் எல்லோரும் போய் அந்த இசை இன்பத்தை அனுபவிப்போம். அதற்காகத்தான் உன்னை நான் இங்கு கூப்பிட்டு அனுப்பினேன்" என்றான்.

யாழின் நரம்புகளைக் கிளறி இனிய சுருதி கூட்டி இன்பம் மிதக்கும் பண்ணில் பிரேமாவதி பாடுவதாகவே பரந்தாமன் அகக்கண்ணில் ஒரு தோற்றம். நேற்று வேந்தன் முன்னிலையில் முதல் முறையாக அவள் ஆடலின் அரங்கேற்றுபடியைக் கண்டபோது பரந்தாமனின் மனம் வெட்கமற்று மீண்டும் மீண்டும் கரையை வந்து அணைத்து செல்லும் சமுத்திர அலைபோல மாறி விட்டது. கடவுள் தன் வாழ்க்கையில் பரிசோதனைக் கட்டத்தை ஆரம்பித்துவிட்டார் என்று அவனுக்குத் தோன்றியது. அதில் தேறாவிட்டால்.......? இக்கேள்வி அவன் நெஞ்சின் உறுதியைப் பார்த்து பகிடிசெய்தது. இளவரசன் வேண்டுகோளை ஒப்புக்கொள் என்றது ஓர் உணர்ச்சி. அந்த உணர்ச்சியின் முக்காட்டிற்குள் பிரேமாவின் எழில் விழிகள் கொஞ்சல் சிரிப்பை

அஞ்சல் செய்தன. "அழகான தடாகத்தில் பாசிபடரும். பாசியின் சுபாவம் தன்னை அண்டுகிறவர்களின் காலை வாரிவிட்டு விடுவதே. ஏமாந்துபோகாதே, ஜாக்கிரதை. உன் தவ உணர்ச்சியெல்லாம் தவிடுபொடியாகிவிடும். உன்னை உலகம் வெல்ல இடம் கொடுக்காதே. உலகத்தை வெல்ல நீயார். உன்னை நீயே வெல்லும்போது உலகமே உனக்கு அடிபணிகிறது." இவ்விதம் யாரோ அவன் கன்னத்தில் அடித்து உபதேசிப்பதுபோல் ஒரு தோற்றம். எல்லாம் கண்ணிமைக்கும் நேரத்திற்குள் தான். திட மனத்துடன் பரந்தாமன் சொன்னான்: "இளவரசே, மன்னிக்கவும். இந்நேரம் நான் ஆசிரமத்திற்குப் போயிருக்கவேண்டும்."

பரந்தாமன் புறப்பட்டுவிட்டான்.

"பெண்களின் முகத்தைப்பார்க்க ஏன் கூச்சப்படுகிறாய்?........ஐயோ! எத்தகைய ஆண்மை"—இளவரசன் சிரிக்கிறான்.

"பரந்தாமா, கொஞ்சம் நில். பிரேமாவதியின் முகத்திலே, குரலிலே, அந்த யாழ் இசையிலே காட்டில் தவம் செய்தாலும் பிரசன்னமாகாத தெய்வத்தைப் பார்க்கலாமே" என்றான் ஆனந்தன்.

"இதை எல்லாம் கலைப்புரட்டு என்பான் பரந்தாமன்" என்று கூறினான் இளவரசன்.

பின்பு இளவரசனும், ஆனந்தனும் சேர்ந்து கொண்டு சிரித்தார்கள். பரந்தாமன் மௌனமாக வெளியே போய்விட்டான்.

"இளவரசே, ராஜகுமாரியின் அந்தப்புரத்தில் பிரேமா பாட ஆரம்பித்திருப்பாள் என்று நினைக்கிறேன்."

"சரி, அங்கு போகலாமா?

"நான் ஆயத்தம்."

"ஆனந்தா, பிரேமாவைப்பற்றி உன்னிடம் கூறியிருந்தேனே, அதைக்குறித்து ஏதாவது யோசித்தாயா?"

"யுவராஜா, அதற்கென்ன? நம் கூண்டில் உள்ள கிளி எங்கே பறந்து செல்லப்போகிறது?" இவ்விதம் கூறிவிட்டு இரகசியமாய் வேறு ஏதோ ஓர் ஆலோசனையை இளவரசனின் காதோடு காதாகக் கூறினன். "அதுவே சரி" என்று முகமலர்ச்சியுடன் ஆமோதித்தான் இளவரசன்.

ஆனந்தனுக்கோ அளவிலாத ஆனந்தம். ஏன்? திலகவதிதேவியின் அந்தப்புரத்திற்குப் போகும் சந்தர்ப்பம் கிடைத்துவிட்டதல்லவா? அவளைச் சுற்றி அவனது கற்பனை இனிய தேன்கூடு கட்டத் தொடங்கி விட்டது. அக்கூடு கலைந்தால் அவன் கதி என்ன? அந்த மாதிரி எண்ணத்திற்கு அவன் இடம் கொடுப்பதில்லை.

உணர்ச்சிப் போராட்டத்தில் வெற்றிகொண்டவன் போல அரண்மனையின் 'ஆஜா'ரத்தண்டை வந்துகொண்டிருக்கிறன் பரந்தாமன்.

அப்பொழுதுதான் அங்கு ஒரு பல்லக்கு வந்து நின்றது. சில பணியாட்களும், பணிப்பெண்களும் முன்னும் பின்னும் காணப்பட்டனர்.

பல்லக்கிலிருந்து ஒரு சுந்தரவதி கீழே இறங்கினள், வானத்திலிருந்து வழுக்கிவிழுந்த மின்னற்கொடிபோல. 'அலங்காரக் கலையை எங்களிடமிருந்து கற்றுக் கொள் நங்கள்' என்று அவள் அணிந்திருந்த ஆபரணங்கள் ஜொலிப்பதின் மூலமாகச் சொல்லின! ஒரு சுந்தரப் பெண் அப் பல்லக்கிலிருந்த யாழை மிகவும் ஜாக்கிரதையாகத் தூக்கிக்கொண்டு முன்னே நடந்தாள். பின்னே போகிறள் பல்லக்கிலிருந்து முதலில் இறங்கிய வடிவழகி.

தமிழ்நாட்டின் சைத்ரீகர்களும் சிற்ப விற்பன்னர்களும் தங்கள் கலையை அபிவிருத்தி செய்வதற்கு உதவி செய்யும் அழகியாய் விளங்கினள் அவள். அவளுடைய வதனத்தில் 'அழகின் 'சாம்ராஜ்யம்.' கவிதை தரும் அழகிலே மிதக்கும் கண்களோ? இல்லை, அபிநயத்

கலைக்குப் பசை ஏற்றும் கண்கள். மன்மதனின் உடைவாள் அவள் ஜடை. ரதிகூட அவளைக்கண்டால், தன் கண்களுக்கு மாத்திரம்தான் சரீரத்தோடு தோன்றுவான்; மற்றவர் நேத்திரத்திற்குத்தான் அவன் புலப்படமாட்டானே என்பதையும் மறந்து மன்மதனின் நயனங்களைத் தன் கைகளால் மறைக்க எண்ணுவாள்! அச்சுந்தரவதி எடுத்தடி வைக்கும் போதெல்லாம் கால்களில் தரித்திருந்த சிலம்பும், சதங்கையும் ஒலி செய்தன. அவள் அசைவதும் நடப்பதுமே ஒரு நடனந்தான். அவளின் ஒவ்வொரு அங்கத்தின் அசைவுகளில் ஆனந்த ரசாணுக்கள் குவிந்துகிடக்கின்றனவோ என்று தோன்றும். புன்னகை அவள் உடன் பிறந்தது. "இவளின் அதரதளங்களின் சிவப்பிலிருந்தே செந்நிறம் பிறந்ததோ?" என்று சிலர் கேட்டாலும் யாரும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

முன்னும் பின்னும் பணிப் பெண்களும், சேவகர்களும் செல்ல, கவிதைகளின் அழகு மின்னும் சரளமான நடையைப்போல அவள் நடக்கிறாள். எதிரே பரந்தாமன் குறுக்கிட்டான். காற்று நிரம்பிய பைபோல இருந்த அவனது இருதயத்தில் ஓர் இடுக்கை ஏற்படுத்திவிட்டாள் அச்சுகுமாரி. யாரைப் பார்க்காமலிருக்கவேண்டுமென்று அவன் விரும்பினானோ, அவளே எதிரே வருவதைக் கண்டதும் தலைகுனிந்து ஒதுங்கிப்போக விரைந்தான்.

"நமஸ்காரம்" என்றாள் சட்டென்று நின்று அந்த ரமணி.

பரந்தாமன் தலை தானாக நிமிர்ந்தது. தானும் கையெடுத்து "நமஸ்காரம்" என்றான். பரந்தாமனின் நமஸ்காரத்தை அவள் விரும்பவில்லை. அதற்குப் பதிலாக அவள் விரும்பியது என்ன?

அவள் மனது அப்பொழுது அதை வெளிப்படுத்தவில்லை. அபிநயக்கலையில் வல்ல அது அபிநயத்தோடு நிறுத்திக் கொண்டுவிட்டது.

"இளவரசியின் அந்தப்புரத்தில் நான் பாடப்போகிறேன். தாங்களோ புறப்பட்டு விட்டீர்கள் என்று நினைக்கிறேன்."

"ஆமாம், அவசரமாகப் போகவேண்டும்."

அவள் முகம் பாக்கியத்தை இழந்ததுபோல ஒரு சோகச் சுழலைக் கீறியது.

பரந்தாமன் நகர்ந்தான். அவள் மறுபடியும் ஏதோ பேசவாய் எடுத்தாள்: "நான் அரண்மனை தாசி. அவர்கள் சொற்படி நான் கேட்கவேண்டியிருக்கிறது."

"ஆமாம். ராஜாக்களும், பிரபுக்களும் கலைகள் தரும் சுகத்தை அனுபவிக்கப் பிரத்யேகமாகப் பிறந்தவர்கள் என்று நினைத்துக்கொண்டிருக்கிறார்கள்! ராஜாங்கமும், அரசர்களும் உன்னைப்போன்ற பெண்களை விலைக்கு வாங்கலாம். ஆனால் கலைகளை வாங்கமுடியாது. அது ஐஸ்வரியத்தால் முட்டாள்களாக விளங்குகிறவர்களுக்குத் தெரியாது. கலை தெய்வீகமானது. உன் கலையின் அதி தேவனாகிய நடராஜனை நினைத்துப்பார். தெய்வத்திற்கு அர்ப்பணம் செய்யும் கலையை சிலர் மனிதர்களுக்கு அர்ப்பணம் செய்து எச்சலாக்கிவிடுகிறார்கள். அவர்களுக்காக நான் வருந்துகிறேன். பிரேமா, யாருடைய கிருபையால் இக்கலையின் அருள் பெற்றாயோ, அவருக்கே —அவருடைய பலிபீடத்திலேயே அதை அர்ப்பணம் செய்துவிடு. அந்த நடராஜன் உன்னைக்காப்பாற்றுவார்."

பதிலுக்கு எதிர்பார்க்காமல் பரந்தாமன் சட்டென்று போய்விட்டான்.

நாடகக் கணிகை பிரேமாவதியின் சரீரம் நெக்கு விட்டது. உள்ளம் சிலிர்த்தது. "ராஜாங்கமும், ராஜாக்களும் உன்னைப் போன்ற பெண்களை வாங்கலாம். ஆனால் கலைகளை வாங்கமுடியாது." இந்த வார்த்தைகள் அவளை எங்கேயோ அந்தரத்தில் தூக்கிக்கொண்டு போய்த் திடீரென்று கீழே போட்டுவிட்டு சிரிப்பதாகத் தோன்றியது. "பரந்தாமன் நல்ல சமயத்தில் எச்சரிக்கை செய்தார். இத்தனை நாட்களாக என் இதயத்தில் குடிகொண்ட அவர் இவ்வளவு நாட்களாக இத்தகைய எச்சரிக்கையை ஏன் செய்யவில்லை? அது என் பிசகு! கலையைத் தெய்வத்திற்கு அர்ப்பணம் செய் என்றார். அத்தெய்வம் எங்கே இருக்கிறது? ஹா! பரந்தாமா! தங்களிடம் அத்

தெய்வத்தைப் பார்க்கிறேனே. அது பொய்யா? அல்லது தப்பா? அல்லது வெறும் தோற்றம்தானா? அத்தெய்வத்திற்கே என் கலையை அர்ப்பணம் செய்யப்போகிறேன். உலகத்தில் என்னை யாராலும் விலைக்கு வாங்கமுடியாது. ஆனால், தங்களிடம் என் உயிர் அடக்கமாகியிருக்கிறதென்பதை உமக்கு யார் எடுத்துச் சொல்லப்போகிறார்கள்? நானே இனி எப்படித்தான் சொல்லுகிறது? ஆம். தாங்கள் வழி காட்டிவிட்டீர்கள். அர்ப்பணம்! அர்ப்பணம்! அது ஒன்றே வழி. அபிநயத்தில் காதல் உணர்ச்சி சுலபமாக வருகிறது. ஐயோ அது நிஜமாகும் போது......." இத்தகைய எண்ணங்களின் கிரணங்கள் ஊடுருவின. அவள் விழிகளில் கண்ணீர் திரண்டது. மார்க்கச்சைமீது மேகப்படலம் போல பள்ளிகொண்டிருந்த மெல்லிதான மேகவர்ணப் பட்டுத் துணியின் முனையால் கண்களைத் துடைத்துக்கொண்டே மேலே நடந்தாள்.

நடக்கிறாள்; நடப்பதாக எண்ணமில்லை. ஏதேதோ சிந்திக்கிறாள்; சிந்திப்பதாகவே தோன்றவில்லை. கன வெனும் 'ஜாலசமுக்காளம்' அவளைத் தூக்கிக்கொண்டு உள்ளே போவதாக ஒரு தோற்றம்.

## கிளை-5.

உட்புறம்.

வீணை தூங்குகிறது. கட்டி வைத்த புஷ்பங்கள் அப்படியே இருக்கின்றன.

சதா ஆடலையும் பாடலையும் கண்ட அந்த அழகிய கூடம் கண்ணிருந்தும் பார்வை இழந்தவனைப்போல விளங்கியது.

சோகத்தால் ஆக்கிரமிக்கப்பட்ட சரீரத்தைச் சுமந்து கொண்டு ஓர் 'ஆத்மா' உட்கார்ந்திருக்கிறது! அந்த 'ஆத்மா'தான் பிரேமாவதி.

அன்று அரண்மனையில் திலகவதி தேவியாரின் அந்தப்புரத்தில் பாட்டுக் கச்சேரி நடத்திவிட்டுவந்ததிலிருந்து

அவள் மனம் ஒரு நிலையில் இல்லை. சிந்தனைகள் மொய்த்து வந்து படை எடுத்தன. அன்று இளவரசர் தன்னைப் பார்த்த பார்வை அவள் இருதயத்தில் புதிய சந்தேகங்களைக் கிளப்பிவிட்டது. அவர் அவளை அளவுக்கு மீறி புகழ்ந்ததும் அவளுக்குப் பிடிக்கவில்லை. சுவைக்க விரும்பும் உதடுகள் ஆசை வார்த்தைகளின் துடிப்புகளை உதிர்க்கின்றன. ஆசையின் ஆவேசத்தில் அபசுரம் பேசுவதும் காதில் விழுவதில்லை! இப்படி யெல்லாம் பிரேமா எண்ணினாள். திலகவதி தேவியோ பிரேமாவிடம் உயிர் வைத்திருக்கிறாள். அவள் முகத்தை முறித்துக்கொண்டு அவளால் எப்படி வரமுடியும்? அன்றிருந்த மனோ நிலையில் அவள் அங்கு பாடாமலே வந்திருப்பாள். கடைசியில் பிரேமா பாடினாள். ஏன் பாடினாள்? சோகமான அவள் சரீரத்தை சுந்தரமாகத் தாங்கிக்கொண்டிருக்கும் அந்தராத்மாவிடமிருந்து ஒரு கட்டளை பிறந்தது. "பைத்தியமே, பரந்தாமனை வெளியே தேடி அலையாதே. நான் உள்ளே இருக்கிறேன். உன் பிரேமையிலிருக்கிறேன். பாடு, பண் இசைத்துப்பாடு. உயிர் உடலில் ஒட்டிக் கொண்டிருக்கும் வரையில் பாடு. நான் உன்னைத் திரஸ்கரித்து விட்டேன் என்று நினைக் காதே. பரந்தாமனை நீ ஏன் வித்தியாசப்படுத்தி நினைக் கிறாய்! பாவனை தப்பு என்று சொல்லவில்லை. உண்மை யில் நீயே நான். நீயும் நானும் ஒன்றான காதலர்கள். நீ பாடும் போது நானும் பாடுகிறேன். நீ அழும்போது நானும் அழுகிறேன். தெரிந்ததா? விலை கூற முடியாத உன் கலையை எல்லோரும் அனுபவிக்கட்டும்."

சரீரம் நடுங்கியது. சமாளித்தாள். பாடினாள். யாழை மீட்டி பாடினாள், பரந்தாமனை மனதிலிறுத்திக்கொண்டு.

எண்ண உலகில் ஆத்ம இன்பம். பகிர்முகத்தில் சரீர சோகம்.

பிரேமா சமாளித்தாள். எப்பொழுது? பாட்டுக் கச்சேரி நடந்து எண்ணி நான்கு நாட்களுக்குமேல் இருக்கும்! இன்னுமா அந்த அதிர்ச்சி போகவில்லை? சாகும் மனிதன் சாகாத எண்ணங்களைச் சிருஷ்டித்து விட்டுபோகும் வரையில் இந்த மாதிரி அதிர்ச்சிகள் உலகத்தில் இருந்துகொண்டு தானிருக்கும் போலும்!

அன்று நடந்தவைகளை இன்று நினைத்துகொண்டு பிரேமாவதி அதிர்ச்சி அடைகிறாள். பாவம், மறுபடியும் சமாளிக்கிறாள்! மன நிம்மதியில்லை.

தோழி கோதை, பிரேமாவின் உள்ளத்தை அறிந்தாள். அவளின் கவலையைப் போக்கவேண்டும் என்ற ஆவலால் உந்தப்பட்டாள்.

"பிரேமா, பிரேமா" என்றாள் கோதை.

நிஷ்டை கலைந்தவள்போல "என்னடி?" என்று கேட்டாள் பிரேமா.

"ஒன்றுமில்லை, ஒரு கனவு கண்டேன்."

"என்ன கனவு?"—அப்பொழுது உள்ளே அவள் சொல்லிக்கொண்டாள்: "நான் கூடத்தான் ஒரு கனவு கண்டு கொண்டேயிருக்கிறேன். ஒரு வேளை அது பகற் கனவாகிவிடுமோ?" பிரேமாவின் மெய் குலுங்கியது.

"பயங்கரமான கனவு அல்ல."

"அதற்காக நான் பயப்படவில்லை."

"இல்லை, பிரேமா! நீ ஒரு வேளை பகற்கனவோ என்று நினைக்கக் கூடாதென்பதற்காகவே அப்படிச் சொன்னேன்."

"உம். பகற்கனவில்லை. அப்படி யென்றால்........?"

"நிஜமான கனவுதான்."

"கனவில் நிஜம் வேறு உண்டோ? என்னடி உளறுகிறாய்?"

"இல்லை, பிரேமா, நீ நம்பினாலும் சரி; நம்பாவிட்டாலும் சரி. கண்ணை மூடினேன். பிரம்மதேவர் வந்தார். 'ஹே, கோதை எனக்கும் என் மனைவிக்கும் பெரிய சண்டை. அவள் வீணை வாசிக்காவிட்டால் என்னால்

உயிர் வாழ முடியாது. அப்புறம் இந்த உலக சிருஷ்டியுமில்லை. ஒரே சூன்யம்தான்" என்றார். "ஆமாம், என்னை என்ன செய்யச் சொல்லுகிறீர்கள், சுவாமி?" என்று கேட்டேன். "கொஞ்சமும் தாமதிக்காதே. உன் பிரேமா சில நாட்களாக வீணையைத் தொடுவதேயில்லையாம். அவள் வீணையை வாசிக்காமலிருக்கும்போது என்னாலும் வாசிக்கமுடியாது. முதலில் அவள் கவலையைப் போக்கி யாழை வாசிக்கச் சொல்லுங்கள். அப்புறம்தான் நான் வாசிப்பேனென்று சரஸ்வதி என்னிடம் சொல்லி விட்டாள். உன் தோழி பிரேமாவின் கவலையெல்லாம் காற்றாகப் பறந்துவிடும் என்று சொல்லி முன்போல ஆடல் பாடல்களில் நேரத்தைப் போக்கச்சொல், இல்லையேல் என்பாடு கஷ்டம்" என்று சொன்னார். "அப்படியே சுவாமி" என்றேன். கண்ணைத் திறந்தேன். பிரம்மா மறைந்துவிட்டார். ஒருவேளை அவர் பிள்ளை நாரதனை இங்கு அனுப்பிவைத்தாலும் வைப்பார்! தயவு செய்து அதற்கு முன்பே நீ முன்போல வீணை......."

"என்னடி, கேலியா செய்கிறாய்"

"இல்லை, பிரேமா, உன் மனோரதம் நிறைவேறப் போகிறது."

"எதனால் அப்படிச் சொல்லுகிறாய்?"

"உன்னுடைய கோரிக்கையை பரந்தாமர்......."

"இல்லை......."

"இல்லை, அது எனக்குத் தெரியும்!"

"என்ன தெரியும்?"

"பிரேமை!"

"பிரேமை! பிரேமை! அது புனிதமா? பைத்தியமா?"

"புனிதமான பைத்தியம், பிரேமா."

"இல்லை. கொடுமை! கொடுமை! உலகத்தில் உள்ள கொடுமையெல்லாம் அதற்கு ஈடாகாது."

"வாஸ்தவம். பிரேமையிலிருந்து தாபத்தைப் பிரித்துப்பார், பிரேமா!"

முடியுமா?........"

"அப்பொழுதுதான் புனிதம் தெரியும். பிரேமை புனிதம். தாபம் கொடுமை!"

"ஆம். இவ்வளவு கற்பனையுடன் நீ பேச எங்கே கற்றுக்கொண்டாய்?"

"பிரேமையிடம்!"-சிரித்தாள் கோதை."

கலா ரசிகையாகிய பிரேமாவும் புன்னகையை மலர விட்டாள்.

"வீடு அழகு இழந்துவிட்டது."

"ஏன்?"

"வீணை தூங்குவதால்தான்."

கோதை சட்டென்று எழுந்து சென்று யாழைக் கொண்டுவந்து பிரேமாவிடம் கொடுத்தாள். அன்று கொடுத்த புஷ்பங்களை அவள் கூந்தலில் செருகினாள். பிரேமா தன் உயிர்த்தோழி கோதையின் இருதயத்தை சோதனைக்க விரும்பாததினால் மௌனமாக இருந்து விட்டாள்; யாழையும் வாங்கினாள். "ராஜாவின் கட்டளை பிறந்தால், உடனே அடிமையைப்போல ஓடிப்போய் அரண்மனையிலே பாடுகிறாய். உன் உயிர்த் தோழி கெஞ்சுகிறாள். யாழைக் கையில் கொடுத்து வாசிக்கும்படி வேண்டுகிறாள். நீயோ கவனிக்காமலிருக்கின்றாய்! அன்புக்கு இப்படித்தான் நீ பிரதியுபகாரம் செய்வாயோ?" என்று அப்பொழுது அங்கு வந்து நின்ற பரந்தாமன் கூறினான். எங்கே? சிந்தனை கூடத்திலே தான்.

அந்தக் கட்டளைக்கு பிரேமா தலைவணங்கினுள்; வாசித்தாள்; வாசித்துக்கொண்டே பாடுகிருள். பாடிக் கொண்டே வாசிக்கிருள்.

வெளிப்புறம்— பிரேமாவதியின் மாளிகைக்கு வெளிப்புறம். அந்திமயங்கும் வேளை. இருட்டிக் கொண்டே வருகிறது.

"நீ போ முதலில். அதோ அக்கோவிலில் உனக் காகக் காத்துக் கொண்டிருக்கிறேன்."

"இருவரும் போனல் என்ன?"

"பைத்தியக்காரத்தனம்! முன்பின் யோசிக்காதே. வேலைக்காரர்கள் கேட்டால் பிரேமாவைப்பார்க்கவேண்டு மென்று சொல். தடுத்தால் மீறிக்கொண்டு மளமள வென்று உள்ளே போய்விடு."

"சரி, உன் யோசனைப்படியே நடக்கிறேன்."

இவ்விதம் கூறிவிட்டு பிரேமாவின் மாளிகையினு டைய வாசலுக்குள் நுழைந்தான் ஒரு வயோதிகன். அவன் தலையில் ஒரு பெரிய முண்டாசு. கையில் ஒரு தடி. மேலே ஒரு போர்வை.

"இந்த வீட்டு எஜமானியைப் பார்க்கவேண்டும். நான் வெகு தூரத்திலிருந்துவரும் ஒரு யாத்ரீகன்; அதிதி" என்ருன் கிழவன்.

"யாத்ரீகரா? சத்திரத்திற்குப் போகலாமே. இப் பொழுது அவாளைப் பார்க்க முடியாது" என்ருன் அங் கிருந்த வேலைக்காரன்.

கிழவன் முன்னே நகர்ந்தான். வேலைக்காரன் தடுத்தான். சச்சரவு ஏற்பட்டது. இரைச்சலும் கேட்டது.

சட்டென்று வீணை மீட்டுவதை நிறுத்தி, "கோதை, வெளியே என்ன சப்தம்?" என்ருள் பிரேமாவதி.

"இதோ, பார்த்து வருகிறேன்"—கோதை தெரு வாசல்படியை நோக்கி ஓடினாள். வயோதிகரைப் பார்த்ததும் நமஸ்கரித்து "ஐயா, தாங்கள் யார்? ஏன் இந்தச் சச்சரவு? தங்களுக்கு இங்கு என்னவேண்டும்?" என்று கேட்டாள் கோதை.

"நான் ரொம்ப தூரத்திலிருந்து வருகிற வழிப் போக்கன்- ஆமாம், இந்த வீட்டு எஜமானி பிரேமாவதி தாங்கள்....தா....?"

"இல்லை. நான் பிரேமாவதி அம்மாளின் தோழி...."

"ஓ! தோழியா? ரொம்ப பாக்கியம் செய்தவள்!"

"அதிருக்கட்டும், உங்களுக்கு இங்கு என்ன...."

"ஒன்றுமில்லை. உன் எஜமானியைப் பார்க்கவே வந்தேன்...."

உள்ளே இருந்த பிரியப்பட்டாத பிரேமாவதியும் அங்கு ஓடி வந்தாள். பெரியவரைப் பார்த்ததும் நமஸ் கரித்தாள்.

"பிரேமா, இவர் யாரோ வழிப்போக்கராம். உன் னைப் பார்க்கவேண்டுமாம்!" என்றாள் கோதை.

பிரேமா நமஸ்கரித்ததும், பெரியவர் ஆசிர்வதிப் பதற்குப் பதிலாக நமஸ்கரித்தார்.

கோதை சந்தேக ஒளிபட கிழவனைப் பார்த்து "பெரியவராகிய தாங்கள் ஆசிர்வதிப்பதற்குப் பதிலாக நமஸ்கரிக்கிறீர்களே!" என்றாள்.

கிழவன் தன் தவறை உணர்ந்தவனாய் மனத்திற் குள்ளே திடுக்கிட்டான். கள்ள மனது அடித்துக் கொண் டது. சமயோசித புத்தி தைரியத்தைக் கொடுத்தது. சமா ளித்துக் கொண்டு "நான் துறவி. என்னைப் பொறுத்த வரையில் ஆசீர்வாதமும் நமஸ்காரமும் ஒன்றுதான்!" என்றான்.

"விந்தை!' 'என்றாள் கோதை.

"கோதை, எல்லாம் கடந்த பெரியவாளுக்கு எல்லாம் ஒன்றுதான்" என்று சொல்லிவிட்டு அக்கிழவனைப் பார்த்து, "சுவாமி, மன்னிக்கவும், வாருங்கள் உள்ளே" என்றாள்.

"உன் வீட்டில் அதிதிக்கு இப்படித்தான் வேலைக்காரர்களின் மூலம் மரியாதை கிடைக்கும் போலும்!"

"க்ஷமிக்கவேண்டும், சுவாமி."

உள்ளே அவரை அழைத்துச் சென்றாள். பழவர்க்கங்களைக் கொண்டுவரும்படி கோதைக்குக் கட்டளையிட்டாள். கோதைக்கு மாத்திரம் அந்த வயோதிகனிடம் பயபக்தி ஏற்படவில்லை. யூகசாலியாதலால், இந்தக் கிழவனிடம் ஏதோ வஞ்சகம் குடி கொண்டிருக்கிறதென்று அவளுக்குத் தோன்றிவிட்டது. அதை எடுத்து பிரேமாவிடம் எப்படிச் சொல்லுவது? சந்தர்ப்பபேதத்தைச் சகித்துக் கொண்டே அவசர அவசரமாக கனிவர்க்கங்களை ஒரு தங்கத் தாம்பாளத்தில் வைத்து அங்கு கொண்டு வந்து வைத்தாள்.

பெரியவருக்கு ஆசனத்தை அளித்து உபசாரம் செய்து, "தாங்கள் யார்? எங்கிருந்து வருகிறீர்கள்?" என்று மரியாதைக் குரலில் வார்த்தைகளை உதிர்த்தாள் பிரேமா.

"பிரேமாவதி, நான் ஒரு ஏழை யாத்ரீகன். எனக்கென்று ஓர் ஊர் கிடையாது. உலகமெல்லாம் என் ஊர்தான். அந்த ஊரும் நான்தான். இந்த உலகத்தில் நீ யார்? என்று பரஸ்பரம் பலர் கேட்டுக் கொள்ளுகிறார்கள். உண்மையில் இந்த "நீ—நான்"—யார்? என்பதை தெரிந்து கொள்ளுவதில்லை!"

கோதை குறுக்கிட்டு "சுவாமி, தத்துவப் பேச்சு இருக்கட்டும், முதலில் தாங்கள் யார் என்பதைச் சொல்லுங்கள்" என்றாள்.

"உன் வேலைக்காரி அதிகப் பிரசங்கியாக இருப்பாள் போல் தெரிகிறதே!...."

"அவள் என் வேலைக்காரியல்ல சுவாமி. என் உயிர்த்தோழி. கொஞ்சம் வேடிக்கையாகப் பேசுவதில் விருப்பமுள்ளவள். அவ்வளவுதான். கோபித்துக் கொள்ளாதீர்கள். அதிருக்கட்டும், என்னுடைய பெயர் தங்களுக்கு எப்படித் தெரிந்தது?" என்றாள் பிரேமா.

"பல்லவ ராஜ்யம் மாத்திரமல்ல; மற்ற நாடுகளிலும் உன் பெயர் பிரசித்தமாயிருக்கிறதே. நீ நல்ல ஆட்டக்காரியாம்; பாட்டுக்காரியாம்! எல்லோரும் சொல்லுகிறார்களே."

"எல்லாம் தங்களைப் போன்ற பெரியவாளுடைய ஆசீர்வாத—பாக்கியம் தான்."

"இல்லை, நமஸ்கார—பாக்கியம்!" என்று குறுக்கிட்டாள் கோதை.

"அடடா! இவள் பெரிய வாயாடியாக இருப்பாள் போல் தெரிகிறதே! முதலில் இவளை அப்புறம் போகச் சொல். நான் ஓர் இரகசியத்தை உன்னிடம் சொல்லவே வந்திருக்கிறேன்."

"கோதை என் உண்மைத் தோழி, சுவாமி. சும்மா சொல்லுங்கள்."

"அது முடியாத காரியம்."

"சரி, கோதை நீ சற்று போய்விட்டு வா."

கோதைக்கு அங்கிருந்து போக மனமில்லை. பிரேமாவின் உத்தரவுப்படி போக அடி எடுத்து வைத்தாள்.

"கோதை, இப்பொழுது தான் எனக்கு ஞாபகம் வந்தது. அந்தியில் மலர்ந்துள்ள புஷ்பங்களைப் பறித்துக் கொண்டுவா."

"அப்படியே"—கோதை அங்கிருந்து போகிறாள்.

பிறகு வயோதிகர் "பிரேமா, உன்னிடம் நான் ஒன்றை யாசிக்க வந்திருக்கிறேன்" என்றார்.

"என்னால் இயன்றதைத் தருகிறேன்.'

"இல்லை, நான் கேட்பதைத் தரவேண்டும். அது உன்னால் முடியும். ஆனால், மனம் இடம் கொடுக்க வேண்டும்."

"நீங்கள்சொல்லுவதின் அர்த்தம் விளங்கவில்லையே."

"பிரேமா, உன்னை இனியும் சந்தேகத்திலேயே விட்டுவிட விரும்பவில்லை என்று சிரித்துக்கொண்டே அக்கிழவன் தன் போர்வையை நீக்கினான்; முகத்திலிருந்த பொய்த் தாடியையும் விலக்கினான்."

பிரேமா, "ஹா....இளவரசரா........? ஈதென்ன? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே" என்றாள் அதி ஆச்சரியமுடன்.

"பிரேமா, சப்தம் போடாதே. இளவரசன் ராஜ சேகர வர்மன்தான் உன் இல்லம் தேடி வந்திருக்கிறான். எதற்காக என்று நீ கேட்காமலிருந்தால் என் இருதயம் குளிரும்."

பிரேமா தன் தலையில் யாரோ இமயமலையைத் தூக்கி வைப்பதுபோல உணர்ந்தாள்! அவளால் பேச முடியவில்லை; மௌனமாக இருக்கவும் முடியவில்லை. ஆத்மா சரீரத்தை ஒரு காரணமாக்கிக் கொண்டு வேதனையைப் படரவிட்டு வேடிக்கை பார்த்தது. கடைசியில் கைகளைக் கூப்பி வாய்குளற சொன்னாள்: "இளவரசே, மன்னிக்கவும்."

"பரவாயில்லை, பிரேமா, இப்படி வந்து உட்கார்."— இளவரசன் சரீரமோ ஆசையின் 'விசை'யின் மீது உட்கார்ந்திருந்தது!

"அது சரியல்ல. நான் கேவலம் உங்கள் அரண்மனை அடிமை என்பதை மறந்து விட்டீர்களா?"

"மறக்கவில்லை. அந்த அடிமைக்கு அடிமையாகவே விரும்புகிறேன்."

"வேண்டாம். பொருத்த[illegible] நான் தங்கள் அந்தஸ்திற்கும், யோக்கியதைக்கும் ஏற்றவள் அல்ல."

"பிரேமா, என் மனோநிலையை அறியாமல் பேசுகிறாயே. ஆனந்தனை உனக்குத் தெரியுமென்று நினைக்கிறேன். அவனைக் கேட்டுப்பார், நான் சென்ற சில நாட்களாக அடையும் வேதனையை. அவன்தான் இங்கு எப்படியும் நான் வருவதற்கு இந்த மாறுவேட ஆலோசனையைச் சொல்லிக் கொடுத்தான். இல்லையேல் எனக்குப் பைத்தியமே பிடித்திருக்கும்."

"யுவராஜா, இதைச் சொல்லுவதற்காக மன்னிக்கவும். உலகம் உங்களையும் என்னையும் நிந்திக்கும். தர்மமல்ல. வேண்டுமானால் நீங்கள் என்னைத் தண்டித்துக் கொள்ளலாம்."

"ஸ்திரீகள் இதயம் கடினமானது. அவர்களை லதிகைகள் என்று சொல்லுவதெல்லாம் புலவர்கள் கற்பனை என்பதை 'இப்பொழுது உணர்கிறேன்"—ராஜசேகரவர்மன் புன்னகைத்தான்.

"இளவரசே, ஸ்திரீகளின் இதயம் தர்மத்தைப் பின்பற்றுவதில் கண்டிப்பானது; கடினமானது."-பிரேமாவின் வார்த்தைகளில் சக்தி ஊடுருவிச் சென்று கொண்டிருந்தது.

"பிரேமா, ஆசையாலும், காதலாலும் புரண்டு அழும் மனது உன்னைச் சரணமடையும்போது அத்துடன் நீ தர்மத்தின் பெயரில் பேரம் பேசுவது நியாயமா?" அவன் குரலில் தாபத்தின் "ஹீனக்குரல்" சுருதி சுத்தமாகப் பேச முயன்றது!

"இதில் பேரத்திற்கே இடமில்லை. நான் யதார்த்தவாதி."—அவள் த்வனியில் கண்டிப்பு தலைகாட்டியது.

ஆசைக்கு உதவி செய்யும் கற்பனை இளவரசனை இவ்விதம் பேசும்படி தூண்டியது: "உம்....சோலையின் நடுவே குளிர்ந்த தடாகமிருக்குமென்று வந்தேன். நீ பாலைவனத்திடையே கானல் நீரைக் காட்டுகிறாய். நியாயமில்லை."

"அவசரப்பட்டுவிட்டீர்கள். உங்கள் அடிமையை க்ஷமைசெய்து மன்னித்துவிடுங்கள்."

"பிரேமா, அது என்னால் முடியாது. நீ குற்றம் செய்தாலல்லவோ நான் மன்னிக்கவேண்டும். குற்றமில்லை; மன்னிப்புமில்லை. பிரேமா, நீ என் மனத்தின் வேட்கையை...."

இத்தகைய "கெஞ்சல் இராகத்து"டன் பேசிக்கொண்டே அரசகுமாரன் எழுந்தான். பிரேமாவதியினுடைய வனப்பின் பூரிப்பு அவன் மனத்தை, சரீரத்தை எல்லாம் உணர்ச்சியின் புரட்சிக்குள்ளாக்கியது. தான் தாசியென்றும், ராஜகுமாரனுக்கு ஏற்றவள் அல்ல என்றும் எண்ணியே பிரேமா அவ்விதம் பதில் கூறுகிறாள் என்று நினைத்தான். அவன் கண்கள் பிரேமாவை அப்படியே விழுங்கின. ஆசைமனது அவள் மேனி அழகில் நீந்த துடிதுடித்தது. சட்டென்று பிரேமாவின் புஜங்களைப் பிடித்தான். அப்படியே அணைத்துக்கொள்ள முயற்சித்தான்.

பிரேமா, "வேண்டாம். வேண்டாம். என் இதயம் வேறு ஒருவருக்குச் சொந்தமாகிவிட்டது. பலாத்காரம் வேண்டாம்" என்று சொல்லிக்கொண்டே தன் கரங்களை அவன் மார்புக்கிடையே உந்தினாள்.

இளவரசனின் நெஞ்சு படபடத்தது. கோபம் ஒரு பக்கம் உதித்தது. "யாருக்குச் சொந்தமாகிவிட்டது?...." என்று அவன் அவள் புஜங்களைக் குலுக்கிக் கேட்டான்.

"பெயரை இப்பொழுது சொல்ல மாட்டேன்."— "கணீர்" என்று பதில் கூறினாள்.

அமிர்தம் கடையும் போது விஷம் புறப்பட்டது போல அவன் முகத்தைச் சுற்றி உஷ்ண ஆவி படர்ந்தது. கோபக் கனல் ஓங்க அவன் கூறினான்: "இளவரசன் ஏமாறுகிறவன் அல்ல. பெண்களின் சாகசம் எனக்குப் புதியதல்ல. சொல், சீக்கிரம். சொல்லாதவரையில்........" அதட்டினான்.

பிரேமா மயக்கம் கொண்டாள். அவளால் நிற்க முடியவில்லை. கால்கள் தள்ளாடின. அவள் தன்னையு மறியாமல், ஹா! பரந்தாமா! தங்கக் கத்தி கழுத்தை அறுக்கப்பார்க்கிறது என்றாள்.

பரந்தாமா என்ற சொல் ஸ்பஷ்டமாகக் கேட்டது. மற்றவை இளவரசன் காதில் விழவில்லை. உண்மையில் பிரேமா அந்த வார்த்தைகளை தன் மனத்திற்குள் ளேயே சொல்லிக்கொள்ள விரும்பினாள். ஆனால், உச்சரிப்பு வெளியே பிறந்துவிட்டது. காரணம், அவள் பேசவில்லை; பேச விரும்பவுமில்லை ஆனால், அவளைத் தூக்கிச் சுமக்கும் ஆத்மாவே பேசிற்று; சத்தியத்தையே சொல்லிற்று! இந்த ஆத்ம இரகசியத்தை இளவரசனால் தெரிந்துகொள்ள முடியவில்லை. ஆசையின் வேகத்திலே நேத்திர மிழந்தவனாய் விட்டான். சத்தியத்தைக் கேட்டு சந்தோஷப்படவிருக்க பொறுமைக் கொள்ள ஆரம் பித்துவிட்டான்.

"பரந்தாமன்! பரந்தாமன்! அவனா என் வாழ்வில் குறுக்கிட்டான்? பிரம்மசாரி என்று வேஷம்போட்டு தாசி லோலனாக மாறிவிட்டானே?

"ஐயோ! அவர் ஒரு பாவமும் அறியாதவர்."

"போதும், பாசாங்குக்காரி. கேவலம் தாசி என் பதைக் காட்டிவிட்டாய். தாசியின் வாழ்க்கை வெறும் கொடுக்கல் வாங்கல்தானே! நீயோ பத்தினியாகப் பார்க்கிறாய். வெட்கக்கேடு."

"பத்தினியாகயிருந்து தாசியாகயிருப்பதைவிட, தாசி யாகயிருந்து பத்தினியாகயிருப்பது மேல். மனது புண் படப் பேசாதீர்கள்."

"தெரிந்துகொண்டேன். அழகான ஸர்ப்பம் அழகாக படமெடுத்து ஆடுகிறது. ஆனால் அணுகிறவரை அது அழிக்கும் என்பதை தெரிந்து கொண்டுவிட்டேன்."

"கற்பனைப் பேச்சு போதும். ஸர்ப்பம்தான்; தீண்டா தீர்கள், போங்கள்."

"குழந்தாய், அது சரியல்ல. இப்பொழுது திடீரென்று அரண்மனையின் ஆதரவை துச்சமாக்கிவிட்டு என் ஆசிரமத்திற்கு வந்தால் இளவரசரைப் பற்றிய தகவல் எப்படியும் வெளியே பரவிவிடும். அது நல்லதல்ல. இளவரசர் மேலும் தொந்தரவு கொடுப்பாரோ என்று நீ பயப்படலாம். அதைப்பற்றி கவலைப்படாதே. இத்தனை காலமாக உன்னை என் குழந்தையாகவே பாவித்து வந்திருக்கிறேன். பிதா என்ற முறையில் உனக்கு யாதொரு கஷ்டமும், தொந்தரவும் வராமல் நான் பார்த்துக் கொள்ளுகிறேன். கவலைப்படாதே."

பிரேமா எவ்வளவோ சொல்லிப்பார்த்தாள். குருநாதர் இணங்கவில்லை.

அரண்மனை வாழ்வை வெறுத்து ஆசிரம வாழ்வை அவள் விரும்பினாள். ஏன்? அதன் "ஆத்ம இரகசியம்" என்ன என்று நிர்மலானந்தர் கேட்கவில்லை. கேட்டால் தான் என்ன? சொல்லத்தான் முடியுமா? காதலைக் காரணமாக்கிக் கொண்டு சரீரத்தை நடிக்கவைக்கும் இந்த ஆத்மா போடும் 'புதிர்'களே இப்படித்தான் போலும்! உலகம் ஒன்று சொல்லுகிறது, உள்ளம் ஒன்று சொல்லுகிறது; காவியம் பிறக்க கதை கிடைத்து விடுகிறது!

பரந்தாமனுடன் வசித்து "காவியத் தநாநாயகி"யாக மாற அவள் மனது துடித்தது! அத்துடிப்புகளின் மறுபிறவிகள் அவளது திவ்ய தோற்றத்திலே பிரதிபலித்தன. குருநாதர் அதைத் தெரிந்து கொண்டாரா, என்ன?

## கிளை-6.

வான உலகின் மாட்சிமை தங்கிய மகாராணியைப் போல சந்திரிகை.

அதோ, தூரத்தில் தெரியும் சுந்தரமயமான ஆலயம் அந்த நிலவொளியின் "அழகு ராஜ்ய"த்தில் பரிமளித்து பூரித்து நிற்கிறது. அந்த ஆலயத்திற்குக் கூப்பிடு தூரத்திற்கப்பால் ஒரு நந்தவனம்; அங்கு கொஞ்சும் புஷ்பங்கள்; அசைந்து ஆடும் இலைகள்; ஊஞ்சலாடும்

கிளைகள். காதலர்களைத் தூண்டிவிட்டு வேடிக்கை பார்க்கும் காற்று அச்சோலையிடையே ஓர் இன்ப அதிர்ச்சியை உண்டாக்கிற்று.

சந்திரோதயம் ஆகும் சமயத்தில் அச்சோலைக்குள் இரு உருவங்கள் உற்சாகத்துடன் ஓடின; ஓர் உயர்ந்த மரத்தடியில் நின்றன; உட்கார்ந்தன. அவ்வுருவங்கள் யார்?

ஓர் உருவம் ரஸிக்கப் பிறந்தது. மற்றொன்று அந்த உருவத்தின் உள்ளத்திலே ஒட்டிக்கொண்டு தனது பெண்மையின் இனிமையை அளிப்பது.

"ஆமாம், இந்த வேஷமெல்லாம் எதற்கு? இந்த நேரத்தில், நான் பூபறித்துக்கொண்டு திரும்பும் வேளையில் தாங்கள் இரகசியமாக வந்து கூப்பிடுவானேன்? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே!"

"விளங்காது. உன்னை வீட்டிலிருந்து எப்படியாவது வெளியே கொண்டுவர முயற்சித்தேனென்றும்; இதற்கு என்ன செய்யலாம் என்று அதோ, அந்தக் கோவிலுக்குச் சமீபம் நின்று யோசித்தேன். நல்ல காலமாக நீயே வெளியே வந்தாய். உடனே ஓடி வந்து கூப்பிட்டேன்."

"எதற்காக?"

"உன்னைச் சந்திக்கத்தான்."

"எனக்கா காது குத்தப் பார்க்கிறீர்கள்? அது சரி; இந்த மாறுவேஷமெல்லாம் எதற்காக?"

"அதுவா?........"

"ஆமாம்.... அது தான்."

"எது தெரியுமா? எல்லாம் இந்தப் பிரேமையால்', வருகிற வினைதான்!"

"ஐயோ! இந்தப் பிரேமையைப்பற்றி என் காதில் போடாதீர்கள்!"

"ஏன் அப்படிச் சொல்லுகிறாய்?"

"பாழாய்ப் போகிற இந்தப் பிரேமையால் என் உயிர்த்தோழி பிரேமா படுகிற பாடு...."

"ஓ! பிரேமாவின் மீது மன்மதன் திருஷ்டி விழுந்து விட்டதா? அந்த மன்மதன் நம் இளவரசர் தானே!"

"இதைச் சொல்ல உங்களுக்கு என்ன துணிவு! அரச குமாரர் எங்கேயாவது...."

"பைத்தியமே, பிரேமை அதை எல்லாம் கவனிக்காதென்பதை இன்னுமா தெரிந்து கொள்ளாமலிருக்கிறாய்! ராஜசேகரவர்மன் பிரேமா, பிரேமா என்று இரவெல்லாம் பிதற்ற ஆரம்பித்து விட்டார், நான் உன்னை நினைத்து சதா, கோதை என்று பிதற்றுவதுபோல!"

"இது வாஸ்தவமா?"

"இதைக் கேட்கிறாயே! உன்னை ஒரு நாள் சந்திக்காவிட்டால்...."

"உஷ்! அதை நான் கேட்கவில்லை. நமது இளவரசர்"

"லோகத்திலே பிரேமையில் மனுஷன் அகப்பட்டுக் கொண்டால், அப்புறம் பிழைக்கிறது ஏது?"

"ஐயோ! நாமும் அகப்பட்டுக் கொண்டிருக்கிறோமே!"

"ஆமாம். அகப்பட்டுக்கொண்டிருக்கிறோம். ஆனால், புத்திசாலிகளாகிய நாம் பிழைத்துக் கொள்ளுவோம்"—சிரிப்பின் ஒலி.

"அதிருக்கட்டும், இளவரசர் பிரேமாவைக் காதலிப்பது...."

"உஷ். மெதுவாகப் பேசு. அதை ஏன் கிண்டுகிறாய்? எதற்காக இந்த மாறு வேஷமெல்லாம் என்று முதலில் கேட்டாய் அல்லவா? எல்லாம் இளவரசருக்காகத்தான் அவர் இப்பொழுது பிரேமாவின் வீட்டிலிருக்கிறார். என்பது உனக்குத் தெரியுமா?"

"இளவரசரா? ஆ! இப்பொழுது எனக்கு விளங்கி விட்டது. வயோதிகன் வேடத்தில் வந்தது இளவரசரா? நான் அந்த வயோதிகனைச் சந்தேகித்தேன்....அது சரி பாசப் போய்விட்டது."

"ஆமாம். வெளியே இதைப்பற்றி பேசாதே. நான் தான் இந்த மாறுவேட யோசனையைச் சொல்லிக் கொடுத்தேன். அவர் வெற்றியுடன் இன்னும் கொஞ்சம் நேரத்திற்கெல்லாம் இந்தக் கோவில் பக்கம் வருவார். அங்கு போயிருக்கவேண்டும்."

"வெற்றியா? இளவரசருக்கா? போர்க்களத்தில் அவர் வீரமும், வாளும் வெற்றி அடையலாம். பிரேமாவிடம் அவர் தோல்வி அடைவார்."

"கோதை, நீ சொல்லுவது விளங்கவில்லையே!"

"விளங்காது. ஸ்திரீகளின் லளிதமான இதயத்தை இந்த ஆண்கள் எப்பொழுதுமே அறிந்து கொள்ளுவதில் படுதோல்வி அடைகிறார்கள்!"

"ஏன் அப்படிச் சொல்லுகிறாய்?"

"பிரேமாவின் இருதயத்தில் இளவரசருக்கு இட மில்லை."

"அப்படியானால்........"

"இந்த உலகத்தையே வெறுக்கும் ஓர் ஆத்மாவை அது சரணமடைந்திருக்கிறது!"

"ஓ! விசித்திரம்! அந்த ஆத்மா யாரோ?"

"தெரியவில்லையா? உங்கள் நண்பர்தான்!"

"யார்? பரந்தாமனையா சொல்லுகிறாய்?"

"ஆம். பரந்தாமனை நினைத்து நினைத்து அவள் அடையும் வேதனை எனக்கல்லவோ தெரியும்."

"பிரேமா பைத்தியக்காரி. உலகத்தையேவெறுக்கும் பரந்தாமனிடம் அவள் என்னசுகத்தை அடையமுடியும்? இதை நீ அவளுக்கு ஏன் எடுத்துக் கூறக்கூடாது?"

"ஓ! இளவரசருக்காக பரிந்து பேசுகிறீர்களே."

"ஆம், என் நண்பரின் இச்சையைப் பூர்த்தி செய்ய என்னாலான உதவியைச் செய்யவேண்டாமா?"

"இதை மறந்துவிடுங்கள். பெண் மனம் உறுதியானது. இந்தப் பல்லவ சாம்ராஜ்ய முழுவதும், ஏன் இந்த உலகமே வந்து எதிர்த்தபோதிலும் சரி; அல்லது நயமாகக் கேட்டுக் கொண்டாலும் சரி; பிரேமாவின் உள்ளம் இளவரசர் இச்சைக்கு இடம் கொடுக்காது. இது நிச்சயம். என் முகத்திற்காக நயவு செய்து இளவரசர் மனதை மாற்றிவிடுங்கள்."

"கோதை, என் முகத்திற்காக உன் பிரேமாவின் மனதை நீ மாற்றக்கூடாதா?"—கிண்டல் சிரிப்பு.

"வேண்டாம் இந்த வேண்டுகோள். உங்கள் நெஞ்சில் கை வைத்துப்பாருங்கள். நியாயம் உங்கள் கட்சியில் இல்லை என்பது தெரியும்."

"இளவரசருக்குக் கோபம் வந்தால் பிரேமாவின் கதி என்ன ஆகும் தெரியுமா?"

"என்ன ஆகும்? தண்டிக்கலாம்; அல்லது கொன்றே விடலாம். பிரேமா காதலுக்காக மரணத்தையும் நேசிக்கும் ஜாதியைச் சேர்ந்தவள் என்பது எனக்குத் தெரியும். இதை உங்கள் இளவரசருக்கு எடுத்துக் காட்டுங்கள்"—உச்சரிப்பில் உறுதி வெளிப்பட்டது.

"சரியாகப்போச்சு. இது விஷயத்தில் உன் உதவி கிடைக்குமென்று நினைத்தேன். அதற்கு வழியில்லாமல் செய்துவிட்டாயே."

"இந்தப் பாதகமான வேலையில் தாங்கள் தலையிடா

மலிருந்தால்தான் என் மனம் குளிரும். கெஞ்சிக்கேட்டுக் கொள்ளுகிறேன். இளவரசர் மனதை மாற்ற உங்களால் முடியும்."

அதே சமயத்தில் கோவிலைக் கடந்து அச்சோலையின் ஓரமாக அதி வேகமாக வந்துகொண்டிருந்த ஓர் உருவம் சுற்றியும் பார்த்தது; மீண்டும் நடந்தது. நிழல் படர்ந்த பக்கமாக அந்த உருவம் தலை முழுவதையும் ஒரு போர்வையால் மூடிக்கொண்டே போகிறது. "எங்கே, தொலைந்துவிட்டான்?" என்ற கேள்வியுடன் அதன் கண்கள் சுற்றியும் ஆராய்ந்தன.

"ஹா! கோவிலுக்கு அருகில் நிற்கவேண்டிய ஆனந்தன் இங்கல்லவோ இருக்கிறான்! அதோ, அவன் பக்கத்தில் உட்கார்ந்து சல்லாபமாகப் பேசும் யுவதி யார்? பார்த்த முகம்மாதிரித் தெரிகிறதே. ஆம். பிரேமாவின் தோழிதான்! சந்தேகமில்லை! சரிதான்! ஆனந்தா, உன் பிரேமை இவள்மீதா விழுந்துவிட்டது? யுவதி பக்கத்திலிருந்தால் உலகத்தையே மறக்கக்கூடியவன் நீ என்பதை நான் நிதர்சனமாக அறிந்து கொண்டுவிட்டேன். சரி. உன் இன்ப நித்திரையைக் கலைக்க நான் விரும்பவில்லை." இவ்விதம் அந்த உருவம் நினைத்துக் கொண்டே சட்டென்று அங்கிருந்து கிளம்பிவிட்டது. போகும் போது "இதுவும் நன்மைக்கே. பிரேமாவின் உள்ளத்தை மிகவும் புத்திசாலியாக விளங்கும் அவள் தோழியைக் கொண்டே மாற்ற முயற்சிக்கலாம். இத்தோழியோ ஆனந்தன் சொற்படி கேட்பாள் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை" என்று அவ்வுருவம் தன் மனத்திற்குள் எண்ண வட்டமிட்டது!

வெள்ளி ஒளியை அள்ளி அள்ளி வீசும் சந்திரிகையை திட்டான கறுத்த மேகம் மறைத்தது. உடனே இருளும் கீழே படர்ந்தது. அந்த மங்கலில் அந்த உருவம் மறைந்துவிட்டது! ஆனால், பிரேமாவின் உள்ளத்திடம் படுதோல்வி அடைந்த அந்த ராஜ அந்தஸ்துள்ள மனத்தில் துள்ளல் மாத்திரம் இன்னும் மறையவில்லை!

# கிளை-7.

நகர எல்லைக்கு வெளியே. பண் இசைத்துக் கொண்டே ஓடும் நதிக்கரையின் அருகே பெரிய பூஞ்சோலை. அதன் வடதிசையில் அழகிய ஆஸ்ரமம். அதற்கு எதிர்புறம் மிகப் பெரிய ஆலமரம். அதன் விழுதுகள் அங்கு சுற்றியும் ஊன்றிக் கொண்டிருக்கின்றன.

அங்கே இயற்கை தேவி புன்னகைக்கிறாள்! அந்தப் புன்னகையில் சாந்தமே சாபல்யமடைந்திருக்கிறது! இயற்கையின் சூழ்நிலையில் வேதாந்தி இறைவனைச் சரணமடைகிறான்! அத்தகைய சரணாகதிக் கேற்ற ஸ்தலமாக அப்பிரதேசம் விளங்கியது.

எங்கும் ஆனந்தம். அந்த ஆனந்தத்தில் ஓர் அமைதி.

புள்ளினங்கள் சுதந்திரத்தின் சோபைகளாக அங்கு மிங்குமாகப் பறக்கின்றன. ஆஸ்ரமத்தின் மான்கள் தூரத்தில் மேய்ந்து கொண்டிருக்கின்றன. மற்றொரு பக்கம் சிறிது தூரத்திற்கப்பால் பசுக்கள் புல்-தரையில் சுற்றிவருகின்றன.

சாயங்காலம். அடிவானம் மெய்க் காதலியின் ஆசை இதயத்தைப் போல செக்கச் சிவந்து விட்டது. "அஸ்தமனமே உதயத்திற்கு ஆதாரம்" என்று பாடிக் கொண்டே மறைகிறான் கதிரவன். காற்று நதியை முத்தமிட்டுவிட்டு, அந்தக் கதையை மலர்ந்த பூக்களிடம் சொல்லாமல், அவைகளையும் அதரபானம் செய்து மானிடர்களைப் பார்த்துக் கேலி செய்வது போல அடிக்கிறது! இயற்கை, இப்பொழுது வரவர கவிஞனின் உள்ளத்திலே பெருக்கெடுத்தோடிவரும் காவ்யரச சொரூபத்தை அடைந்து வருகிறது!

அதோ, அந்த ஆலமரத்தடியில் மூன்று, நான்கு பிரம்மசாரிகள் உட்கார்ந்திருக்கிறார்கள். ஓலைச்சுவடிகளை எல்லாம் அவசர அவசரமாகக் கட்டிவைத்துவிட்டு பேசுகிறார்கள். ஒருவன் ஆத்மாவைப்பற்றிப் பேசுகிறான். [illegible]வன் ஜீவாத்மா, பரமாத்மாவைப் பற்றி

பிரசங்கம் செய்கிறான். இவ்விதம் அவ்வாசிரமத்திலே தத்துவ விசாரணை பலமாக நடந்து கொண்டிருக்கிறது.



"நானே கடவுள்" என்று ஒருவன் அத்துவைதம் பேசினான்.

"நீயா கடவுள்?" என்று மற்றவன் கோபமுடன் அவன் கன்னத்தில் அடித்தான்.

அடி வாங்கியவன் "என்னை ஏன்டா அடித்தாய்?" என்று சீறி விழுந்தான்.

"அடேடே! கொஞ்சம் பொறு. அடிக்கிறவன் யார்? அடிபடுகிறவன் யார்? எல்லாம்...." என்று மற்றவன் பேசுவதற்குள் இன்னொருவன் குறுக்கிட்டு "உஷ். உன் பேச்சு இருக்கட்டும். அதோ பார்" என்றான்.

அச்சமயம் திடீரென்று அவர்கள் இருக்கும் பக்கம் ஆஸ்ரமத்து மான் ஒன்று துள்ளி ஓடி வந்து தன் இரு காதுகளை இருமுறை ஆட்டிவிட்டு விழித்தது.

"ஓ! பரந்தாமன் வருகிறானோ? இருட்டிவிட்டது. சாயங்காலப் பூஜைக்குப் புஷ்பம் பறிக்கப்போனவனை இன்னும் காணோமே" என்றான் ஒருவன்.

"அதோ, பார், யாரோ வருகிறார்கள்!"

எல்லோரும் திரும்புகிறார்கள்.

ஆடம்பரமற்ற உடையில் திகழும் ஒரு யுவதி அங்கு வந்தாள். முதலில் மிரண்டு ஓடிவந்த மான் அவள் சமீபம் சென்று முகத்தை "அண்ணாந்து" பார்த்தது. அதன் விழி அவளின் விழியைப் பார்த்து ஏமாந்திருக்கும்!

அங்கு அமர்ந்திருந்த பிரம்மசாரிகள் எல்லோரும் எதிரேவந்து நின்ற அதிரூப யுவதியைப் பார்த்தார்கள்.

"ஐயோ! இவள் தாசியல்லவோ?...."

"அடடா! இவள் இங்கே எங்கேடா வருகிறாள்?"

"ஆமாம். அரண்மனை நாடகக் கணிகை பிரேமாவதிதான்."

"இவளுக்கு ஆஸ்ரமத்தில் என்ன வேலை?"

"இல்லை, இவள் மாயை!"

"இல்லவேயில்லை. பெண்ணாக வந்தவொரு மாயப் பிசாசம்!"

"நம் மனதைப் பரிசோதிக்க வந்திருக்கிறதோ?"

"சே! விலைமகள்."

"நாடகக் கணிகை."

"நாட்டியக்காரி."

"இல்லை, மோகினி."

"பைத்தியக்காரா, வனதேவதை."

இவ்விதம் அவர்களுக்குள் பேசிக்கொண்டார்களே தவிர ஒருவராவது அவள் சமீபம் சென்று விசாரிக்கவில்லை. அவர்கள் சம்பாஷணையைத் தூரத்தில் நின்றபடியே கேட்ட அவளுக்கு ஒரு பக்கம் சிரிப்பு; மற்றொரு பக்கம் துக்கம்.

மெதுவாக முன் வந்தாள் அந்தப் பெண். அவள் சொன்னாள்: "நிர்மலானந்த அடிகளைத் தரிசிக்க வேண்டும். ஆஸ்ரமத்தில் இருக்கிறார்களா?" அவள் குரலில் பக்தியின் பணிவு பிரதிபலித்தது.

நிர்மலானந்தர் ஆஸ்ரமத்தைச் சேர்ந்த சிஷ்யர்களாகிய அவர்களில் ஒருவர் முன் வந்து "இருக்கிறார். சாயங்கால பூஜை ஆரம்பமாகும் நேரந்தான். நிஷ்டையில் உட்கார்ந்து விட்டால் அப்புறம் வெகு நேரமாகும் அவரைப்பார்க்க. கொஞ்சம் இப்படியேஇருங்கள். நான் போய்ப் பார்த்து வருகிறேன்" என்றான்.

"யாரோ, எவரோ?" என்று கூட அவனைத் தடுக்கப் போனான்.

"ஏன் இன்னும் பரந்தாமனைக் காணோம்? புஷ்ப [illegible] வந்து சேரவில்லையே." இவ்விதம் சொல்லிக் கொண்டே ஆஸ்ரமத்திற்குள்ளிருந்து வெளியே வந்தார் நிர்மலானந்தர். "பரந்தாமா!" என்று கூப்பிட்டார்.

அதே சமயத்தில் அங்கு காத்திருந்த யுவதி ஓடிப் போய் அவர் காலில் விழுந்தாள்.

அவளை அன்புடன் தூக்கி நிறுத்தி "குழந்தாய் பிரேமா, இந்நேரத்தில் நீ ஏன் இங்கு வந்தாய்?" என்று கேட்டார் குருநாதர்.

"தங்களைச் சரணமடைந்து உபதேசம் பெறவே."

ராஜகுரு புன்னகையுடன் அவளை உள்ளே அழைத்துச் சென்றார்.

"பிரேமா, நான் சொன்ன புத்திமதியை மறந்து விட்டாயா?"

"இல்லை. அரண்மனை சகவாசமும் என் மாளிகையின் வாசமும் நரகமாய்விட்டன. என்னால் இனி அங்கு இருக்கமுடியாது. தங்கள் ஆஸ்ரமமே கதி என்று வந்து விட்டேன். ஏற்றுக்கொள்ளுங்கள். பகவானுக்குப் பணிவிடை செய்வதே பவித்திரமானதென்பதைக் கண்டுகொண்டேன்"—கண்ணீர் வடித்தாள்.

"குழந்தாய், என் ஆஸ்ரமத்திலிருக்க வேண்டாம் என்று நான் சொல்லவில்லை. அது உனக்கு ஏற்றதல்ல. நான் சொல்லுவதைக் கேள். லோகத்தையே சௌந்தரியமயமாக்கும் கலை மூலமாகவும் கடவுளுக்குத் தொண்டு செய்யலாம். நீ மேற்கொண்டுள்ள கலைவாழ்வைக் கொண்டே கடவுளை அடையலாம். பிரேமா, கலைஞனும், வேதாந்தியும் வெவ்வேறான பாதையில் போகிறவர்கள் தான்; வெவ்வேறு திருஷ்டியில் நோக்குகிறவர்கள் தான். ஆனால், இருவரும் முடிவான ஒரே லட்சியத்தில் சந்தித்து

விடுகிறீர்கள் என்பதை நீ உணரவேண்டும். மேலும், குழந்தாய், ஆஸ்ரம வாழ்வு உனக்கேற்றதல்ல. சுகபோகத்தை யெல்லாம் தியாகம் செய்யவேண்டிய நிர்ப்பந்தமும் ஏற்படவில்லை...."

"குருவே, ஆஸ்ரம வாழ்வை விரும்பியே வந்திருக்கிறேன். அழகைத் தண்டிக்க அதுதான் சரியான வழி."

நிர்மலானந்தர் சிரித்தார்.

"சுவாமி, என் உறுதியை சந்தேகிக்கிறீர்களா?"

"இல்லை, பிரேமா, நீ இன்னும் குழந்தைதான்! குழந்தையின் பிடிவாதம் உன்னிடம் காணப்படுகிறதென்பதற்காக இதைச் சொல்லவில்லை. கலையை—அதுவும் அழகுக் கலையை நன்கு கற்றுக்கொண்டிருக்கிறாய் என்பதில் ஆக்ஷேபணையில்லை. ஆனால், அதன் 'ஆத்மா' வை நீ உணரவில்லை. பிரேமா, அழகைத் தண்டிக்க யாராலும் முடியாது!...."

பிரேமா அவசரமுடன் குறுக்கிட்டு, "சுவாமி, காலமும் மரணமும் அழகை...." என்றாள்.

"பைத்தியமே, காலமும், மரணமும் அழகிற்கு அமரத்வம் அளிக்கின்றன. அதுதான் சூட்சுமம். அழகு அவ்வளவும் ஈஸ்வரமயம். ஈஸ்வரனைத் தண்டிக்கமுடியுமானால், அழகையும் தண்டிக்கலாம்!"

"அப்படியானால், அழகுக்கு ஆஸ்ரம வாழ்வு அபசாரமா? சுவாமி."

பிரேமாவின் கண்களில் உணர்ச்சியால் உருகிய கண்ணீர் பெருகியது.

இச்சங்கடமான கேள்விக்குப் பதில் சொல்ல குரு விரும்பவில்லை. நல்ல காலமாக அதே சமயத்தில் கையில் சிறிய பூக் கூடையுடன் பரந்தாமன் உள்ளே நுழைந்தான்.

"பரந்தாமா, ஏன் இவ்வளவு நேரம்?"

“மன்னிக்கவும், பாதை தவறிவிட்டது. சுற்றி வந்தேன்.”

அதே நேரத்தில் பரந்தாமன் அங்கிருந்த பிரேமாவைக் கண்டு திடுக்கிட்டான். அவன் தன் கண்களையே நம்பவில்லை. தான் பூக்களைப் பறிக்கும்போது யாருடைய நினைவால் வழி தவறினனோ அவளே அங்கு பிரசன்னமாகியிருப்பதைக் கண்டதும் கடவுளின் பரிசோதனை பலப்படுகிறதென்று எண்ணினான். பிரேமா பரந்தாமனைப் பார்த்துவிட்டு ராஜகுருவை நோக்கினாள்.

“பரந்தாமா, ஆஸ்ரம வாழ்க்கையை விரும்பி அரண்மனை வாசத்தைத் துறந்து இதோ, பிரேமா வந்திருக்கிறாள். அவளை நிராகரிக்க எனக்குச் சக்தியில்லை. அவள் என் குமாரி. உன் சகோதரியைப் போல ஏற்றுக் கொள்” என்றார்.

பிரேமாவின் முகம் அகத்தின் புரட்சியால் சட்டென்று மாறியது. சகோதரியைப்போல பாவிப்பாய் என்ற சொல் அவள் நெஞ்சை அழுத்தியது. இவ்விதம் குருநாதர் சொல்லுவார் என்று கனவிலும் எதிர்பார்க்கவில்லை “குருநாதர் அழகைக் கண்டிக்க முடியாதென்று சொன்னார். ஆனால், உண்மையில் இவ்விதம் கூறி என் அழகைத் தண்டித்துவிட்டார்” என்று அவள் எண்ணித் திகைத்தாள்.

பரந்தாமன் ஒரு நொடிப் பொழுது வரையில் அதிர்ச்சி கொண்டான். “கடவுள் என்னைக் காப்பாற்றினார். பிதா எனக்குச் சரியான பாதுகாப்பு அளித்தார். இவளின் பிரேமாஸ்திரத்திலிருந்து நான் தப்பித்துக் கொள்ளுவேன்” என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

பின்பு பூஜை ஆரம்பமாயிற்று. அங்கிருந்த இந்த மூவர் உள்ளங்களும் ஈஸ்வரனிடம் சில வேண்டுகோள்களைச் சமர்ப்பித்தன.

“உண்மையில் பிரேமாவை ஆஸ்ரமத்தில் சேர்க்க எனக்கு மனமில்லைதான். ஹே, பகவானே, அவளை

நிராகரிக்கும் சக்தி எனக்கில்லையே!.. ஏன் இந்த மாயை இன்னும்! வாத்சல்யத்தால் வாதனையா? நீயே காப்பாற்ற வேண்டும்" என்றது நிர்மலானந்த அடிகளின் உள்ளம்.

"என் உறுதியைத் தளர்த்திவிடாதே. பரிசோதனைக்கு மேல் பரிசோதனையா? பகவானே, நீயே கதி" என்றது பரந்தாமனின் உள்ளம்.

"பரந்தாமனுடன் வசிக்கும் பாக்கியம் கிடைத்து விட்டது. ஈஸ்வரா, எல்லாம் உன் செயல். அவரை மாத்திரம் என் அண்ணா வாக்காதே" என்று கூறிக் கொண்டே பரந்தாமனைக் குறித்து ஆத்ம பூஜை செய்து கொண்டது பிரேமாவின் உள்ளம்.

## கிளை-8.

"என்ன ஆச்சரியம்! என்னால் இதை நம்பவே முடிய வில்லையே. இது வாஸ்தவமா?"

"உண்மை. சந்தேகமே வேண்டாம், இளவரசே."

இளவரசன் ராஜசேகரவர்மனால் ஒரே இடத்தில் நின்று பேசமுடியவில்லை. உள்ளம் துடிக்கிறது; உடலும் துடிக்கிறது. அந்த அழகிய தனது மாளிகையின் கூடத்தில் அங்குமிங்குமாக உலாவிக்கொண்டே பேசுகிறான்.

சட்டென்று நின்று ராஜசேகரவர்மன் சொன்னான்: "வைத்தியக்காரி! ஆச்சரியம்! இதை மிகவும் சுலபமானதென்று நினைத்துவிட்டாள் போலும்! ஆனந்தா, இது அவளுக்கு ஒத்துப் போகுமென்றா நினைக்கிறாய்?"

"அது எனக்குத் தெரியாது. ஆனால் ஒன்று. கங்கை சமுத்திரத்தை நோக்கி ஓடியிருக்கிறது. இதில் ஆச்சரிய மில்லை!"-ஆனந்தன் புன்னகைத்தான்.

"அப்படியானால் என் எண்ணமெல்லாம் வீண் கனவுதானா?"

"ஏன் இந்தப் பதட்டம்? நதி சமுத்திரத்தை நோக்குவது இயற்கை. ஆனால், அதை இடையே தடுத்து அணைபோட்டு நம் உபயோகத்திற்குப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்பதை மறந்துவிட்டீர்களா?"- மீண்டும் புன்னகை.

"ஆனந்தா, கற்பனைப்பேச்சு இருக்கட்டும். இனிமேல் நாம் என்ன செய்யலாம்? மாறுவேட யோசனை படுதோல்வி அடைந்துவிட்டதே."

"படுதோல்வி கிடைக்குமென்பது எனக்குத் தெரியும்."

"அப்படியானால் அந்த யோசனையை நீ எனக்குக் கூறலாமா?"

"இளவரசே, அதை நான் குறிப்பிடவில்லை. வீரமும் வாளாயுதத்தின் ஆற்றலும் 'பெண்கள்—புலி'யில் படுதோல்வி அடையும் என்பதையே குறிப்பிட்டேன். அந்தப் படுதோல்வியில்தான் ரசமான நாடகம் சிருஷ்டியாகிறது."

"அந்நாடகம் பூர்த்தியாகிவிட்டதென்பது உன் அபிப்பிராயமா?"

"யார் அப்படிச் சொன்னார்கள்?"

"அது எப்படி முடிகிறதென்பதைப் பார்க்காமல் விடமாட்டான் ராஜசேகரவர்மன் என்பது உனக்குத் தெரிந்திருக்கவேண்டுமே!"

"தெரியாமல் என்ன? அழகை அன்பை வாழ்வைக் கொன்று வாட்டப்போகும் பிரேமாவைக் காப்பாற்ற வேண்டிய கடமை உங்களுக்கு உண்டு என்பதை நான் மறுக்கவில்லை. ஏனெனில் அவள் உங்களது பிரஜை. நீங்களோ சிறந்த கலைஞர். அந்த வகையிலும் அவளை ஆஸ்ரமத்திலிருந்து மீட்டு கலைவாழ்வில் புகுத்த வேண்டியதவசியம் என்று நான் உணர்கிறேன்."

"வாஸ்தவம். நல்ல சமயத்தில் இதை ஞாபக மூட்டினாய்."

"ஆனால், ஒன்று. இளவரசே, அவளைத் திருப்பும் விஷயத்தில் பலாத்காரம் தலைகாட்டக்கூடாது. இதை ஏன் சொல்லுகிறேன் என்றால் ராஜஅம்சம் நிறைந்த அதிகாரம் தோல்வியைத் தாங்காது தண்டோபாயத் திலிறங்கிவிடும். அதற்கு இடம் கொடுக்கக்கூடாது."

"ஆனந்தா, அவள் என்னை அவமானப்படுத்திய விதத்தை நினைக்கும் போதெல்லாம் கோபம்தான் வருகிறது. ஆனால் அவளது முக இனிமை என்னைப் பெட்டிப் பாம்பாக்கிவிடுகிறது! இதை நினைக்கும்போது எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது!"

"ஆச்சரியமொன்றுமில்லை. வீராதிவீரர்கள் எல்லாம் பெண்களுக்குள் அடக்கம் என்பது என் சித்தாந்தம்!"— ஆனந்தன் சிரித்தான்.

"ஆனந்தா, பிரேமா உண்மையில் ஆஸ்ரம வாழ்வில் பற்றுதல்கொண்டு அங்கு போயிருக்கிறாள் என்றா நினைக்கிறாய்? இல்லை. எல்லாம் அந்தப் பரந்தாமன்தான் காரணம். அவனையே தொலைத்து...." —கோபமுடன் பேசினான்.

ஆனந்தன் குறுக்கிட்டு, "யுவராஜா, பரந்தாமன் மீது கோபிப்பதில் பயன் இல்லை. அவன் என்ன செய்வான்? பாவம்! மேலும் எல்லாவற்றையும் அனுபவிக்கப் பிறந்தும், எல்லாவற்றையும் திரஸ்கரிக்கிறேன் என்று சொல்லிக் கொண்டிருக்கிற பேர்வழி பரந்தாமன்."

"நீ சொல்லுவது ஒரு விதத்தில் சரிதான். அதிருக்கட்டும், இந்த நித்தியானந்தர்தான் எப்படி பிரேமாவை ஆஸ்ரமத்தில் ஏற்றுக்கொண்டார்?"

"அவர் எவ்வளவோ புத்திமதி சொல்லிப்பார்த்தாராம். ஆனால், அவள் கேட்காமல் அங்கேயே போய் சரணாகதி அடைந்துவிட்டாள். எல்லா விஷயங்களையும்

பிரேமாவின் செவிலித்தாய் அழகம்மை என்னிடம் கூறினாள். அவள் எவ்வளவோ புத்தி சொல்லியும் பிரேமா கேட்கவில்லையாம். அவளைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பை ராஜகுருவே ஏற்றுக் கொண்டிருக்கிறார் என்ற சங்கதியும் எனக்கெட்டியது."

"அப்படியா? அவர் ராஜசேகரவர்மனை இதன் மூலம் எதிர்க்கிறார் என்பதை அறியவில்லைபோலும்!" அழுத்தமாகப் பேசினான் இளவரசன்.

"இளவரசே, பரந்தாமனைக் கோபிப்பது எவ்வளவு சரியல்லவோ, அவ்வளவு சரியல்ல நித்யானந்தரைக் கோபிப்பதும்."

"யோசித்துப்பார்த்தால் நீ சொல்லுவது சரியென்று தான் தோன்றுகிறது. ஆனால், ஆனந்தா, பிரேமாவை என்னால் மறக்கமுடியவில்லையே. இதற்கு நான் என்ன செய்வேன்? எந்த நிமிடமும் என் எண்ணம் அவளையே சுற்றிக்கொண்டிருக்கிறதே. அவளது சௌந்தரியத்தையும், கானத்தையும், நடனத்தையும் என்னால் எப்படி மறக்கமுடியும்?" அவன் குரலோடு தாபத்தின் பெருமூச்சுகள் தொடர்ந்தன.

ஆனந்தன் சிரித்துக்கொண்டே, "இதற்குத்தான் பைத்தியக்காரத்தனம் என்று பெயர். நீங்கள் கோபித்துக்கொண்டாலும் சரி; இதைச் சொல்லும்படி ஏற்பட்டுவிட்டது" என்றான்.

"எதனால் இப்படிச் சொல்லுகிறாய்?"

"இளவரசே, இந்தப் பிரேமா கிட்டாவிட்டால், இன்னொரு அழகியைத் தேர்ந்தெடுத்துக் கொண்டால் போகிறது! இதற்காக மனதையே பறிகொடுத்து கஷ்டப்பட வேண்டுமா, என்ன?"

"ஆனந்தா, அப்படியானால் காதலைப்பற்றி உன் அபிப்பிராயமென்ன?"

"காதலைப் பற்றியா? காதலானது மண்ணாங்கட்டி யானது? அது வெறும் உணர்ச்சி விளையாட்டு; நாடகம். அவ்வளவுதான். அனுபவிக்க அனுபவிக்க இன்பமுண்டு. அதற்காக "ஒன்றையே கட்டி அழவேண்டு"மென்ற நியதி இல்லை!"

"வாதத்திற்காகப் பேசுகிறாயா? அல்லது உண்மையாகவே சொல்லுகிறாயா?"

"உண்மையாகவே சொல்லுகிறேன். காதலைக் கட்டுப்படுத்த முடியாது. அதன் மூச்சு சுதந்திரமாக இருக்கவேண்டும். அதன் சாரம் சுயேச்சைதான். அடங்கி ஒடுங்கி அடிமையாகக் கிடப்பதோ சரணாகதி அடைந்துவிடுவதோ காதல் என்று சொன்னால், அதை நான் ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லை. ஒரே ஒரு ஸ்திரீயை நான் காதலிக்கிறேன். அவளையே உயிருள்ள அளவும் காதலிப்பேன் என்று சத்தியம் செய்து கொடுப்பது ஒரே ஒரு சட்டத்தையோ அல்லது நியதியையோ பின்பற்றி நடப்பேன் என்று சொல்லும் அபத்தத்திற்கு இணையாகும். இது இயற்கைக்கு விரோதம்; மனித சுபாவத்திற்கும் விரோதமாகும்...."

"ஆனந்தா, இந்தக் காதல் தத்துவத்தை கோதை காதில் போட்டுவைத்தால் நன்றாயிருக்குமென்று நினைக்கிறேன்!" --இளவரசன் கலகலவென்று சிரித்தான்.

இளவரசன் திடீரென்று இவ்விதம் கூறுவான் என்று ஆனந்தன் எதிர்பார்க்கவில்லை. ஆனால் புன்னகையின் மூலம் தன்னைச் சமாளித்துக் கொண்டு, "யுவராஜா, பழிக்குப்பழி வாங்கிவிட்டீர்களே!" என்றான்.

"இல்லை. சும்மா ஞாபகமூட்டினேன்"—சிரித்தான்.

"இளவரசே, இதையும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். காதல் வானத்தில் சுதந்திரமான பக்ஷிகளாக மாறி சுகமாகப் பறந்து இன்பமனுபவிக்க வேண்டும் என்பதே என் கட்சி. நமது நாட்டு ஆசாரப்படி களவு முறையில் கோதை என்னைக் காதலனாக்கிக் கொண்டிருக்கிறாள் என்பதை நான் மறைக்கவில்லை.

அவள் காதல் என்றையதினம் என்னை அடிமைப்படுத்த எண்ணுகிறதோ அன்றையதினமே அவள் என்னை இழந்து விடுவாள் என்பது நிச்சயம்!"

"அடடா! அப்படியெல்லாம் சொல்லாதே. கோதையை நீ இழப்பதற்கு நான் இடம் தரமாட்டேன்."

"ஏன்?"

"சுயாகலம்தான்"—சிரித்தான்.

"எப்படி?"

"நீயோ பிரேமா விஷயத்தில் பலாத்காரத்தை உபயோகிக்கக்கூடாதென்று சொல்லுகிறாய். அப்படியானால் நீயும் கோதையும் மனசு வைத்தால் என் மனோபீஷ்டம் நிறைவேற வழி உண்டு."

"கோதையிடம் நான் சொன்னால் கேட்பாள்; கோதை சொன்னால் பிரேமாவின் மனதும் மாறிவிடுமென்று நினைக்கிறீர்கள்?"

"கோதை மகா புத்திசாலி என்பதை நான் அறிந்திருக்கிறேன். அவளால் பிரேமாவின் மனதைக் கலைக்க முடியும் என்ற ஒரு நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது."

"எனக்குத் தோன்றவில்லை. ஆஸ்ரமத்திற்குப் போகக்கூடாதென்று அவளும் எவ்வளவோ சொல்லிப் பார்த்தாளாம். பிரேமா லட்சியமே செய்யவில்லையாம்!"

"ஆனால் வேறு யோசனை ஒன்றுமே உன் புத்தியில் படவில்லையா? கேவலம் ஒரு தாசியின் அன்பைப் பெற்று தன் ஆசையைத் தணித்துக் கொள்ளமுடியாத ஓர் இளவரசன் இருப்பதைவிட........"

"ஈதென்ன எண்ணம்?"

"ஆனந்தா, அவளை நினைக்கும் போது என் ராஜ்யம் கூட ஒரு பெரிதாகத் தோன்றவில்லை!"

"உண்மை. பரம்பரை பாத்தியத்தால் ராஜ்யத்தைப் பெறலாம். ஆனால் அதைக்கொண்டு ஒரு ஸ்திரீயின் கோமளகரமான காதலைப் பெறமுடியாது! இளவரசே, எனக்கொரு யோசனை தோன்றுகின்றது."

"என்ன? சொல், சீக்கிரம்."

"பரந்தாமன் பிரேமாவின் "வலை"யில் விழாமலிருக்க ஒரு வழி தேட வேண்டும்."

"அதற்கென்ன செய்யலாம்?"

"சுலபமான வழி. இந்த விஷயத்தில் பரந்தாமனையே உபயோகப்படுத்திக்கொள்ள வேண்டும்."

"எப்படி?"

"பிரேமாவின் மனதை மாற்றும் வேலையைப் பரந்தாமனுக்கே அளித்துவிட்டால்.......?"

"ஆ! ஆ! சரியான யோசனை! ஆனந்தா, அப்படியே செய்வோம். பரந்தாமனின் பரிசுத்தத்தின் யோக்கியதையும் வெளிப்பட்டுவிடும்."

'அனுபவிக்கப் பிறந்த மனிதர்கள் பரிசுத்தம் என்றும், நியாயம் என்றும் பேசிக்கொண்டிருப்பது அனுபவ சாத்தியமல்ல என்பதுதான் உங்கள் கட்சியாயிற்றே!"

"ரொம்ப சரி. ஆனந்தா, இன்னொரு முக்கிய சங்கதியை உன்னிடம் சொல்ல மறந்து விட்டேன்."

"என்ன?"

"உனக்குத் தெரிந்திருக்குமென்றே நினைக்கிறேன். கோதை எனது தங்கையின் அந்தரங்க தோழிகளில் ஒருத்தியாய்விட்டாள். திலகவதி பிரேமா ஆஸ்ரமத்திற்குப் போன சங்கதியைக் கேட்டு பெரிதும் வருத்தப்பட்டாள். இத்தகவலைச் சொல்லவே கோதை அவளைப்

பார்க்க வந்தாள். வந்ததும் கோதையைத் தன் அரண்மனையிலேயே இருக்கும்படிக் கூறிவிட்டதாக என் தங்கை சற்று முன்பு என்னிடம் கூறினாள்."

"சந்தோஷம்" என்றான் ஆனந்தன். ஆனால், அவன் மனசு நிம்மதியாக அச்செய்தியை வரவேற்கவில்லை. ஆனந்தனின் உள்ளம் உள்ளூர படபடத்தது. திலகவதியின் அந்தப்புரத்தில் கோதையின் பிரசன்னத்தை அவன் விரும்பவில்லையா? ஏன்? அதன் இரகசியமென்ன?

## கிளை-9.

"இளவரசன், பாவம்! என்னசெய்வான்? காதல் அவனைப் பைத்தியக்காரனாக்கிவிட்டது போலும்! பிரேமாவதிக்காக அவன் பல்லவ சாம்ராஜ்யத்தைத் துறக்கவும் தயாராம்! அவள் மனதை என்னால்தான் மாற்ற முடியுமாம்! இந்த தர்மசங்கடத்துக்கு நான் என்ன செய்வேன்? இதைப்பற்றி அவளிடம் எப்படி எடுத்துக் கூற முடியும்? என்னை அவனே மன்னித்துக்கொள்ளுவதா? அந்தோ! இதை நினைக்கும்போதே இந்த வஞ்சனை என் சரீரத்தை எரிக்க ஆரம்பித்துவிட்டது போலத் தெரிகிறதே! என் மனதும் ஏன் இப்படி துடிதுடிக்கிறது? நான் இளவரசனுக்குக் கொடுத்த வாக்கின்படி நடக்கமுடியாது என்பதற்காகவா? ஹே பிரேமா, உன் மனதை எப்படியும் மாற்றி ஆஸ்ரம வாழ்வைத் துறக்கும்படி செய்வதாக ராஜசேகரவர்மனுக்கு வாக்கு அளித்துவிட்டேனே! அது என்னால் முடியுமா? உன் மனசு திரும்பினால் முடியும்! நீ என்னை நம்பமாட்டாய், நான் சொன்னால். உன்னை மகாராணியாக்கிப் பார்ப்பதில் எனக்கு எவ்வளவு ஆனந்தம் தெரியுமா?........" இவ்விதமெல்லாம் சிந்தனைகள் பறக்கின்றன. பரந்தாமன் அச்சிந்தனைகளின் சுழலில் அகப்பட்டவனாய் ராஜசேகரவர்மன் மாளிகையிலிருந்து வெளியே வந்துகொண்டிருக்கிறான்.

இளவரசன் பிரேமாவதியின் மனதை எப்படியும் மாற்றவேண்டிய வேலையை சிநேகிதத்தின் பெயரில்

யால் உந்தப்பட்ட அவளின் கற்பனை பின்வரும் உண்மையை எடுத்துக்கூறியது: "என் கூண்டின் லட்சணத்தைச் சரியாகப் பார்க்காமல் பேசுகிறீர்கள் என்று அஞ்சுகிறேன். உள்ளே வாருங்கள். அதை உங்களுக்குக் காட்டுகிறேன். பிறகு என்னிடமிருந்து வீண் பழி சுமத்தமாட்டீர்கள் என்று எனக்குத் தெரியும். அதைப் பார்த்தால், கிளியைத் தூக்கிலிட்டு என் மனதையும் அலங்கோலப் படுத்தமாட்டீர்கள்."

திலகவதி பரந்தாமனை உள்ளே வரும்படி அழைத்தாள். பரந்தாமனின் சூட்சும அறிவு சுலபத்தில் விஷயத்தை அறிந்து கொண்டுவிட்டது. எவன் எல்லாவற்றையும் வேண்டாம், வேண்டாம் என்று துறக்கிறானோ, அவனிடமே எல்லாம் வலியவந்து குவிகின்றன!

"மன்னிக்கவும், தேவி, நான் அவசரமாகப் போக வேண்டும். கூண்டின் லட்சணத்தை நான் அறியாதவன் அல்ல. தயவு செய்து கேட்டுக்கொள்ளுகிறேன். இக் கிளியை மாத்திரம் மறுபடியும் கூண்டில் போட வேண்டாம். அதை சுயேச்சையாகக் கூடுகட்டி வாழ விட்டுவிடுங்கள். அதுதான் இயற்கை."

பரந்தாமன் சிருஷ்டியில் மனமென்று ஒன்று இருப்பது மகா பாபகரமானதென்று நினைத்துக் கொண்டே அங்கிருந்து புறப்பட்டான். அக்கிளி விடுதலை அடைந்திருப்பதுபோலத் தானும் விடுதலை அடைந்ததாக எண்ணம். "இந்த எலும்புக் கூண்டிலேயிருந்தே விடுதலை அடையவிரும்பும் என்னை ராஜபோகக் கூண்டில் அடைக்கப் பார்க்கிறாள் இவள்" என்று சிந்தனை.

திலகவதி அப்படியே நின்றாள், அந்த அரண்மனை அவளுடன் சுற்றுவதாகத் தோற்றம்.

மனிதனைவிட மிருகங்களும், பட்சிகளும் நன்றியுள்ளவையல்லவா? அக்கிளி விடுதலைப்பெற்றும் அங்கிருந்து போகவில்லை. ராஜகுமாரியைச் சுற்றி சுற்றி வந்தது.

"சோதனைக்கு மேல் சோதனை" என்று நினைத்துக் கொண்டே பரந்தாமன் போய்விட்டான்.

பரந்தாமனையே பார்த்துக்கொண்டு நின்றாள்; நின்று கொண்டேயிருக்கிறாள் திலகவதி. அவள் கண்களில் சோகம்வந்து புகுந்து கொண்டது. நெஞ்சில் உணர்ச்சியின் திணறல்.

கிளி சப்தம் போட்டது.

திலகவதி சொன்னாள்: "போ. பரந்தாமன் உனக்கு விடுதலை அளித்துவிட்டார். போ."

கிளி போகவில்லை; மீண்டும் கொஞ்சியது தன் இறகுகளை சிலிர்த்துக்கொண்டே.

அதுவரையில் மறைவாக நின்றிருந்த கோதை ஓடிவந்து "தேவி, சீக்கிரம் உள்ளே வாருங்கள். அதோ நங்கள் அண்ணா......." என்றாள்.

அவள் இவ்விதம் சொல்லிமுடிப்பதற்குள் அப்பங்கமாக ராஜசேகரவர்மனும், ஆனந்தனும் வந்து விட்டார்கள்.

"திலகம், வெளியே எங்குவந்தாய்?" என்றான் இளவரசன்.

"இல்லை....கிளி...."—தடுமாறினாள்.

"கிளி கூண்டிலிருந்து தப்பித்து வெளியே ஓடிவந்து விட்டது. அதைப் பிடிக்கவே ஓடிவந்தோம்" என்றாள் கோதை.

அதேசமயத்தில் ஆனந்தன், "வளர்த்த கிளி கூண்டைவிட்டு அடித்து விரட்டினாலும் கூட போகாது" என்று கூறியவண்ணமாய் அதைப் பிடித்துக் கொண்டுபோய் கூண்டில் விட்டு அடைத்துவிட்டான். திலகவதியின் மனத்தைத் திருப்திபடுத்தவே அவன் அவ்விதம் செய்தான். ஆனால் திலகவதி திருப்திகொண்டாளா? மீண்டும்

அக் கூண்டை அடைந்த அக்கிளிதான் திருப்தி அடைந்திருக்குமா?

மனோரகசியங்களை அறிந்துகொள்ளாமல் மனிதர்கள் கஷ்டப்படுகிறார்கள்!

ஆனந்தனின் கரத்தைப் பற்றிக்கொண்டே ராஜசேகர வர்மன் திலகவதியின் அந்தப்புரத்தின் வாயிலைக் கடந்தான். அப்பொழுது அவன் மிகவும் மெதுவாக ஆனந்தனிடம் கூறினான்: "பரந்தாமன் உண்மையிலேயே மகா புருஷன்தான்! சிறிதும் மனம் சலனமோ, சஞ்சலமோ படாமல் என் வேண்டுகோளை ஏற்றுக் கொண்டு விட்டானே! இதிலிருந்து அவன் பிரேமாவைக் காதலிக்கவில்லை என்பது வெளிப்படுகிறதல்லவா?"

ஆனந்தனின் ஆசைமனது திலகவதியைச் சுற்றி "அங்கப் பிரதட்சணம்" செய்துகொண்டேயிருந்தது. மேலும் அவன் அந்தப்புரத்திலிருந்து சட்டென்று வெளியே புறப்படவும் விரும்பவில்லை. ஆனால் இளவரசனுக்கோ இந்த உண்மை தெரிவதற்கில்லை. அவன் பரந்தாமன் எப்படியும் பிரேமாவின் மனதை மாற்றி விடுவான் என்ற எண்ணத்தில் தோய்ந்தவனாய், அதைப் பற்றியே ஆனந்தனிடம் பேசிக்கொண்டே அங்கிருந்து புறப்பட்டு விட்டான். தன் கேள்விக்கு ஆனந்தன் உடனே பதில் சொல்லுவான் என்று எதிர்பார்த்து ஏமாந்துபோனான். ஆனந்தனோ நடந்து கொண்டே "அடடா! இவ்வளவு முட்டாள்தனமாக என் வாழ்க்கையில் இதுவரையில் நடந்துகொள்ள வில்லையே! அந்தக் கிளியை மறுபடியும் பிடித்து சிறையில் அடைத்தமாதிரி கூண்டில் இட்டதை திலகவதி விரும்பவில்லை என்பதை அவள் முகம் காட்டிவிட்டது! கட்டாயம் அந்தக்கிளி என்னைச் சபித்திருக்கும். அதுபோல ஒரு வேளை திலகவதியும் என்னைச் சபித்........?"—இந்தக் கேள்விக் கட்டத்தை சிந்தனை அடைந்ததும் அவன் தேகம் அதிர்ந்தது. "ஜீவன்" அற்ற (காய்ந்துபோன) சருகு மரக்கிளையிலிருந்து காற்றின் அடி தாங்காது கீழே விழுந்து அல்லற்படுவதுபோல அவன் ஆத்மா கஷ்டப் பட்டது. நெஞ்சை அழுத்திப்பிடித்துக்கொண்டு நகர்ந்

தான். இளவரசன் கவனிக்கிறான் என்பதை உணர்ந்ததும் ஆனந்தன் தன்னைச் சமாளித்துக்கொண்டு திரும்பிப்பார்த்தான்.

“ஆனந்தா, நான் சொன்னதைக் கவனிக்கவில்லை போல் தெரிகிறதே! ஏன் இப்படி நெஞ்சைப் பிடித்துக் கொள்ளுகிறாய்? உடம்புக்கு ஏதாவது.......” என்று கேட்டான் இளவரசன், மேலே நடந்துசென்று கொண்டே.

“அதெல்லாம் ஒன்றுமில்லை. நெஞ்சு திடீரென்று வலித்தமாதிரி இருந்தது. அவ்வளவுதான். இப்பொழுது சரியாகப்போய்விட்டது. அது போகட்டும், தாங்கள் என்ன கேட்டீர்கள்?” என்றான் ஆனந்தன். அந்தச் சமயத்திலும் அவன் அகக்கண்முன் கிளியைக் கூண்டில் அடைத்த காட்சியே வந்துநின்றது. திலகவதி தேவியின் திவ்ய நேத்திரங்களின் துடிப்பு; கோதையின் சந்தேக திருஷ்டி; இவை ஆனந்தனின் நிம்மதியை சலனப்படுத்தின. தனக்குள் மறுபடியும் கூறிக்கொண்டான்: “ஆம், பிள்ளையார் பிடிக்க குரங்காக முடிந்ததென்று சொல்லுகிறார்களே; அதுமாதிரி ஏற்பட்டு விடுமோ?” மறுபடியும் அவன் தேகம் நடுங்கியது. இந்த நிலையைக் கவனிக்காத ராஜசேகரவர்மன், “ஆனந்தா, உன் யோசனைப்படி பரந்தாமன் என் வேண்டுகோளை ஏற்றுக்கொண்டு போயிருக்கிறான் அல்லவா?” என்றான்.

ஆனந்தன் குறுக்கிட்டு “ஆமாம், அதற்கென்ன....?” என்றான்.

“இதிலிருந்து அவன் பிரேமாவை காதலிக்கவில்லையென்று தெரிகிறதல்லவா? இதைத்தான் முதலில் உன்னைக் கேட்டேன். உன் கவனம் எங்கேயோ (கோதையிடம் என்று நினைக்கிறேன்) குடைசாய்ந்துவிட்டது!” என்று கூறிக்கொண்டே சிரித்தான்.

“குடையாவது, சாய்வதாவது....! பிரேமையை எப்போதுமே பைத்தியக்கார நிலைக்குக் கொண்டுபோகிற பேர்வழி ஆனந்தன் அல்ல! ஏனெனில் அந்தப் பித்துப்

பிடித்த நிலைக்குப் பிரேமையைக் கொண்டு போகிற வர்கள்தான் குடைசாய்ந்துவிடுவார்கள்!...."

"அதிருக்கட்டும், கேட்ட கேள்விக்குப் பதிலைச் சொல்லாமல் ஏதேதோ......."

"மன்னிக்கவும். பரந்தாமன் பிரேமாவைக் காதலிக்கவில்லை யென்ற முடிவுக்குத்தானே வந்திருக்கிறீர்கள்?"

"ஆமாம். பரந்தாமனின் பரிசுத்தத்தில் எனக்கு நம்பிக்கை ஏற்பட்டு வருகிறது. ஆகா! கொஞ்சங் கூட மனம் பேதப்படாமல் புன்னகையுடன் பிரேமாவை என் இஷ்டத்திற்குத் திருப்ப இணங்கியபோதே இந்த உண்மையை உணர்ந்தேன்...."

"வாஸ்தவம். பரந்தாமன் போகிற பாதைவேறு தான் என்பதை நான் அறியாமல் இல்லை. நானே, நாம் எல்லாம் வாழ்க்கையை அனுபவிக்கப் பிறந்திருக்கிறோம் என்று நம்புகிறேன். அவனே இவ்வாழ்க்கையைக் கொண்டு இனி வாழ்க்கையையே பெறாமலிருக்கப் பிரியப் படுகிறான்! புண்ணியம், பாவம் என்று மனே கற்பனை செய்துகொண்டு வாழ்க்கையைச் சிறையாக மாற்றி வைக்க செய்யும் வேதாந்தம் எனக்கு எப்போதுமே பிடிக்காது. அவனே இவ்வுலகமே மாயை என்றும், அறிவற்ற அழகை சூன்யமென்றும் எண்ணி எல்லாவற்றையும் துறந்துவிடும் தத்துவப்பூச்சாக இருக்கிறான்! ஆனால் எனக்கொரு சந்தேகம். பரந்தாமன் தங்கள் வேண்டுகோளை நிறைவேற்றிவைக்க ஒப்புக்கொண்டதைக் கேட்க நான் ஆச்சரியப்படவில்லை. ஏனெனில், அச்செய்கை அவன் பேசும் தத்துவத்திற்கேற்றதே. ஆனால்.......?"

"அப்படியானால் பரந்தாமனை நீ இன்னும் சந்தேகிக்கிறாயா?"

"பரந்தாமனைச் சந்தேகிக்கவில்லை. ஆனால் அவனை வியாஜமாக வைத்துக் கொண்டு விளையாடும் மனதைத்

நான் சந்தேகிக்கிறேன். மனத்தின் போக்கை—மனோ ரகசியங்களை அறிவதென்பது அவ்வளவு சுலபமானதல்ல. அதிலும் காதல் விஷயத்தில் அதன் இரகசிய "லீலா-விநோத"ங்களைச் சொல்லவே முடியாது!"

"ஆனந்தா, உனது விமர்சனம் ஒப்பற்றது! பரந்தாமனை மனது ஏமாற்றிவிடும் என்று சொல்லுகிறாய். அவ்வளவுதானே?"

"இல்லை, அவனது உறுதியை பிரேமாவின் கவர்ச்சியான மனது கட்டாயம் ஏமாற்றிவிடுமென்று நம்புகிறேன். ஆனால் எனக்கு ஒரு வகையில் சந்தோஷம்."

"எந்த வகையில்....?"

"பிரேமா பரந்தாமனைக் காதலிக்கிறாள் என்பதற்காக பரந்தாமன்மீது நீங்கள் இனி கோபங்கொள்ள மாட்டீர்கள் என்பது வெளியாய்விட்டது. ஏனெனில் நீங்களே அவனது குணத்தைப் புகழ ஆரம்பித்து விட்டீர்கள்."

இவ்விதமெல்லாம் பேசிக்கொண்டே அவ்விருவரும் அந்த அந்தப்புர பிரதேசத்தைத் தாண்டி வெகுதூரத் திற்கப்பால் போய்விட்டார்கள்.

அவர்கள் அந்தப்புரத்தின் வாசலைக் கடக்கும் போது அவர்களுக்குத் தெரியாமல் பின்னே வந்த ஒரு பெண் உருவம் பெருமூச்சுவிட்டது! அவர்கள் சம்பாஷித்ததை அந்த உருவம் கேட்கவில்லை. ஏனெனில் அவர்கள் சம்பாஷித்துக்கொண்டே வெகுதூரத்திற்கப்பால் போய் விட்டார்கள். ஆனந்தன் தன் திருஷ்டியிலிருந்து மறையும் வரையில் நின்றுவிட்டு, அவ்வாசல் கதவைச் சாத்தி விட்டுத் திரும்பியது அப்பெண்ணுருவம்.

ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, இல்லை, நான் காவது அடி இன்னும் பூர்த்தியாகவில்லை. அந்த உருவத் தைப்பிடித்து நிறுத்தின உள்ளத்து உதித்த சிந்தனைகள். ஆம், அப் பெண்மணி அப்படியே நின்று யோசித்தாள். பற்பல எண்ணங்கள் குறுக்கும் நெடுக்குமாகப் பாய்ந்

தன. நடந்த சில சம்பவங்களை ஞாபகமூட்டிய நினைவுகள் அவள் நெஞ்சத்தில் பிரேமையைக் குறித்து "புதிர்-கட்டங்களை" வரைந்தன. உடனே மனதிற்குள்ளாகவே அவள் பேசிக்கொண்டாள்: "கடைசியில் எப்படி முடியப் போகிறதோ? இந்தப் பிரேமையின் விநோதமே விநோதம்! நான் கனவில்கூட நினைக்கவில்லை, ராஜகுமாரி திலகவதி பரந்தாமனைக் காதலிப்பாள் என்று. இந்தக் காதல் நிறைவேறுமா? ஒரு ராஜகுமாரி கேவலம் ஒரு ராஜகுருவின் மகனைக் கல்யாணம் செய்துகொள்ள மகாராஜா இடம் கொடுப்பாரா? ராஜசேகரவர்மன் தான் கேவலம் தாசிப் பெண் பிரேமாவைக் கல்யாணம் செய்து கொள்ள முடியுமா? பிரேமாவோ பரந்தாமனைக் காதலிக்கிறாள்! திலகவதியும் பரந்தாமனைக் காதலிக்கிறாள்! பரந்தாமனுக்கோ காதல் என்றாலே கசக்கிறது! அடடா! இந்தப் பாழாய்ப்போகிற பிரேமை வாழ்க்கையை எவ்வளவு தூரத்திற்குச் சிக்கலாக்கிவிடுகிறது! நினைக்கக்கூட அச்சமாகயிருக்கிறதே! பிரேமா பரந்தாமனைக் காதலிக்கிறாள் என்ற செய்தி திலகவதிக்குத் தெரியாதுபோலும்! அதை அவளிடம் சொன்னால்........ சே! அதைச் சொன்னால் அவள் மனது மேலும் நோகும். பிரேமாவோ திலகவதியின் அந்தரங்க அன்பைப் பெற்றவள். சரி. இதைப்பற்றி திலகவதியிடம் சொல்லாமலிருப்பதே மேல்."

சட்டென்று எண்ணக் குவியல்களிலிருந்து விடுதலைப்பெற்று அவள் திலகவதி இருக்கும் மாளிகைக்குள் ஓடினாள். சுற்றியும் பார்த்தாள். திலகவதி கண்ணில் படவில்லை. சிட்டுக்குருவிபோல சுற்றி சுற்றி வந்தாள்.

அதோ நந்தவனத்தை நோக்கி அமைந்திருக்கும் சாளரத்தின் அருகேயிருந்து பெருமூச்சு பேசியது; துன்பத்தின் துடிப்புகளைக் கூறியது. உடனே அப்பக்கம் ஓடோடினாள் அம்மங்கை.

"தேவி, தேவி....இதோ பாருங்கள்" என்றாள்.

திலகவதி மெதுவாகத் திரும்பினாள். சுந்தரத்தின் லளிதம் மின்னும் அந்தக் கண்களில் சஞ்சல அலைகள். "கோதை," என்றாள் திலகவதி.

"தேவி..." என்று கோதை சமீபத்தில் சென்று அவளை அணைத்து அழைத்துக்கொண்டு திரும்பினுள். திலகவதி தாமரைக்கொடிபோலத் துவண்டாள். உள்ளம் ஒடிய உடலும் ஒடிகிறது!

"தேவி, தாங்கள் எதற்காக இந்தக் கவலைப்பட வேண்டும்? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே!" என்றுள் கோதை. பிறகு இராஜகுமாரியை ஒரு தந்தக் காலான ஆசனத்தில் உட்காரவைத்துவிட்டு, அவள் கால்மாட்டில் கோதை அமர்ந்தாள். திலகவதியின் கவலைக்குரிய காரணத்தை கோதை அறிந்தவள்தான். அச்சமயம் அவளது கவலையை மாற்றவேண்டிய பொ றுப்பு அவளுக்கு ஏற்பட்டதால் ஒன்றும் தெரியாதவள் போலப் பேச ஆரம்பித்தாள்.

"கோதை, தெரியாததுபோலப் பேசுகிறுயே! எல்லா வற்றையும் நீ மறைந்திருந்து கேட்டிருப்பாய் என்றல்லவோ நினைத்தேன்."

"தேவி, தாங்கள் ஊகித்தது சரி. பரந்தாமரைப் பற்றிதானே சொல்லுகிறீர்கள்."

"ஆமாம். அவரோ....?"

"ஏன் இந்தச் சந்தேகம்? வேதாந்தம் கொஞ்சம் இருப்பதால் அப்படி பேசியிருக்கவேண்டு மென்று நம்புகிறேன். தங்களுடைய உறவு அவருக்குக் கிடைக்க கொடுத்துவைக்கவேண்டுமே!"

"அப்படியா நினைக்கிறுய்? இல்லை. அவர் உறுதி யைப் பார்க்கும்போது என் ஆத்மாவே அதிர்கிறது! எத்தனையோ நாட்களாக நான் கட்டிவந்த ஆசை யெல்லாம் நிராசையாகி விடுமோ என்று பயப்படும்படி யல்லவோ பேசிவிட்டார். அவர் கற்பனையுடன் சொன்ன பதில் ஒவ்வொன்றும் என்னை நிர்ஜீவனுக்குகிறதே."— திலகவதியின் தேகம் குலுங்கியது. கண்கள் சோகக் கண்ணீரின் உஷ்ணத்தில் வெந்து சிவந்தன!

"தேவி, கவலைப்படாதீர்கள். காதலைப்பற்றியும் சௌந்தரியத்தைப்பற்றியும் எதையாவது பிதற்றி அவைகளை அடியோடு வெறுத்து விட்டதாகச் சொல்லுவது சுலபம். செயலில் காட்டுவது சிரமம். காதலும் சௌந்தரியமும் பரந்தாமரையும் இழுக்குக் கொண்டு வந்துவிடும்."

"கோதை, கோதை, உன் வாக்கு பலிக்குமா? ஹா! கடவுளே! இவள் வாக்கு மாத்திரம் பலித்தால்........?"

"தேவி, கட்டாயம் பலிக்கும். என் வார்த்தையை நம்புங்கள். இதற்காக இப்படிக் கண்ணீர்விடலாமா?"

"கோதை, உன்னை ஒன்று கேட்க வேண்டுமென்றிருந்தேன்."

"என்ன, தேவி?"

"நான் பரந்தாமருடன் பேசிக் கொண்டிருந்ததை அண்ணா பார்த்திருப்பாரோ?"

"அந்தக் கவலை வேண்டாம். பரந்தாமர் மறுபக்கம் போனபிறகுதான் பின்பக்கமுள்ள வாசல் வழியாக இளவரசரும் ஆனந்தரும் வந்தார்கள். ஆகையால் அவர்கள் பரந்தாமருடன் நாங்கள் பேசிக்கொண்டிருந்ததைப் பார்த்திருக்கமுடியாது."

திலகவதியின் முகத்தில் திருப்தியின் பிரதிபலிப்பு.

அச்சமயம் எதிரே தொங்கிக் கொண்டிருந்த தங்கக் கூண்டில் உள்ள பஞ்சவர்ணக் கிளி சப்தமிட்டது. திலகவதியின் கவனம் அதன்மீது பாய்ந்தது.

"கோதை, இந்தக்கிளிக்கு நான் பெரிய அபராதம் செய்திருக்கிறேன். இதை மேலும் கூண்டிற்குள் அடைக்க எனக்குப் பிரியமில்லை. பரந்தாமர் இதற்கு விடுதலை அளித்தார். ஆனந்தர் என்ன நினைத்தாரோ, இதை மறுபடியும் "கைதி"யாக்கிவிட்டார். இதை முதலில் விடுதலை செய்து நந்தவனத்தில் கொண்டுபோய்

விட்டுவிட்டு வரவேண்டும். அப்பொழுதுதான் எனக்கு நிம்மதி ஏற்படும்."

இவ்விதம் கூறிவிட்டு அந்தக் கிளிக் கூண்டை கழற்ற முயற்சித்தாள்.

"வளர்த்த கிளி போகாதே" என்றாள் கோதை.

"ஆனந்தரின் சகவாசத்தால் உனக்கும் அந்தப் புத்திதானோ?"

"மன்னிக்கவும்."—கோதையே அக்கிளிக் கூண்டை கழற்றினாள்.

"புறப்படு. நந்தவனத்தில் இப்பொழுதே இதை விட்டுவிட்டு வருவோம். பரந்தாமரின் வார்த்தையை நான் நிறைவேற்றவேண்டும்."

"சரி. வாருங்கள், போவோம். எனக்கென்னமோ இக்கிளி மறுபடியும் பறந்து இங்கேயே வந்தாலும் வந்து விடும் என்று தோன்றுகிறது."

"நான் அப்படி நினைக்கவில்லை."

"கிளி மாத்திரம் வரப்போகிறதென்று நான் சொல்லவில்லை. இக்கிளிக்கு விடுதலை அளித்தவரும் வரத்தான் போகிறார்; கோதை அதைப் பார்த்து ஆனந்தப்படத்தான் போகிறாள்!"—புன்னகைக்கிறாள்.

"என்னடி, அதற்குள் கேலியா செய்கிறாய்?"—திலகவதியின் முகத்தில் பதில் புன்னகை. ஆனால் மனதோ கோதையின் வாக்கு பலிக்காதா? என்று ஏக்கத்தில் இறங்கியது.

## கிளை-10.

பன்னசாலையிலிருந்து சிறிது தூரத்திற்கப்பால்.

ஒரு மரத்தடியில் அவள் என்ன செய்து கொண்டிருக்கிறாள்? ஆமாம், ஆஸ்ரமத்து மான்குட்டி ஒன்றுக்குப் புல் கொடுத்துக் கொண்டிருக்கிறாள். சுற்றுப்புறமுள்ள

பிரகிருதியின் வனப்பு அவள் மனத்தில் எண்ணத்தைக் கிளறி பெருமூச்சை வெளிக்கிளப்பியது. புஷ்பத்தைப் போன்ற அந்த வனிதையின் இருதயப் பிரதேசம் அப் பெருமூச்சால் அதிர்ந்தது. புல்லைத் தின்னும் மான் குட்டி ஒரே இடத்தில் நில்லாது குதித்து விளையாடியது. எழிலுள்ள அதன்விழிகள் மிரண்டன. பெருமூச்சுகளைச் சமாளித்துக்கொண்டு அதைப் பிடித்து நிறுத்தி அவள் புற்களைக் கொடுத்துக் கொண்டேயிருக்கிறாள்.

எத்தனை நாட்களுக்கு அவன் அதைச் சொல்லாமலிருக்க முடியும்? மனது வெடித்துவிடும் போலிருக்கிறது. மேலும் சொன்ன சொற்படி நடந்து காட்டவேண்டாமா? "பிரேமாவை இந்த ஆஸ்ரமத்தில் வைத்தால் என் ஆத்மா குடைசாய்ந்துவிடும் என்ற நம்பிக்கை வரவர உறுதியாகிறதே! அவள் பேச்சில், செய்கையில், பழக்கத்தில், வாஞ்சைக்குப் பதில் பிரேமையைக் கொட்டுகிறாள்! கண்களிலே அந்தக் காதல் ஆத்மாவின் துடிப்பை தினசரி பார்க்கிறேன். திலகவதிக்கு விடுதலையைப்பற்றி பேசிய நான் பிரேமாவின் கண்களின்முன், ஆத்மாவின்முன் அசக்தனாகின்றேனே! இது ஏன்?"— இவ்விதமெல்லாம் நினைத்துக் கொண்டே பரந்தாமன் பிரேமா உட்கார்ந்திருக்கும் பக்கம் சென்றான்.

ஆகா! சகுந்தலையைப்போல காட்சி அளிக்கிறாள் பிரேமா. ஆபரணங்களிலிருந்து விடுதலை பெற்ற அவளது அழகில் ஒரு புதிய திவ்விய ஒளி. புன்முறுவலுடன் அம்மான்குட்டியைக் கட்டிக் கொண்டே பரந்தாமனைப் பார்த்தாள். ஆ! அப்பார்வையில் எத்தனையா லளித-பாவம்!

"ஆமாம், இந்த மான்குட்டிக்கு உள்ள நன்றிகூட எனக்கு இல்லைதான்! இதை எனக்குச் சுட்டிக் காட்டத்தான் இவள் இவ்விதம் செய்கிறாள்போலும்!" என்று பரந்தாமன் நினைத்தான். அதை வெளிக் காட்ட முடியுமா? அதற்குப் பதிலாக மௌனப் புன்னகையை மலரவிட்டான். பிரேமா பேசுவாள் என்று எதிர்பார்த்தான். ஆனால், பிரேமா பேசவில்லை. மான்குட்டியைத் தடவிக்கொண்டே "தின்பதற்கல்லாது, தின்னப்படு

வதற்கென்றே அமைந்த பற்கள்" மின்னா மெதுவாக நகைத்தாள்.

உடனே பரந்தாமன் நகை ஒளிபடர சொன்னான்: "மான்குட்டியை யதேச்சையாகப் போகவிட்டுவிடக் கூடாது. அதைப் பிடித்துக் கட்டிப்போடலாம் என்றே வந்தேன்."

"ஓகோ! ஆத்ம விடுதலையை விரும்புகிறவர்களின் பேச்சா இது? மானின் சுதந்தரம் தங்களுக்குப் பிடிக்கவில்லையா?"

"பிரேமா, இந்த மானே குட்டி. கண்டபடியெல்லாம் சுற்றும். மேடு பள்ளம், ஆறு குளம் என்ற வித்தியாசம் தெரியாத பருவம். ஆகையால், அதன் நன்மையை நாடியே பழக்கப்பட்ட நல்ல இடத்தில் கட்டிப்போடுவது நன்மையைத் தருமல்லவா?"

இப்பொழுது அவ்விருவரும் புற்றரையில் உட்கார்ந்து பேசுகிறார்கள்.

"புதிதாகவா கட்டிப்போடப் போகிறீர்கள்? கட்டிப் போட்டு ரொம்ப நாளாய்விட்டதே"—சிரிக்கிறாள்.

"இல்லை, பாதை தவறாமல் இருக்க நல்ல இடமாகப் பார்த்து கட்டிப்போடத்தான் வந்திருக்கிறேன்."

"யாரை?"

"உன்னைத்தான்!"

"உண்மையா? இதை நம்பலாமா? அப்புறம் அடித்து விரட்டக்கூடாது. தெரிந்ததா?"-சிரிக்கிறாள்.

"அடித்து விரட்ட எனக்கு உரிமையில்லை. அதைச் சொல்லத்தான் வந்தேன்."

"எதைச் சொல்ல?"-ஆச்சரியம் அவள் விழிப்பிரதேசத்தை விசாலப்படுத்தியது. சொல்ல முடியாத ஒரு திகில் உணர்ச்சி படமெடுத்தது.

"பிரேமா, நான் சொல்லுவதை நிதானமாகக் கேள். உன் நன்மையே என் லட்சியம். அது உனக்குத் தெரிந்தவிஷயம். இந்த ஆஸ்ரமத்தில் உன்னைப்போட்டு வாட்ட எனக்குப் பிரியமேயில்லை. உன் விஷயத்தில் என் தந்தை பெரிய பிசகு செய்துவிட்டார் என்றே கூறுவேன். எவ்வளவோ சுகபோகமாக இருக்க வேண்டிய நீ இந்தப் புல் தரையில்......."

"அடடா! ஈதென்ன ராமாயணம்? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே!"—அவள் உள்ளம் தட தடத்தது.

"பிரேமா, பல்லவ சாம்ராஜ்யத்தையே துறக்க ஒருவன் காத்துக் கொண்டிருக்கிறான், உனக்காக. இளவரசன் ராஜசேகர வர்மனின் மனதை நான் அறிந்து கொண்டுவிட்டேன். இளவரசனின் வேண்டு கோளை நீ ஏற்கவேண்டும் என்ற முடிவுக்கு நான் வந்து விட்டேன்......."

பிரேமா, "வேண்டாம்" என்று பதறிக்கொண்டே பரந்தாமனின் வாயைப் பொத்தினாள். அவளது மலர்க் கையை மெதுவாக அப்புறப்படுத்திவிட்டு "பிரேமா, கோபிக்காதே! உன் நன்மையை நாடியே சொல்லு கிறேன். என்னை சமீபத்தில் அழைத்து உன் மனதைத் திருப்பும்படிக்கேட்டுக்கொண்டான் இளவரசன். நானும் அவன் வேண்டுகோளின்படி நடப்பதாக வாக்குத்தத்தம் செய்து கொடுத்து விட்டேன். பிரேமா, இதைப்பற்றி என்னைத் தவிர வேறுயார் உன்னிடம் சொல்லமுடியும்?"

பிரேமா காதைப் பொத்திக்கொண்டாள். சரீரம் குலுங்கியது. இந்த உலகமே அழிந்தாலும், அவள் பிரேமை அழியப்போவதில்லை! பிரளயம் ஏற்பட்டாலும் அவள் பிரேமையின் பிரவாகம் வேறு பக்கம் திரும்பாது. அது உறுதியாக அவள் கண்களிலே, மனத்திலே, ஆத் மாவிலே தெரிந்தது.

அவள் தன்னை அறியாமல் திணறியவளாய் இருத யத்தை வாயாக்கிக்கொண்டு சொன்னாள்: "சித்திரவதை யைவிட மரணமே மேல்!"

பிரேமாவின் நயனங்கள் கண்ணீரை வருஷித்தன. ஒரு வகையான மயக்கும் சிரசை பளுவாக்கியது.

"வைத்தியமே, அழாதே" என்று பரந்தாமன் தடதடத்தான். ஆத்மாவுடன் விளையாடாதே என்றது அவன் மனச்சாட்சி. சௌந்தரியத்தின் பிரபைகள் மின்னும் பிரேமாவின் வதனத்தில் வேதனையின் 'சூடு'களைக் கண்ட பரந்தாமன் தன்னைத்தானே சபித்துக் கொண்டான். முட்டாள்தனமாக ஒரு யுவதியின் மலர் போன்ற இருதயத்தைக் கசக்கக் காரணமாகிவிட்டேனே என்று எண்ணி கலங்கினான். அவனால் மேலே பேச முடியவில்லை. அவளிடம் தான் சொல்லியது தப்பு என்று மன்னிப்புக் கேட்டுக்கொள்ளலாமா? என்று கூட எண்ணிவிட்டான். ஆனால் தன் பதட்டத்தை அடக்கிக்கொண்டு, "பிரேமா, என்னைப்பார், நான் சொன்னதில் தப்பொன்றுமில்லை. அது உனக்கும் எனக்கும் நன்மையைக் கொடுக்கக்கூடிய தென்பதை கொஞ்சம் யோசித்துப் பார்த்தால் உணரலாம்" என்றான்.

திடீரென்று பிரேமா சொன்னாள்: "இதில் இனி பேச்சுக்கு இடமேயில்லை. என் பிரேமையை அஞ்சலி செய்துவிட்டேன், உங்களிடம்"--வார்த்தைகளில் உறுதி பிரதிபலித்தது. உலகத்தில் எந்த சக்தியும் அவள் உறுதியை அசைக்க முடியாதென்று தோன்றியது.

"பிரேமாஞ்சலி! அது புனிதமானது. மானுஷிகம் அதை ஏற்க லாயக்கற்றது. அப்படியானால் தெய்வ பீடத்தில் அஞ்சலிசெய். எல்லோரும் நினைக்கிறபடி பிரேமையைக் கொடுத்துவாங்கக் கூடியதாக நான் நினைக்கவில்லை; அது பேரம். அது மனுஷீகத்துக்குச் சரியாக இருக்கலாம். உலகம் அதைக் காதல் என்று கவிதைபாடும். ஆனால், அது அஞ்சலி நிலைக்கு வந்து விட்டால் மானிடத் தன்மையை இழந்து தெய்வத்தின் வஸ்துவாகிவிடுகிறது. ஏதோ, தத்துவம் பேசுகிறேன் என்று நினைக்காதே. இதுதான் உண்மை"--இவ்விதம் பரந்தாமனும் உறுதியுடன் பதில் கூறினான்.

"அந்தத் தெய்வ வஸ்துவை உங்களிடம் பார்ப்பது குற்றமா? அந்தத் தெய்வ பீடத்திலே என் பிரேமையை அஞ்சலி செய்வது பாவமா?" —அவளது நளினமான கண்களில் பரிதாப உணர்ச்சி! விவரிக்கமுடியாத வேதனைகளின் கொதிப்பு நெஞ்சில்.

"ஆம், பாவம்தான். நான் உன் அண்ணு என்று என் பிதா ஆசீர்வதித்ததை மறந்துவிட்டாயா? உன்னிடம் வாஞ்சையை விரும்புகிறேன்; பிரேமையை அல்ல"- தெளிவாகக்கூறினுன்.

"வாஞ்சையா?.... பிரேமையை விரும்பவில்லையா? இது வாஸ்தவமா? இந்த வார்த்தைகளைக் கேட்கவா நான்.......?"

"பிரேமா, கண்டிப்பாகச் சொல்லுகிறேன்—மிகுந்த யோசனைக்குப்பிறகு கூறுகிறேன். நீ என்னை அண்ணு என்று கூப்பிடாதவரையில் இந்த ஆஸ்ரமத்தின் உறவையும் நான் தியாகம் செய்ய நிச்சயித்துவிட்டேன்."

பிரேமா திடுக்கிட்டாள். எத்தகைய துணிகரமான தீர்மானம்!

அழகுக்கும் அன்புக்கும் படு தோல்வியா? அல்லது சோதனையா? அல்லது ஆத்மாவின் லீலையா?

"வேண்டாம், வேண்டாம். எண்ணத்தைத் "தற்கொலை" செய்துகொள்கிறேன், அண்ணு"— 'கோ' வென்று கதறி அப்படியே பரந்தாமனைக் கட்டிக் கொண்டு கண்ணீர் சொரிந்தாள்.

சமீபத்தில் ஓடிக்கொண்டிருக்கும் நதியின் 'தேகத்தை' சிலிர்க்கவைத்ததுபோல மழைத்துளிகள் விழுந்தன.

## கிளை-11.

அந்த ராஜவீதியின் ஆரம்பத்திலேயே விளங்குகிறது ஓர் அழகான மாளிகை.

அம்மாளிகையின் உட் கூடத்தில் வரிசையாகப் பல மாணவர்கள் உட்கார்ந்திருக்கிறார்கள். அவர்களுக்கு எதிராக முக்காலிகள். அம்முக்காலிகளில் ஓலைச் சுவடிகள். அம்மாணவர்கள் அவைகளைப் புரட்டிக் கொண்டும், இலக்கண சம்பந்தமான சூத்திரங்களைப் படித்துக் கொண்டுமிருக்கிறார்கள்.

அதுவரையில் அம் மாணவர்களுக்கு யாப்பிலக்கணத்தைப்பற்றி எடுத்துக்கூறிய அவர், இப்பொழுது அக்கூடத்தில் தன் கைகளைப் பின்புறமாகக் கட்டிக்கொண்டு அங்குமிங்குமாய் உலாவிக்கொண்டே இருக்கிறார். வயது 50 இருக்கும், ஆனால், யாரும் அவரை 50 வயது பூர்த்திபெற்ற மனிதர் என்று மதிக்கமாட்டார்கள். தேகம் கட்டுவிடவில்லை. சாந்தமும், புன்னகையும் அவர் முகத்திலே ஒரு கவர்ச்சியைக் காட்டின. உண்மையிலேயே வாலிபத்தில் மிகவும் அழகாக விளங்கியிருக்கவேண்டும் என்று அவரைப்பார்த்ததும் யாரும் சொல்லிவிடுவார்கள். அவர் இடுப்பிலே விலையேறப்பட்ட பட்டு வஸ்திரம்; புஜத்திலே அழகான சால்வை. முகம் மாத்திரம் அச்சமயம் சிந்தனையிலாழ்ந்திருந்தது.

“சரி, இனியும் காலத்தைக் கடத்திக்கொண்டுபோவதில் பிரயோஜனமில்லை. முதலில் இந்த உறவையே நான் விரும்பவில்லை. ஆனால் அவர்களோ ஒருவரை ஒருவர் உண்மையாகக் காதலிப்பதாகவே தெரிகிறது. மேலும் இச்செய்தியோ ஊர்முழுவதும் எப்படியோ தெரிந்திருக்கிறது! கல்யாணம் எப்பொழுது? என்று எல்லோரும் கேட்கிறார்கள். களவுமுறையிலேயே அவர்களை விட்டுவைப்பதும் சரியல்ல. கூடிய சீக்கிரம் கற்புமுறைப்படி அவர்களுக்குக் கல்யாணம் செய்துவிட வேண்டியதுதான். முதலில் அவள் குணம் எப்படியோ? என்று சந்தேகித்தேன். ஆனால், பழகிப் பார்த்ததில் குணம், அழகு, அறிவு எல்லாம் அவளிடம் பொருந்தியிருக்

கின்றன. இவ்விதம் அமைவது மிகவும் அருமையே! அந்த விஷயத்தில் என்மகன் அதிர்ஷ்டம் செய்த வனே!........" இவ்விதமெல்லாம் அவர் எண்ணிக் கொண்டே இருக்கும்போது ஒரு சிஷ்யன் 'குருவே' என்றான்.

சட்டென்று அவர் திரும்பி 'என்ன சந்தேகம்?' என்று கேட்டார்.

"ஒன்றுமில்லை, நேற்று நானும் சிவநேசனும் (மற்றொரு மாணவன்) இலக்கண இலக்கியங்களைப்பற்றி விவாதித்துக்கொண்டிருந்தோம். அப்பொழுது எங்க ளுக்கு ஒரு சந்தேகம் வந்தது. இலக்கணத்திற்காக இலக்கியமா? இலக்கியத்திற்காக இலக்கணமா? என்பதே அச்சந்தேகம்........"

பெரியவர் சிரித்துக்கொண்டே "உம். நீங்கள் என்ன முடிவு கட்டினீர்கள்?" என்று கேட்டார்.

"நாங்கள் முடிவுகட்டவில்லை. ஆனால், பதில் தெரிந்து விட்டது."

"யார் பதில் சொன்னார்கள்?"

"நற்செயலாக நாங்கள் விவாதித்துக் கொண்டிருக் கும் போது ஆனந்தர் வந்தார்........"

"உம். அவன் ஏதாவது உளறியிருப்பான்!.... அப்புறம்?"

"இலக்கணம் இலக்கணம் என்று மண்டையைப் போட்டு உடைத்துக் கொள்ளாதே. இலக்கண வித்வான் களால் இலக்கியத்தைச் சிருஷ்டிக்க முடியாது. நல்ல உயிருள்ள கவிதைகளைக்கூட அவர்கள் 'அதுகுறை; இதுகுறை' என்று சொல்லி தள்ளிவிடுவார்கள். ஆகவே நான் சொல்லுவதைக்கேள். என்னுடைய பிதா சொல் லுகிறார் என்பதற்காக எதையும் ஒப்புக்கொண்டு விடாதே. இலக்கியம்தான் பிரதானம். இலக்கியத்திற் காகவே இலக்கணம் என்பதை மறக்காதே. இலக்

கணத்தின்படி 'படிதாண்டா பத்னி'யாக இருப்பது இலக்கியமல்ல' என்றெல்லாம் ஆனந்தர் கூறினார்........"

"அதற்காக இலக்கணப் பாடம் போதும் என்று சொல்லுகிறீர்களா? அந்தப் பைத்தியக்காரன் பேச்சைக் கேட்டுக்கொண்டிருக்க உங்களுக்குப் புத்தி எங்கு போயிற்று? அவன் ஒன்றுக்கும் அடங்காதவன். அவன் சொல்லுவதை ஒப்புக்கொண்டால், உலகத்தில் கவிதைக்கும், இலக்கியத்திற்கும் கௌரவமே இல்லாமல் போய்விடும். அப்புறம் வாயில் வந்ததெல்லாம் கவிதை என்றாய்விடும். இலக்கணமில்லாவிட்டால், இலக்கியத்தின் அழகையே நிர்ணயிக்கமுடியாது! தாய் தகப்பன் பேச்சைக் கேட்காத பிள்ளைமாதிரி கெட்டழியவேண்டியதுதான்...."

இவ்விதம் ஆனந்தனின் தகப்பனாரும், பல்லவ சமஸ்தான புலவருமான சந்திரசேகர் பேசிக் கொண்டேயிருக்கும்போது ஒரு யுவதி உள்ளே அவசர அவசரமாக வந்தாள்; நமஸ்கரித்தாள்.

"வா, வா, கொஞ்சநேரத்திற்கு முன்புதான் உன்னைப்பற்றி நினைத்தேன். உள்ளே போ. மீனாக்ஷி உன்னைப் பார்க்கவேண்டுமென்று கூறினாள்."

"அப்படியா? மீனாக்ஷி அம்மாவைப் பார்த்துப் போகவே வந்தேன்" என்றாள் யுவதி.

"ரொம்ப சரி, ராஜகுமாரியே உன்னை அந்தரங்கத் தோழியாக நியமித்துக்கொண்டிருக்கிறாள் என்று கேள்விப்பட்டேன். அது வாஸ்தவமா?"

"வாஸ்தவம். உடனே அதை அம்மாவிடம் வந்து சொல்லவே பிரியப்பட்டேன். நேரமில்லை. அரண்மனை வேலையல்லவா? எப்பொழுது பார்த்தாலும் ராஜகுமாரி திலகவதியுடன் இருக்கவேண்டியிருக்கிறது!"

"ரொம்ப சந்தோஷம். உள்ளேபோ. மீனாக்ஷி உன்னைப் பார்க்கவேண்டுமென்று இன்று காலை ஆனந்தனிடம்கூட கூறிக் கொண்டிருந்தாள்." இவ்விதம்

சொல்லிவிட்டு மாணவர்களுக்கு அப்புலவர் மறுபடியும் இலக்கணப் பாடத்தையே சொல்ல ஆரம்பித்தார்.

வந்த யுவதி அவசரமாக உள்ளே நுழைந்து "அம்மா, அம்மா" என்றாள். உள்ளே ஓர் அறையிலிருந்து மீனாக்ஷி ஓடிவந்து "வா, வா. எப்பொழுது வந்தாய்? இன்றைக்கு காலையில்தான் ஆனந்தனிடம் சொன்னேன். உன்னை அவன் பார்த்துக் கூறினனா?" என்று ஆவலுடன் கேட்டாள்.

"அவரை நான் பார்க்கவேயில்லை."

"அது போகட்டும்; உனக்கு அரண்மனையிலேயே வேலையாமே! என்னிடம் சொன்னாயா?"

"அதைச் சொல்லத்தான் வந்திருக்கிறேன்."

பிறகு இருவரும் பேசிக்கொண்டே மற்றோர் அறையின் பக்கம் போனார்கள். அந்த மங்கையின் கண்கள் ஆனந்தனைப் பார்க்க நான்கு புறமும் வட்டமிட்டன. மீனாக்ஷி குறிப்பறிந்துகொண்டு "ஆனந்தனுக்கு இப்பொழுது ஒரு புதிய 'பைத்தியம்' பிடித்திருக்கிறது. அது உனக்குத் தெரியுமா? என்று கேட்டாள்.

"என்ன? தெரியாதே."

"அதை ஏன் கேட்கிறாய்? வெளியே போன நேரம் போக, அதோ, வீட்டின் பின்புறமுள்ள சோலையைப் பார்த்துக்கொண்டிருக்கும் ஓர் அறைக்குள் உட்கார்ந்து சதா ஏதோ சித்திரம் எழுதிக்கொண்டிருக்கிறான். இரவில்கூட நெய்விளக்கை ஏற்றிவைத்துக்கொண்டு எழுதுகிறான்."

"சித்திரமா? என்ன சித்திரம்?"— அம்மின்னாளின் அகத்தில் பல எண்ணங்கள் கிளம்பி புதிர்—சித்திரங்களைக் கீறின. முகத்தில் உணர்ச்சிகளின் மாற்றம்.

"அது யாருக்குத் தெரியும்? அந்த அறைக்குள் யாரும் போகக்கூடாதென்று உத்தரவு. படம் இன்னும் பூர்த்தியாகவில்லை. எல்லாம் எழுதி முடிந்தபிறகுதான் மற்றவர் பார்க்கலாமாம்."

"அப்படியா? எழுதும்போது பார்த்தால் 'திருஷ்டி' விழுந்து விடுமோ?"

"யார் கண்டார்கள்? நம்ப அரண்மனை சித்திரக் காரர் அவன் புத்தியைக் கெடுத்துவிட்டார் என்று தெரிகிறது. அவர் பேச்சைக் கேட்டுக் கொண்டு இப்பொழுது சித்திரக்கலையைப் பழக ஆரம்பித்திருக் கிருன் என்று அவன் தகப்பனுரே சொன்னுர். இந்த மாதிரி இரவு பகல் கண்விழித்து சுவரில் சித்திரம் எழுதிக்கொண்டிருந்தால் இந்த உடம்பு என்னத்திற்கு ஆகும் என்று நீதான் அவனுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும். போ. அவன் அந்த அறையில்தான் இருப் பான்." என்ருள் ஆனந்தனின் தாய் மீனுக்ஷி.

அந்த அறையின் கதவு சாத்தப்பட்டிருந்தது. மெதுவாக அதைத் தட்டினுள் யுவதி. பதில் இல்லை. முன் னைவிட சற்று பலமாக தட்டினுள். பேச்சு மூச்சு இல்லை. "உள்ளே யார்?" என்ருள். அதற்கும் பதில் இல்லை. "வரலாமா?" என்ருள். 'வரலாமா? என்ற சப்தமே எதிரொலித்தது. பொறுமை இழந்தவளாய்க் கதவை அழுத்தித்தள்ளினுள். 'பட்' என்று அது திறந்து கொண்டது. உடனே உள்ளே மெதுவாக அடி எடுத்து வைத்தாள். சுற்றியும் பார்த்தாள். ஆனந்தன் தன்னை வரவேற்பான் என்று எதிர்பார்த்து ஏமாந்துபோனுள்.

சில அடிதூரம் போனதும் எதிரே ஒரு பட்டுத் திரை தொங்கிக்கொண்டிருந்தது. "ஓகோ! இங்கு ஒளிந்து கொண்டிருக்கிறீரோ?" என்று சொல்லிக்கொண்டே சட்டென்று அத்திரையை விலக்கினுள்.

"ஹா!" என்று தன் விரல் ஒன்றை பல்லில் வைத் துக் கடித்தவளாய் பின் தயங்கினுள். அவள் தேகம் பின்வளைந்து திகைப்பினுல் தடதடத்தது. கண்கள் நம்பிக்கையை இழந்து தவித்தன. தன்னை அறியாம லேயே "திலகவதி தேவியா? இங்கேயா........?" என்று தடதடத்தாள். உணர்ச்சிகளால் பின்னப்பட்ட எண் ,ணங்கள் உள்ளத்திற்குத் 'தேர் ராட்டினம்' ஆயின கிர்ர்' என்று தலை சுழலுவதுபோல இருந்தது. !சொல்ல

முடியாத சோகம் அவளை ஆத்மாவை வந்து சூழ்ந்து கொண்டது.

கண்களை ஒரு முறை கசக்கிக்கொண்டு மறுபடியும் பார்த்தாள். சந்தேகமில்லை; எதிரே நிற்பது திலகவதி தேவிதான். "ஏன் பேசாமல் நிற்கிறாய்? நான் இங்கு வந்தது உனக்கு விருப்பமில்லையா? அடேயப்பா! ஆனந்தர் அறைக்குள் வர எவ்வளவு துணிவு! பரந்தாமனைக் காதலிப்பதாக என்னிடம் நீ சொல்லியதெல்லாம் கதைதானா? என்னை மோசம் பண்ணவா இந்த வஞ்சகம்?......" பைத்தியக்காரி ஆத்திரமுடன் பேசுவதுபோல் கேட்கிறாள்.

பதில் இல்லை; திலகவதி புன்னகைக்கிறாள்!

"என்னைப் பார்த்துச் சிரிக்கிறாயா? சிரி; நன்றாகச் சிரி. நான் செத்து மடியவேண்டுமென்று சிரி! உன்னைப்போல நானும் ஒரு பெண்தானே! என் காதல் உள்ளத்தை நீ பார்த்துச் சிரி! பழிவாங்கவா சிரிக்கிறாய்!......."

மௌனம்; முன்போலவே எதிரே ஆடாமல் அசையாமல் நின்றபடியே திலகவதி சிரிக்கிறாள்.

"சிரித்தது போதும்; முதலில் இந்த இடத்தைவிட்டு வெளியே போய்விடு. என் வாழ்வில் குறுக்கிட உனக்கு அதிகாரமில்லை" என்றாள் ஆத்திரமுடன் அந்த யுவதி.

என்ன ஆச்சரியம்! திலகவதி முன்வருகிறாள். அந்த யுவதியைப் பார்த்துப் பேசுகிறாள். "என்மீது வீணாக ஏன் கோபிக்கிறாய்? ஆனந்தர் என்னைக் காதலித்தால், அதற்கு நான் என்ன செய்வேன்? அவர் உள்ளத்தில் நான் இருக்கிறேனென்பதை இப்பொழுதாவது தெரிந்து கொண்டாயா? நீ அவரைக் காதலிக்கிறாய் என்பது உண்மையாக இருக்கலாம். ஆனால், அவர் யாரைக் காதலிக்கிறார் என்பதைப் பற்றி மறுபடியும் நான் சொல்லவேண்டியதில்லை. காதல் விஷயத்தில் கட்டுப்பாட்டையும், அடிமைத்தனத்தையும், அவர் விரும்புவதில்லை என்பது உனக்குத் தெரியாதா?...."

வாஸ்தவம். அதற்காக என்னை கைநழுவ விட்டு விட்டு உன்னை அவர் காதலிக்கிறார் என்று சொல்லுகிறாயா? போதும். உன் வார்த்தைகளை கேட்க நான் தயாராகவில்லை. தயவுசெய்து என்னை வார்த்தைகளால் கொல்லாதே. உனக்குப் புண்ணியமுண்டு. நீ போய்விடு."

"அது முடியாத காரியம். ஆனந்தர் மனதை முறிக்க எனக்குத் தைரியமில்லை. அவர் வரச்சொல்லி நான் வந்திருக்கிறேன். என்னை வெளியே போகச் சொல்ல உனக்கு அதிகாரமில்லை....நீயோ ஆனந்தரை அளவுக்கு மீறி காதலிப்பதாகக் கூறுகிறாய். ஆனால், உன் காதல் சம்பூரணமடையவில்லை. பொறாமையால் அதைப் புண்படுத்துகிறாய்! உண்மைக் காதலுக்கு இது அழகல்ல. தியாகம்தான் மெய்க் காதலின் இலக்கணம். உன் காதலனின் நன்மைக்காக அதைத் தியாகம் செய்யத் தயாராயிருக்கவேண்டும். யோசித்துப்பார். நீயோ, கேவலம் ஒரு வேலைக்காரிதான். ஆனந்தரோ சமஸ்தான கவிராயரின் புதல்வர். அவரை நாடுகிறாள் ஒரு ராஜகுமாரி. ராஜபோகத்தைப் பெறப் போகும் உன் காதலனுக்கு உதவிசெய்யவேண்டிய நீ அதைக் கெடுக்கவே வழிதேடலாமா? ஆனந்தரிடம் நீ கொண்ட காதல் நிஜமானால் அந்தக் காதலின் பெயரில் உன் ஆசையையும், பிரேமையையும் தியாகம் செய்யப் பின்வாங்கமாட்டாய்! அது தான் உண்மைக் காதலுக்கு லட்சணம். ஆனால், நீயோ ஆனந்தருக்குக் காதலியாகப் பிறந்தவள் நான் ஒருத்திதானென்று நினைத்துக்கொண்டு ஆத்திரப்படுகிறாய்! கொஞ்சம் பொறுமையாக யோசித்துப்பார். நான் சொல்வதிலுள்ள உண்மை விளங்கும் . .. ."

"தேவி, என்னை மன்னியுங்கள். தெரியாத்தனமாக ஏதேதோ சொல்லிவிட்டேன். அப்படியானால் தாங்கள் ஆனந்தரைக் . காதலிப்பது உண்மையா? அல்லது பரந்தாமனை...." மங்கை பேசமுடியாமல் தள்ளாடினாள். முகப்பிரதேசத்தில் வியர்வை வெள்ளமாயிற்று. நெஞ்சமுத்தில் சோகத்தின் புயல். அப் புயலின் எதிரொலி அங்கங்களைப் பாடுபடுத்தியது!

"ஆனந்தனின் உள்ளத்தில் நான் இருக்கிறேன். அது என் பிசகல்ல. ஆனந்தரை நீ இன்னும் சரியாகத் தெரிந்துகொள்ளவில்லை" என்ற பதில் கிடைத்தது.

"என்ன மறுபடியும் என்னை கேலியா செய்கிறாய்? ஆனந்தர் ஒருகாலும் உன்னைக் காதலிக்க மாட்டார்; காதலிக்கவுமில்லை. அவரை நீதான் காதலிக்கிறாய்! அவர் இருக்குமிடம் தேடி நீ வந்திருப்பதே அதை ஊர்ஜிதம் செய்கிறது. நான் மறுபடியும் சொல்லு கிறேன். என்னைப் பரிகசித்தது போதும்; எனக்கு புத்தி போதித்ததும் போதும். போய்விடு. நிற்காதே. என்ன? போகமாட்டாயா? என் ஆத்திரத்தை மறுபடி யும் கிளப்புகிறாயா? போ. மரியாதையாகச் சொல்லு கிறேன். அடேயப்பா! என்ன நெஞ்சழுத்தம்! உன் காதென்ன செவிடா?........" இவ்விதம் அந்த யுவதி படபடவென்று பேசிக்கொண்டே திரும்பினாள்.

மறுபடியும் திலகவதி ஆடாமல் அசையாமல் முன்போல புன்னகைக்கிறாள்!

யுவதியின் ஆத்திரமும், கோபமும் எல்லை மீறி விட்டன. உணர்ச்சி ஆவேசவாகனத்தில் ஆரோ கணித்துவிட்டது. எதிரே அவள் கண்ணில் பட்டது சிகப்புச்சாயம் நிறைந்திருந்த ஒரு கிண்ணம். அதை எடுத்தாள். அவள் கண்களுக்கு எந்தப்பக்கம் திலகவதி நிற்பதாகத் தோன்றியதோ அப்பக்கமாக அதை ஆத்திரமுடன் வீசினாள். அதே நொடியில் அவளுக்கு என்ன தோன்றியதோ? அந்த அறை முழுவதும் அவளோடு சுற்றியது. அச்சுழற்சியில் ஒன்ரு, இரண்டா, அநேக திலகவதிகள் அவளின் நேத்திரங்களுக்கு முன்தோன்றி சிரித்தார்கள்! இச்சங்கடமான மனோ அவஸ்தையைத் தாங்காத அந்தப் பெண் அப்படியே கீழே விழப்போனாள்.

அவள் விழப்போகும் அதேசமயத்தில்தான் அவள் கையிலிருந்து விடுபட்ட சாயக்கிண்ணியும், எதிரே அப்பொழுதுதான் அறைக்குள் நுழைந்த ஓர் அழகான வாலிபன் மேல் விழுந்தது. அவன் அச்சமயம் கட்டி யிருந்த வெண்மையான பட்டு வஸ்திரத்தை அக்கிண்ணி

யிலிருந்த சிவந்த சாயம் கறையாக்கியது. அதை அவன் கவனிக்கவில்லை. யுவதி கீழே புயலில் அடிபட்டு விழும் கொடிபோல விழப்போவதைப் பார்த்ததும் அவன் தன் கையிலுள்ள சாயமிருந்த பாத்திரத்தை அப்படியே நழுவவிட்டான். ஓடோடினான். அக்கணமே அம்மங் கையைப் பிடித்து அணைத்துக்கொண்டு, "கோதை' கோதை" என்று கூப்பிட்டான். பதில் இல்லை. அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை. பைத்தியக்காரி யைப்போல சாயக்கிண்ணியை எடுத்து அடிப்பானேன்? இங்கு என்ன நடந்திருக்கும்? வேறுயார் இங்கு வந்தி ருப்பார்கள்? இந்த அறைக்குள் இவளை ஏன்விட்டார்கள்? என்ற பற்பல கேள்விகள் அவன் உள்ளத்தில் எழுந் தன. அவைகளுக்குரிய பதில்களைப் பெறுவதில் அவன் அச்சமயம் கவலைப்படவில்லை. முதலில் கோதைக்கு மூர்ச்சை தெளியவைக்க வேண்டுமென்று விரும்பினான். உடனே கோதையை பக்கத்திருந்த ஒரு படுக்கையில் கிடத்தினான். ஜலத்தைக் கொண்டுவந்து அவள் முகத் தில் தெளித்து மூர்ச்சைத் தெளியவைத்தான்.

கோதை கண்ணைத் திறக்கவில்லை. ஆனால், அவள் புத்தி நிதானமில்லாத முறையில் சொன்னாள்: "திலகவதி தேவி, என்னை மன்னித்துவிடுங்கள். அவசர புத்தியில் செய்துவிட்டேன். ஆனந்தரின் நன்மைதான் எனக்குப் பிரதானம்...."

"கோதை, கண்களைத் திற. யார் உன்னுடன் பேசுகிறதென்று முதலில் பார்" என்றான் அவ்வா லிபன். "ஓகோகோ! திலகவதிதேவி இங்கு எங்கு வந்தாள்? ஏதேதோ உளறுகிறாளே!" என்று மனதிற் குள் நினைத்துக்கொண்டான். கோதையின் மனமாற் றத்திற்குரிய காரணத்தை அவன் ஊகிக்க ஆரம்பித்து விட்டான்.

மறுபடியும் கோதை கண்ணை விழிக்காமலே சொல் லுகிறாள்: "அம்மா, தேவி என்னை மன்னித்தேன் என்று சொல்லுங்கள். அப்பொழுதுதான் உங்கள் பாதத்தை விடுவேன்...." வார்த்தைகள் சிதறின.

"கோதை, இதோபார், ஆனந்தன் வந்திருக்கிறேன் உன்னைப் பார்க்க" என்று அவன் கூறிக்கொண்டே அவளை தூக்கி உட்காரவைத்தான். கோதை சிறிது கண்ணைத் திறந்தாள்; நிதானம் ஏற்படவில்லை என்று கண்ணின் திருஷ்டி காட்டியது. உடனே ஆனந்தன் அவள் முகத்தை துடைத்துவிட்டு "கோதை, நீ எப்பொழுது இங்கு வந்தாய்? திடீரென்று உன் உடம்புக்கு என்ன நேர்ந்தது?" என்று கேட்டான்.

கோதைக்குச் சிறிது சிறிதாக மயக்கம் தெளிந்தது. நடந்த சம்பவங்கள் ஞாபகத்திற்கு வந்தன. ஆனந்தனைப்பார்த்தாள்; கோவென்று கதறி அப்படியே கட்டிக்கொண்டு அழ ஆரம்பித்துவிட்டாள்.

"அட பைத்தியமே, ஏன் அழுகிறாய்? என்ன நேர்ந்தது? ஒன்றுமே விளங்கவில்லையே" என்று கேட்டுக் கொண்டே அவள் கண்ணீரைத் துடைத்தான் ஆனந்தன்.

சட்டென்று எழுந்தாள் கோதை. "திலகவதிதேவி எங்கே? போய்விட்டார்களா?" என்று கேட்டுவிட்டு நான்கு பக்கமும் பார்த்தாள்.

"திலகவதிதேவியா? ராஜகுமாரிக்கு இங்கு என்ன வேலை?"

"யாரை ஏமாற்றப் பார்க்கிறீர்கள்? தங்கள் கடிதப்படி தேவியார் இங்கு வந்திருப்பதாக என்னிடமே கூறினார்களே!"

"சரியாகப் போயிற்று! கோதை, சித்தப்பிரமை இன்னும் தெளியவில்லையா?"

கோதை தன்னை நிதானப்படுத்திக்கொண்டு திரும்பிப்பார்த்தாள். "அதோ திலகவதிதேவி நிற்கிறார்களே!" என்றாள்.

ஆனந்தன் திரும்பிப்பார்த்துவிட்டு கலகலவென்று சிரித்தான். அவனுக்கு விஷயம் சந்தேகமற தெரிந்து

விட்டது. தான் எழுதியுள்ள திலகவதியின் சித்திரத்தைப் பார்த்தபிறகே இவ்விதம் கோதை சித்தப்பிரமை கொண்டிருக்கவேண்டுமென்று தீர்மானித்தான்.

"ஏன் இப்படி சிரிக்கிறீர்கள்?"

"இல்லை. ரொம்ப புத்திசாலிகள்கூட காதல் விஷயத்தில் பைத்தியக்காரர்களாகி விடுகிறார்கள் என்பதை நினைத்தேன். உடனே சிரிப்பு வந்தது."

"காதல் பைத்தியம் உங்களுக்குத்தான்."

"அட பைத்தியமே! திலகவதியை நன்றாகப்பார். இது நான் எழுதிய சித்திரம்" ஆனந்தன் மறுபடியும் சிரித்தான்.

அப்பொழுதுதான் கோதைக்கு மீனாக்ஷி அம்மாள் முதல் முதலாக ஆனந்தனுக்குச் சித்திரப் பைத்தியம் பிடித்திருக்கிறதென்று சொன்னது ஞாபகத்திற்கு வந்தது. சித்திரம் தத்ரூபமாக இருந்ததினால், தான் அடைந்த சித்தப்பிரமையை நினைத்துக் கொண்டாள். உடனே வந்த சிரிப்பை அவளால் அடக்கமுடியவில்லை. ஆனந்தனும் அவளோடு சேர்ந்து சிரித்தான்.

"உம். நிஜமாக நான் சித்தப்பிரமை கொண்டுவிட்டேன் என்றுதானே இப்படிச் சிரிக்கிறீர்கள்?"

"இல்லை. காதல் வேகத்தில் 'கண்மண்' தெரிவதில்லை. அதிலும் உன்னைப் போன்ற பெண்களுக்கோ இந்தக் காதல்வேகத்தில் என்ன பேசுகிறோம், என்ன செய்கிறோம் என்றுகூடத் தெரிவதில்லை என்பதை நினைக்கும்போதுதான் சிரிப்பு வருகிறது."

"ஓகோ! அப்படியானால் ஆண்கள் மாத்திரம் ரொம்ப......."

"காதலை பைத்தியமாக்குகிறவர்கள் இப்பெண்கள் தான்! வெளியே காட்டாவிட்டாலும் உள்ளத்தைப் பொறுத்தவரையில் ஸ்திரீகள் விஷயத்தில் காதல் பைத்

தியமாகிவிடுகிறது! காரணம் வேறு ஒன்றுமில்லை; காதலைக் கட்டிப்போடப் பார்க்கிறார்கள்! காதலுக்கே பைத்தியம் பிடித்துவிடுகிறது."

"இப்படியெல்லாம் பேசி ஏமாற்றுவதிருக்கட்டும். இச்சித்திரப் பைத்தியம் தங்களுக்கு என்றைய தினத்தி லிருந்து ஆரம்பமாயிற்று? இரவில் விளக்கை ஏற்றி வைத்து கொண்டு எழுதுவதாக அம்மா கூறினார்களே!"

"சித்திரம் பைத்தியமல்ல; ஆனால் கற்பனைக்கு உருவமளிக்கும் கலை. பொழுதுபோக்குக்காகவே அதை எழுத ஆரம்பித்தேன். நமது அரண்மனை ஓவியர் என்னை ஒரு பெரிய சைத்ரீகனாக்கிவிடுவதாக உறுதி கூறியிருக் கிறார்! நான் ஓவிய வித்தகனாக மாறுவதில் உனக்குப் பிடித்தமில்லையா?"

"ஏன் பிடித்தமில்லை? ஆனால், திலகவதியின் உருவம் தான் தங்களுக்குப் பிடித்த உருவம்போலும்!"

"கோதை, கிண்டல் செய்கிறாயே! திலகவதி சாமுத் திரகாலட்சணங்கள் எல்லாம் அமைந்தவள். அவளை மனதில் நினைத்துக்கொண்டு முதலில் ஒரு சித்திர மெழுதிப்பார் என்று சித்திரக்காரர் சொன்னார். அதன் படியே எழுதினேன். நீயோ வித்தியாசமாக...."

"அடடா! வித்தியாசமொன்றுமில்லை. சித்திரக்காரர் சொன்னாரென்று சொல்வதற்குப் பதிலாக உங்கள் மனசு சொல்லிற்று, கை எழுதிற்று என்று கூறுங்கள். எல்லாம் எனக்குத் தெரியும். அன்று திலகவதியின் அந்தப்புரத்தில் கிளியைக் கூண்டில் அடைத்தபோதே நான் சந்தேகித்தேன். இன்று அது ஊர்ஜிதமாய் விட்டது"—கண்களில் கலக்கம்.

"கோதை, இல்லாததையெல்லாம் பாவனை செய்து கொண்டு ஏதேதோ பேசி உன் மனதைத் துன்பப்படுத் திக்கொள்கிறாயே. நீ சந்தேகிப்பது சரியல்ல. அப்பப்பா! இப் பெண்களே இப்படித்தான்! அவர்களைச் சமாதா னப்படுத்துவதற்குள் கங்கையை மறுபடியும் இமயமலை உச்சிக்குத் திருப்பிவிடலாம்!"

"சரி, நீங்கள் சொல்லுவதை எல்லாம் நான் நம்ப வேண்டுமென்கிறீர்கள்! அவ்வளவுதானே! ஆனால் ஒன்று. ஒரு ஸ்திரீயின் இதயம் உங்கள்வசம் ஒப்புவிக்கப்பட்டிருக்கிறதென்பதை மாத்திரம் மறந்து விடாதீர்கள்!"

"இப்பொழுது வரவர சரியான பைத்தியக்காரியைப் போல நீ மாறி வருகிறாயே! ஏன் இவ்வளவு பதட்டமும் ஆத்திரமும்? நான் திலகவதியைக் காதலிப்பதாகவே வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது உன் கடமை என்ன என்று யோசித்தாயா?"

கோதையின் இருதயம் துள்ளியது. முகத்தில் வேதனையின் ரேகை படர்ந்தது. அழுகையின் வேகம் அவள் தொண்டையை அடைத்தது.

"கோதை, நான் சொன்னதை நிஜமென்று நம்பி விட்டாயா? அப்படியானால் அதைப்பற்றி நான் பேச வேயில்லை."

"கடமையை நான் உணர்ந்திருக்கிறேன். சந்தர்ப்பம் அதை நிரூபிக்கும். பாவனையில் தோன்றிய திலகவதி காதலுக்குத் தியாகம் அவசியம் என்று கூறிவிட்டாள்"—கோதையின் கண்கள் கண்ணீரைக் கக்கின.

"கொஞ்ச நேரத்துக்குமுன் ஏதோ பாத்திரம் விழுந்து உடைந்த சப்தம் மாதிரி கேட்டது. இப்பொழுது தேம்பி அழும் குரல் கேட்கிறது" என்று தனக்குள் கூறிக்கொண்டே "கோதை, கோதை!" என்று கூப்பிட்டாள் மீனாக்ஷி அம்மாள்.



"கோதை, அதோ, அம்மா வருகிறாள். உனக்குப் புண்ணியம் உண்டு. அழுவதை நிறுத்து. முகத்தைத் துடைத்துக்கொண்டு சிரி. தயவு செய்" என்றான் ஆனந்தன்.

"அம்மாவா? வரட்டும். நன்றாக வரட்டும். நானே அவர்களை இங்கு கூப்பிட்டு வரவேண்டுமென்று நினைத்தேன். நல்ல காலமாக அவர்களே வருகிறார்கள்......."

அதற்குள் அந்த அறையில் மீனாக்ஷி அவசரமாகப் பிரவேசித்தாள். "இங்கு யார் அழுகிறார்கள்?" என்றாள்.

கோதையின் முகத்தைக் கண்டாள். அவளுக்குத் தூக்கி வாரிப் போட்டமாதிரி இருந்தது. கோதையின் மனம் கலங்க ஆனந்தன் ஏதாவது செய்திருப்பானோ? இச் சந்தேகம் மீனாக்ஷியின் முகத்தைத் திருப்பி ஆனந்தனைப் பார்க்கச் செய்தது. அதே சமயத்தில் கோதையின் சமீபத்தில் சென்று அன்புடன், "இங்கு என்ன நடந்தது? நீ எதற்காக அழவேண்டும்?" என்று கேட்டாள். கோதை தன்னைச் சமாளித்துக் கொண்டு "அதெல்லாம் ஒன்றுமில்லை. வேடிக்கையாகச் சண்டை போட்டுக் கொண்டோம்" என்றாள். அப்பொழுது தான் ஆனந்தன் முகத்தில் தெளிவு ஏற்பட்டது. "வாய்ச்சண்டைதான், அம்மா, அதற்கு இவ்வளவு கண்ணீர். பார்த்துக்கொள்" என்று சொல்லி கேலி உணர்ச்சி பரவச் சிரித்தான் ஆனந்தன்.

அதே சமயத்தில் "மீனு, நீ இங்கேயா இருக்கிறாய்? கோதை வந்தாளே. அவள் இருக்கிறாளா? போய் விட்டாளா?" என்று கேட்டுக்கொண்டே உள்ளே வந்தார் சந்திரசேகரப் புலவர்.

தன் தந்தை அங்கு வந்ததை ஆனந்தன் விரும்ப வில்லை. தர்மசங்கடமான நிலைமைக்கு ஆளாகியிருக்கி றோமே என்று அவன் பல காரணங்களை கொண்டு நினைத்தான்.

உள்ளே வந்ததும் சந்திரசேகரர் ஆனந்தனின் சட்டையில் சிவப்புக்கறை இருப்பதைக் கண்டுவிட்டார். அவர் ஒலியுடன், "ஆனந்தா, இதென்ன சட்டை எல்லாம் இரத்தக்கறை?" என்று கேட்டார். மீனாக்ஷி யும் அதைப் பார்த்துப் பதறிப்போய் "ஆனந்தா, நான் கவனிக்கவில்லை. ஈதென்ன?" என்று சமீபத்தில் சென்று கேட்டாள். அப்பொழுதுதான் கோதைக்குத் தான் சாயக் கிண்ணியைப் படத்தின்மீது தவறிப்போய் வீசிய ஞாபகம் வந்தது. உடனே அவள் சாமர்த்திய முடன் "அது ரத்தமல்ல; சிகப்புச் சாயம். சாயக்கிண்ணி

தவறியதால், அதிலிருந்த சாயம் சட்டை, வேஷ்டியில் எல்லாம் கொட்டிவிட்டது" என்றாள். ஆனந்தன், புன்னகையுடன் கோதை சொல்லுவது வாஸ்தவம் என்று தலை அசைத்தான்.

"நன்றாக இருக்கிறது! இது சித்திரம் எழுதுகிற அழகா?" என்றார் சந்திரசேகரர்.

"அப்பாடா! இப்பொழுது நான் என் உயிர் என்னிடம் வந்தது" என்றாள் மீனாக்ஷி.

சித்திரத்தைப்பற்றிப் பேச்சுவந்ததும் சந்திரசேகரருக்குத் தன் மகன் எழுதிவரும் படத்தைப் பார்க்க வேண்டுமென்ற விருப்பம் உதித்தது. அதைப்பற்றிக் கேட்கலாமென்று எண்ணிக்கொண்டே மறுபக்கம் திரும்பினார். எதிரே சுவரில் அவர் திருஷ்டி விழுந்தது. மலைத்துவிட்டார்! "ஆ! திலகவதியா?" என்று அவர் தன்னையறியாமலே கூறினார். மீனாக்ஷியும் சமீபத்தில் சென்று "ஆகா! ராஜகுமாரியே இங்குவந்து நிற்பது போலவே இருக்கிறது!" என்றாள். தன் மகனின் சித்திரக் கலா சாமர்த்தியத்தைக்கண்டு தாய் மகிழ்ந்தாள். கவிஞர் சந்திரசேகரருடைய கலைக் கண்கள் அச்சித்திரத்தைக் கண்டு ரசித்தன. ஒரு நிமிடம் மௌனமாய் அப்படியே நின்றுவிட்டார். ஆனந்தன் சிறந்த சைத்ரீகன் என்று அவர் உள்ளம் கூறியது. கலாரசனையை அதே உள்ளத்தில் உதித்த மற்றோர் உணர்ச்சி கலைத்தது. ஆனந்தனை நினைத்தார்; தன்னை நினைத்தார்; தன் குடும்பத்தை நினைத்தார். கோதையை நினைத்தார். அரண்மனையை நினைத்தார்—சந்திரவர்மனை நினைத்தார். அவர் நெஞ்சம் ஆடியது. பெரிய ஆபத்தை ஆனந்தன் தேடிக் கொண்டுவிட்டானே என்று எண்ணினார். சட்டென்று திரும்பி "ஆனந்தா, சித்திரம் நன்றாக இருக்கிறது! ஆனால், இதனால் ஏற்படக்கூடிய பலாபலன்களை உணர்ந்தாயா?" என்று கேட்டார்.

கோதை சந்திரசேகரரின் உள்ளத்தில் ஓடிய எண்ணங்களை ஊகித்தவளாய் விளங்கினாள். அவருடைய கேள்விகளுக்கு ஆனந்தர் எத்தகைய பதில்களைச் சொல்லப்போகிறார் என்பதை அறிந்துகொள்ளவே அவள்

துடித்தாள். இத்துடிப்பு உணர்ச்சியுடன் ஆனந்தரின் முகத்தையே நோக்கினாள்.

தகப்பனாரின் கேள்விக்கு ஆனந்தன் சட்டென்று பதில் சொல்ல விரும்பி, "அப்பா, கலைஞன் எப்பொழுதுமே பலாபலன்களை எதிர்பார்த்து எந்தக் காரியத்தையும் செய்வதில்லை என்பது தாங்கள் அறியாததா?" என்றான்.

"ஆனந்தா, இங்கு உன்னுடன் வாக்குவாதம் செய்ய நான் வரவில்லை. தலைபோகிற காரியத்தில் நீ ஈடுபட்டிருக்கிறாய் என்பதை நினைக்கும்போது என் மனம் பகீர் என்கிறது. உன் நன்மையை நாடிக் கேட்கிறேன். இச் சித்திரத்தை எழுத நீ அனுமதி பெற்றிருக்கிறாயா? இதை யார் எழுதும்படி சொன்னார்கள்?"

"யார் எழுதச்சொன்னார்கள் என்றா கேட்கிறீர்கள்? எழுதச்சொன்னது என் அந்தராத்மா. அதற்குக் கலை உணர்ச்சியும், கைத்திறமையும் உதவின. அந்தப் பலனால் ஏற்பட்ட சிருஷ்டியே இச் சித்திரம்"—உணர்ச்சியுடன் கூறினான்.

"அந்தராத்மாவின் கட்டளையா? திலகவதியின் சித்திரம் பிறந்ததற்குக் காரணம் அந்தராத்மாவின் ஆக்ஞையா? ஹா! தெய்வமே!......." இத்தகைய எண்ணச் சக்கரங்கள் கோதை இதயத்தின்மீது ஏறி வேதனையைக் கிளப்பின.

"ஆனந்தா, உனக்கு இன்னும் உலக அனுபவம் போதாது. பயம் அறியாத இளங்கன்றாக மாறி பேசுகிறாய். அரண்மனையின் அதிகாரத்தைப் பெறாமல் ராஜகுமாரியின் சித்திரத்தை எழுதியிருப்பது பெரிய பிசகு. அவளோ ராஜகன்னிகை. நீயோ சித்திரத் தொழிலில் ஈடுபடாதவன். அவள் உருவத்தை வரைவது அழகல்ல. மேலும் மகாராஜா காதுக்கு இது எட்டினால், உன் உயிருக்கு மாத்திரம் ஆபத்து வருமென்று நினைக்காதே. உன் குடும்பத்துக்கே ஆபத்துவரும் என்பதை சிந்திக்க மறந்துவிட்டாய். ஆனந்தா, நான் சொல்லுவ

தைக் கேள். இதை முதலில் சிதைத்துவிட்டு மறு காரியம் பார்"—கண்டிப்பாகக் கூறினார்.

"சிருஷ்டியைச் சிதைக்க முடியாது. ராஜ கட்டளையைக் கண்டு பயப்படுகிறவன் நான் அல்ல."

"அவசரப்பட்டுப் பேசாதே. என் கோபத்தையும் மூட்டாதே."

"இதில் அவசரமொன்றுமில்லை. எனக்குச் சிருஷ்டிக்கத் தெரியுமேயன்றி சிதைக்கத் தெரியாது. இதை நான் எழுதியதற்காக சக்கிரவர்மன் என்னைக் கண்டித்தாலும் சரி; அல்லது கொன்றுவிட்டாலும் சரி; அதைப் பற்றிய கவலையே எனக்கில்லை. ஆனால், உலகம் அவனைத்தான் கலை உள்ளமில்லாத, அழகு உணர்ச்சியில்லாத தமிழ் மன்னன் நாடகக் கொலையில் ஈடுபட்டான் என்று தூற்றும்."

"சரி. நீ பெற்றோர்களுக்கு அடங்காப்பிள்ளை. உன்னுடன் பேசுவதில் பிரயோஜனமில்லை" என்று கவிராயர் கூறிவிட்டு, "கோதை, உன் தலைவிதி எப்படியோ?" என்றார். அச்சமயம் கோதையின் நேத்திரங்களைக் கண்ணீர் நிரப்பிவிட்டது. பரிதாபமுடன் பார்த்தாள்.

"மீனா, உன் பிள்ளை செய்வது ஒன்றும் சரியில்லை. நீதான் புத்தி போதிக்கவேண்டும்" என்று கூறிவிட்டுக் கவிராயர் வெளியே போய்விட்டார்.

மீனாக்ஷி ஆனந்தன் முகத்தைப் பார்த்தாள். ஆனந்தன் தாயின் முகத்தைப் பார்த்தான். கோதை ஆனந்தன் வதனத்தை நோக்கினாள். ஆனந்தன் தன் தகப்பனாரிடம் கூறிய ஒவ்வொரு மொழியும் அவள் உள்ளத்தில் ஏற்கனவே குடிகொண்டுள்ள சந்தேகத்தை ஊர்ஜிதப்படுத்த ஆரம்பித்துவிட்டது. "அம்மா" என்று தன்னை அறியாமலேயே கதறியவளாய் மீனாக்ஷியைக் கட்டிக்கொண்டு அழுது விட்டாள். "ஆனந்தா, கோதையின் முகத்தைப் பார்த்தாவது......" என்று மீனாக்ஷி பேசும்போது அவள் வாய்ச்சொற்கள் தடதடத்தன.

"ஒன்றுமில்லாததைப் பிரமாதப்படுத்தி இப்படி யாராவது துன்பத்தை வலிய ஏற்படுத்திக் கொள்ளுவார்களா?" என்றான் ஆனந்தன். அதற்குமேல் அவனாலும் பேச முடியவில்லை.

## கிளை-12.

"ஆமாம். அதுதான் சரியான யோசனை. இன்னும் எத்தனை நாளைக்கு இதை மனதிலேயே வைத்துக் கொண்டு மடிவது? இன்று இரவு வரட்டும். இரகசியமாய்ப் புறப்பட்டுப்போய் ஆச்சிரமத்தில் அவரைச் சந்தித்தால் என்ன? ஈதென்ன கேள்வி? அவசியம் சந்தித்தே ஆகவேண்டும். ஒரு ஸ்திரீயின் உண்மையான பிரேமையை அவரால் திரஸ்கரிக்க முடியாதென்று கண்டிப்பாக யாரோ என் உள்ளே இருந்து கூறுகிறார்களே! அதன்படியே நடந்து பார்ப்போம். இதனால் என்ன நேரிட்டாலும் சரி"—இவ்விதம் அம்மினி எண்ணிக் கொண்டே தன் மாளிகையின் சாளரத்திற்கு அருகே நின்று கொண்டிருக்கிறாள். இப்பொழுது மறுபக்கம் திரும்பிவிட்டாள். "ஏன், இன்னும் கோதையைக் காணோம்? நேற்று விடைபெற்றுப் போனவள் இன்னும் திரும்பவில்லையே. பாவம்! அவள் என்ன செய்வாள்? அவளுக்கோ ஆனந்தன்மீது பிரேமை! ஆனந்தனோ ஸ்திரமற்ற புத்தியுள்ளவனாக விளங்குகிறான்! அழகைக் கண்ட இடத்தில் எல்லாம் ஆனந்தமடைகிறான்........அவன் என்னிடம் பேசும் போதெல்லாம் கற்பனையைச் சாதகமாக்கிக்கொண்டு ஏதேதோ பேசுகிறான்! என் உள்ளத்தை உணராமல் உளறுகிறான்!" என்று அவள் நினைத்துக் கொண்டிருக்கும் பொழுது கோதை வந்து "தேவி" என்று நமஸ்கரித்தாள்.

"உனக்கு ஆயுள் நூறு. இப்பொழுதுதான் உன்னை நினைத்தேன். நீயும் வந்துவிட்டாய்!"

"எல்லாம் மனசுதான் காரணம்."

"நேற்று முழுவதும் எங்கே போயிருந்தாய்........?"

"சொல்லிவிட்டுதானே போனேன். சந்திரசேகரப் புலவர் வீட்டுக்குத்தான் போயிருந்தேன்........"

"ஆனந்தர் வீட்டுக்கு என்று சொல்லக்கூடாதா? அது போகட்டும். கல்யாணம் எப்பொழுது நிச்சயமாகி யிருக்கிறது?"—பரிகாசமுடன் கேட்டாள்.

"எந்தக் கல்யாணம்?"

"தெரியாததுபோலக் கேட்கிறாயே. கோதைக்கும் ஆனந்தருக்கும் நடக்கப்போகும் கல்யாணத்தைப்பற்றி தான்!"

"தேவி, பரிகாசமா? அந்தக் கல்யாணம் இப் பொழுது நடைபெறாது."

"ஏன் அப்படிக் கூறுகிறாய்?"

"திலகவதி தேவியாருக்கும் பரந்தாமருக்கும் திரு மணம் நடந்த பிறகுதான்........"....சிரித்தாள்.

"கோதை, அது நடக்கக்கூடியதா?"

"ஏன் இந்தச் சந்தேகம்? தங்களை மணக்கும் பாக் கியம் அவருக்குக் கொடுத்து வைக்கவேண்டுமே!"

"நீ அப்படி நினைக்கிறாய். அவரோ........?"

"அவர் மனது மாறாதென்றா நினைத்துக்கொண்டிருக் கிறீர்கள்?"

"மனத்திடம் நம்பிக்கை உண்டு. அதை மாற்ற சந்தர்ப்பம் கிடைக்கவில்லையே. கோதை, சற்று முன்பு ஒரு யோசனை செய்தேன்."

"என்ன?"

"இன்று இரவே நேராக ஆச்சிரமத்துக்குப் போய் அவரைப் பார்த்துப் பேசிவரலாமென்பதே அந்த யோசனை."

"தேவி, அவசரம் வேண்டாம். அப்படிச் செல்லு வது யுக்தமல்ல. பரந்தாமர் மனதை லளிதமாக மாற்ற

வேண்டும். மேலும் அரண்மனையிலிருந்து தாங்கள் வெளியே போவது சரியல்ல; விபரீதமாக முடிந்துவிட லாம். சில சமயம் பரந்தாமருக்கே அது ஆபத்தையும் கொண்டுவரலாம்."

"நீ சொல்லுவதும் ஒரு வகையில் வாஸ்தவமே. அப்படியானால் வேறு யோசனை ஒன்றும் படவில்லையா? என் மனம் படுகிற கஷ்டம் உனக்குத் தெரியாததல்ல."

கோதை யோசிப்பதுபோல முகத்தை மாற்றிக் கொண்டாள். அதே சமயத்தில் அவள் அகத்தில் பின் வரும் எண்ணங்கள் மின்வெட்டின. "ஆம். திலகவதி யின்மேல் ஆனந்தர் கொண்டிருக்கும் பைத்தியத்தை முதலில் மாற்றவேண்டும். இதற்கு வழி திலகவதியின் மீது பரந்தாமன் காதல் கொள்ளும்படி செய்ய வேண் டியதே. பரந்தாமனைப் பிரேமா காதலிக்கிறாள் என்ற செய்தி திலகவதிக்குத் தெரியாது. பரந்தாமனோ வேதாந்தத் திறக்கில் பிரேமாவை சகோதரியென்று அழைத்துவருகிறான். பிரேமாவோ திலகவதியின் உயிர்ச் சிநேகிதை. திலகவதி சொன்னால் எதையும் செய்யப் பின்வாங்கமாட்டாள். பரந்தாமன் உன்னத நிலையை அடைவதை பிரேமாவும் விரும்பக்கூடும். ஆகவே பிரேமாவை உபயோகப்படுத்திக் கொள்ளுவதுதான் எல்லா வகையிலும் சரியான வழி என்று தோன்று கின்றது. ஆமாம். அப்படியே திலகவதியிடம் ஒரு யோசனையைக் கூறுவோம்."

திலகவதி "ஒன்றும் தோன்றவில்லையா?" என்று கேட்டாள்.

"தோன்றாமல் என்ன? நான் சொல்லுகிறபடி செய்தால் கட்டாயம் நம் காரியம் ஜெயமாகும்."

"எப்படி?"

"பிரேமாவோ தங்களுடைய ஆப்த சிநேகிதை...."

திலகவதி குறுக்கிட்டு "கோதை, பிரேமா உண்மை யிலேயே வாழ்க்கையில் வெறுப்புக்கொண்டுவிட்டாளா?

அவள் ஆச்சிரமத்துக்குச் சென்ற காரணம் அது தானே?" என்று கேட்டாள்.

"அதில் என்ன சந்தேகம்? பிரேமாவுடன் இருந்தவள் நான். அவள் மனதை நான் அறிவேன்."

"இல்லை. ஒருவேளை அவள் பரந்தாமனைக் காதலித்திருப்பாளோ என்று சந்தேகம் உதித்தது."

"அதெல்லாம் அப்படியிருக்கவே இருக்காது" என்று கோதை வேண்டுமென்றே அழுத்தமாகக் கூறினாள். பின்பு அவள் சொன்னாள்: "தேவி, பிரேமாவும் பரந்தாமனும் ஆச்சிரமத்தில் சகோதர சகோதரிகளாகப் பழகிவருகிறார்கள். அவர்களிடையே வேறு மனப்பான்மை வளர்வதற்கு இடமில்லாமல் செய்யப்பட்டுவிட்டது. ஆனால் பரந்தாமர் பிரேமாவிடம் அன்பும் மரியாதையும் அதிகமாய் உடையவர். பிரேமா சொன்னால் அவர் கேட்பார். மனம் வைத்தால் பிரேமாவினால் பரந்தாமன் மனதை மாற்றமுடியுமென்று எனக்குத் தோன்றுகின்றது. தங்கள் மனோ நிலையை ஒளிக்காமல் பிரேமாவிடம் கூறி பரந்தாமன் மனதை மாற்றும்படி கேட்டுக்கொள்ளுங்கள். பிரேமா உங்கள் வார்த்தைக்குக் கட்டாயம் இணங்குவாள். நம் காரியம் கைகூடும்."

"கோதை, சரியான யோசனை! என் வார்த்தையை பிரேமா தட்ட மாட்டாள் என்பது எனக்குத் தெரியும்."—திலகவதி எழுந்து சந்தோஷமுடன் கோதையைக் கட்டிக்கொண்டு "நாளையே பிரேமாவை இங்கு கட்டாயம் நீயே அழைத்து வரவேண்டும். என்ன? தெரிந்ததா? மறக்கக்கூடாது......." என்றாள்.

"பரந்தாமரைத்தானே அழைத்துவரும்படி கூறுகிறீர்கள்!" என்று பரிகாசமுடன் சொன்னாள் கோதை.

"போடி! எப்பொழுது பார்த்தாலும் உனக்குக் கேலிதான்!"

"நான் மாத்திரம் இப்பொழுது பரந்தாமராக இருந்தால் என்ன செய்வேன் தெரியுமா?...."

"என்னசெய்வாய்?"

"என்னசெய்வேனு?"-கோதை சிரித்துக்கொண்டே திலகவதியை அப்படியே அணைத்துக்கொண்டாள்.

## கிளை-13.

காலை நேரம். நதிக்கரையிலிருந்து பரந்தாமன் குளிப்பாட்டிய ஆச்சிரமத்து பசுவை ஓட்டிக்கொண்டே வருகிறுன். அவன் வாய் ஏதோ மந்திரங்களை உச்சரித்துக்கொண்டே இருக்கிறது.

வழியில் பிரேமா பூசைக்காக மலர்களைக் கொய்து கொண்டிருக்கிறுள். தூரத்தில் வரும் பரந்தாமனை அவள் முதலில் கவனிக்கவில்லை. ஏனெனில் அவளது கவனம் வேறு சிந்தனைவட்டத்தில் சுற்றிக்கொண்டிருந்தது.

தூக்குக்கூடையில் பறித்த புஷ்பங்களைப் போட்டுக் கொண்டே மேலே நடக்கும் பிரேமாவின் மனத்தில் சிந்தனைகளும் இவ்விதம் நடந்தன.

"வாஸ்தவம். கனவில் கூட நான் எதிர்பார்க்கவில்லை. திலகவதி பரந்தாமரை அடைய எவ்வளவு ஆவலுள்ளவளாக இருக்கிறுள் என்பதை நான் அறிந்து கொண்டுவிட்டேன். அவள் என்னைச் சொந்த சகோதரியைப்போல பாவித்து வந்ததால், மனதில் உள்ளதை உள்ளபடி என்னிடம் கூறிவிட்டாள். நானும் அவளுக்கு வாக்கு அளித்துவிட்டேன். இது சாத்தியமா? அவரிடம் இதைப்பற்றி கூருமல் எப்படியிருக்க முடியும்? ஒருவேளை நான் பதிலுக்குப் பதில் செய்வதாக அவர் நினைத்து விடுவாரோ? நினைக்க நியாயமில்லை. அவர் என்னை சகோதரியாக நேசித்து வெற்றி அடைந்துவருகிறுர்! நான் அவர்முன் தோல்வி அடைந்து விட்டேன்! என்னைப் புனிதப்படுத்தவே அவர் என்னை தங்கையாக் கிக்கொண்டுவிட்டார் என்று தோன்றுகின்றது. ஆனுல், அவரை நேரில் பார்க்கும்போது....என் திட சித்தம் ஏன் சிதறுகிறது? பருவ உணர்ச்சி என்னைப் பரிகசிக்கிறது! நான் 'என்ன செய்வேன்?' செய்வதென்ன? கோதை

எனக்குச் சரியான உபதேசம் செய்தாள். அவள் மகா புத்திசாலி. அவளுக்கு நன்றாகத் தெரியும் நான் பரந்தாமரைக் காதலிக்கிறேன் என்று. பரந்தாமரின் நிமித்தமாகவே நான் ஆச்சிரமவாழ்வை மேற்கொண்டேன் என்பதையும் அவள் அறிவாள். அப்படியிருந்தும் அவள் எனக்குத் தியாகத்தையே போதித்தாள். திலகவதிதேவி பரந்தாமரை தினசரி நினைந்து மனம் கரைவதை அவள் கதை கதையாகக் கூறினாள். "திலகவதியோ ராஜகுமாரி. அவள் அழகிலும் குணத்திலும், அந்தஸ்திலும் சிறந்துவிளங்குகிறாள். பரந்தாமருக்காக அவள் எத்தகைய தியாகத்திற்கும் தயாராக இருக்கிறாள். அவள் உறவால் பரந்தாமர் பெரிய உன்னத நிலைமையை அடைவார். அதற்கு நீ தடையாக இருக்காதே. உண்மையாக நீ பரந்தாமரைக் காதலித்தபோதிலும் அவருடைய நன்மையை உத்தேசித்து, உனது பிரேமையைத் தியாகம் செய். பிரேமையின் அழகு தியாகத்தில் தான் இருக்கிறது; சுயநலத்திலோ சுயசுகத்திலோ இல்லை. உணர்ச்சியின் மூலமாகப் பெருகிவரும் பிரேமை தியாகத்தின்மூலமாக நிறைவைப் பெற்று அழியாத ஆத்ம சுகத்தை அடைகிறது" என்றெல்லாம் கோதை கூறினாளே! அவள் வார்த்தைகள் உண்மையிலேயே என் மனதை மாற்றிவிட்டன! என்ன செய்கிறதென்று தவிக்கும் என் மனதிற்கு அவள் காட்டியுள்ள வழிதான் சரி. இன்றைய தினம் இதைப்பற்றி பரந்தாமரிடம் எப்படியும் சொல்லித்தான் தீரவேண்டும். என் வேண்டுகோளை அவர் நிராகரிக்காத முறையில் நடந்து கொள்ளவேண்டும்! திலகவதி! நீயே பாக்கியவதி! உன் அன்பை ஏற்று அவர் இந்த வேதாந்தக் கிறுக்கைவிட்டு சுகவாழ்வு வாழ்ந்தால்தான் என் ஆத்மா சாந்தியடையும்........"

இச் சந்தர்ப்பத்தில் சமீபத்தில் மணிச் சப்தம் கேட்டது. பிரேமா திரும்பினாள். எதிரே பரந்தாமன் பசுவை ஓட்டிக்கொண்டே வருகிறான். அதன் கழுத்தில் கட்டியிருந்த மணிதான் ஓசை செய்தது. அந்த ஓசை "பிரேமா, பரந்தாமனை தேடினாயே, இதோ வந்து விட்டான். உன் மனதில் நினைத்ததையெல்லாம் சொல்லி விடு. தயங்காதே. கோதை கூறியபடியும் திலகவதிக்கு வாக்கு அளித்தபடியும் நடந்துகாட்டு. சீக்கிரம்" என்று

தன்னைத் தூண்டி துரிதப்படுத்துவதாக பிரேமாவுக்கு தோன்றியது. அவள் தேகம் சிலிர்த்தது. உணர்ச்சி களின் கொந்தளிப்பைச் சமாளித்துக் கொண்டாள். இப்பொழுது சொல்லுவதே சரியானதென்று நினைத் தாள். "பல்லவராஜ்ய மன்னரின் மருமகனாக ஆவதை என் கண்ணால் பார்த்து மகிழலாம். அவர் நன்மையே எனக்குப் பெரிது" என்று முடிவுகட்டினாள்.

பரந்தாமன் வாய் முணு முணுக்கிறது. மனதோ வாயைப்பார்த்து பரிகசிக்கிறது! பிரேமாவின் மனதை மாற்றிவிட்டதற்காக முதலில் வெற்றிகொண்ட மனது இப்பொழுது மன்னிப்பு கேட்கும்படி சொல்லுகிறது. "அவள் எப்படி என் தங்கையாவாள்." என்று கேட் கிறது. "அண்ணா என்று அவள் சொல்லும்போதும் தங்காய் என்று நான் அழைக்கும்போதும் மனச்சாட்சி 'பளீர்' என்று ஏன் அறைகிறது? பிரேமையைப் போன்ற ஓர் அக்னி பிரவேசத்தை நான் பார்த்த தில்லை."—இவ்விதம் சில நாட்களாகவே அவன் மனதில் பெரிய போராட்டம். பிரேமா தன் மனதைத் தெளிவு படுத்திக் கொண்டு வரும்போது பரந்தாமன் மறுபக்கத் தைப் புரட்ட ஆரம்பித்துவிட்டான். அவள் அண்ணா என்று கூப்பிடாமலிருந்தால் எவ்வளவோ நன்மையான தென்று எண்ணவும் தொடங்கிவிட்டான்.

"அண்ணா" என்று ஓடிவந்தாள் பிரேமா. பசுவின் முகத்தைத் தடவி முத்தமிட்டுவிட்டாள்! அதன் மீது சாய்ந்துகொண்டே, "அண்ணா, நான் ஒரு விசேஷச் செய்தியைக் கூறப்போகிறேன். தங்கையின் வேண்டு கோளைத் தட்டக் கூடாது" என்று கொஞ்சலுடன் கூறினாள்.

"பிரேமா, விசேஷ செய்தியா? எனக்கா? அண்ணா என்று இனி கூப்பிடப்போவதில்லை என்று சொல்லப் போகிறாயா, என்ன?"

"இல்லை அண்ணா, அது முடிந்துபோன கதை. அக்கினிப்பிரவேசமாகி பரதேவதையாகிவிட்டேன். அப் பொழுதே அந்தப் பாம்பு அந்தச் சட்டையை உரித்துக்

கொண்டுவிட்டது, அண்ணா"—அவள் வார்த்தைகளில் உருக்கமும் அதேசமயத்தில் உறுதியும் பிரதிபலித்தன.

நடுக்கமுடன் பரந்தாமன் கேட்டான்: "வேறு என்ன செய்தி?"

"நீங்கள் ஒரு முறை எனக்குச் சொன்னதுபோலவே நானும் சொல்லுகிறேன் என்று நினைக்கக்கூடாது. அண்ணா கல்யாணம் செய்து கொள்வதைத் தங்கை பார்க்கப் பிரியப்படுகிறாள். அதில் தப்பில்லையே."

"பிரேமா, நீ சொல்வது ஒன்றும் புரியவில்லையே."

"அண்ணா, தாங்கள் பல்லவராஜ மன்னரின் மருமகராகப் போகிறீர்கள். அது என் பாக்கியம்."

"உனக்குப் பைத்தியமா? அல்லது வேடிக்கையாகவே 'பழிக்குப்பழி' வாங்கப்பார்க்கிறாயா? அது பெண்மைக்கு அழகல்லவே!".

"பைத்தியமில்லை, அண்ணா. நான் சொல்வது அவ்வளவும் நிஜம். என்னை நிர்மலாதேவி கூப்பிட்டனுப்பியிருந்தாள். இன்னும் நான் எதைச் சொல்ல வேண்டும்? அவள் உங்களை அளவுக்குமீறி நேசிக்கிறாள். காதல் இதய அனுபவம் எனக்கு உண்டு. அவள் ஆத்மாவின் துடிப்பை நான் நன்கு அறிந்துகொண்டு விட்டேன். தங்கள் தங்கையின் முகத்திற்காகவாவது அவளின் வேண்டுகோளை அவசியம் ஏற்றுக்கொள்ள வேண்டும். தங்கள் நன்மையை நாடி நான் சொல்லுவதாக நினைக்கவேண்டாம். என் நன்மையை நாடியே சொல்லுகிறேன். தங்களுடைய சுகவாழ்வே எனக்குத் தேவை."

அச்சமயம் பசு தன் தலையை ஆட்டியதால் அதன் கழுத்தில் கட்டியிருந்த மணி சப்தித்தது.

"நல்ல சகுனம். சீக்கிரம் வாக்குக் கொடுங்கள். இப்பொழுதே அரண்மனைக்குப் போகிறேன்" என்றாள் பிரேமா.

"பிரேமா, நீ இன்னும் சின்னக் குழந்தை! உலகம் அறியாமல் பேசுகிறாய். என் வாழ்க்கை இந்தப் படிக் கட்டுகளை எல்லாம் கடந்துவிட்டது என்று நம்புகிறேன். அந்தப் பாம்பு அந்தத் தோலை உரித்துவிட்டது! பிரேமா, இன்னும் என்னைப் பரிசோதிக்கிறாயே!"— சிறிது உதட்டை அசைத்து புன்னகை ஒளி காட்டினான். ஆனால் அவன் மனதோ பற்பல சிந்தனைகளால் தவித் தது. பிரேமா திலகவதிக்காக இவ்விதம் பேசுவா ளென்று அவன் சொப்பனத்தில்கூட நினைக்கவில்லை. பரிசோதனைக்குமேல் பரிசோதனையா என்று அவன் நினைத்தான்.

"திலகவதியின் மனதை அறியாமல் பேசுகிறீர்கள்" என்றாள் பிரேமா.

"அவள் வாழ்க்கையில் யாரும் குறுக்கிடுவதற்கில்லை; யாராவது குறுக்கிட்டால் ஆனந்தன் உயிர்விடுவான். அந்த இரகசியம் உனக்குத் தெரியாது."

"ஹா! என்ன சிக்கலான வாழ்க்கை'—பிரேமா இதைச் சொல்லாமல் மனதிற்குள் எண்ணினாள்.

"இல்லை, நீங்கள் இவ்விதம் பண்ணுவது சரியல்ல. ஆனந்தர் கோதையைத்தான் காதலிக்கிறார். அது எனக்குத் தெரியும். வீணான காரணங்களைக் கூறி என் வேண்டுகோளை நிராகரிக்கவேண்டாம். சுருக்கமாகச் சொல்லிவிடுகிறேன். திலகவதியின் உயிர் உங்கள் கையிலிருக்கிறது. பிறகு உங்கள் இஷ்டம். தயவுசெய்து தங்கள் பிடிவாதத்தை மாற்றிக்கொள்ளுங்கள். அன் பான உங்கள் தங்கைக்கு இந்த உதவியைக் கூடச் செய்யக்கூடாதா?"

அவள் நேத்திரங்களுக்குச் சங்கட உணர்ச்சி விலங்கிட்டது.

பசுமாடு "அம்மா" என்று வாலை அசைத்துக் கொண்டே இடையே சப்தம் போட்டது.

பரந்தாமனுக்கு என்ன பதில் சொல்லுகிறதென்று தோன்றவில்லை. பிரேமா இவ்விதமெல்லாம் பேசுவா ளென்று அவன் எதிர்பார்க்கவேயில்லை. உள்ளே நடந்து வரும் உணர்ச்சிப் போராட்டத்தின் முனையில் கிடைக்கும் "அடி"களைத் தாங்கமுடியாமல் துவண்டான். "ஏன் வளர்த்துவானேன்? மறைப்பானேன்? பிரேமா, நீ என் தங்கையல்ல. உன் உள் உறவு இல்லாமல் நான் மோட் சமடைய முடியாதென்று இப்பொழுது உணர்கிறேன். வீணை திலகவதிக்காகப் பரிந்து பேசாதே" என்று சொல்லிவிடலாமா?" என நினைத்துவிட்டான். ஆனால் அடுத்த நொடியில் "சரீரத்தின் அம்சத்தைக் கவனித் தாயா? அதன் ஜெகஜாலம் உன்னதமான நாடகம். ஆனால் அதில் கலந்தும் கலக்காமலிருக்கிறேன்" என்று ஆத்மா கூறுவதுபோல அவனுக்குப்பட்டது. தன்னைச் சமாளித்துக்கொண்டு மௌனமாகத் திரும்பி மறுபக்கம் போனான்.

பிரேமாவும் ஒன்றும் சொல்ல முடியாதவளாய் ஒரு பக்கம் சென்றாள். போகும்போது திரும்பிப்பார்த்துக் கொண்டனர். அப்பார்வையில் அர்த்தமில்லாமலில்லை! தவத்தின் இலட்சியத்தைக் கலைக்கும் உணர்ச்சிகள் 'மதன்-ரதி' வேஷம்போட ஆரம்பித்துவிட்டன.

இருவரும் திரும்பிவிட்டார்கள்.

பிரேமா தாபத்தால் வார்க்கப்பட்ட உணர்ச்சியின் மூலம் சொன்னாள்: "நான் பரதேவதை அல்ல." பரந்தா மனும் அதே உணர்ச்சி ஊஞ்சலில் கூறினான்: "பிரேமா, நான் உண்மையில் பரந்தாமன் அல்ல!"

"குழந்தாய், பிரேமா" என்ற குரல் கேட்டது.

பிரேமா திரும்பினாள். பரந்தாமனும் திரும்பினான்.

சிறிது தூரத்துக்கு அப்பால் நிர்மலானந்த அடிகள் வருவதை அவர்கள் பார்த்தார்கள்.

சமீபத்தில் வந்ததும் நமஸ்கரித்தார்கள்.

## கிளை-14.

இரண்டு அல்லது மூன்று நாட்கள்தான் கடந்திருக்கும்.

பின்பு ஒரு நாள். முன் இரவு. பௌர்ணமியாதலால் சந்திரிகையின் பூரண சோபையில் ரதித்தன்மையும், 'மதன அலை'யும் துள்ளிக்கொண்டிருக்கின்றன.

நிலவின் இன்ப ஒளி வெள்ளத்தில், அதோ அந்தக் குடிசை நன்ருகத் தெரிகிறது. ஆமாம். நிர்மலானந்த அடிகளின் பன்னசாலையிலிருந்து சுமார் 50 அடி தூரத்திற்கப்பால் கிழக்கே பார்த்தவண்ணமாய் அமைந்திருக்கிறது அச்சிறிய குடில். அதன் கூரையை புஷ்பக் கொடிகள் தழுவிக்கொண்டிருக்கின்றன. அக்கொடிப் பின்னல்களுக்கிடையே தலைகாட்டும் பலவர்ணப் பூக்கள் காற்றின் 'சுருதி'யை லயித்து தலையாட்டுகின்றன. கூரையின் விளிம்புகளின் பக்கம் நீட்டிக்கொண்டிருக்கும் மூங்கில் முனைகளைச் சுற்றிய வண்ணமாய்த் தொங்குகின்றன புஷ்பக் கொத்துகள். அக்குடிசையின் அடிவாரத்திலும், அதைச் சுற்றியும் விதவிதமான செடிகளும், கொடிகளும் வளர்ந்திருக்கின்றன. ஆனல் மிகப் பெரிய தெருக்கள் அங்கு இல்லை. ஒன்றிரண்டு மரங்கள் மாத்திரம் காணப்பட்டன. அங்கிருந்து பின்புறமாகக் கண்ணுக்கெட்டியதூரம் வரையில் அடர்ந்த சோலைதான்.

அக்குடிலின் வாசலில் அந்த யுவதி உட்கார்ந்திருக்கிருள். என்றைக்குமில்லாத முறையில் அன்றைக்கு அவள் முக்காடு போட்டிருந்தாள். பக்கத்தில் ஒரு மூங்கில் தட்டில் புஷ்பங்கள். அவைகளை அவள் தொடுத்துக் கொண்டே திரும்பித் திரும்பிப் பார்க்கிருள். யாரையோ எதிர்பார்க்கிருள் என்று அவளின் நேத்திரங்கள் 'திருஷ்டி-பாஷை'யில் பேசுகின்றன! ஆகா! அதே சமயத்தில் அக் கண்களில் அழகினுல் வார்க்கப்பட்ட அச்சம். இருதயத்தில் ஒரு துடி துடிப்பு. வருவாரோ? வரமாட்டாரோ? என்ற சந்தேகக் கிலி! சரீரத்தில் இடைக்கிடையே ஓர் அதிர்ச்சி. திடுக்கிட்டுத் திரும்பிய பின்பு இன்பக் கோட்டை கட்டி முடிவில் பெருமூச்சில்

சிதறும் உணர்ச்சி. கடைசியில் ஓர் உறுதி. மீண்டும் நம்பிக்கை; உற்சாகம். முகத்தில் தெளிவின் சோபை. சந்திர ஒளியைப்பார்த்து சவால்விடும் கண்ணொளி. காதலுக்குத் துதிபாடும் உள்ளம்!

இவ்விதமெல்லாம் உணர்ச்சி முனைகளில் தள்ளாடும் அந்த யுவதி சட்டென்று எழுந்தாள்; இங்கும் அங்குமாக நடந்தாள். மறுபடியும் உட்கார்ந்தாள்; பூக்களைக் கட்ட ஆரம்பித்தாள். ஆனால், அவள் கரங்கள் புஷ்பங்களைத் தொடுக்கவில்லை; தொட்டவண்ணமாகவே இருந்தன. மனமோ வேறு 'சிந்தனைப் புஷ்பங்களை'த் தொடுக்க ஆரம்பித்துவிட்டது.

"வருவார், கட்டாயம் வருவார். நான் இன்று வெற்றி அடைவேன்! இன்றைய வேஷம் என் ரூப சௌந்திரியத்துக்குச் சரியான தண்டனை. பரந்தாமர் மனதை இது ஆகர்ஷிக்கும். அன்று பார்வதி சர்வ அலங்காரமுடன் சென்று பரமனை வேண்டினாள். அவள் காதல் வெற்றியடையவில்லை. ஈஸ்வரன் கண்திறந்தும் பார்க்கவில்லை. மனம் உடைந்த பார்வதி உண்மையை உணர்ந்தாள். தவவேடம் பூண்டாள். பிரேமையால் தேகம் உருகினாள். உள்ளம் உருகினாள். சிவனின் அருள் கிடைத்தது. சிவனோடு ஒன்றினாள் பார்வதி. இந்தச் சூட்சுமத்தை ஆத்மா எனக்குக்காட்டுகிறது! பார்வதியின் வழியைப் பின்பற்றுகிறேன். பரந்தாமரால் என்னை ஏற்காமல் இருக்கமுடியாது. உண்மையான பிரேமைக்குத் தெய்வ சகாயமுண்டு! ஹே! பகவானே, நீயே ........கதி. ஆகா! அவனை நினைக்கும்போது........ஆம். அவள் தியாகம் அபாரமானது. அவள் முன் கேவலம் நான் ஒரு தாசிதான்........"

இத்தகைய சிந்தனை ஓட்டத்தில் அவள் இருக்கும் போது வெகுவேகமாக அங்குவந்தான் அவன்.

யார்?

அந்த யுவதி எதிர்பார்த்த வாலிபன்தான். அன்று அவன் ஒரு புதிய மனிதனாகவே காணப்பட்டான். பிரகிருதியின் தோற்றத்திலிருந்து மிதந்துவரும் சௌந்தர்ய உணர்ச்சி அவனை ஆட்கொண்டுவிட்டதோ என்ற

ஐயம் ஏற்பட்டது. சாந்தமான அழகு சதா ஓடும் அந்தக் கண்களிலே இப்பொழுது இன்பக் கனவின் சாயல். துள்ளும் இருதயம். துடிக்கும் புஜங்கள். வாழ்க்கையின் உண்மையான "வேதாந்த இரகசிய"த்தை அறிந்து விட்டதாக ஓர் எண்ணம்; அந்த எண்ணத்தால் ஏற் பட்ட ஆனந்தம். இவையெல்லாம் சேர்ந்துதான் அவனை அங்கு கொண்டுவந்து நிறுத்தின.

அங்கு வந்தவன் வேறு யாருமல்ல; பரந்தாமன் தான். இன்பம் மலர்வதுபோல் உணர்ச்சியுடன் "பிரேமா" என்று கூப்பிட்டான்.

யுவதி பிரேமா சட்டென்று எழுந்தாள்; பரந்தாமனை ஒரு முறை பார்த்தாள். என்ன தோன்றியதோ? உள்ளத்தில் ஏதோ ஒரு திகில். சட்டென்று தலையைக் கவிழ்த்துக் கொண்டாள்.

பரந்தாமன் மிகவும் ஆச்சரியமுடன், "பிரேமா, ஈதென்ன அதிசயம்? என்றைக்கும் இல்லாத முறையில் இன்று முக்காடு போட்டிருக்கிறாய்! ஆகா! இந்த வேடத் திலும் உன் அழகு வரவர அதிகமாக பிரகாசிக்கிறதே! ஆம், பிரேமா, இன்றையதினம் நீ ஒரு புதிய அழகு பெற்றிருக்கிறாய்!"

"புது அழகா?" என்று மிகவும் மெதுவாகச் சொன்னாள் பிரேமா சரியாக நிமிராமலேயே. தனக்குள் அவள் "பிரேமா இன்று புதியவள்தான். சந்தேகமில்லை" என்று சொல்லிக் கொண்டாள். அதே சமயத்தில் இன் றையதினம் தான் பெரிய வெற்றியை அடையப்போவ தாகவும் உள்ளூர ஆனந்தமடைந்தாள். அந்நிலையிலேயே வேறு சிந்தனை முளைத்து வேதனையையும் உண்டாக் கியது. சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு சந்தோ ஷமடை என்று மற்றோர் உணர்ச்சி தூண்டியது. ஒரு பக்கம் இன்ப நினைவுகள்; மற்றொரு புறம் துன்பத்தைத் தரும் சிந்தனைகள். இவைகளுக்கு மத்தியில் கசக்கப்படும் புஷ்பத்தைப்போல விளங்கினாள் பிரேமா.

"பிரேமா, மற்றொரு விசேஷத்தை இன்று உன்னி டம் காண்கின்றேன்."

"என்ன?"

"ஒன்றுமில்லை. இதுவரையில காணப்படாத வெட்கம் உன்னிடம் இன்று எப்படி வந்தது?"

"அதுவா? சந்திரிகைக்கு வாய் இருந்தால், அது சொல்லும்! ஏன்? இந்த மரங்களையும், புஷ்பச் செடிகளையும் கேட்டுப்பாருங்கள்! வெட்கத்தின் காரணத்தை அவை சொல்லும்"—கீழே குனிந்தபடியே, காலில் உள்ள கட்டை விரலால் பூமியைக் கீறிக்கொண்டே பேசுகிருள்.

"சரி. ஆரம்பித்து விட்டாயா? பாம்பு மறுபடியும் தன் தோலை வளர்த்துக் கொண்டுவிட்டது போலும்! பரதேவதையல்ல என்பதை நிரூபிக்க பேச ஆரம்பித்து விட்டாயோ? என்ன, பிரேமா, அப்படித்தானே?"- சிரித்தான் பரந்தாமன்.

பிரேமா அதைக் கேட்டதும் திகைத்தாள். ஆனால், சட்டென்று சமாளித்துக்கொண்டு, "அது இயற்கை தானே!" என்ருள்.

"பிரேமா, ஒவ்வொரு சமயமும் நீதான் வெற்றியடைகிருய். அது போகட்டும். நான் இப்பொழுது இங்கு எதற்காக வந்தேன் தெரியுமா?"

"அண்ணு என்று கூப்பிட மறந்துவிடாதே என்று சொல்ல வந்திருக்கலாம்! அப்படித்தானே?"

"அது முடிந்துபோன கதை. பிரேமா, இதோபார். ஏன் இப்படித் தலைகுனிந்தபடியே நிற்கிருய்? உன் குரலில் கூட இன்று நான் ஒரு புதிய அழகை உணர்கிறேன். வா. நேற்று நான் சொல்லியிருந்ததை மறந்து விட்டாயா? நாளை வெள்ளிக்கிழமை; ஆற்றில் படகில் செல்ல வேண்டுமென்று நான் கூறவில்லையா? நேரமாகிறது, வா...." இவ்விதம் கூறிக்கொண்டே முன்னே வந்தான்.

பிரேமா சட்டென்று குனிந்து தரையில் கட்டிலிருந்த புஷ்ப மாலைகளை எடுத்துக்கொண்டு முன்னே நடந்தாள். அவள் பேசவில்லை; முகத்தை நிமிர்த்தவுமில்லை. ஆனல்

நழுவிவிழும் முக்காட்டை அடிக்கடி நிமிர்த்தி இழுத்து விட்டுக்கொண்டாள்.

"முகத்தைக் காட்டாமலிருப்பதுதான் என்னை தண்டிக்கச் சரியான வழி, பிரேமா" என்று அவன் கூறிக்கொண்டே பின்தொடர்ந்தான்.

இரு பக்கங்களிலும் மரங்கள் அடர்ந்துவிளங்கும் அசோகலைக்கு மத்தியில் செல்லும் பாதையில் அவர்கள் போகிறார்கள்.

மரங்கள் அடர்ந்து விளங்கியதால் கீழே சந்திர ஒளி சரியாகப் படவில்லை. இலைகள் நிறைந்த கிளைகளின் வழியாக அங்கங்கே நிலவின் பிரகாசம் ஊடுருவிக் கீழே—தரையில் 'நிழல்-ஒவிய'த்தைக் காட்டிக் கொண்டிருக்கிறது. தூரத்திலிருந்து பார்க்கும்போது நிழலும் ஒளியும் 'காவிய அழகோடு' பின்னிக்கொண்டு படுத்திருப்பதுபோல புலப்பட்டது. அப்பகுதியில் போய்க் கொண்டிருக்கும்போது அவர்கள்மீது நிழலும் ஒளியும் மாறிமாறி பட்டுக் கொண்டிருந்தன.

சிறிது தூரத்திற்கப்பால் நதி தெரிகிறது. முத்த மிடும் மதியின் ஒளிக்குப் பதில் முத்தமிட எண்ணிக் குதித்து குதூகலிக்கிறது அந் நதியின் ஜலம். காற்று ஜில்ஜில் என்று அடிக்கிறது. மலைக்காற்றோ என்று அதன் வாடையினின்று சந்தேகிக்கவேண்டியிருக்கிறது. வேறு பேச்சுக்குரல் அற்ற, ஸர்ப்பத்தின் நெளிச்சலைப் போன்ற ஒரு பாதையிலே பரந்தாமன் மாத்திரம் முதலில் பேசிக்கொண்டே போகிறான்.

"பிரேமா, இன்றைக்கு ஏன் இப்படி மௌனம் சாதிக்கிறாய்? பேசாமலிருந்து என்னைத் தண்டித்தது போதாதா? இதோ என்னைப்பார்."

இப்பொழுது அவர்கள் அப்பாதையைக் கடந்து ஒரு பெரிய விருக்ஷத்தின் அடிவாரத்துக்கு வந்துவிட்டார்கள். மரத்தின் நிழலில் பிரேமா நின்றாள். பரந்தாமனை கடைக்கண்ணால் பார்த்தாள். அவனது திவ்ய

முகத்தில் 'கந்தர்வக்களை' சொட்டுகிறதை சந்திர ஒளி எடுத்துக்காட்டியது.

"பிரேமா, உனக்கு இன்னும் சந்தேகமா? ஆம். நீ சந்தேகப்படுவது நியாயம். மனோரகசியத்தை உணராமல் உன்னை நான் தண்டித்தேன். அந்தத் தண்டனையின் பலனை நான் இன்று அனுபவிக்கிறேன். ஆத்மாசரீரத்தைப் பெற்ற பிறகு சாக்குருவி வேதாந்தம் பேசுவது எவ்வளவு மதியீனம் என்பதை நான் உணர்ந்துவிட்டேன். உன்னை நான் எவ்வளவுக்கெவ்வளவு மறக்க விரும்பினேனோ அவ்வளவுக்கவ்வளவு நீ என்னை ஆட்கொண்டு விட்டாய். உனது பிரேமை என்னைப் பரிசுத்தப்படுத்திவிட்டது. பிரேமையின் புனிதத்தன்மையால் நான் ஒரு புது மனிதனாய்விட்டேன். புத்தியைக்கொண்டு குணத்தை அறிந்து பிறக்கும் பிரேமை ஆத்ம இரகசியத்தைப் போதித்துவிட்டது. நீ இல்லாவிட்டால் நான் இல்லை என்ற சத்தியத்தை இன்று உணர்கிறேன். உணர்ச்சிகளின் கோவை ஸ்தலமாகிய இருதயத்தில் ஞானஒளி போல நீ வந்து நிறைந்தால்தான் ஆத்ம சுகத்தை என்னால் பெறமுடியும்! இது வெறும் தத்துவப் பேச்சு அல்ல. பிரேமா, ஏதேதோ உளறுகிறேன் என்று நினைக்காதே. நான் பேசவில்லை. நிறைவைப்பெறத் துடிக்கும் ஆத்மா பேசுகிறது. அந்த ஆத்மாவை ஆலிங்கனம் செய்வது உன் கடமை"— உணர்ச்சி பொங்க பேசிக்கொண்டே போனான்.

உண்மையிலேயே பிரேமாவினால் பேச முடியவில்லை. பரந்தாமனது மனோமாற்றம் அவளுக்கு ஆத்ம பரவசத்தை உண்டாக்கியது. ஆனால் அதேசமயத்தில் அமிர்தம் நிறைந்த கிண்ணியில் திடீரென்று புழுக்கள் நெளிவதைப் பார்ப்பதுபோன்ற வேதனைகளும் அவள் உள்ளத்தில் நெளிந்தன. அவ்வேதனைகளுக்குக் காரணமென்ன? அது ஓர் இரகசியம். அதை வெளிப்படுத்தினாலும் வேதனைதான்; வெளிப்படுத்தாவிட்டாலும் வேதனைதான்! உற்சாகமாக சமுத்திர ஸ்நானம் செய்யும்போது பெரிய அலைகளால் அடித்துக்கொண்டு போகப்பட்டவள் போல பிரேமா விளங்கினாள்.

"பிரேமா, உன் மனதில் ஏதோ சஞ்சலம் தலை காட்டுகிறது! சொல், சீக்கிரம். ஏன் வாய்திறந்து பேச மாட்டேன் என்கிறாய்? நீ ஞானப் பெண்ணாக மாறும் போது நான் லௌகீகப் பிச்சைக்காரனாக விளங்கு கிறேன் என்று யோசிக்கிறாய்?"

"இல்லை, பேசமுடியாத நிலைமையில் நான் நிற்கி றேன் என்பதை தாங்கள் அறிந்து கொள்ளவில்லையா? நான் பிச்சை கேட்டேன். மறுத்தீர்கள். ஆனால் இன்று பாத்திரமறிந்து பிச்சைபோட இணங்கிவிட்டீர்கள்! என் ஆத்மா பரவசமடைகிறது. இது நீடிக்குமா? என்ற வேதனைதான்........"—குரலில் நடுக்கம்.

சட்டென்று பரந்தாமன், "பிரேமையைப் பொறுத் தவரையில் வேதனையும் ஓர் இன்பந்தான்!" என்று கூறியவண்ணமாய் அவள் கரத்தைப்பற்றி இழுத்துக் கொண்டே நதியைநோக்கி நடந்தான்.

"இன்று என் ஜென்மம் சாபல்யமடைந்தது" என்றாள் பிரேமா.

"பைத்தியமே, ஞானம் கர்மத்தின் கையைப்பிடித் திருக்கிறது. அவ்வளவுதான்"—பரந்தாமன் கலகல வென்று சிரித்தான்.

இப்பொழுது அவர்கள் முகங்களில் சந்திரிகையின் பிரகாசம் நன்கு படர்ந்தது. பிரேமா மாத்திரம் தன் முக்காட்டை இன்னும் நழுவவிடவில்லை. இன்பத்தை வந்து விழுங்கும் துன்பத்தைப்போல அது அவள் வதன சௌந்தரியத்தை மறைத்துக் கொண்டிருந்தது. எதை யோ நினைத்தவளாய் சட்டென்று பரந்தாமனுடைய கையின் பிடியினின்று தன்னை விலக்கிக்கொண்டு பிரேமா சற்று எட்டிப்போய் நின்றாள்.

பரந்தாமன் புன்முறுவலுடன் திரும்பினான்; பிரகி ருதியின் அழகு அவன் கண்களை ஆகர்ஷித்தது சுற்றியும் பார்த்தான். நிலவை ஒரு முறை அண்ணாந்து பார்த்தான். எதிரே குற்றமற்ற நிலவு செய்யும் முகமுடைய யுவதியையும் பார்த்தான்.

எதையோ சொல்ல அவன் விரும்புகிறான். நெஞ்சு அடைக்கிறது. நாக்கு பின்னுகிறது. அவன் நேத்திரங்களில் தவத்தின் ஜொலிப்புக்குப் பதிலாக ஏதோ விடாயின் தவிப்பு. உள்ளம் விரும்புகிறது; உரைக்க முடியவில்லை.

அச்சமயம் பார்த்து பிரேமைக்கு வெற்றிச் சங்கை இயற்கைத் தேவி ஊதினாள்-ஊதுகிறாள்!

சௌந்தரிய-பாவமுடன் பெருகிவரும் உணர்ச்சிகள் 'சதிரா'ட ஆரம்பித்துவிட்டன!

சற்று தூரத்தில் நின்ற அவர்கள் சமீபித்துவிட்டனர். ஆனால், அதை அவர்கள் உணரவில்லை!

பிரேமா கொம்பை இழந்த கொடிபோல நொடித்தாள். தன் கரத்தில் மாட்டியிருந்த புஷ்ப மாலையை பரந்தாமன் பாதத்தில் போட்டு, அப்படியே தலை குனிந்து வணங்கினாள். கண்கள் கண்ணீரைக்கொண்டு பேசின.

பரந்தாமன் சட்டென்று குனிந்து அவள் புஜங்களைப்பிடித்து தூக்கினான்.

அக்கணமே தன்னைச் சமாளித்துக் கொண்டு பிரேமா விலகி நின்றாள். நழுவிய முக்காட்டை மறுபடியும் தூக்கிப் போட்டுக்கொண்டாள். சொல்ல முடியாத ஒரு திகில் உணர்ச்சி அவள் இன்ப நிஷ்டையை இடை இடையே கலைத்துக்கொண்டே வந்தது. வேஷம்போட்டு ஏமாற்றாதே என்று மனச்சாட்சி வேறு அடிகொடுக்கிறது. ஆனால், பரந்தாமனின் மனோமாற்றத்தைக் கண்டபிறகு அவள் அடைந்த ஆனந்தத்திற்கு அளவேயில்லை. அவள் தேகத்தில் இன்ப அணுக்கள் துள்ளின.

அதே இன்ப உணர்ச்சிகளில் தள்ளாடும் பரந்தாமன் சட்டென்று அவள் முகத்தைத் தூக்கிப்பிடித்தான். "என்ன யோசனை?" என்று கேட்டது மயங்கிய அவள் நயனங்கள். உடனே தலைகுனிய அவளால் முடியவில்லை.

"இவள் உன் சகோதரி"-இப்படி யார் சொல்லு கிறார்கள்? பரந்தாமன் திரும்பிப் பார்த்தான். ஒருவரு மில்லை. உடனே சற்று விலகி நின்றான்.

"பாசிப்படியில் அடி எடுத்துவைத்துவிட்டாய்" என்றது "வைபாதுபோன" தத்துவம். இன்னொரு அடி பின்னே வைத்தான்.

இதுவரையில் ஏதோ ஒரு திகிலினால் பின்வாங்கிவந்த பிரேமா இப்பொழுது பின்னே போகவில்லை; முன்னே நகர்ந்தாள். அவளை முழுவதும் உணர்ச்சி விழுங்கி விட்டது. நிற்க முடியவில்லை. அவன்மீது அப்படியே படர்ந்துவிட்டாள்.

இன்பத்தின் மின்சாரம் கண்களைச் சொக்கவைத்து விட்டது. அவளை அவன் அப்படியே அணைத்துக் கொண்டான்.

மரத்திலிருந்த பறவைகள் சிறகு அடித்துக் கேலி செய்தன!

வானம் நிலவொளியிலே "மோகன மதம்" கொண் டிருந்தது.

காற்று மாத்திரம் சற்று அதிவேகமாகவே வீசியது. "பேய்க்காற்றாக நான் எந்த நிமிடத்திலும் மாறுவேன்" என்று அது எச்சரிப்பதுபோல் தோன்றியது.

இன்பமே உற்சாகம் கொண்டமாதிரி, மெய்ம்மறந்த வர்களாய் அவர்கள் நதிக்கரைக்கு ஓடுகிறார்கள்.

மரத்தடியில் பரந்தாமனும், பிரேமாவும் நின்று பேசிக்கொண்டிருந்த அதே சமயத்தில், அச்சோலையின் மற்றொரு பகுதியிலிருந்து ஒரு வயோதிகர் வந்துகொண் டிருந்தார். இயற்கைக் காட்சியின் எழிலில் இறைவனை அவர் மனது கண்டு துதித்துக்கொண்டிருக்கிறது. ஈஸ் வரனை நினைத்து தன் மனதிற்குள்ளாகவே பாடிக் கொண்டுவரும் அப்பெரியார் தூரத்திலே ஒரு மரத்தடி யிலே பரந்தாமன் மார்பில் பிரேமா படர்ந்த காட்சியைக்

கண்டுவிட்டார். தூக்கிவாரிப்போட்டமாதிரி துள்ளினர். அவர் தன் கண்களை நம்பாமல் கசக்கிக்கொண்டார். தன்னைச் சமாளித்துக்கொண்டு அத்திக்கையே நோக்கினர். சந்திர ஒளி வெள்ளத்தில் பரந்தாமன் உருவமும் பிரேமாவின் தோற்றமும் அவருக்கு நன்றாகத் தெரிந்தன.

அவர் தேகம் ஆடியது. "பரந்தாமா? உன்னை நம்பினேன்! ஆனால், மோசம் செய்துவிட்டாய்! மகா பாவத்திலிறங்கிவிட்டாய்! இது உண்மையா? உன் பக்கத்தில் நிற்பவள் பிரேமாவா? அந்தோ! அவளைத் தீண்டாதே! உண்மையில் அவள் உன் சகோதரிதான். உலகத்திற்கு அந்த இரகசியம் தெரியாது!" இச்சிந்தனையுடன் அவர் தன் நெஞ்சை அப்படியே அழுத்திப் பிடித்துக்கொண்டார். "ஐயோ! என் வாழ்க்கையில் ஒரு தாசியை அனுபவித்த குற்றத்திற்காக பிரேமாவதியைக் குழந்தையாக ஜனிக்கவைத்து கடவுள் என்னைத் தண்டித்தார் என்று நினைத்தேன். இந்த இரகசியத்தை உலகம் அறியாது. உலகத்தின் திருஷ்டியில் நான் குற்றமற்ற உத்தமன்! ஆ! அதே குழந்தையை என் சொந்த மனைவியின் குமாரனுகிய பரந்தாமனைக் காதலிக்க வைத்து ஈஸ்வரன் மீண்டும் என்னைத் தண்டிக்கிறார் போலும்! அந்தோ! குற்றம் செய்த மனிதனைத் தண்டிக்க கடவுள் மேற்கொள்ளும் தந்தைச் சுவையா இது?....அந்தோ! தெய்வமே! தாய்கள் வேருக இருந்தாலும் இவர்கள் என் குழந்தைகள்தானே? உணர்ச்சி இவர்களைப் பரீட்சித்துவிட்டதா? சரியான தண்டனை எனக்கு. உண்மையைக் கூறினல் என் குற்றம் வெளியாகுமென்று நினைத்தேன். அது என்னையே சரியானபடி தண்டித்துவிட்டது. படு மனமே படு! நீ செய்த பாவத்திற்கு இதுவும் போதாது...." என்றெல்லாம் ஒரு நொடிக்குள் குவிந்த எண்ணங்கள் அப் பெரியாரின் மூளையைக் கலக்கிவிட்டன.

உடனே அவர் முன் நோக்கி ஓடினர். கால்கள் தள்ளாடின. தலை சுழன்றது. பேச வாய் இருந்தும் பேச முடியவில்லை. யாரோ தொண்டையை வந்து இறுகப் பிடித்துக் கொண்டதாக எண்ணம். உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு கத்தினர். "பரந்தாமா,........

பரந்தா....மா-" ஆனால், அவர் வாய் இப் பெயரைப் பலமாக உச்சரிக்கவில்லை; குழறியது. மயக்கம் அதிகமாகி விட்டது. சோலை அவருடன் சுற்றியதுபோல் தெரிந்தது. எடுத்து ஓர் அடியும் வைக்கமுடியாமல் தவித்தார். நடக்க முயன்றபோது, புயல் காற்றால் அடியோடு வீழ்த்தப்பட்ட விருக்ஷம்போல அவ்வயோதிகர் பிரக்ஞைத் தவறி கீழே சாய்ந்தார்.

அவர் யார்?

கறுத்த மேகம் நிறைமதிக்குத் திரை போட்டு விட்டதால் வெளிச்சம் மங்கிவிட்டது.

காற்றின் வேகம் வரவர அதிகமாயிற்று.

மரங்கள் காற்றின் வேகத்தைத் தாங்காது இரைச்சலிட்டன.

## கிளை-15.

மேலே கூறிய சம்பவங்கள் நடந்த அதே தினம்.

சாயங்காலம்.

நீண்ட ராஜ வீதி.

"ஆனந்தா, ஆனந்தா."

அவ் வீதியின் வழியாக வெகு வேகமாக வந்து கொண்டிருந்த ஆனந்தன் சட்டென்று திரும்பிப் பார்த்தான்.

"ஆனந்தா, நில். உன்னைப் பார்க்கத்தான் புறப்பட்டேன்."

"ஓ! கபாலியா? அடே! நீ எப்பொழுது அயல் நாட்டிலிருந்து வந்தாய்?"

"கபாலி-தாண்டவன்தான். நேற்றுதான் ஊர்வந்து சேர்ந்தேன். சரி, முதலில் என் வீட்டுக்கு வா. பிறகு எல்லாவற்றையும்பற்றிப் பேசுவோம்."

இவ்விதம் கூறிக்கொண்டே தாண்டவன் ஆனந்தனின் கரத்தைப்பற்றி உற்சாகத்துடன், அங்கு சமீபமாக இருந்த தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றான்.

கபாலி-தாண்டவன், ஆனந்தனின் பாலிய நண்பர்களில் ஒருவன்; வாலிபன். அக்காலத்தில் பல்லவ நாட்டில் பரவியிருந்த கபாலி மதத்தைப் பரம்பரையாகப் பின்பற்றிவரும் குடும்பத்தில் பிறந்தவன். அன்று அவன் நெற்றியில் விபூதி பட்டைகள் "பளீச்" என்று [illegible] அளித்தன. மத்தியில் வட்டமாகக் குங்குமப் பொட்டும் விளங்கியது. அவன் கண்களோ சிவந்திருந்தன. காதுகளில் பெரிய குண்டலங்கள். சுருண்ட தலைமயிர். உருண்டையான முகம். கறுத்து அடர்ந்த புருவங்கள். அடர்த்தியான மீசை. அந்த மீசையை அடிக்கொருதடவை முறுக்கிவிட்டுக் கொண்டே "ஆனந்தா, முதலில் உட்கார். ஏன் இப்படி அவசரப்படுகிறாய்?" என்றான்.

ஆனந்தன் உட்கார்ந்தான். தாண்டவன் தான் ஒரு வியாபாரியுடன் கப்பல் மூலம் கடல் கடந்து பல அயல் நாடுகளுக்குச் சென்று வந்த கதைகளையெல்லாம் சொல்லிக்கொண்டே வந்தான். ஆனந்தன் மனதிற்குள் விரைவில் வீட்டுக்குப் போகவேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தான். ஏனெனில் சாயங்காலம் கோதை அவன் வீட்டுக்கு வருவதாக வாக்களித்திருந்தாள். தாண்டவனோ பேசிக்கொண்டேயிருந்தான். அவன் முகத்தை முறித்துக்கொண்டு உடனே அங்கிருந்து புறப்படவும் ஆனந்தனுக்கு இஷ்டமில்லை.

"அதெல்லாம் இருக்கட்டும், உன் அப்பா, அம்மா எல்லோரும் சௌக்கியந்தானே?"—திடீரென தாண்டவன் கேட்டான்.

"எல்லோரும் சௌக்கியம்."

"புரந்தாமன் புத்தமடத்தில் சேர்ந்துவிட்டதாக யாரோ சொன்னார்கள்? அது வாஸ்தவமா?"

"கபாலி, (தாண்டவனை ஆனந்தன் கபாலி என்று கூப்பிடுவதுதான் வழக்கம்) பரந்தாமன் அப்படி ஒன்றும் பௌத்தனாகிவிடவில்லை. ஆனால், வேதாந்தக் கிறுக்கு அவனை விட்டுவிடவில்லை. பிரமசாரியாகவே இருந்து, பிரம்மத்தோடு பிரம்மமாகப் போகிறானாம்! வாழ்க்கையை வெறுத்து துறவை சிலாகிக்கிறான்!"—புன்னகைத்தான்.

இதைக்கேட்டு கபாலி-தாண்டவன் இடி இடியென்று சிரித்தான். "வறண்டுபோன தத்துவம்; பசையில்லாத பேச்சு. பரந்தாமனுக்குப் பிடித்த பித்து இன்னும் போகவில்லையா? அது எப்படிபோகும்? அவன் தகப்பனாருக்கு பிற்காலத்தில் தலைக்கேறிய பித்து பாலியத்திலேயே இவனுக்கு ஏறிவிட்டதுபோலும்! அவனை இங்கு ஒரு நாள் கூப்பிட்டுக்கொண்டுவா. நான் ஒரு புதிய 'அமிர்தபானத்'தை அயல் நாட்டிலிருந்து வாங்கி வந்திருக்கிறேன். அதைக் கொடுத்தால், அந்தப் பைத்தியம் சரியாகிவிடும்"-கபாலி மறுபடியும் சிரித்தான்.

"கபாலி, அமிர்தபானமா? அதென்ன?"

"ஆனந்தா, அமிர்தபானத்தை உனக்கும் தர வேண்டும் என்ற எண்ணத்துடன்தான் நான் முதலில் வீட்டைவிட்டு உன்னைப் பார்க்கப் புறப்பட்டது........"

"எனக்குப் பைத்தியம் ஒன்றும் இல்லையே!"—சிரித்தான் ஆனந்தன்.

"ஆனந்தா, பரந்தாமனையும் நமது கட்சிக்கு இழுக்கும் சக்தி உடையது அமிர்தபானம் என்றுதான் கூறினேன். ஆகா! அதைச் சுவைத்துவிட்டால்........ அடடா! எத்தகைய இன்பம்........!" இவ்விதம் சொல்லி விட்டு, தன் காதலி சிவகாமியைக் கூப்பிட்டான்.

மனதை அள்ளும் அலங்காரமுடன் ஓர் ரமணி அங்கு ஓடிவந்து நமஸ்கரித்தாள்.

"சிவகாமி, ஆனந்தர் இன்று நமது விருந்தாளி. எனது பாலிய நண்பர். பௌத்தமதம் போதிக்கும்

துறவை எதிர்ப்பவர். எப்பொழுதும் ஆனந்தமாகப் பொழுது போக்கவேண்டுமென்று எண்ணுகிறவர்....''

ஆனந்தன் குறுக்கிட்டு, "போதுமே ஸ்துதி" என்றான்.

கபாலியும், சிவகாமியும் சிரித்தார்கள்.

கபாலி-தாண்டவன், "அயல் நாட்டிலிருந்து வாங்கி வந்திருக்கும் "அமிர்தபானம்" உள்ள ஜாடியைச் சிறிது எடுத்துக் கொண்டுவருகிறாயா?" என்று சிவகாமியிடம் சொன்னான்.

"ஓ! ஒரு நொடியில் கொண்டுவருகிறேன். மாம்ச உண்டிகளையும் சமைத்திருக்கிறேன். அவற்றையும் கொண்டுவருகிறேன்."

சிவகாமி உள்ளே ஓடினாள்.

சில நிமிடங்களுக்குள் அமிர்த பானம் நிறைந்த ஜாடியும், மாம்ச உணவும் அங்கு கொண்டுவரப்பட்டன.

தரையில் விரிக்கப்பட்டிருந்த ஒரு விலையுயர்ந்த கம்பளத்தில் அம் மூவரும் உட்கார்ந்தார்கள்.

ஆனந்தன் அமிர்த பானத்தைப்பற்றிய விவரத்தைக் கேட்டான்.

"ஆனந்தா, இது யவன தேசத்தில் மிக இனிமையான ஒருவகை பழத்திலிருந்து வடிக்கப்பட்ட மதுரசமாகும். இம்மாதிரியான மதுவை நீ இதுவரையில் சுவைத்திருக்கமாட்டாய். யவன தேசத்து வியாபாரி ஒருவன் எனக்கு இதை இனமாக அளித்தான்."

ஆனந்தனுக்கு அம் மதுவை சுவைக்கவேண்டுமென்ற ஆசை உதித்துவிட்டது. அதிக போதை ஏற்பட்டால், அத்துடன் எப்படி வீட்டுக்குப் போக முடியும்? தகப்பனுருக்குத் தெரிந்தால்?........இதுபோன்ற சில கேள்விகள் உள்ளத்தில் உதித்து முகத்தில் மாறுதலைக் காட்டின.

கபாலி சிரித்துக்கொண்டே, என்ன யோசனை செய்கிறாய்? ஒழுக்கத்தின் பெயரில் இதை அருந்துவதை பாவம் என்று சொல்லப்போகிறாயா, என்ன?" என்றான்.

அதற்கிடையில் சிவகாமி ஒரு வெள்ளிக் கிண்ணியில் அம் மது ரசத்தை ஊற்றிவைத்தாள்.

"என்ன, இருவரும் மௌனம் சாதிக்கிறீர்களே?' என்று கேட்டாள் சிவகாமி.

கபாலி, ஆனந்தனைப் பார்த்து "ஆரம்பிக்கலாமா?" என்றான்.

ஆனந்தன் தன்னைச் சமாளித்துக்கொண்டு, "நான் தயார்" என்றான். அவன் முகத்தில் புன்னகையின் ஒளி படர்ந்தது.

"ஆனந்தா, ஏன் தயங்குகிறாய்? கபாலி மதத்தில் சேர்ந்துவிடு, தாராளமாக மது, மாம்சம் எல்லாம் சாப்பிடலாம். யாதொரு தடையுமில்லை. சாப்பிட்டால் பாபமென்ற மனோபாவத்திற்கு இடமே கிடையாது. வாழ்க்கையின் சூட்சுமத்தை அறிந்தவர்கள் மது, மங்கை, மாம்ச உணவு முதலியவைகளைத் திரஸ்கரிக்கும்படி சொல்லமாட்டார்கள். என்ன சிவகாமி, நான் சொல்வது சரிதானே?"—சிரித்தான்.

"ஒப்புக்கொள்கிறேன். ஆனால், ஓர் ஆட்சேபனை."

"அதென்ன? ஏதாவது பாபம் புண்ணியம் என்று சொல்லிவைக்காதே. எதைச் சாப்பிட்டால் என்ன? எதைச் செய்தால் என்ன? எல்லாவற்றையும் அந்த பரமேஸ்வரனுக்கு அர்ப்பணம் செய்துவிட்டால் நமக்கு கவலையே இல்லை"—நகைத்தான்.

"அதைச் சொல்லவில்லை" என்றாள் சிவகாமி.

"பின்னே வேறு எதைப்பற்றி........?"

"மதுவுடனும் மாம்சமுடனும் மங்கையையும் சேர்த்திருப்பதையே நான் ஆட்சேபிக்கிறேன்"-சிரித்தான்.

ஆனந்தன், "அதை ஆமோதிக்கிறேன். ஆனால் மதுவுக்கும் காவியத்துக்கும் இடையிலே மங்கைக்கு ஒரு ஸ்தானம் கொடுப்பதுதான் ஏற்றதென்று நினைக்கிறேன்" என்றான்.

மூவரும் நகைத்தார்கள்.

"ரொம்பசரி. ஆனந்தா, மது, மங்கை, மதுர காவியம்...அடடா! உன் வாய்க்குச் சர்க்கரை போட வேண்டும். இல்லை, அமிர்தபானமே சரி."

மூன்று பேர்களும் மதுவைச் சுவைக்கிறார்கள்.

ஆனந்தன் மதுவின் இனிமையை உணர்ந்ததும் அதிகமாகச் சாப்பிடவேண்டுமென்ற ஓர் எண்ணம் உதித்தது. ஆனால் அதை அவன் அடக்கிக்கொண்டான். கபாலி மேலும் மதுவை அருந்தும்படி வற்புறுத்தினான். மற்றொரு சமயம் வருவதாக வாக்களித்துவிட்டு அங்கிருந்து புறப்பட ஆயத்தமானான் ஆனந்தன்.

"ஏன் அவசரப்படுகிறாய்?"—கபாலி கேட்டான்.

"அரண்மனைக்குச் சென்று இளவரசனைப் பார்க்க வேண்டும். அதனால்தான் அதிகமாக மதுபானம் செய்ய விருப்பமில்லை."

"ஓகோ! இளவரசனுக்குப் பயப்படும் பேர்வழியாகி விட்டாயா?"

"இல்லை, கபாலி, அவசியமில்லாமல் அவன் மனதை நோகவைப்பானேன் என்ற எண்ணம்தான்!"

"நான் சொல்வதைக் கேள். அமிர்தபானத்தில் கொஞ்சம் தருகிறேன். அதைக் கொண்டுபோய் இளவரசனுக்குக் கொடு. பிறகு என் வீடு தேடி அவனும் வந்து விடுவான்!"—சிரித்தான்.

"மற்றொருநாள் ஆகட்டும். நான் போய்வருகிறேன்."

"ஆனந்தா, இப்படி உட்கார்" என்றான். இடை இடையே சிவகாமி ஊற்றிக்கொடுக்கும் மதுவைக் குடித்துக்கொண்டே பேசினான்.

ஆனந்தன் புன்சிரிப்புடன் எழுந்தான்.

"ஆனந்தா, சிவகாமி இப்பொழுது பாடப்போகிறாள். நான் சிவ தாண்டவம் ஆடப்போகிறேன். நீதான் ரஸிகன். என்ன தெரிந்ததா?"-கபாலி ஆனந்தனைப் பிடித்து உட்காரவைத்தான்.

சிவகாமி பாடினாள். கபாலி-தாண்டவன் எழுந்து ஆட ஆரம்பித்துவிட்டான்.

"தாண்டவன் சொன்னான்: "நான் சாக்ஷாத் ஈஸ்வரன், சிவகாமி ஈஸ்வரி."

மறுபடியும் அவ்விருவரும் கை கோத்துக்கொண்டு ஆட ஆரம்பித்தார்கள். "உலகமே ஓர் ஆடல் அரங்கம் என்று நிரூபிக்கிறாயா?" என்று கேட்டான் ஆனந்தன்.

சட்டென்று ஆடுவதை நிறுத்திவிட்டு "ஆனந்தா, அது பழைய தத்துவம். உலகமே ஒரு நாடக வெறி என்று சொல். அது இல்லாவிட்டால் வாழ்க்கையே சப்பென்றாகிவிடும்" என்றான் கபாலி, சிரிப்புத் தொடர.

"தப்பு. உலகமே ஒரு நாடக வெறி அல்ல; நாடகரசம் என்று சொல்லுங்கள்" என்றாள் சிவகாமி.

"பெண்மைக்கு வெற்றி" என்று கூறி கரகோஷம் செய்தான் ஆனந்தன். வாஸ்தவம். மது, மங்கை, காவியம் முதலியவற்றின், இரத்த ஓட்டமற்ற வாழ்க்கை ஒரு வாழ்க்கையா? வாழ்க்கைக்குப் பசை ஏற்றி அதை பரிமளிக்கவைப்பவை இவைதான்" என்று மனதிற்குள் நினைத்தான்.

கபாலியும் சிவகாமியும் மறுபடியும் கைகளைச் சேர்த்து ஆனந்த தாண்டவம் புரிய ஆரம்பித்து விட்டார்கள்.

துரிதகாலத்தில் நடனம் மாற மாற மதுவின் போதை உச்சஸ்தாயில் வேலைசெய்ய ஆரம்பித்து விட்டது. இன்பமும் மயக்கமும் அவர்களை ஆட்கொண்டு விட்டன.

"ஆகா! கபாலிக்கேற்ற காதலி சிவகாமி! அடடா! வாழ்க்கையில் எத்தகைய ரசத்தைக் கொண்டுவந்து பெய்கிறது இக்காதல்!...."—என்று எண்ணிக்கொண்டே அங்கிருந்து ஆனந்தன் நழுவி விட்டான்.

## கிளை-16.

அன்றையதினம் பூரண சந்திரோதயம். ஆகாயம் ஒரு புது அழகு பெற்றுவிட்டது.

பொழுது சாய்ந்து சில நாழிகைகள் கடந்திருக்கும்.

கபாலியின் வீட்டிலிருந்து புறப்பட்ட ஆனந்தன், வேகமாக தன் இல்லத்தை நோக்கி போய்க்கொண்டிருக்கிறான். அப்பொழுது வீசிக்கொண்டிருந்த குளிர்ந்த காற்று அவன் அனுபவித்துக் கொண்டேவரும் மது போதையைக் கூட்டியது. மதுவெறி கூடக்கூட உள்ளே இன்பவெறியும் கூடிக்கொண்டே இருந்தது. சிந்தனையில் திலகவதியை வரவழைத்துக்கொண்டே கற்பனையின் கையைப் பிடித்தான். அது இன்பக் கனவை தூண்டி விட்டு வேடிக்கைப் பார்த்தது.

இப்பொழுது அவன் தன் வீட்டுக்குள் நுழைந்து விட்டான். வெளிப்புறமாக தன் தந்தை இல்லையென்பதை அறிந்ததும் திருப்தியடைந்தான். நேராகத் தன் அறைக்குள் போனன். அங்கு கோதை கட்டாயம் தனக்காக காத்துக்கொண்டிருப்பாள் என்று எண்ணியிருந்தான். ஆனல் அங்கு கோதையைக் காணேம்.

"ஏன் கோதையைக் காணேம்? ஒருவேளை வந்து விட்டுப் போயிருப்பாளோ?"-சுற்றியும் நோக்கினன். "அரண்மனைக்குப் போகலாமென்று நினைத்தேன். நேரமாகிவிட்டது. இனி அங்கே போவதும் சரியல்ல. மேலும் திலகவதியையும் பார்ப்பதற்கு இனி சந்தர்ப்பம்

கிடைக்காது. மனதோ....” இவ்விதம் அவன் சிந்தித்துக் கொண்டிருக்கும்போது “ஆனந்தா, ஆனந்தா, நீ இப் பொழுதுதான் வந்தாயா?” என்று கேட்டுக்கொண்டே மீனாக்ஷி அங்கு வந்தாள்.

“ஆம், அம்மா” என்றான் ஆனந்தன் உலாவிக் கொண்டே.

“ஆனந்தா, இன்றைக்கு நீ வெளியே போனபிறகு கோதை வந்திருந்தாள். உனக்காக ரொம்ப நேரம் காத்திருந்தாள்.”

“அவளை யார் காத்திருக்கச் சொன்னார்கள்? விளக்கு வைத்தபிறகல்லவோ இன்று வருவதாக என்னிடம் கூறியிருந்தாள்.”

“அதுசரி. அவ்விதம் வருவதற்கில்லையென்று சொல்லிப் போகவே அவள் வந்திருந்தாள்.”

“என்ன காரணமோ?”

“பிரேமாவதி ஆச்சிரமத்தில் இன்றிரவு ஏதோ பூஜை செய்கிறாளாம். அதற்கு அவசியம் வரும்படி கோதையை அவள் அழைத்தாளாம். இப்பொழுது கோதை ஆச்சிரமத்துக்குத்தான் போயிருப்பாள். இத் தகவலை உன்னிடம் சொல்லச் சொன்னாள்.”

“ரொம்ப சரி”-ஆனந்தன் அறையில் இங்கு அங்கு மாக உலாவினான்.

“சரி. நேரமாகிறது. சாப்பிட வா.”

“இல்லை, எனக்கு உணவு வேண்டாம். வரும்போது ஒரு சிநேகிதன் வீட்டில் சாப்பிட்டுவிட்டேன்.”

“எப்பொழுது?”

“கொஞ்சநேரத்துக்கு முன்புதான்.”

"சரி, கொஞ்சம் பலகாரமாவது கொண்டுவரு கிறேன். அதையாவது சாப்பிடு."

"வேண்டாம் அம்மா, வேண்டாம். பசியிருந்தால் நான் சாப்பிட மாட்டேனு? எனக்குச் சிரமமாக இருக்கிறது. நான் படுக்கப்போகிறேன்."— ஆனந்தன் தன் படுக்கையை நோக்கி நடந்தான்.

"பெரியவாள் பேச்சை எப்பொழுதும் கேட்பதில்லை என்று சங்கல்பம் செய்துகொண்டிருக்கிறாய். உன்னோடு யார் பேசுவார்கள்?" என்று கூறிவிட்டு மீனுக்ஷி அறையை விட்டேகினாள்.

ஆனந்தனின் மனம் நிலைகொள்ளவில்லை. கபாலியும் சிவகாமியும் அவன் முன் வந்து-சிந்தனையில் நர்த்தன மாடுகிருர்கள். அதேசமயத்தில் ஒருபுறம் திலகவதி வந்து நிற்கிருள்; அழைக்கிருள் ஆடுவதற்கு. "என்னை மறந்துவிடாதீர்கள்" என்று மற்றொருபுறம் கோதை தோன்றி கெஞ்சுகிருள். பெருமூச்சோடு உணர்ச்சி நாடகத்தை முடித்துக்கொண்டு ஆனந்தன் திரும்பினுன். மற்றொருபுறம் போனுன். சுவரில் ஒருபுறம் இருந்த பட்டுத் திரையை விலக்கினுன். அங்கே திலகவதி புன்னகைக்கிருள், அவன் உள்ளத்தைக்கொண்டு எழுதிய சித்திரத்தில்! ஆனந்தன் தன் கரங்களைப் பின்புறமாகக் கட்டிக்கொண்டு அதையே பார்த்த வண்ணமாக இருக்கிருன். அப்பொழுது மதுச் சுவையில் ஊறி வெறிகொண்டிருந்த மனது இன்பத்தைப் பெறும் தவிப்பை மூட்டியது; நவநவமான கற்பனை ஓவியங்களை ஓடவிட்டது.

அப்பொழுது "எஜமான்" என்று கூறியவனுய் ஒரு சேவகன் உள்ளே நுழைந்தான். அவன் ஆனந்தன் வீட்டில் உள்ள பணியாளன்தான்.

ஆனந்தன் திரும்பவில்லை.

மறுபடியும் அவன் உள்ளே வந்து எதிரே நின்று நமஸ்கரித்தான்.

"வேலா, என்ன சமாசாரம்?"

"மாலை ஓர் அரண்மனை பணிப்பெண் என்னை இரகசியமாக அழைத்து இந்த ஓலையை உங்களிடம் பத்திரமாகக் கொடுக்கச் சொன்னாள்." பட்டு உறையால் மூடப்பட்டிருந்த அந்த ஓலைச்சுருளை ஆனந்தன் ஆச்சரியமுடன் வாங்கினான். "கோதை எழுதியிருப்பாளோ? அல்லது ஒருவேளை திலகவதியோ............" இவ்விதம் எண்ணிக்கொண்டே அதைப் பிரித்தான். "சரி, வேலா, வேறு ஒன்றும் அவள் சொல்லவில்லையோ?"

"இல்லை, எஜமான்."

ஆனந்தன் ஆவலுடன் ஓலை ஏட்டில் எழுதியிருப்பதைப் பார்த்தான்; கண்களைக் கசக்கிக்கொண்டு படித்தான். உற்சாகம் தாங்கமுடியவில்லை. குதித்தான். மறுபடியும் பெரிய குத்துவிளக்கின் அருகில் சென்று அதை வாசித்தான்.

வெளியே போய்க்கொண்டிருந்த வேலைக்காரன் வேலனைக் கூப்பிட்டு, "வேலா, எனக்கோர் வேலை செய்ய வேண்டும். நமது தோட்டத்துக் கதவை இன்று சும்மா சாற்றிவை. பூட்டவேண்டாம். என்ன, தெரிந்ததா?" என்றான் ஆனந்தன்.

"அப்படியே, எஜமான்." வேலன் அங்கிருந்து போய்விட்டான்.

ஆனந்தன் அந்த ஓலையில் எழுதியிருந்ததை மறுபடியும் படித்தான். எத்தனை முறை படித்தாலும் அவனுக்குத் திருப்தி ஏற்படாததுபோல புலப்பட்டது.

அந்த ஏட்டில் எழுதியிருந்தது: "அன்பரே! தங்கள் உள்ளத்தை நான் அறிந்து கொண்டுவிட்டேன். கோதையை தாங்கள் காதலிக்கிறீர்கள் என்று எண்ணியே இதுவரையில் ஏமாந்தேன். இனி அந்த நிலைமை இல்லை. என் மனதில் உள்ளதை எல்லாம் இதில் எழுதுவதற்கில்லை. நேரில் சந்திப்போம். இன்று நடுநிசிக்குப் பின்பு என் மாளிகையின் பின்புறமுள்ள நந்தவனத்துக்கு வரவும். அங்கே வடக்குப் பக்கமாக

உள்ள பெரிய கதவின் "திட்டிவாசல்" வெறுமனே சாத்தப்பட்டிருக்கும். அதன் மூலமாக நீங்கள் உள்ளே வரலாம். பிறகு என் அறைக்கு உங்களை நான் அழைத்துச் செல்லுகிறேன். கோதை இன்று பிரேமாவதியின் குடிலுக்குப் போய்விட்டாள் என்பதையும் அறியவும். தங்கள் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும், திலகவதி."

இதைப் படித்து முடித்த பிறகு ஆனந்தனுக்கெதிரே பலவிதமான எண்ணங்கள் படை எடுத்தன.

"ஆகா! திலகவதியின் மனது மாறிவிட்டதா? பரந்தாமனைக் காதலிக்கிறாள் என்ற தகவல் வெறும் பொய்தானா? ஒருவேளை இது பொய்க் கடிதமாக இருக்குமோ? சே! ஒருகாலும் இருக்க முடியாது. பரீட்சித்தே பார்த்து விடுவோமே. இதனால் ஏது வந்தபோதிலும் சரி. ஹோ, திலகவதி! உன்னை நினைக்கும்போது இந்த உலகத்தையே நான் மறந்துவிடுகிறேன். கோதை வாஸ்தவத்தில் என்னை காதலிக்கிறாள். அதில் சந்தேகமேயில்லை. அவளது குற்றமற்ற காதலைக்கூட உன் விஷயத்தில் தியாகம் செய்யும்படி ஏதோ ஓர் உணர்ச்சி என்னை தூண்டுகிறது. வருகிறேன்; இன்றிரவே உன்னை வந்து சந்திக்கிறேன்" என்று தனக்குள் சொல்லிக்கொண்டான். அடுத்தகொடியில் கபாலியை நினைத்துக்கொண்டு "கபாலி, நீ சரியான கைராசி உள்ளவன். உன் காதலி சிவகாமியும் அப்படித்தான். நீங்கள் கொடுத்த மதுவை உண்டேன். மனம்விரும்பிய மங்கையும் கிடைக்கப்போகிறாள்! உங்களுக்கு என்வந்தனம்" என்றான். "சே! ஈதென்ன பைத்தியக்காரன் மாதிரி எண்ணிக்கொண்டே நிற்கிறேன். நடுநிசிக்குள் அங்கு புறப்படுவதற்கு ஆயத்தமாகவேண்டும்" என்று தனக்குள் கூறிக்கொண்டே நிலைக்கண்ணாடியின்முன் நின்றான். தன்னை வேறு விதமாக அலங்காரப்படுத்திக் கொள்ளவேண்டுமென்று அவனுக்குத் தோன்றியது. உடனே தன்னை அலங்கரித்துக்கொள்ள ஆரம்பித்தான். அலங்காரம் முடிந்ததும் சாளரத்தின் வழியாக வெளியே பார்த்தான். வெள்ளியை உருக்கி வார்த்தமாதிரி நிலவொளி

எங்கும் பரவியிருந்தது. உடனே பெருமூச்சு விட்டான். திரும்பிச் சென்று அறைக் கதவையும் சாத்தினன். உள்ளேயிருந்த விளக்கையும் நிறுத்தினன், தூங்கப் போவதுபோல பாவனை செய்தான். சாளரத்தின் வழியாக உள்ளே நுழைந்துகொண்டிருக்கும் சந்திர ஒளி அவனைப் பார்த்து கேலிசெய்தது. "யாரை ஏமாற்ற இந்தத் தூக்கம்?" என்று கேட்டதுபோல தோன்றியது

நடுநிசி.

ஜன நடமாட்டமே காணப்படவில்லை. எங்கும் அமைதி, காற்றின் ஓசையைத்தவிர.

ஆனந்தன் மாத்திரம் வெகு வேகமாகப் போய்க் கொண்டிருக்கிறான். அதோ, அத்தெருவைத் தாண்டி விட்டான். ராஜகுமாரி திலகவதிதேவியாரின் மாளிகைக்குப்பின்புறமாக இப்பொழுது வந்துவிட்டான். ஆவலும் அவசரமும் அவனைத் தூக்கிக்கொண்டு ஓடு கின்றன. தனக்கு வந்த ஓலையில் குறிப்பிட்டபடி அங்குள்ள 'திட்டிவாசலி'ன் கதவு திறந்திருக்கிறதா? என்று அவன் கவனித்தான். அக்கதவு மூடப்பட்டிருந்ததைக்கண்டதும் மனது கஷ்டப்பட்டது. தன்னைச் சமாளித்துக்கொண்டு சுற்றியும் ஒருமுறை பார்த்துவிட்டு அச்சிறிய கதவை அழுத்தினன். உடனே அவன் முகத்தில் உற்சாகம். முன்பின்யோசியாமல் உள்ளே நுழைந்தான். உட்பக்கமாக அக்கதவைச் சாத்திவிட்டு மேலே நடந்தான். லிகிதத்தில் குறிப்பிட்டபடி திலகவதி காத்துக்கொண்டிருப்பாள் என்று நினைத்தான்.

ஆகாச வீதியிலே திட்டுத்திட்டான மேகங்கள். அவை பரிபூரணமாகப் பிரகாசித்துக்கொண்டிருக்கும் சந்திரிகையை அடிக்கடிமறைத்துக்கொண்டேயிருந்தன.

அப்பூங்காவனத்தில் உள்ள ஒரு குறுகியபாதையின் வழியாக அவன் அவசர அவசரமாக நடந்து, திலகவதி தேவியின் மாளிகையின் பின் புற வாசலை அடைந்தான். சுற்றியும் பார்த்தான். அங்கு ஒருவரையும் காணேம். இமைக்கும் நேரத்துக்குள் அவன் மனதில் எத்தனையோ எண்ணங்கள் குவிந்துவிட்

டன. அவன் கண்கள் மாத்திரம் சுற்றியும் வட்டமிட்டுக்கொண்டேயிருந்தன. ஒரு நிமிடம் அங்கே நின்றபடியே யோசித்தான்; பின்பு அங்கிருந்த படிக்கட்டுகளின்மீது ஏறப்போனான். அங்கு யாராவது காவலாளிகள் இருப்பார்களோ? என்ற சந்தேகம் உதித்து அவனை நிற்கவைத்தது.

அதேசமயத்தில் அம்மாளிகையின் மேல் உப்பரிகையில் உள்ள ஒரு சாளரத்தின் கதவு திறக்கும் சப்தம் கேட்டது. சட்டென்று ஆனந்தன் ஏறிய படிகளிலிருந்து மறுபடியும் கீழ் இறங்கி நிமிர்ந்து மேலே பார்த்தான்.

“ஆம், சந்தேகமில்லை. ரூபவதி திலகவதி-திலகவதியேதான்” என்று அவன் உற்சாகமுடன் கூறினான். இறக்கை இருந்திருந்தால், ஒரே அடியாகப் பறந்து மேலே போயிருப்பான். அத்தகைய ஆவலுடன் அவன் முகம் விளங்கியது. உள்ளம் குதித்தது. சௌந்திரிய உணர்ச்சி சல்லாபத்தை ஞாபகமூட்டியது.

உப்பரிகையில் தோன்றிய மின்னாள் சகலவித ஆபரணங்களையும் அணிந்திருந்தாள். அவ்வாபரணங்கள் சுடர்விட்டன. அவள் முகமோ எழில் ஜோதியாக விளங்கியது. ஆனால், அது சரியாகத் தெரிவதற்கு இடம் கொடாமல் அந்த ரமணி விலையேறப்பட்ட ஓர் அழகிய பட்டு வஸ்திரத்தால் முக்காடுபோட்டிருந்தாள். கீழே நிற்கும் ஆனந்தனைப்பார்த்து புன்னகைத்துவிட்டு, “கொஞ்சம் பொறுங்கள். இதோ, வருகிறேன்” என்று அவள் சொல்லவில்லை. அவ்விதம் அர்த்தமாகும்படி ஜாடைகாட்டிவிட்டு உள்ளே ஓடிவிட்டாள்.

ஆனந்தனுக்குப் பொறிதட்டியமாதிரி இருந்தது. திலகவதியின் பிரசன்னமும், ‘அந்தர்தியான’மும் அவன் நெஞ்சத்தில் சௌந்திரிய கற்பனைகளை அள்ளித் தெளித்தன. ஆவலும், ஆசையும் தனி உருவம்பெற்று அவனின் பிரதிநிதியாகப் பேச ஆசைப்பட்டன! கண்கள் மாளிகையின் வாசல் கதவையே இப்பொழுது நோக்குகின்றன.

கதவு மெதுவாகத் திறக்கப்பட்டது.

உப்பரிகையிலிருந்து உட்புறமாய்க் கீழ் இறங்கி வந்த அதே சுந்தரிதான் அங்கு வந்தாள். புன்முறுவல் காட்டினாள்; ஆனால், பேசவில்லை. ஆனந்தன் பேச வாய் எடுத்தான்.

“உஷ்!” என்று அப்பெண் வாயைப் பொத்திக் காட்டி மௌனமாகப் பின்தொடரும்படி அபிநயம் செய்தாள்.

மோகனாஸ்திரத்தில் கட்டுப்பட்டவன்போல ஆனந்தன் மௌனமாகப் பின்தொடர்ந்தான்.

வனிதையும், ஆனந்தனும் ஒரு பெரிய கூடத்தைத் தாண்டி சயனகிரகத்துக்குள் நுழைந்தார்கள்.

பின்பு ஓர் ஆசனத்தைக் காட்டி அதில் ஆனந்தனை உட்காரும்படி அவள் சைகை செய்தாள்.

ஆனந்தன் சிரித்துக்கொண்டே அவள் காட்டிய ஆசனத்தில் உட்கார்ந்தான்.

உடனே அவள் அறையில் உள்ள சாளரங்களின் கதவுகளை எல்லாம் திறந்தாள். அவ்வறையின் கம்பங்களுக்கு அடியிலே விளங்கிய வெண்கலச் சிலைகள் தாங்கிய நெய் விளக்குகளில் பலவற்றை “குளிர”வைத்தாள். ஒரே ஒரு அகண்ட குத்துவிளக்கு மாத்திரம் எரிந்துகொண்டிருந்தது. மற்ற விளக்குகள் அணைக்கப் பட்டுவிட்டதால், அவ்வறையின் மற்ற பகுதியில் இருள் வந்து புகுந்தது.

பிரகாசமாக எரிந்துகொண்டிருக்கும் அந்தக் குத்து விளக்குக்கு எதிர்புறமாகத்தான் ஆனந்தன் உட்கார்ந் திருந்தான். அவ்விளக்கின் குளிர்ந்த வெளிச்சம் அவன் முகத்தில் நன்கு படர்ந்தது. ஆனால், அவளோ தன் முகத்தில் வெளிச்சம் படாத முறையில் அவ்விளக்கு உள்ள பக்கமாகவே நின்றாள். ஆனால், எதிரே தூரத்

தில் சாளரத்தின் வழியாக உள்ளே எட்டிப்பார்க்கும் சந்திர ஒளிரேகைகளின் மங்கலான பிரதிபலிப்பில் அவளின் திவ்யவதனம் ஓர் புதிய சோபையைக்காட்டியது. அச்சோபையில், காற்றில் தள்ளாடும் விளக்கின் ஜ்வாலையைப்போல துன்பத்தின் துடிப்பும் தோன்றித் தோன்றி மறைந்தது. தான் மேற்கொண்டிருக்கும் முயற்சியின் காரணமாக ஏற்படும் பலன் சாதகமாகயில்லாமல் பாதகமாக முடிந்துவிடுமோ? என்ற எண்ணம் அடிக்கடி தலைகாட்டி, அவள் இதயத்தில் சஞ்சலப் புயலை எழுப்பியது. அப்புயலின் வேகத்தை வெளியே காட்டிக் கொள்ளாமல் சமாளித்துக் கொண்டாள்.

"தேவி, இன்னும் மௌன விரதத்தைக் கலைக்கக் கூடாதா? தாங்களும் இப்படிவந்து உட்காரலாமே." எழுந்துகொண்டே முகத்தில் உற்சாக ரேகைபடரக் கூறினான் ஆனந்தன்.

"பரவாயில்லை. தாங்கள் உட்காருங்கள்" வெட்கம் வதனத்தில் விளையாட தான் போர்த்தியிருந்த பட்டு வஸ்திரத்தின் முனையை அர்த்தமில்லாமல் கசக்கிக் கொண்டே சொன்னாள் திலகவதி. அவள் மிகவும் ஜாக்கிரதையாகவும், மெதுவாகவும், குரலில் 'நிஜ சொரூபம்' வெளிப்படாமலும் பேசினாள்.

அமிர்தத்தைக் கெட்டியாக்கி, அதிலிருந்து சிருஷ்டிக்கப்பட்ட மாசற்ற ஒரு திவ்விய சொரூபம் தன்னுடன் பேசுவதாக எண்ணிய ஆனந்தனின் கண்களிலே ஆசையின் வேகம் அலைகளாய்விட்டது! மனதிலே, சொல்ல முடியாத உணர்ச்சிகளின் மோதல். மது வெறியும் அவன் நரம்புகளிடையே ஒரு விறுவிறுப்பை ஏற்கெனவே உண்டாக்கிவிட்டது.

ஏதேதோ பேச விரும்பினான். ஆனால், வேட்கையின் வேகத்தில் உதித்த உணர்ச்சிகள் எல்லாம் வார்த்தைகளின் உருவத்தை அடைந்து ஒலிக்கவில்லை. மதுவுக்கு அடிமையாகியிருந்த சரீரம் மாத்திரம் வெறிகொண்டிருந்தது. புத்தியை மயக்கப்பார்க்கும்

"ஓ! அப்படியானால் வேடன் யார்? மான் யார்?"

"அதுதானே எனக்கும் புரியவில்லை!"

"புரியாது, புரியாது! புரியாமல்தானே இவ்வளவு துணிகரமாக நடுநிசிக்குப் பிறகு இங்கு வந்திருக்கிறீர்கள்! இப்பொழுது மாத்திரம் கோதை இங்கு வரவேண்டும். அப்பொழுது தெரியும் உங்கள் யோக்கியதை!"

கோதை என்ற பெயர் ஆனந்தனின் இன்பரச உணர்ச்சியின் ஓட்டத்துக் கெதிராக நீந்திச் சென்றது. தன்னைச் சமாளித்துக் கொண்டு, "திலகவதி, கோதை இங்கு வந்தால்தான் என்ன? அவள் உள்ளத்தை நான் நன்கு அறிவேன்" என்றான்.

"தாங்கள் சொல்லுவதின் பொருள் விளங்கவில்லையே. அப்படியானால் அவள் தங்களை உள்ளபடி காதலிக்கவில்லை என்று சொல்லுகிறீர்களா? அப்படி நினைக்காதீர்கள். மகாபாவம்! தங்களை அவள் நன்கு உணர்ந்திருக்கிறாள். அவளை உங்களைவிட நான் நன்கு அறிந்திருக்கிறேன்!"

"திலகவதி, கோதையை நான் சந்தேகிப்பதாக அர்த்தப்படுத்தவேண்டாம். அவள் உள்ளம் பரிசுத்தமானது. என்னை பரிபூரணமாகக் காதலிக்கிறாள் என்பதையும் உணர்ந்திருக்கிறேன்......."

திலகவதி குறுக்கிட்டு, "அப்படியானால் தாங்கள் இங்கு வரவேண்டிய நியாயம்......." என்று படபடப்பு மின்னக் கூறினாள்.

"திலகவதி, கொஞ்சம் பொறுமையாய்க் கேளுங்கள். என் உள்ளத்தில் உள்ளதை அப்படியே கூறுகிறேன். எனக்கும் கோதைக்கும் இடையே வித்தியாசமில்லை. அவள் என் வாழ்வோடு வாழ்வாய் விட்டாள்! என் தன்மையே அவள் தன்மையாகி விட்டது என்று நான் நினைக்கிறேன். உண்மையில் தங்களை நினைக்கும்

போது இந்த உலகத்தையே நான் மறக்கிறேன்; கோதை என்னோடு சேர்ந்து மறக்கிறாள்! வாய்விட்டுச் சொல்ல முடியாத உணர்ச்சிகளைக் கொண்டு என் உள்ளம் தங்கள் உருவத்தையே சித்திரிக்கிறது. தங்களைக்கொண்டே என் ஆத்மாவும் நிறைவை அடையுமென்பதை கோதையும் அறிந்திருக்கிறாள்! என்னிடமுள்ள குறை தங்களால் நிறைவுபெற்றால்தான், அவள் என்னைக்கொண்டு நித்யமான ஆத்மநிறைவை அடையமுடியும். இன்றையதினம் நான் இங்கிருப்பதை அறிந்தால் கோதையைவிட சந்தோஷப்படுகிறவர்கள் வேறு யாரும் இருக்கமாட்டார்கள்! மனைவி, அவள் காதலில் எனக்கு நம்பிக்கை உண்டு. அது சுயநலமற்றது; தியாகத்திற்குத் தகுதியானது. ஆகவே, அவளை மோசம் செய்து தங்களை விரும்புவதாகவோ, தங்களை விரும்பி அவளை வெறுப்பதாகவோ அர்த்தப் படுத்துவது சரியல்ல. நான் அழகு ரஸிகன். தாங்கள் ஒளியாகவும், அவள் சாயலாகவும் என்னைச் சுற்றி காணப்படுகிறீர்கள்! ஒளியும் நிழலுமே அழகைப் பரிமளிக்க வைக்கின்றன. அந்தப் பரிமளிப்பாகவே நான் இருக்க விரும்புகிறேன். தர்மத்தின் பெயரால் என்மீது குற்றம் சுமத்தப்பார்க்க வேண்டாம். உணர்ச்சிகளை வெறும் சாஸ்திரங்களினால் கட்டிப் போட முடியாது!......”—இவ்விதம் ஆனந்தன் மிகவும் சாமர்த்தியமாகவும், கற்பனையுடனும் பேசிக்கொண்டே போனான்.

“போதும், விசித்திரமான அபிப்பிராயம்! வெளிப் படுத்தினால் உலகம் சிரிக்கும்! மனம் அறிந்துகுற்றம் செய்ய விரும்புகிறீர்கள். ஸ்திரீயின் இருதயத்தை விளையாட்டுப் பொருள் என்று நினைத்துவிட்டீர்கள்! பாவம், கோதைக்காக நான் வருந்துகிறேன்!” அவள் கண்கள் கலங்கின. ஆனந்தனின் மனோபோக்கை அறிந்த அவள் உள்ளத்தின் அடிவாரத்தில் துன்பம் ஊற ஆரம்பித்தது. கோதையிடம் இன்று ஆனந்தன் விரும்புவது தியாகம் என்பதை உணர்ந்ததும் அவள் மனம் துடித்தது. முடிவு தெரியாமல் தவித்தது. ஸ்பஷ்டமாகத் தெரிந்துகொண்டு விடுவோம் என்ற முடிவுக்கு வந்தாள் அவள்.

"சரி, விஷய வளர்த்துப் பேசுவானேன்? சில சந்தேகங்களுக்கு நீங்கள் நேரடியாகப் பதில்சொல்ல வேண்டும்."

"திலகம், சந்தேகங்களா? என்ன, சொல்லுங்கள். அவற்றை நிவர்த்தி செய்யத்தானே வந்திருக்கிறேன்."

"கவிதையின் குமாரர் என்ற முறையில் கற்பனையுடன் பேசுவதை எல்லாம் கொஞ்சம் நிறுத்திக்கொண்டு, கேட்பதற்குப் பதில் சொல்லுங்கள். நீங்கள் கோதையைக் காதலிக்கிறீர்கள் என்ற விஷயத்தை அறிந்தே இதுவரையில் என் விருப்பத்தை நான் வெளியிடவில்லை. ஆனால், நீங்கள் என்னை உண்மையாக நேசிப்பதாக உணர்ந்தே விதிகம் அனுப்பினேன். இப்பொழுதோ நீங்கள் குழப்பமான-விசித்திரமான மனோபாவத்தைக் காட்டுகிறீர்கள். அதன் பொருளோ எனக்கு விளங்கவில்லை. ஒரே ஒரு கேள்வி. நீங்கள் இரண்டில் ஒன்றை முடிவு செய்யவேண்டும். திலகவதியை விரும்பினால், கோதைக்கு இடமில்லை. கோதைக்கு இடம் கொடுத்தால் திலகவதியை மறக்கவேண்டும்."

ஆனந்தன் ஒரு நிமிடம் என்ன பதில் சொல்லுவது என்று தெரியாமல் விழித்தான். இந்தமாதிரி கட்டுப்பாடுகளுக்கே தான் விரோதமானவன் என்று சொல்லலாமென யோசித்தான். ஆனால், திலகவதியின் மனம் நோகும்படி அதைக் கூற விரும்பவில்லை.

"ஏன் மௌனம் சாதிக்கிறீர்கள்? நேற்று கோதைக்காக உலகத்தையே மறந்தேனென்று சொல்லியிருக்கலாம். இன்று திலகவதிக்காக உலகத்தை மறக்கிறேன் என்று சொல்லுகிறீர்கள். நாளை பிரேமாவதிக்காக இப்பிரபஞ்சத்தையே மறந்துவிட்டேன் என்று சொல்லவும் துணிவீர்கள். இந்தமாதிரி ஸ்திரமற்ற ஆண்களால்தான் எத்தனையோ பெண் உள்ளங்கள் உடைக்கப்பட்டிருக்கின்றன."

"திலகம், கொஞ்சம் பொறுமையாகச் சிந்தித்துப் பாருங்கள். மனோநிலையை உணர்ந்தவர்கள் இம்மாதிரி

வைத்தியக்காரத்தனமாக உள்ளத்தை உடைத்துக் கொள்ளமாட்டீர்கள். உணர்ச்சிகளை கொலையும் செய்யமாட்டீர்கள்......."

"போதும். உங்களுடன் வாதம் செய்ய நான் விரும்பவில்லை. நான் கேட்பதற்குப் பதிலைக் கூறும். சரி. இதற்காகவாவது பதில் சொல்லுங்கள். திலகவதியைத் தாங்கள் அடைவதில் கோதை திருப்தியடைவாள்; தங்களுக்காக அவள் தன்னையே தியாகம் செய்து கொள்ளுவாள் என்று நிச்சயமாக நம்புகிறீர்களா?"

"என் நன்மை அவளுக்குப் பெரிதாகப்பட்டால், கட்டாயம் அவ்விதம் செய்வாள்! ஆனால், காதல்; விஷயத்தில் பொறாமையற்ற மனோக்குணம் அவளுக்கு ஏற்பட்டுவிட்டதென்று நான் சொல்லத் துணியவில்லை. ஒருவேளை சந்தர்ப்பம் அவள் மனதை எப்படியும் மாற்றலாம். அதைப்பற்றிய கவலை எனக்கு இல்லை."

இதைக் கேட்டதும் அவள் தேகம் ஆடியது. நெஞ்சம் குலுங்கியது. முகத்தில் மாற்றம் ஏற்பட்டது. வெளிக்குக் காட்டிக்கொள்ளாமல் தன் முகத்தில் சிரிப்பை வருவித்துக்கொண்டு சொன்னாள்: "கோதையைப்பற்றி தாங்கள் மேலுக்குத்தான் பேசுகிறீர்களென்பதை அறிந்துகொண்டு விட்டேன். இனி, திலகவதி தங்களின் சொத்தாகிறாள்! அவள் இதயம் இப்பொழுதுதான் குளிர்ந்தது."

திலகவதி எழுந்துநின்றாள். மனதிற்குள் ஒரு முடிவுக்கு வந்துவிட்டாள். கடைசியாக ஒரு வேஷம்; அதைக் கொண்டாவது திருப்தியடை என்று அவள் காதல் தூண்டிவிட்டது.

ஆனந்தன் அவள் சொல்லியதைக் கேட்டதும் துள்ளிக் குதித்தெழுந்தான். அவளை அவன் தேகத்தை முன்னே தள்ளியது. உள்ளம் இன்பத்தில் ஒடுங்க ஓடியது. திலகவதி தன் அன்புக்கிணைந்து விட்டாள் என்ற செய்தி அவன் ஆத்மாவில் ஓர் உத்வேகத்தை உண்டாக்கிவிட்டது. சமீபத்தில் வந்து திலகவதியின்

புஜங்களைப் பரிசித்து முகத்தை நோக்கினான். அவள் சட்டென்று தன் முகத்தைத் தன் இரு கரங்களால் மூடிக்கொண்டாள். அக்கரங்களை மெதுவாக விலக்கி அவளை ஆலிங்கனம் செய்து கொள்ளப்போனான் ஆனந்தன்.

திலகவதி "கோ"வென்று அழ ஆரம்பித்துவிட்டாள். அதே சமயத்தில் வெளிப்புற இயற்கையும் கண்ணீர் விட்டு அழ ஆரம்பித்து விட்டது. அகோரமான மழை பெய்கிறது. கொஞ்ச நேரத்துக்கு முன்பு முழு நிலவு பூத்திருந்த வானம் கார்முகில்களால் இருண்டுவிட்டது. இடி, மின்னல்களின் "சர்வாதிகார" ஆட்சி நடைபெறுகிறது. பேய்க்காற்று அடிக்கிறது. புஷ்பவதியைப் போல சௌந்தரியத்தை அள்ளித்தெளித்த பிரகிருதி இப்பொழுது பிரளய காலத்தில் பத்ரகாளிமாதிரி மாறி விட்டாள்!

பின்பு அரண்மனையின் மற்றொரு பகுதியிலிருந்து கம்பீரமான ஒரு வயோதிக புருஷர் விலையேறப்பட்ட சால்வையைப் போர்த்திக்கொண்டு திலகவதியின் மாளிகையை நோக்கி நடந்துவந்தார். மழையும் புயலும் ஆரம்பமானதைக் கண்டதும் அவர் மனம் திலகவதியை நினைத்துக்கொண்டது. அவளை அழைத்துக் கொண்டு தன் மாளிகைக்குப் போகவே அவர் விரும்பி அவசர அவசரமாக வந்தார்.

புயல் அடிக்க ஆரம்பித்ததும் விழித்துக்கொண்ட காவலாளி திலகவதியின் மாளிகையின் வாசலில் உஷாராக நின்று கொண்டிருந்தான். அங்கே வந்த கம்பீர புருஷரைப்பார்த்ததும் திடுக்கிட்டுப்போய் பரபரப்போடு முன்வந்து நமஸ்கரித்து கதவைத் திறந்தான். அவர் உள்ளே "மளமள"வென்று சென்றார். சிறிதுதூரம் சென்று திலகவதியின் அறை இருக்கும் பக்கத்துக்கு வந்தவுடன் பேச்சுக்குரல் கேட்டதும் சட்டென்று நின்றார். வெளிப்பக்கமாக நின்றபடியே அங்கிருந்த சாளரத்தின் வழியாக உள்ளே பார்த்தார்.

எதிரே ஒரு குத்துவிளக்கு மாத்திரம் எரிந்துகொண் டிருக்கிறது. அதற்கெதிர்புறமாக ஆனந்தன் நிற்கிறான்.

அவன் அணைப்பில் திலகவதி நிற்கிறாள். ஆனந்தன் அவள் கண்களினின்று உதிரும் கண்ணீரைத் துடைக்கப்போகிறான்.

இக்காட்சியை அவ்வயோதிகர் கண்டார். திடுக்கிட்டார். ரத்தம் கொதித்தது. கோபம் அவர் கண்களில் கனலாகிவிட்டது. மீசை படபடத்தது. புஜங்கள் துடிதுடித்தன. "அவமானம், அவமானம்" என்று அவர் மனது சொல்லி கொதித்தது. வெளியே நின்றுகொண்டிருக்கும் சேவகன் கையிலுள்ள கத்தியைப் பிடுங்கி ஆனந்தனை அப்பொழுதே கொல்ல எண்ணினார். ஆனால் அடுத்த நொடியில் அவ்விதம் செய்து வீண் கலவரத்தை உண்டாக்கக்கூடாதென்று தீர்மானித்து ஆத்திரத்தை அடக்கிக்கொண்டார். "இக்காட்சியைப் பார்க்கவா நான் இங்கு வரவேண்டும்? வளர்த்த கடா மார்பில் பாய்ந்தமாதிரி ஆனந்தன் நடந்துகொண்டிருக்கிறான். அற்பன்! ராஜசேகரன் இவனுடன் நெருங்கி பழகியதால் வந்த வினை இது. அப்பொழுதே கண்டிக்காமலிருந்தது என் பிசகு. அம்மா! திலகா, உன் புத்தியுமா இப்படிப் போகவேண்டும்?" என்றெல்லாம் ஒரு நொடிக்குள் பற்பல அவர் எண்ணிவிட்டார். ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவராய் சட்டென்று திரும்பினார். திரும்பியும் பாராமல் வந்தவழியாகவே தன் மாளிகையை நோக்கி நடந்தார். போகும்போது அவர் ருத்ர மூர்த்தி போல விளங்கினார்.

அதற்குள் திலகவதி அழுவதைப்பார்த்த ஆனந்தன் திகைத்துவிட்டான். அவனுக்கு ஒன்றுமே புலப்படவில்லை. முகத்தை மூடுவானேன்? அழுவானேன்?

அவனை மேலும் திகைக்கவைக்க அவள் விரும்பவில்லை. சொன்னாள்: "தயவுசெய்து என்னைத் தீண்டாதீர்கள். ஆனந்தரின் உண்மையான அன்புக்குப் பாத்திரமாகியுள்ள திலகவதி நானல்ல......."

"என்ன? என்ன?.... திலகவதி அல்லவா?.... அப்படியானால் நீ யார்?"—ஆனந்தன் மூளை திகைத்து சுற்றியது. தன் கண்களை நம்பாமல் கசக்கிக்கொண்டான். மறுபொ

றியால் எதிரே உள்ள உருவத்தைக்கூட சரியாக அடையாளம் தெரிந்துகொள்ள முடியாமல் போய்விட்டதா? குரலில் வித்தியாசம் தெரிந்ததே! ஆமாம் இது ஏன் முதலில் தெரியவில்லை? இவ்விதம் அவன் எண்ணிக் கொண்டிருக்கும் போதே "நான் அந்த அன்பைப் பெறமுடியாத அபாக்கியவதி கோதை" என்றாள் அவள்.

"ஹா! என்ன? கோதையா? கோதையா?"- ஆனந்தனுக்கு ஒருபுறம் ஆச்சரியம்; ஒருபுறம் கோபம், வெட்கம். மற்றொருபுறம் ஏமாற்றம். முதலில் கோபத்தால் ரத்தம் முகத்திற்கேறியது. மறுகணம் உணர்ச்சியின் வேகம் குறைந்ததும் ரத்தம் சுண்டி முகம் வெளுத்தது. சில நிமிஷங்கள்வரை அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை. தன்னை நிதானப்படுத்திக்கொண்டு சிரிப்பை வரவழைத்தவனாய் "நன்றாயிருக்கிறது நாடகம்! இந்த வேஷமும் நடிப்பும் ஏன்? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே" என்று கேட்டான். அவன் வார்த்தைகளைக் கேட்டதும் கோதை அதிகமாக அழ ஆரம்பித்துவிட்டாள். சற்று முன்பு அவன் அணைப்பிலிருந்து விலகி நின்ற அவள் சட்டென்று முன்வந்து மண்டியிட்டாள். "என்னை மன்னித்தேன் என்று சொல்லுங்கள். பிறகு விபரத்தைக் கூறுகிறேன்" என்று வார்த்தைகளை அவள் வாய், இல்லை இருதயம் தேம்பியது.

"பைத்தியமே, எழுந்திரு நீ எத்தகைய பிழையும் செய்யவில்லை. தப்பான வழியில் நான் போகிறேன் என்று நினைத்துக் கொண்டு இந்த வேடிக்கையைச் செய்திருக்கிறாய்! அவ்வளவுதானே? நீ ரொம்பவும் கெட்டிக்காரி. என்னை ஏமாற்றிவிட்டாயே! பெண் வர்க்கம் இருக்கிறதே, அது மகா பொல்லாதது! பெண்கள் நினைத்தால்போதும்; ஆண்கள் எல்லாம் கபோதிகளாகிவிடுகிறார்கள்!"- கோதையைத் தூக்கி நிறுத்தினான்.

கோதை சிறிது சஞ்சலப் பிடிப்பைத் தளர்த்திக் கொண்டாள். கனிவாகக் கேட்டாள்: "அப்படியானால் தங்களுக்கு என்மேல் கோபமில்லையே?"

"எதற்காக நான் கோபப்படவேண்டும்?"

"திலகவதி என்று சொல்லி ஏமாற்றினேன் என்பதற்காக......"

"திலகவதியிடம் கோதையையும் கோதையிடம் திலகவதியையும் பார்க்கும் ஆனந்தனை உன்னால் ஏமாற்ற முடியுமென்று நினைக்கிறாய்?"—சிரித்தான்.

"சாமர்த்தியப் பேச்சு இருக்கட்டும். வேஷத்தில் நான் திலகவதிதான் என்று நீங்கள் முதலில் எண்ணவில்லையா?"—புன்னகை மலர வினவினாள்.

ஆனந்தன் தான் உண்மையில் ஏமாந்துபோன உணர்ச்சியைக் காட்டிக்கொள்ள விரும்பவில்லை. அத்துடன் கோதையின் உள்ளத்தையும் வேறு எதையாவது சொல்லிக் கசக்கவும் பிரியப்படவில்லை. ஆகவே, கோதைதான் திலகவதி வேஷத்தில் நடிக்கிறாள் என்பதைத் தெரிந்துகொண்டும் தெரியாதவன்போல நடந்துகொண்டதாகக் காட்டிக்கொண்டான். கடைசியில் ஆனந்தன் சொன்னான்: "எனக்கு எல்லாம் தெரியும். நான் நினைத்தது சரியாகப்போயிற்று. ஓலையைப் படிக்கும்போதே சந்தேகித்தேன். இங்கு வந்தபிறகு அது தெளிவாயிற்று. ஆனால் அதை வெளிக்குக் காட்டிக்கொள்ளாமல் நானும் நடித்தேன். அது போகட்டும். உண்மையில் திலகவதிக்கு இதெல்லாம் தெரியுமா? அவள் இப்பொழுது எங்கே? இங்கு அவள் இல்லையா? அல்லது அவள் அறிந்துதான் இவ்வேஷத்தை மேற்கொண்டாயா?"

"ஆமாம். அந்த விஷயங்களை எல்லாம் அவசியம் தெரிந்துகொள்ளவேண்டியதுதான். முதலில் இப்படி உட்காருங்கள்."

இருவரும் உட்காருகிறார்கள்.

கோதை, "நான் சொல்லுவதைக் கவனித்துக் கேளுங்கள்" என்றாள்.

"கொஞ்சம் பலமாகச் சொல், மழையின் சப்தத்தில் சரியாகக் காதில் விழவில்லை."

வெளியே மழை மகா கோரமாகப் பெய்து கொண்டிருக்கிறது. காற்றோ மிகவும் கடுமையாக வீசுகிறது.

"திலகவதி தேவியார் இப்பொழுது இங்கில்லை...."

"ஆனால், எங்கே?...."

"கொஞ்சம் பொறுங்கள். ஏன் இப்படி அவசரப்படுகிறீர்கள்? கோதையிடம் திலகவதியைப் பார்க்கிறவருக்கு இவ்வளவு அவசரம் ஆகாது."

"மன்னிக்கவும். மேலே விஷயத்தைச் சொல்."

"திலகவதி பிரேமாவதியின் ஆச்சிரமத்தில் இப்பொழுது இருக்கிறாள்."

"அவள் எப்படி அங்கு போனாள்? எதற்காகப் போனாள்?"

"அமைதியாகக் கேளுங்கள்; சொல்லுகிறேன். பிரேமாவதியும் திலகவதியும் ஆப்த சிநேகிதைகள். ஏன்? உருவத்திலும் சரி; அழகிலும் சரி; இருவரும் சரிசமானவர்கள். ஒரே சமயத்தில் இருவரையும் பார்த்தால் அக்காள் தங்கையோ என்று சந்தேகப்படுவார்கள். ஆனால் திலகவதியோ ராஜஸ்திரீ. பிரேமாவோ தாசிப் பெண்...."

"ஆஹா! இந்தக் கதைகளை எல்லாம் யார் கேட்டார்கள்?....மேலே...."

"திலகவதி பாஸ்கரனைக் காதலிக்கிறாள் என்ற விஷயம் ஒருவேளை உங்களுக்குத் தெரியாமலிருக்கலாம். அதை நிரூபிக்கத்தான் இன்று ஆச்சிரமத்துக்கு அவள் போயிருக்கிறாள்."

"ஆச்சிரமத்துக்கா? காதலை திரஸ்கரிக்கும் ஸ்தலமல்லவா அது? அங்கு திலகவதியின் எண்ணத்திற்கு ஆதரவு ஏது?"

"ஆதரவு கிடைத்துவிட்டதென்ற தைரியத்தின் மேல்தான் சென்றிருக்கிறாள்."

"என்ன? பரந்தாமன் திலகவதியைக் காதலிக்கிறான் என்றா கூறுகிறாய்?"

"ஆமாம். அவர் அவளைக் காதலிக்கும்படியான நிலைமையை உண்டாக்கியவள் ஒரு பெண்மணி என்பதை மறந்துவிடாதீர்கள்."

"பெண்மணியா? அவள் யார்?"

"பிரேமாவதி."

"என்ன? பரந்தாமனை அளவுக்குமீறி நேசித்து, அவனுக்காகவே சகல சுகத்தையும் துறந்து ஆசிரமவாசியாக மாறியிருக்கும் பிரேமாவதியா?"

"ஆமாம். அந்தப் புண்ணியவதியின் முயற்சிதான். தன் காதலனின் நன்மைக்காகத் தன்னைத் தானே தியாகம் செய்துகொண்டுவிட்டாள்!"

"இது எவ்விதம் நேர்ந்தது?"

"பரந்தாமனிடம் தான் கொண்டுள்ள காதலைப்பற்றி பிரேமாவிடமே திலகவதிதேவி கூறினாள். பிரேமா பரந்தாமன் மனதை மாற்றி திலகவதியின் இஷ்டத்திற்கு அவனை இணங்கும்படி செய்துவிட்டாள் என்று நினைக்கிறேன். இன்று...."

அச்சமயம் அச்சயான கிரகத்தின் கதவு தட்டப்பட்டது.

கதவைத் தட்டுவதினால் எழுந்த ஓசையைக் கேட்டதும் கோதை சட்டென்று பேசுவதை நிறுத்தி வாயில்பக்கம் திரும்பினாள். யார் வந்திருக்கலாம்? என்ற கேள்விக்குரிய பதிலைச் சிந்தித்தாள். அதே நேரத்தில் அவள் முகத்தில் திகில் உணர்ச்சியும் துடித்து ஆடியது. ஒன்றும் புரியாமல் திகைத்துநின்றாள்.

மறுபடியும் கதவைத் தட்டும் சப்தம் கேட்டது.

"யாராயிருக்கலாம்? ஒருவேளை திலகவதி...." என்றான் அனந்தன்.

"உஷ்.. மெதுவாகப் பேசுங்கள். அநேகமாக ஆச்சிரமத்திலிருந்து திலகவதிதான் திரும்பிவந்திருக்க வேண்டும்."

"இந்த மழையிலுமா காற்றிலுமா....?"

"வேறு யாரும் இங்கு வரமுடியாது; நாங்கள் தயவு செய்து மறைந்துகொள்ளுங்கள்."

"எதற்காக? திலகவதிக்காக நான் எதற்காக மறையவேண்டும்? இங்கு நீ நடத்திய நாடகமெல்லாம் அவளுக்கும் தெரியவேண்டும்...."

அதற்குள் மறுபடியும் பலமாக சப்தம் கேட்டது. 'கோ...தை' என்ற சொல்லும் அவர்கள் காதில் விழுந்தது.

"சரி. நீ திறக்கவேண்டாம். நானே திறக்கிறேன்"—அனந்தன் முன்னே ஓடினான்.

"என்னைத்தான் ராஜகுமாரி கூப்பிடுகிறாள் என்று நினைக்கிறேன். நீங்கள் மௌனமாக இருங்கள்"—என்று கூறிவிட்டு கோதையே கதவைத் திறக்க ஓடினாள்.

சிறிது நேரத்துக்குமுன்பு தான், மழையும், புயலும் பொறுக்கமுடியாத அளவுக்கு அதிகமானதைக் கண்டதும் அவ்வாலிபன் தன் படுக்கை அறையிலிருந்து எழுந்தான். "பாவம்! தனியே தோழிகளுடன் பயந்து கொண்டிருப்பாள் திலகம்" என்று எண்ணினான். உடனே எழுந்து தன் உடைகளைச் சீர்திருத்திக் கொண்டு விலையேறப்பட்ட சால்வை ஒன்றை குறுக்கே எடுத்து போர்த்திக்கொண்டு திலகவதியின் மாளிகைக்கு ஓடிவந்தான், திலகவதியின் மாளிகையிலே தங்கி

விடியும் மட்டும் அவளுக்குத் துணையாக இருப்பதென்று அவன் தீர்மானித்திருந்தான். அவனைப் பார்த்ததும் மாளிகையின் வெளியே நின்று கொண்டிருந்த காவற்காரன் நமஸ்கரித்தான்; வெளிக்கதவைத் திறந்துவிட்டான். உள்ளே சென்ற அவ்வாலிபன் இருபக்கங்களிலும் நீண்ட கம்பங்கள் விளங்கும் மண்டபத்தின் வழியாக நடந்துசென்று திலகவதியின் சயன கிரகத்தையடைந்தான். வேறொன்றையும் கவனிக்காமல் கதவைத் தட்டினான். பதில் இல்லை. மறைச் சப்தத்திலும் உள்ளே குசுகுசுவென்று பேசுவதும் அவன் காதில் விழவில்லை. "ஓ! ஒருவேளை நன்றாகத் தூங்கிக்கொண்டிருக்கிறாளோ? தோழி கோதை இங்குதானே இருப்பாள். அவளை கூப்பிட்டுப் பார்ப்போம்" என்று எண்ணி அவ்விதமே இரண்டு மூன்று தடவை கூப்பிட்டான்.

அப்பொழுதுதான் கதவு சட்டென்று திறக்கப்பட்டது.

திலகவதிதான் வருகிறாளென்று கோதையும் அவளுக்குப் பின்பு ஆனந்தனும் எதிர்பார்த்து நின்று கொண்டிருந்தனர்.

உள்ளே நுழைந்த கம்பீரமான வாலிபன் தலை நிமிர்ந்து பார்த்தான். பரஸ்பரம் அங்கிருந்த மூவரும் ஆச்சரியத்தால் திகைத்துவிட்டனர்.

"ஹா!...." என்று கோதை பின்வாங்கி தலை கவிழ்ந்து நின்றாள்.

"இளவரசரா? வணக்கம்" என்றான் திகைப்பை வென்ற ஆனந்தன்.

அவ்விருவரையும் அழகும், ஆற்றலும் அமைந்த அக்கம்பீர வாலிபன் ஒருமுறை பார்த்தான். திலகவதியின் சயன கிரகத்தில்-அதுவும் அவ்வளவு நேரத்திற்குப் பிறகு ஆனந்தன், இளவரசனை வரவேற்கிறான். இதை நினைத்ததும் அவன் நெஞ்சம் ஆத்திரத்துடன் பட

படத்தது. எங்கிருந்தோ கோபம் வந்து அவனைப் பற்றிக்கொண்டது. "ஆம். இளவரசன் ராஜசேகர வர்மன்தான்!"—அழுத்தத் திருத்தமாகக் கூறினான்.

இளவரசனுக்குக் கோபம் வந்துவிட்டது என்பதை உணர்ந்ததும் ஆனந்தன் அஞ்சவில்லை. "அவசரப்பட்டு ஆத்திரப்படுகிறான். கொஞ்சம் வேடிக்கை செய்து பார்ப்போம்" என்று ஆனந்தன் "அப்படியா? வர வேண்டும்! இந்த மழையிலும் புயலிலும் இந்த நடுநிசிக் குப்பிறகு தாங்கள் இங்கு எதற்காக....? மன்னிக்கவும். ஒருவேளை திலகவதி பயப்படுவாள் என்று எண்ணி வந்தீர்களோ?" என்றான் ஆனந்தன்.

அவன் பேச்சு இளவரசனின் கோபத்தை அதிகமாக்கியது. "குதிரை தாக்கிப்போட்டவுடன் குழியையும் பறிக்க ஆரம்பித்துவிட்டதோ? ஆனந்தா, யாருடன் பேசுகிறாய் என்பதை மறந்துவிட்டாயா?" என்று சொல்லிக்கொண்டிருக்கும் போதே ஆனந்தன் குறுக்கிட்டு, "இதில் என்ன சந்தேகம்? பல்லவ மகா ராஜ்யத்தின் வருங்கால மகாராஜாவுடன் தான் பேசுகிறேன்" என்றான்.

"ஆனந்தா! உன் நாவை அடக்கிப்பேசு. நீ ஓர் அற்பன் என்பதை அறியாமல் மோசம் போனேன். நீ ஒரு பெரிய ராஜத் துரோகியாகிவிட்டாய். ஷேத்திர தர்மத்தையே துஷ்பிரயோகம் செய்துவிட்டாய். நம்பிக் கைத்துரோகம். உண்ட வீட்டுக்கு இரண்டகம். ராஜ குடும்பத்திற்கே அழியாத அவக்கேடு..."—இவ்விதம் படபடப்புடன் பேசிக்கொண்டே போனான் கோபக் கனல்வீச இளவரசன்.

ஆனந்தன் கலகலவென்று சிரிக்க ஆரம்பித்துவிட்டான். "ஆத்திரம்தீர தாங்கள் பேசலாம். தாங்களோ ராஜகுமாரர். நான் என்ன இருந்தாலும் கேவலம் ஒரு கவிராயரின் மகன் தானே!"—கிண்டல் உணர்ச்சி விளங்கப் பேசினான்.

"பாவி, பரிகாசமா செய்கிறாய்? அர்த்த ராத்திரிக்கு மேல் உனக்கு இங்கென்ன வேலை?"

சிரித்துக்கொண்டு, "அதோ நிற்கும் திலகவதியைத் தங்கள் தங்கையை அல்லவோ அதைப்பற்றிக் கேட்க வேண்டும்" என்றான் ஆனந்தன்.



"அவமானத்திற்குமேல் அவமானம்! உன்னைத் தண்டிப்பதுதான் தர்மம். இதுவரையில் நெருங்கி பழகினோமே என்று அஞ்சினேன்....இளவரசன் கை பூ பறிக்கவில்லை...." என்று ஆத்திரமுடன் கூறிக் கொண்டே தன் இடுப்பில் எப்பொழுதும் தற்பாதுகாப்பிற்காக வைத்திருக்கும் கத்தியை எடுத்தான். மின்னல்போல சட்டென்று ஆனந்தன் மீது பாய்ந்தான்.

எதிர்பாராத விதமாக இளவரசன் கத்தியுடன் பாய்ந்ததைக் கண்டதும் திலகவதி வேஷத்தில் இருந்த கோதை 'விளையாட்டு வினையாய்விட்டதே' என்று எண்ணி குறுக்கே பாய்ந்தாள்.

"திலகவதி, எட்டிப் போ, நீ ராஜகுடும்பத்தில் பிறக்க லாயக்கற்றவள்...இந்தத் துரோகிக்காகவா பரிந்து கொண்டு குறுக்கே வருகிறாய்?"—படபடத்தான்.

கோதை அவன் பாதத்தில் விழுந்து, பிறகு நிமிர்ந்து "அவசரப்படாதீர்கள். என் முகத்தைச் சரியாகப் பாருங்கள். நான் யார் என்று தெரியவில்லையா? நான் திலகவதி அல்ல; கோதை, கோதை, கோதை" என்று கதறினாள். "ஆனந்தர் குற்றமற்றவர். அவரைக் குத்துவதற்கு முன்பு என்னைக் குத்துங்கள்" என்று பிரலாபித்தாள். கண்களில் நீர் ததும்பித் தேம்பியது.

"ஹா! கோதையா?...என்ன—இதென்ன வேஷம்? நீ எதற்காக இந்த வேஷம் போட்டாய்? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே. எனக்கு வந்த ஆத்திரத்தில் உன்னைச் சரியாகக்கூட நான் கவனிக்கவில்லையே. எழுந்திரு" என்றான் இளவரசன்.

அவனுக்கு வந்த ஆத்திரமெல்லாம் எங்கேயோ பறந்துவிட்டது. படபடப்பை அடக்கிக்கொண்டு "ஆனந்தா, இதெல்லாம் உன் வேடிக்கையா? அப்படி

யானால் என் தங்கை திலகவதி எங்கே? எல்லாம் புதிர் போட்டமாதிரி இருக்கிறதே" என்றான்.

ஆனந்தன், "அப்பாடா! என் தலை தப்பியது! ராஜஸ்நேகிதம் பிராண சங்கடம்தான். கத்தியை நம்புகிறவர்கள் எப்பொழுதும் இப்படி மூளையை இழந்து விடுகிறார்கள்!" என்று சொல்லிவிட்டு சிரித்தான்.

"அதிருக்கட்டும், முதலில் எல்லா தகவல்களையும் விவரமாகச் சொல்லுங்கள். திலகவதி எங்கே?" என்று மறுபடியும் கேட்டான்.

"கண்ணைக் கசக்கிக்கொண்டு, என் உயிரையும் காப்பாற்றிய இந்தப் போலி திலகவதியை (கோதை)யே கேளுங்கள். இந்த வேடிக்கை நாடகத்தின் பூரண விபரம் அவளுக்குத்தான் தெரியும்" என்றான் ஆனந்தன்.

"கோதை, சீக்கிரம் சொல். என்ன சங்கதி?"

கோதை சொல்லுவதற்குத் தயங்கினாள்.

"ஒன்றுக்கும் பயப்படவேண்டாம். நடந்ததை நடந்தபடி சொல்."

"திலகவதி தேவியார் இப்பொழுது பிரேமாவதியின் ஆச்சிரமத்திலிருக்கிறாள்."

"அங்கெதற்குப் போனாள்?"

"இளவரசே, கோபிக்காமலும் ஆத்திரப்படாமலு மிருந்தால் சொல்லுகிறேன்."

"ஆத்திரமுமில்லை, கோபமுமில்லை. சொல்."

"திலகவதி தேவியார் பரந்தாமனை அளவுக்கு மீறி நேசித்தார்கள்...."

"என்ன ஆச்சரியம்! உம். அப்புறம்...."

"பரந்தாமர் குணம்தான் தங்களுக்குத் தெரியும். திலகவதியின் காதலை அவர் முதலில் ஏற்றுக்கொள்ள வில்லை என்று தெரிகிறது. ஆனால் திலகவதி பிரேமாவை அழைத்து பரந்தாமரை தன் இஷ்டத்திற்கு இணங் கும்படி செய்ய கேட்டுக் கொண்டார்கள். பிரேமாவும் அதற்கிணங்கி, அதன்படியே பரந்தாமர் மனதையும் மாற்றிவிட்டாள்."

"என்ன? அப்படியானால் பிரேமா பரந்தாமனைக் காதலிக்க வில்லையா?"

"அந்தக் காதலை தன் காதலனின் நன்மையைக் கோரியே தியாகம் செய்திருக்கிறாள் என்று எண்ண வேண்டியிருக்கிறது...."

"அப்படியானால் பிரேமாவின் கதி என்ன?"

"அவள் ஒருவேளை பல்லவ மகா மன்னர் சந்திரவர் மரின் மருமகளாய்விடலாம்"— சிரித்துக்கொண்டே கூறினான் ஆனந்தன்.

"ஆனந்தா, உன் வேடிக்கைப் பேச்சு இருக்கட்டும். கொஞ்சம் பொறு. கோதை சொல்லும் மற்ற விபரங் களையும் கேட்போம்" என்று கூறிய பின்பு கோதை யைப் பார்த்து "ஆமாம், திலகவதி இங்கிருந்து எப்படிப் போனாள்?" என்று கேட்டான்.

கோதை சொன்னாள்: "இன்றுபகல் பிரேமா இங்கு வந்திருந்தாள். மாலை வருவதற்கு முன்பே அவள் ஆச்சிரமத்திற்கு தான் வந்த மூடுபல்லக்கிலேயே போய் விட்டாள். அப்பல்லக்கிலேயே திலகவதி தேவியும் சென்று விட்டார்கள். இந்த இரகசியம் எனக்கு மாத்திரம் தான் தெரியும். இன்று இரவு எவ்வளவு நேரமானாலும் திரும்பி வந்து விடுவதாக தேவியார் என்னிடம் கூறிச் சென்றார். மழையும் புயலும் திடீரென்று ஆரம்பித்து விட்டதினால்தான் அவர்கள் வரவில்லை என்று நினைக்கிறேன். அவர் களுக்கு என்ன நேர்ந்ததோ, என்ற பயம் வேறு என் மனதை கஷ்டப்படுத்துகிறது."

"திலகவதி தேவியார் ஆச்சிரமத்துக்குப் போனால், நீ எதற்காக அவள் வேஷத்தைப் போட்டாய்?"

"தேவியாருடைய கட்டளை. அவர்கள் திரும்பிவரும் வரையில் திலகவதியாக நடிக்கும்படி ஏற்பாடு. அவர்களைத் தேடாமலிருப்பதற்காகவே இந்த ஆலோசனை" என்று சாமர்த்தியமாய்க் கூறி சமாளித்தாள் கோதை.

"நீ சொல்லுவதெல்லாம் ஏதோ ஒரு கதையைப் போல ரசமாக இருக்கிறதே!" என்றான் இளவரசன்.

"இந்தப் பெண்கள் எதைச் சொன்னாலும் ரசமாகத் தான் சொல்லுகிறார்கள். அதிலும் சோகரசத்தைச் சிருஷ்டிப்பதில் அவர்களுக்கு ஈடு இணை கிடையவே கிடையாது! என்ன, கோதை, நான் சொல்லுவது சரி தானே?" என்றான் ஆனந்தன்.

கோதை வெட்கம்கலந்த புன்னகையுடன் கண்களை அசைத்துக்கொண்டே சிருங்காரரசத்தையும் சோகரச மாக்கத்தான் இந்த ஆண்களுக்குத் தெரியும்" என்றாள்

"உங்கள் விவாதமும் ரசமாகத்தானிருக்கிறது. அதிருக்கட்டும், கோதை, இத்தகவல்கள் எல்லாம் ஆனந்தனுக்கும் தெரியுமா?" என்றான் இளவரசன்.

"எனக்குத் தெரியாது. திலகவதி தேவியார் ஆச்சிர மத்திற்குச் சென்ற செய்தி தெரியவே தெரியாது. தாங்கள் திலகவதியின் அரண்மனையில் இருப்பதாகவும், வந்து தங்களைப் பார்க்கும்படியாகவும் எனக்கு ஓலை வந்தது. அதை நம்பியே இங்கு வந்தேன். உங்களைக் காணோம். திலகவதி வேஷத்தில் கோதை என்னையும் ஏமாற்றிவிட்டாள். இந்தப் பெண்களின் சாகஸத்தினால் இந்த உலகத்தில் ஆகாதகொன்றுமில்லை என்பதற்கு இச்சம்பவம் ஒரு சாட்சி" என்று ஆனந்தன் தான் அங்கு வந்ததற்குரிய காரணத்தையும் தந்திரமாக மறைத்து மாற்றிக் கூறினான்.

"சரி, என் ஞாபகமெல்லாம் ஆச்சிரமத்திலிருக் கிறது. இந்தக் கொடிய மழையில் திலகவதியும், மற்ற

வர்களும் என்ன கஷ்டப்படுகிறார்களோ? இப்பொழுதே புறப்படுவோம். ஆனந்தா, வா, போவோம்."

"அவசியம் போகவேண்டியதுதான். அவர்களுக்கு இதற்குள் என்ன நேர்ந்திருக்குமோ என்று என் மனதும் அடித்துக் கொள்ளுகிறது."

"இளவரசே, கொஞ்சம் பொறுங்கள். விடியட்டும். மழையோ கொட்டு கொட்டென்று கொட்டுகிறது. காற்றோ ஊழிகாலக் காற்றுமாதிரி அடிக்கிறது. இந்நேரத்தில் ஆச்சிரமத்திற்கு எப்படிப் போகமுடியும்?" என்றாள் கோதை.

"ஆமாம், அது சரியான யோசனை, இன்னும் கொஞ்ச நேரத்தில் பொழுது விடிந்துவிடும். நாம், சேர்ந்து போவோம்" என்றான் ஆனந்தன்.

வெளியே வான மண்டலத்தில் இடிகளின் கர்ஜனை இடை இடையே மின்வெட்டுகள். மழையின் வேகமும் குறையவில்லை.

## கிளை-17.

அன்றையதினமே; ஆனால் மழையும் புயலும் ஆரம்பமாவதற்குமுன்பு. முழு நிலவின் ஒளி பரவிக் கொண்டே வருகிறது. முன் இரவு. காற்று மாத்திரம் சற்று பலமாகவே அடித்துக் கொண்டிருக்கிறது.

பிரேமாவதியின் குடில் உள்ள இடத்திலிருந்து நகர எல்லையை நோக்கிச் செல்லும் பாதை, அதோ தெரிகிறது. அது ஓர் அழகிய சாலை. அதன் நடுவே ஒரு மூடு பல்லக்கை சில ஆட்கள் தூக்கிக் கொண்டு போகிறார்கள். அப்பல்லக்கு சிறிது தூரம்தான் போயிருக்கும். நகர எல்லையை அடைய அது இன்னும் வெகுதூரத்தைக் கடந்தாகவேண்டும், அதற்குள்ளாகவே அப்பல்லக்கின் உட்புறமிருந்து "நிறுத்துங்கள்" என்ற மெல்லிய குரல் கேட்டது.

பல்லக்கைத் தூக்கிச் சென்றவர்கள் சட்டென்று நின்றனர்.

"பல்லக்கை மறுபடியும் திருப்புங்கள். ஆச்சிரமத்திற்கு மறுபடியும் போகவேண்டும்" என்று மீண்டும் அக்குரல் கட்டளையிட்டது.

அவ்வுத்தரவின்படி பல்லக்கு மறுபடியும் வந்த பாதையின் வழியாகத் திரும்பி பிரேமாவதியின் குடிலை நோக்கிச் சென்றது. குடிலின் அருகில் வந்ததும் பல்லக்குக் கீழே இறக்கப்பட்டது. உடனே உள்ளே இருந்தபடியே "சரி-நீங்கள் போகலாம். நாளைக்குத் தான் அரண்மனைக்குப் போவதாக உத்தேசம்" என்ற கட்டளை பிறந்தது.

பல்லக்குத்தூக்கிகள் அங்கிருந்து அப்புறம் போகத் திரும்பினர்.

அடுத்த நிமிடம் பல்லக்கின் கதவைத் திறந்து, திரையையும் நீக்கிக் கொண்டு ஒரு மின்னாள் வெளியே வந்தாள். அணிந்திருந்த ஆபரணங்களும், உடைகளும் அவள் ஓர் இராஜகுமாரியாக இருக்கவேண்டுமென்று காட்டின. சித்திரவேலைப்பாடு நிறைந்த மார்க்கச்சை. அதன்மீது பனிப்படலம் படர்ந்தது போல ஒரு மெல்லிதான பட்டு வஸ்திரம். அது காற்றில் அலை மோதுகிறது! அமரர் உலகத்திலிருந்து நழுவிவிழுந்த ஒரு கந்தர்வப்பெண் மாதிரி காட்சி அளிக்கும் அவள் முகத்தில் மாத்திரம் ஏதோ சொல்லமுடியாத வேதனையின் துடிப்பு. அத்துடன் பொறுக்க முடியாமல் வெளிவரும் பெருமூச்சு. சமாளிக்கப் பார்க்கிறாள்; முடியவில்லை. பல்லக்கிலிருந்து இறங்கியதும் சட்டென்று பிரேமாவதியின்குடிலுக்குள் நுழைந்தாள். அதற்கு முன்பு வெளியே சுற்றியும் பார்த்தாள். ஒருவரும் அங்கில்லை. தன்னை ஒருவரும் கவனித்திருக்க மாட்டார்கள் என்பது அவள் எண்ணம். குடிசைக்கு வெளிப்புறமாகப் புஷ்பங்கள் சிதறிக்கிடப்பதையும் கண்டாள். 'சரி, அவர்கள் போயிருப்பார்கள். நான் எதிர்பார்த்தபடி முடிந்திருக்கவேண்டும்" என்று

தனக்குள் சொல்லிக் கொண்டே குடிசைக்குள் நுழைந்தாள்.

தூரத்தில் போய்க்கொண்டிருந்த பல்லக்குத் தூக்கி களில் ஒருவன் திரும்பி அவளைக் கவனித்துவிட்டான். "வீரபத்திரா, திரும்பிப் பார்" என்றான். வீரபத்திரனும் மற்ற ஆட்களும் முன்னே ஓடிவந்து பார்த்தனர்.

"அடே! நம்ப ராஜகுமாரி மாதிரியாயல்லவோ இருக்கு."

"ஆமாடா, ஆமாம், நம்ப ராஜகுமாரிதான்."

"சே! அவங்க எதுக்காக இங்கு வரணும்? பல்லக் கிலே பிரேமா அம்மா இருக்கிறாங்கன்னு நினைச்சிருந் தேன். ஆனக்க, அவங்களுக்குப் பதிலா, ராஜகுமாரி யல்லவோ வந்திருக்காங்கோ."

"உஷ். மெதுவாய் பேசுடா, எனக்கு அப்போவே சந்தேகம். அரண்மனையிலே இருந்துவந்தபோது பல் லக்கு கொஞ்சம் கனமாய் இருந்திச்சு. ஆனல், கொஞ்ச நேரத்துக்கு முன்னே பல்லக்கை தூக்கிக்கிட்டு வரும் போது அவ்வளவு கனமே யில்லையேன்னு நான் ரோசனை பண்ணினேன்."

"ஆமாடா, ஆமாம். அரண்மனையிலே இருந்துவரும் போதே பல்லக்கிலே ராஜகுமாரியும், பிரேமா அம்மா வுடன் வந்திருக்கணும். என்ன, நான் சொல்லுறது சரியா?"

"அப்படித்தான் இருக்கணும், அண்ணே."

"சரி, வாங்கோ, வீட்டுக்குப் போயிட்டு நாளைக்கு வருவோம்."

"ஆமாம், நம்ப ராசகுமாரி எதுக்காக இங்கிட்டு வரணும்?"

"அந்தக் கவலை நமக்கு என்னத்துக்குன்னு கேக்கு றேன் வா, வா, போவோம்."

இவ்விதம் அவர்கள் பேசிக்கொண்டே நடையைக் கட்டினர்.

குடிசைக்குள் நுழைந்த ரமணி நேராக ஓடினுள். இருதயத்தை அழுத்திக்கொண்டே வந்த பாரத்தை அவளால் தாங்கமுடியவில்லை. எதிரே ஒருபுறம் பூஜை அறை இருந்தது. அங்கு சென்றுள். அங்கே நடராஜர் விக்ரகம் ஒன்று இருந்தது. அதன்முன் அப்பெண் மணி மண்டியிட்டாள்; வணங்கினுள்; மனதில் உள்ளதை எல்லாம் அப்பகவானிடம் கூறினுள்; ஒரு தகுந்த வழி காட்டும்படி பிரார்த்தித்தாள். அதிக நேரம் அங்கு இருக்கவும் அவள் விரும்பவில்லை. எழுந்தாள். கண்களின் வழியாக நீரைக் கக்கவைத்தது இருதயம். அக்கண்ணீரையே கேட்டாள்: "என் பிரேமையின் கதி என்ன?" கண்ணீர் கரைந்தது. "ஆம், என்னை நானே கரைத்துக் கொள்ளுகிறேன்" என்று அவளே பதில் சொல்லிக்கொண்டாள். மீண்டுமொரு முறை நடராஜ ரைக் கும்பிட்டாள். மின்னல் வேகத்தில் அக்குடிசையி லிருந்து வெளியே வந்தாள். நதிக்கரையை நோக்கிச் செல்லும் பாதையின் வழியாக அதிவேகமாக நடக்க ஆரம்பித்தாள். அந்த வேகத்தை விழுங்கும் வேக முடன் பல சிந்தனைகள் அவளைத் திணற அடிக்க ஆரம்பித்தன.

"ஆமாம். அவள் சொல்லியபடி நடக்கலாம் என்று தான் அரண்மனைக்குப் புறப்பட்டேன். ஆனல் என் மனம் இடங்கொடுக்கவில்லை. அங்கு போய்த்தான் என்ன பிரயோஜனம்? நான் விரும்புவது என் காத லரின் நன்மை. அதற்காக நான் எதையும் செய்யத் தயார். அங்கு சென்றுல், அந்த உறுதிக்கு இடமேது? அது மாத்திரமா? நான் உயிருடன் இருக்கும் வரையில் இப்பிரச்னை எப்படித் தீரும்? சங்கடம்தான்! இரண்டு ஆத்மாக்களை-எப்படியோ சேர்த்து வைக்கப்பட்ட இரு ஆத்மாக்களை இனி பிரிக்கவேகூடாது. நான் உயிரு டன் இருந்தால் அந்தப் பிரிவுக்கு இடமேற்படலாம். ஆமாம். நிச்சயமாக ஏற்படும். இப்பொழுதுதான் நான் தெளிவு அடைந்தேன். காதல் என்றுல், எல்லோரும் நினைக்கிறபடி லேசானதல்ல; அது தியாகத்தை விரும் புகிறது! அதோ, நான் வணங்கும் தெய்வமே கூறுகிறது. "எந்தக் காதல் ஆத்ம ஸமர்ப்பணம் செய்துகொள்ளுகிறதோ, அந்தக் காதல் தெய்வீகத்தை

அடைகிறது! ஆம், ஆத்ம ஸமர்ப்பணம். அதொன்றே சரியான வழி. எந்த வகையிலும் எனக்கேற்ற மார்க்கம் அது ஒன்றுதான். காதலின் சூட்சுமத்தை அறியாத உலகம் தற்கொலை என்று பழி சுமத்தலாம். அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. என் கவலை எல்லாம் என்னுடைய காதலர் சுகமாகயிருக்கவேண்டும் என்பதே."

இவ்விதம்பற்பல நினைத்துக்கொண்டே அப்பெண் மணி நதியைநோக்கி நடந்தாள். பாதிதூரம் சென்றதும் "அடடா! அவர்கள் இவ்வழியாகத்தான் சென்றிருக்க வேண்டும். ஆகவே இப்பாதையின் மூலமாகப் போகக் கூடாது" என்று தனக்குள் சொல்லிக் கொண்டு சட்டென்று திரும்பினாள். ஆற்றைநோக்கிச் செல்லும் மற்றொரு குறுக்குப் பாதையின் மூலமாக அவள் அதிவேகமாகப் போகிறாள். இப்பொழுது அவள் முகம் மிகவும் தெளிவு அடைந்துவிட்டது. துன்பத் துடிப்பு களும், சஞ்சலச் சுழிகளும் மறைந்துவிட்டன. அளவுக்கு மீறிய ஓர் உற்சாக வெறி தாண்டவமாடியது. "ஆத்ம ஸமர்ப்பணம்" "ஆத்ம ஸமர்ப்பணம்" என்று அவள் மனது மனனம் செய்து கொண்டேயிருக்கிறது.

அதோ, நதிக்கரைக்கு வந்துவிட்டாள். அமுதமய மான சந்திர ஒளியிலே நதி ஒரு புது அழகுடன் விளங் கியது. உருகி நெளிந்து நெளிந்து ஓடும் வெள்ளிப் பாளங்களைப்போல நதி ஜலத்தில் நிலவின் ஒளி காணப் பட்டது. ஆற்றில் ஜலம் மாத்திரம் நிமிடத்திற்கு நிமிடம் கூடிக்கொண்டேயிருந்தது. கொஞ்சதூரத்திற் கப்பால் உள்ள ஊர்களில் நன்றாக மழை பெய்திருப் பதினாலேயே, நதியில் ஜலம் கூடியிருக்கவேண்டு மென்று ஊகிக்கவேண்டியிருந்தது. ஜலம் பெருகிக் கொண்டேவருவதைப் பார்க்கும்போது எந்தச் சமயத் திலும் பெருவெள்ளமாக மாறலாம் என்று தோன்றியது.

நதிக்கரைக்கு அருகே ஓர் அழகிய மரம். அதற்கு எதிர்புறமாக கரையில் வந்து மோதிப் புரண்டுபோகும் ஜலத்தில் இறங்கி நிற்கிறாள் அப்பெண்மணி. அப் பொழுது காற்றின் வேகம் சிறிது தணிந்தது: அவள் நின்ற இடத்தில் தண்ணீர் அதிகமாகவந்து மோதவில்லை.

அப்பொழுது அந்த வனிதை குனிந்து ஜலத்தையே நோக்கினாள். இயற்கையின் 'நிப்படி அந்த ஜலம் அவளது திவ்ய ரூபத்தைப் பிரதிபலித்துக் காட்டியது. "என்ன ஆச்சரியம்! என்னை [illegible]ன ஏமாற்றிக்கொண்டிருக்கிறேனே! இவ்வளவு [illegible] நடக்கும் என்று நான் நினைக்கவேயில்லை!" என்று சொல்லிக்கொண்டாள். அதேசமயத்தில் அவள் சிந்தனையில் மற்றொரு சொரூபம் வந்து நிறைந்தது. அந்தக் கம்பீரமான சௌந்தரிய புருஷ வடிவத்தை அவளால் எப்படி மறக்க முடியும்? தலைநிமிர்ந்து பெருமூச்சுவிட்டாள். மறுபடியும் குனிந்து தண்ணீரைப் பார்த்தாள். அவளுடைய உருவம்தான் ஜலத்தில் பிரதிபலித்தது. ஆனால், அவள் கண்கள், ஜலத்தில் அவளுடைய உருவத்தைப் பாரக்கவில்லை! சிந்தனையில் குடிகொண்டுள்ள அக்கம்பீர சௌந்தரிய புருஷ வடிவமே தோன்றியது. அந்த அற்புதமான ஆவிர்ப்பவத்தைக்கண்டு அவள் மகிழ்ந்தாள்.

"தாங்கள் எப்படி இங்கு வந்தீர்கள்?" என்று அந்த உருவத்தைப்பார்த்துக் கேட்க ஆரம்பித்துவிட்டாள்.

காற்று மறுபடியும் பலமாக வீசியது. அலைகள் வந்து மோதி அந்த ஆவிர்ப்பவத்தைச் சிதைத்தன.

பெருமூச்சோடு தலைநிமிர்ந்தாள்; மேலே நதியில் இறங்கினாள்.

பால்போல் நிலவு காய்கிறது. காற்றின் வேகம் மாத்திரம் கூடிக்கொண்டேபோகிறது. நதியின் ஜல மட்டமும் விஷம்மாதிரி ஏறுகிறது.

இப்பொழுது இடுப்பு அளவு ஜலத்திற்கு அவள் வந்துவிட்டாள். அவளைத் தடுக்க அங்கொருவருமில்லையா? "வா, வா, வா, உன்னைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். இன்று உல்லாசமாகப் படகுப் பயணம் செய்வோம், அதோ, படகு தெரிகிறது, பார்" என்று யார் சொன்னார்கள்?

அவள் திரும்பித் திரும்பி பார்த்தாள். எதிரே ஜலத்திற்கு மத்தியிலே ஒரு புருஷ உருவம் அவள் கண்ணுக்குத் தெரிந்தது! அப்புருஷன் யார்? பரந்தாமன் தான். "ஓ! கரையில் நின்ற தாங்கள் இங்கு ஓடிவந்து விட்டீர்களோ? இனி உங்களை விடமாட்டேன். இது நிச்சயம். என்னை உங்களுடன் சேர்த்துக்கொள்ளுங்கள்" என்றுகூறிக்கொண்டே அந்த உருவம் தோன்றிய பக்கம் மேலும் சென்றாள். அந்தோ! பாவம்! பரந்தாமனைப் போல அவள் கண்களுக்குத் தோன்றிய உருவம் சிரித்துக்கொண்டே "பயப்படாதே. நதி விழுங்கிவிடும் என்று அஞ்சுகிறாயா? நான் இருக்கும்போது உனக்கென்ன பயம்? வா, சீக்கிரம் வந்து என்னுடன் ஐக்கியமாகிவிடு" என்று கூறியது. இத்தகைய மனோதோற்றத்தை உண்மை என்று நம்பி அவள் நதியின் மத்திக்குச் சென்றுவிட்டாள். அவ்வளவுதான். ஒரு சுழல். அந்த வனிதை அதில் அகப்பட்டுக்கொண்டுவிட்டாள். வெள்ளம்போல பெருகிக்கொண்டேவரும் தண்ணீர் அவளை இழுத்துக்கொண்டே போயிற்று. கடைசியாக அவள் கூறிய "பரந்தாமா!" என்ற சொல்லின் எதிரொலியை மாத்திரம் காற்று சொல்லிச் சென்றது.

அதே சமயத்தில் வான வீதியின் ஒரு பக்கம் கறுத்த மேகஜாலங்கள் திரண்டுகொண்டேயிருந்தன.

## கிளை-18.

மறுநாள். காலை நேரம். முதல்நாள் இரவெல்லாம் விடாமல் பெய்துகொண்டிருந்த மழை விடிந்ததும் நின்றுவிட்டது. புயலின் வேகமும் குறைந்தது.

வெய்யில் மாத்திரம் மங்கலாகவே இருந்தது. ஏனெனில், ஆகாயத்தில் மேகக்கூட்டங்கள் சரியானபடி கலையவில்லை. சூரியனை அவை அடிக்கடி மறைத்துக் கொண்டே இருந்தன.

அந்நேரத்தில் அரண்மனையில் உள்ள மந்திராலோசனை மண்டபத்தில், பின்புறமாகக் கைகளைக்கட்டிக் கொண்டு அங்குமிங்குமாக நடந்துகொண்டிருக்கும்

அந்த வயோதிகர் யார்? பல்லவ பேரசின் அதிபதி சந்திரவர்மன்தான். வயதானபோதிலும் கம்பீரம் குறையவில்லை. நரம்புகள் தளர்ந்திருந்தபோதிலும் உணர்ச்சியின் முறுக்கு இன்னும் குறையவில்லை. அவர் முகத்தில் கோபத்தின் படபடப்பு. நெஞ்சத்தில் அடக்க முடியாத குமுறல். தன் எதிரே நின்று கொண்டிருந்த மனிதரை நோக்கி, "மந்திரி, சந்திரசேகரரை அழைத்து வர இன்னும் ஆளை அனுப்பவில்லையா?" என்று கேட்டார்.

"அரசே, தங்கள் கட்டளையை நிறைவேற்ற நமது சேனாதிபதியே நேரில் புலவர் வீட்டுக்குச் சென்றிருக்கிறார். அநேகமாக அவ்விருவரும் வந்துவிடுவார்கள் என்று நினைக்கிறேன்."

"ஆனந்தனை உடனே கைதுசெய்யும்படி ஏற்பாடு செய்தாயா?"

"சேனாதிபதி ஆனந்தனைத் தேட சேவகர்களை அனுப்பியிருப்பார். அதைப்பற்றிய கவலை தங்களுக்கு வேண்டாம்."

அப்பொழுது சேனாதிபதியும், சந்திரசேகரரும் அங்கு வந்தார்கள். இருவரும் மன்னரை வணங்கினார்கள். அரசர் மகா கோபமுடன், "புலவரே, உம் மகன் செய்கையை வெளிப்படுத்த நான் விரும்பவில்லை. இந்த ராஜ குடும்பத்திற்கே அவகேட்டை தேடிவைக்க துணிந்துவிட்டான். அவ்வளவுதான் என்னால் சொல்ல முடியும். உம்முடைய முகத்திற்காகத்தான், அவனை இன்னும் நான் ஒன்றும் செய்யாமல் வைத்திருக்கிறேன். இல்லையேல் இந்நேரம் அவன் சிரம் அற்று இப்பூமியில் விழுந்திருக்கும். அவன் மகா பாதகன். ராஜத்துரோகி, ஒழுக்கம் கெட்டவன். மகா அறிஞராகிய உம் வயிற்றில் பிறந்து உமக்கும் மானக்கேட்டை தேடிவைத்திருக்கிறான். அவனைத் தண்டிக்காமல் இருப்பது ஒரு பெரிய அநீதியாகும். மரணதண்டனையே அவனுக்கேற்றது. பல்லவ மன்னனின் கோபத்தை அவன் லேசாக நினைத்துவிட்டான் போலும்..." என்று பட

படப்பு விளங்க பேசிக்கொண்டே போனார்.

மரணதண்டனைதான் ஏற்றதென்று சொன்னதும் புலவர் குறுக்கிட்டு, "அரசே, அவனோ சிறுவன். சிறியவன் செய்த பிழையைத் தாங்கள் பொறுக்கவேண்டும்" என்றார். அவர் கண்களில் புத்திரவாத்சல்யத்தின் சோகப் புயல் அடித்தது.

"மன்னிப்பா? உமது மகனுக்கா? இல்லை, இல்லை. அது என்னால் முடியாத காரியம்."

"அவன் செய்த குற்றம்தான் என்ன? அவனையே தீர விசாரிக்காமல் ஒரு முடிவுக்கு வரலாமா?"

பல்லவ மன்னர் அதைக் கேட்டதும் சினந்தார். "என்ன சொன்னீர்? அவன் செய்த குற்றமா? தீர விசாரிக்க வேண்டுமென்று கூறுகிறீர்? விசாரணை எதற்காக? என் கண்ணாலேயே நேரில் கண்டேன். அதை நிரூபிக்க வேறு சாட்சி எனக்குத் தேவையில்லை."

அச்சமயம் சேனாதிபதி குறுக்கிட்டு, "மகாராஜா, மற்றொரு சங்கதி. தங்கள் சமூகத்தில் தெரிவிக்கவிருப்பம்" என்றான்.

"ஆனந்தனைக் குறித்தா?"

"ஆம், மகாராஜா."

"என்ன? தெரிவி. அவன் நகரை விட்டு ஓடி விட்டானா?"

"அவனைத் தேடிப்பிடிக்கச் சென்ற ஆட்கள் இன்னும் திரும்பவில்லை. ஆனால், நான் சொல்லவந்தவிஷயம் வேறு."

"அதென்ன? சொல், சீக்கிரம்."

"அரசே, சந்திரசேகரின் வீட்டிற்கு நானே சென்றிருந்தேன் அல்லவா? தற்செயலாக அங்கு சுவரில் ஒரு

சித்திரம் வரையப்பட்டிருந்ததைப்பார்த்து திடுக்கிட்டு விட்டேன்."

"யாருடைய சித்திரம்? யார் எழுதியது?"—அரசர் துடி துடித்துக்கொண்டு கேட்டார்.

"மகாராஜா, நமது திலகவதிதேவியாரின் திருவுருவப்படம்தான். அதை ஆனந்தன்தான் எழுதியிருக்கிறன் என்று விசாரித்ததில் தெரிந்தது."

"என்ன? இது வாஸ்தவமா?"

"சந்தேகமே வேண்டாம். நான் நேரில்பார்த்தேன்."

"என்ன துணிவு! எத்தகைய நெஞ்சழுத்தம்! ஒரு ராஜ கன்னிகையின் படத்தை அனுமதியில்லாமல் எழுதுவதற்கு அவனுக்கு எவ்வளவு தைரியமிருக்க வேண்டும்? சந்திரசேகரரே, உமக்கு இவ்விஷயம் தெரியாதா? நீரும் மகனுக்குச் சாதகமாக நடந்து கொண்டீரோ? என்ன மௌனம் சாதிக்கிறீர்?"

"மகாராஜா, அவன் சித்திரம் வரைந்தது எனக்குத் தெரியும். எச்சரித்தேன். கேட்கவில்லை. விதி விளையாடுகிறது! நான் என்ன செய்யலாம்?"

மந்திரி குறுக்கிட்டு, "மகாராஜா, நான் ஓர் ஆலோசனை கூற விரும்புகிறேன். ஆனந்தனுக்கு அளிக்கப்பட்டிருக்கும் மரண தண்டனையை மாற்றி..." என்றான்.

உடனே மன்னர், "உம். மாற்றி....அப்புறம் என்ன செய்ய வேண்டுமென்கிறாய்? குற்றம் செய்தவனை விடுதலை செய்துவிட வேண்டுமென்று வாதாடப் போகிறாயா?" என்று கேட்டார்.

"இல்லை, சந்திரசேகரின் முகத்திற்காக தாங்கள் பெரிய மனது செய்து இரக்கம் காட்டவேண்டும். ஆனந்தனை தேசப் பிரஷ்டம் செய்துவிடும்படி அம்மரண தண்டனையை மாற்றி விடலாம்."

சந்திரசேகரரும் அரசரின் முகத்தையே பரிதாபமுடன் பார்த்தார். அரசன் மனம் சிறிது இளகியது.

"நல்லது. அப்படியே ஆகட்டும். அவன் என் முகத்திலேயே விழிக்காமலிருக்கட்டும். என் ராஜ்ய எல்லையிலிருந்து போக மறுத்தால் அவனை உடனே கொன்றுவிடும்படி உத்தரவிட்டுவிடு. இதுவே என் முடிவு"— இவ்விதம் சந்திரவர்மன் கூறிவிட்டு சந்திரசேகரரைப் பார்த்து "புலவரே, தகப்பன் என்ற முறையில் உமக்கு வருத்தமாக இருக்கலாம். வேறு நிவர்த்தியில்லை. நீர் என் ஸ்தானத்திலிருந்தால் நான் செய்த தீர்ப்பு நியாயம் என்று சொல்லுவீர். உமது மகனைப் பிரிந்திருக்கப் பிரியமில்லையானால் நீரும் அவனோடு அயல்நாடு போகலாம். எனக்கு ஆட்க்ஷேபணையில்லை" என்றார்.

சந்திரசேகரர் என்ன பதில் சொல்லுகிறதென்று தெரியாமல் திகைத்து கைகூப்பி மன்னர்பிரானை நமஸ்கரித்தார்.

அதே சமயத்தில் ஒரு சேவகன் ஓடோடி வந்து அஞ்சலி செய்து, "மகாராஜா, தங்கள் கட்டளைப்படி ஆச்சிரமத்திற்குச் சென்றிருந்தேன். ஆச்சிரமத்தின் ஒருபக்கமாக நதியில் ஜலம் கரை புரண்டு ஓடுகிறது. சில குடில்கள் புயலில் நாசமாகிவிட்டன. நமது குருநாதரின் சிஷ்யர்கள் எல்லாம்...." என்று சொல்லிக் கொண்டிருக்கும் போதே மந்திரி குறுக்கிட்டு, "நிர்மலானந்த அடிகளை மகாராஜா பார்க்க விரும்புகிறார் என்று சொன்னாயா? அவர் ஆச்சிரமத்தில் இருந்தாரா?" என்று கேட்டார்.

"அங்கு சிஷ்யர்கள் எல்லாம் அழுதுகொண்டிருக்கிறார்கள்."

"ஏன்?" என்று ஆவலுடன் கேட்டார் அரசர்.

"மகாராஜா, நிர்மலானந்த அடிகள் நேற்று ராத்திரி தனியாக உலாவப் போனாராம். இரவு மழையிலும், புயலிலும் அகப்பட்டுக் கொண்டாராம். அதிகாலையில் மழை நின்றதும் சிஷ்யர்கள் அவரைத் தேடிச் சென்றார்

க்ளாம். சோலையிலே வெகு தூரத்திற்கப்பால் நதிக்குச் சிறிது எட்டி நிர்மலானந்த அடிகள் சவமாகக் கீழே கிடந்தாராம். அவர் மீது ஒரு பெரிய மரம் விழுந்து கிடந்ததாம்! மண்டை உடைந்துவிட்டதாம். மரம் விழுந்தே அவர் இறந்திருக்கவேண்டும் என்று சிஷ்யர்கள் சொன்னார்கள்."

"ஆ! என் குருநாதருக்கு இப்படிப்பட்ட சாவா வரவேண்டும்? அந்தோ!" என்று அரசன் துக்கமுடன் கூறினார்.

"அவருடைய மகன் பரந்தாமனைப் பார்த்தாயா?" என்று சேவகனை மந்திரி கேட்டார்.

"அவரையும் நேற்று இரவிலிருந்து காணவில்லையாம்!" என்றான் சேவகன்.

"சரி, மந்திரி, நமது குலகுருவின் பிரேதத்தை தக்க மரியாதையுடன் அடக்கம் செய்ய ஏற்பாடு செய்" என்று கூறிவிட்டு, மன்னர் சேனாதிபதியை நோக்கி, "ஆனந்தனைக் கண்டுபிடித்து நமது எல்லைப்புறத்திலிருந்து வெளியேற்ற வேண்டிய பொறுப்பு உன்னுடையது" என்று கூறிக்கொண்டே சென்று விட்டார்.

## கிளை-19.

இச்சம்பவம் நடந்த அதே நேரம்.

இரண்டு அழகான புரவிகள். ஒன்று வெண்மை நிறம். மற்றொன்று சாம்பல் வர்ணம். அவற்றின் மீது இரு அழகான யுவர்கள் ஆரோகணித்திருக்கிறார்கள்.

அவர்கள் நகர எல்லைக்குவெளிப் புறமாக உள்ள நிர்மலானந்த அடிகளின் ஆச்சிரமத்திலிருந்து நகரை நோக்கி வருகிறார்கள். அவர்கள் முகத்தில் துக்கம் முத்திரையாகிவிட்டது. அத்துக்கத்தில் கலக்கமும் குழப்பமும் தள்ளாடின. அவ்விருவரில் ஒருவனின் இருதயம் இயற்கையில் வீரம் நிறைந்தது. மற்றொரு

வனின் இருதயம் துன்பத்திலும் இன்ப காணும் இயல்புடையது. அப்படியிருந்தும் அவ்விரு வரின் இருதயங்களும் சோகப் புயலில் சுருண்டன. பழைய ஞாபகங்கள் எல்லாம் முள்-படுக்கையாக மாறிவிட்டன.

"ஆனந்தா, நிர்மலானந்த அடிகளுக்கு இவ்வித சாவு வருமென்று நான் கனவிலும் கருதவில்லை."

"வாஸ்தவம். நானும் நினைக்கவில்லை. ஆனால், சந்தர்ப்பம் சோக நாடகத்தை நடத்திக்காட்டுகிறது!"

"ஆமாம், ஆச்சிரமவாசிகளில் ஒருவர் பிரேமாவும் பரந்தாமனும் நதிக்குச் சென்றதாகவும், பின்பு படகிலேறியதை தாம் பார்த்ததாகவும் கூறினாரே. ஒரு வேளை அவ்விருவரையும் வெள்ளம் பலியாக்கிக்கொண்டிருக்குமோ? அந்தோ! என் தங்கை திலகவதியின் கதியும் தெரியவில்லையே! ஒரு சமயம் மூவருமே படகில் செல்லும்போது புயலினால் படகு கவிழ்ந்திருக்குமோ? ஆனந்தா, என்னை அறியாமலேயே என் மனது அடித்துக்கொள்ளுகிறது."- அவன் கண்கள் கலங்கின.

"இளவரசே, மனம் கலங்கவேண்டாம். மழையும் புயலும் பயமுறுத்துவது இயற்கை. ஆனால், அவை எப்பொழுதும் தொடர்ந்து நிற்கும் இயல்புடையனயல்ல. மேகம் கூடும்; கலையும்; கவலைவேண்டாம். இன்னும் கொஞ்சநேரத்தில் எல்லாவற்றையும் தீர விசாரித்து அறிந்துகொண்டுவிடலாம்" என்றான் ஆனந்தன். வெளிக்கு அவன் தைரியமாகப் பேசியபோதிலும், அவனுடைய உள்ளம் மாத்திரம் சோகத்தில் தலைசாய்ந்துகிடந்தது.

ஒரு புறம் தங்கையைக் காணோம் என்ற கவலை. மற்றொரு புறம் தான் அளவுக்கு மீறி காதலித்த பிரேமாவின் கதி என்னாயிற்று என்ற சஞ்சலம். அரிய நண்பன் பரந்தாமனைப்பற்றிய சிந்தனை. இவ்வளவும் இளவரசனின் மூளையையும் இதயத்தையும் மொய்த்துக் கிள்ளத் தொடங்கின. துன்ப நினைவின் அபசுரம் அவனது ஆத்மாவையே பிடித்து குலுக்கியது.

சோகஸ்தாயியில் அவன் சொன்னான்: "ஆனந்தா, என் வாழ்க்கையில் இதுவரையில் நான் இவ்வித கலக்கத்தை அடைந்ததில்லை. திலகவதி காணாமல்போன சங்கதியை அறிந்தால் என் தந்தை துக்கம் தாங்காமல் பிராணனை விட்டாலும் விட்டுவிடுவார்."

எப்போதும் கற்பனை அழகோடு பேசும் வழக்கமுடையவன் ஆனந்தன். அப்பொழுது அவனும் பேசக்கூட முடியவில்லை. திலகவதியை நினைத்து நினைத்து அவன் நெஞ்சம் உள்ளூர நிலைகுலைந்து கொண்டே வந்தது.

இவ்விதம் பேசிக்கொண்டே அவர்கள் நகர எல்லையை சமீபித்து விட்டார்கள்.

அப்பொழுது திலகவதி அரண்மனையில் வேலை பார்க்கும் பல்லக்குத் தூக்கிகளில் நான்கு நபர்கள் அப்பக்கம் "வேகு வேகு" என்று விரைவில் வந்து கொண்டிருந்தனர். அவர்கள் பிரேமாவதியின் குடிலை நோக்கியே போகிறார்கள் என்று தெரிந்தது. எதிரே இளவரசனும், ஆனந்தனும் குதிரைகளில் வருவதைக் கண்டதும் அவர்கள் கீழே விழுந்து வணங்கி எழுந்து கைகூப்பினர்.

பிரேமாவதி வந்த மூடுபல்லக்கிலேயே திலகவதியும் சென்றுவிட்டாள் என்று கோதை சொன்ன ஞாபகம், அப்பல்லக்குத் தூக்கிகளைக் கண்டதும் ஆனந்தனுக்கு வந்தது. உடனே குதிரையை நிறுத்தி ஆனந்தன் அவர்களை ஏதோ கேள்வி கேட்க வாய் திறந்தான். அதற்கிடையில் இளவரசன் "நீங்கள் எங்கே போகிறீர்கள்?" என்று கேட்டான்.

அவர்களில் ஒருவன், "மவராசா, நாங்க பிரேமா அம்மாவின் குடிசைக்கு போறோம். அவங்க இன்னைக்கு காத்தாலே வரச்சொன்னாங்கோ" என்றான்.

"அப்படியா? அதிருக்கட்டும், நீங்கள்தான் நேற்று பிரேமாவதியை மூடு பல்லக்கில் ஆச்சிரமத்திற்கு திலகவதி தேவியாரின் அரண்மனையிலிருந்து அழைத்துச் சென்

தீர்களா?" என்று ஆனந்தன் அவசரமுடன் கேட்டான்.
"ஆமாங்க" என்ருன் ஒருவன்.

"நேற்று நீங்கள் ஆச்சிரமத்திலிருந்து உடனே போய்விட்டீர்களா? இப்பொழுது எங்கிருந்து வருகிறீர்கள்?" என்று இளவரசன் ராஜசேகரவர்மன் கேட்டான்.

"மவராசா, நாங்க நேத்து ராத்திரி பல்லக்கைத் தூக்கிகிட்டு அரமனைக்கு புறப்பட்டோங்க. கொஞ்ச தூரம் போனதுமே பல்லக்கே திரும்பி ஆசுமரத்துக்கே (ஆச்சிரமம்) கொண்டுகிட்டுப்போவச் சொன்ளுங்க. சரியின்னு திரும்பிவந்து பல்லக்கே இறக்கிளேங்க. அப்புறம் எங்களே நாளைக்கு வரச்சொன்ளுங்கோ. நாங்க அப்போவே புறப்பட்டுவிட்டோங்க. அதுவரே பல்லக்கிலே இருந்தவங்க பிரேமா அம்மான்னு நினேச்சுருந்தோம்.... ஆனு......"—மேலேசொல்ல பயந்தான்.

உடனே இளவரசன், "ஒன்றுக்கும் பயப்படாமல் உண்மையைச்சொல். பல்லக்கில் இருந்தது யார்? சீக்கிரம் சொல்" என்ருன்.

"சும்மா சொல்லுடா?" என்று மற்ருெருவன் அவன் முதுகில் மெதுவாகத் தட்டினன்.

"மவராசா, அவங்க நம்ப....நம்ப ராசகுமாரிமாதிரி இருந்....தாதுங்கோ........"

"அட பைத்தியமே, ஏன் பயப்படுகிருய்? திலகவதி தேவியார் இருந்தார்கள் என்றுதானே சொல்லுகிருய்?" என்று கேட்டான் ஆனந்தன்.

"ஆமாங்கோ, ஆமாங்கோ" என்று தலே அசைத்தான் பல்லக்குத்தூக்கி.

"சரி, ராஜகுமாரி பல்லக்கிலிருந்து இறக்கியதும் எங்கே போஞர்கள் என்பதைச் சொல்ல முடியுமா?" என்று வினவினன் ஆனந்தன்.

"அவங்க சட்டுனு பிரேமா அம்மா குடிசைக்குள்ளே போனுங்கோ. அப்புறம் நாங்க வந்துட்டோங்கோ."

"சரி, நீங்கள் போகலாம்" என்று ஆனந்தன் கூறினான்.

பின்பு ராஜசேகரவர்மன் "ஆனந்தா, இப்பொழுது விஷயம் விளங்கி விட்டது. மூவரும் சேர்ந்தே படகில் ஏறிப்போயிருக்கவேண்டும். புறப்படு" என்றான்.

அடுத்த நிமிடம் இருவரும் புரவிகளைத் தட்டி விட்டனர். நகரை நோக்கி ஒரு சோலையின் வழியாக அந்த அசுவங்கள் அதிவேகமாக ஓடிக்கொண்டிருக்கும் போது "நிறுத்துங்கள், நிறுத்துங்கள்" என்று ஒரு குரல் கிளம்பியது. முதலில் அவர்கள் காதில் அது விழவில்லை.

அச்சாலையைவந்து 'சரண' மடையும் ஒரு குறுக்குப் பாதையை அவர்கள் கடந்துவிட்டனர். அந்த குறுக்குப் பாதையின் பக்கமே மறுபடியும் "நிறுத்துங்கள்" என்று யாரோ சப்தம்போட்டு கூவிக்கொண்டே ஓடிவருவதாகத் தெரிந்தது. இளவரசனின் குதிரை முன்னே சென்றது' அதன் பின்னேதான் ஆனந்தனின் புரவி ஓடிக்கொண்டிருந்தது. அதே சமயத்தில்தான் அக்குறுக்குப் பாதையின் வழியாக அலங்கோலமாக ஒரு யுவதி ஓடிவந்தாள். கதறிக் கொண்டே அக்குதிரைகள் சென்ற பக்கமாகத் திரும்பி ஓடினாள். அதிவேகமாக ஓடும்போது கால் இடறி வழியில் விழுந்தாள். அதேசமயத்தில் "ஐயோ! நான் கூப்பிடுவது காதில் விழவில்லையா? ஊருக்குள் போகவேண்டாம்" என்று கதறினாள்.

பின் பக்கமாகப் போய்க்கொண்டிருந்த ஆனந்தன் காதில் அக்குரலோசை விழுந்தது. அவன் சட்டென்று லகானைப் பிடித்திழுத்து குதிரையின் வேகத்தைக் குறைத்து திரும்பி பார்த்தான். அதே நேரத்தில்தான் அப்பெண்மணி கீழே துவண்டு விழுந்தாள்.

"இளவரசே, திருப்புங்கள் குதிரையை. அதோ,

பாருங்கள். யாரோ ஒரு பெண். ஐயோ! கீழே தவறி விழுந்துவிட்டாள். வாருங்கள், ஒருவேளை திலகவதியாக இருந்தாலும் இருக்கலாம்" என்றான்.

உடனே அவ்விருவரும் அப்பெண் விழுந்த இடத்திற்குத் திரும்பி வந்தனர். குதிரைகளை விட்டு இறங்கினர். ஆனந்தன் அப்பெண்ணின் அருகே சென்றான். "ஹா! கோதையா? கோதை, கோதை" என்று கூறிக்கொண்டே மெதுவாக அவளைத் தூக்கினான். சிறிது மயக்கமுற்று விழுந்த கோதை கண்ணைத் திறந்து எதிரே நிற்பவர்களை பார்த்தாள். நிதானப்படுத்திக்கொண்டு மெதுவாக எழுந்து நின்றாள். வனப்பு மிகக்கும் அவ்வனிதையின் நேத்திரங்களில் கண்ணீர் ததும்பியது. ஏதோ சொல்ல முயற்சித்தாள்; ஆனால் முடியவில்லை. அணையும் தீபத்தின் 'டாடா' கருகிக்கொண்டே வருவது போல காணப்பட்டாள்.

"கோதை, என்ன நேர்ந்தது? எதற்காக நீ இங்கு ஓடிவந்தாய்? என்ன சங்கதி?" என்று ஆனந்தன் கேட்டான்.

கோதை கோவென்று அழ ஆரம்பித்துவிட்டாள்.

"கோதை, விஷயத்தைச் சொல்லாமல் அழுகிறாயே? என்ன சங்கதி? திலகவதி அரண்மனைக்குத் திரும்பி வந்துவிட்டாளா?" என்று இளவரசன் கேட்டான்.

"அப்படியானால் ஆச்சிரமத்தில் திலகவதிதேவியார் இல்லையா?' என்று கவலையோடு கேட்டாள்.

"நிர்மலானந்தஅடிகள் இறந்து விட்டார். பரந்தாமன், பிரேமா, திலகவதி ஆகிய மூவரையும் காணோம்" என்றான் இளவரசன். அவன் குரலில் நடுக்கம் காணப்பட்டது.

"அந்தோ! அவர்கள் எங்கே போனார்கள்? துன்பத்திற்குமேல் துன்பமா?"—கண்களைத் துடைத்துக் கொண்டே கூறினாள்.

"ஆமாம், நீ எதற்காக இங்கு இவ்விதம் ஓடிவந்தாய்?" என்று கேட்டான் ஆனந்தன்.

"தாங்கள் இனி இங்கு தாமதிப்பது சரியல்ல. உடனே புறப்படுங்கள். எங்கேயாவதுஓடிப்போய் தலைமறைவாயிருப்போம்"-பதறினாள்.

"கோதை, ஆனந்தன் எதற்காகத் தலைமறைவாக இருக்கவேண்டும்? ஏன் இப்படி நீ பயப்படுகிறாய்?" என்று ராஜசேகரவர்மன் கேட்டான்.

"அந்தோ! ஆனந்தர் நமது மகாராஜாவின் கோபத்திற்கு ஆளாகியிருக்கிறார். அவர் ராஜத்துரோகியாகி விட்டாராம்! பெரிய குற்றத்தை செய்துவிட்டாராம். பல்லவராஜ்ய எல்லையிலேயே அவர் தலைகாட்டக் கூடாதாம்! அரசர் உத்தரவுயிட்டுவிட்டார். ராஜசேவகர்கள் நகர் எங்கும் ஆனந்தரைத் தேடிக்கொண்டிருக்கிறார்கள். ஆனந்தரின் பெற்றோர்கள் துக்கத்தில் ஆழ்ந்து கிடக்கிறார்கள். கொஞ்சநேரத்திற்குமுன் சேனாதிபதியும், ராஜ சேவகர்களும் இப்பக்கமாகக் குதிரைகளில் புறப்பட்டு வந்ததை நான்பார்த்தேன். அவர்கள் கண்ணில் படாமல் இத்தகவலை முன்னே அறிவிக்கவே நான் ஓடிவந்தேன்...."—இவ்விதம் விரைவில் வார்த்தை களைக்கொட்டினாள். பெருமூச்சு அவள் சரீரத்தை அதிரவைத்தது. கண்களில் மறுபடியும் நீர் ஊற்றெடுத்தது.

இதைக் கேட்டதும் ஆனந்தன் முதலில் சிறிது திடுக்கிட்டான். ஆனால், அடுத்த விநாடியில் தன்னைச் சமாளித்துக்கொண்டு புன்னகையை மலரவிட்டுக் கொண்டே, "பைத்தியமே, இதற்காகவா இவ்விதம் பதற வேண்டும்? ஆனந்தன் பல்லவராஜ்யமில்லாவிட்டால் செத்தா போய்விடுவான்? பெரிய இடத்து சிநேகிதம் எப்போதுமே ஆபத்தைத்தான் தரும்! இதற்காக வருந்துவானேன்? ராஜ கட்டளை அதுவானால், ரொம்ப சரி என்று நாம் போய்விடுவோம்" என்று கூறினான்.

இளவரசன் திகைத்தான். அவனுக்கு ஒன்றும்

விளங்கவில்லை. ஆனந்தன் செய்த குற்றமென்ன? அவனை மன்னர் தேசப்பிரஷ்டம் செய்வானேன்? இந்தக் கேள்விகளுக்குச் சரியான பதில்களை அவனால் பெற முடியவில்லை. "கோதை நான் அறிந்த அளவில் ஆனந்தன் எத்தகைய குற்றமும் செய்ததாக தெரிய வில்லையே. மேலும் குற்றவாளியைத் தீர விசாரியாமல் தண்டனை அளிக்க என் தந்தை எப்படித் துணிந்தார்?" என்றான்.

"அதைத் தாங்கள்தான் கேட்கவேண்டும். இன்று தமிழ் மன்னரின் நியாயம் தவறி இருக்கிறது. இந்த அநியாயத்தை உலகம் ஒருபோதும் மறவாது. என் மனம் நோகிறது. அது மகாராஜாவுக்குத் தெரியாது. கடவுள்தான் காப்பாற்றவேண்டும்" என்றாள் கோதை.

அச்சமயம் அபயக்கமாக குதிரைகள வரும சபதம--'டக் டக் டக்' என்று கேட்டது. சட்டென்று அம் மூவரும் திரும்பி நோக்கினர்.

ஆயுதபாணியாக விளங்கிய கட்டுமஸ்தான ஒரு மனிதர் கம்பீரமான ஒரு குதிரையின்மீது சவாரி செய்து கொண்டுவந்தார். அவருக்குப்பின் ஆயுதம் தரித்த இரு ராஜசேவகர்கள் மற்றிரு புரவிகளில் காணப்பட்டனர்.

முதலில் வந்த கட்டுமஸ்தான மனிதர் இளவரசனைக் கண்டதும் சட்டென்று குதிரையை விட்டிறங்கி வணங்கினர். அவருக்குப் பின்புறமாக ராஜசேவகர்களும் கீழ் இறங்கி பல்லவ யுவராஜாவுக்கு மரியாதை செய்தனர்.

பராக்கிரமசாலியாக விளங்கிய அக்கம்பீர புருஷர் தான் பல்லவராஜ்ய தளபதி. அவரைப்பார்த்து "வீரவர்மா, என்ன சங்கதி? எங்கே புறப்பட்டாய்?" என்று ராஜசேகரவர்மன் கேட்டான்.

"யுவராஜா, ராஜ கட்டளையை நிறைவேற்ற வந்தேன். ஆனந்தனை உடனே தேசப்பிரஷ்டம் செய்யும்படி மன்னர்பிரான் கட்டளையிட்டிருக்கிறார். அதற்காகவே......."

"என்ன? ஆனந்தன் செய்த குற்றமென்ன?"

"இளவரசே, ராஜத்துரோகம். ராஜ குடும்பத்திற்கே அவக்கேட்டை உண்டாக்கத்தக்க ஒரு காரியத்தை ஆனந்தன் செய்திருக்கிறாராம். அரசர் அவர் மீது மகா கோபமுடன் இருக்கிறார். முதலில் மரண தண்டனையே அளித்தார். பின்பு மந்திரியின் ஆலோசனைப்படி அதை தேசப்பிரஷ்டமாக மாற்றியிருக்கிறார். உடனே நமது ராஜ்ய எல்லையிலிருந்து ஆனந்தனை அப்புறப்படுத்தவேண்டிய பொறுப்பை என்னிடம் மன்னர் ஒப்புவித்திருக்கிறார். அதை நிறைவேற்ற வேண்டியது என் கடமை. ஆனந்தனைத் தேடியே நாங்கள் இப்பக்கம் வந்தோம்."

"வீரவர்மா, எல்லாம் பெரும் அதிசயமாக இருக்கிறதே! குற்றவாளியை நேராக அழைத்து தீர விசாரிக்காமல் தண்டிப்பதா?"

"விசாரிக்கவேண்டியதில்லை. தானே அதற்குச் சாட்சி என்ற முறையில் அரசர் பேசினார். இளவரசே, ஆனந்தன் இனி ஒரு கைதி. அவரை இந்த ராஜசேவகர்களிடம் ஒப்புவிக்க அனுமதிக்கவேண்டும்."

"முடியாது, முடியாது. இதில் ஏதோ தவறு நேர்ந்து இருக்கிறது. ஒரு குற்றமும் செய்யாத ஆனந்தனைத் தண்டிப்பதா? இது நமது ராஜ்ய நீதி பரிபாலனத்திற்கே பெரிய அவக்கேடு?"

"யுவராஜா, தாங்கள் நியாயத்தை அரசரிடம்நேரில் எடுத்துக்கூறி தண்டனையை மாற்ற முயற்சிக்கலாம். ராஜ கட்டளையை நாங்கள் நிறைவேற்றாமலிருப்பது தர்மமல்ல. அது எங்கள் கடமை. தண்டனையை மாற்றினால் ஆனந்தனை மீண்டும் அழைத்துக் கொள்ளலாம்."

இளவரசன் யோசித்தான். சேனாதிபதி சொல்லுவது ஒரு வகையில் நியாயமாகப்பட்டது.

"சரி, ஆனந்தா, நீ ஒன்றுக்கும் கவலைப்படாதே. நான் பிதாவிடம் போய் இதைப்பற்றி வாதாடாமலிருக்கப்போவதில்லை. உன்னை கூடிய சீக்கிரம் நான் மறுபடியும் வந்து அழைத்துச் செல்லுகிறேன்" என்று கூறிவிட்டு இளவரசன், கோதையைப் பார்த்து "கோதை, உன் மனம் நொந்திருப்பதை நான் அறிவேன். நம்முடைய மனதெல்லாம் நொந்துதான் போயிருக்கிறது. அந்த நிலை மாறும். ஈஸ்வரன் கிருபை புரிவான். வெகுசீக்கிரம் ஆனந்தனுக்கு அளிக்கப் பட்டிருக்கும் தண்டனையைமாற்றுகிறேன்" என்றான்.

பின்பு தன் குதிரைமீது ஏறி உட்கார்ந்தான்: "வீரவர்மா, இவர்கள் இங்கேயே இருக்கட்டும். ராஜ சேவகர்களை வேண்டுமானால் காவலாகவை" என்றான்.

"யுவராஜா, அது ராஜகட்டளைக்கு விரோதம். நமது நகர எல்லைக்குள் ஆனந்தன் வரவே கூடாது. வந்தால் அவர் உயிருக்கே ஆபத்து. நமது ராஜ்ய எல்லைப்புறத்தைத்தாண்டிச் செல்ல பல நாட்கள் ஆகும். ஆகவே ஆனந்தரை ராஜசேவகருடன் அனுப்பியாகவேண்டும்."

"அப்படியானால், அவர்கள் அடுத்த கிராமத்தில் தங்கட்டுமே. மற்றவைகளை நான் கவனிக்கிறேன்" என்றான் இளவரசன். அடுத்த நொடியில் நகரை நோக்கி அவன் ஏறி இருந்த குதிரை அதிவேகமாக ஓடிமறைந்தது.

"வீரவர்மரே, நமஸ்காரம். ராஜ கட்டளைகளை நிறைவேற்றிவைக்க உம்மைப்போன்ற சேனாதிபதிகள் இல்லாமல் போனாலும் கஷ்டம்தான்!"—சிரித்துக் கொண்டே கூறினான் ஆனந்தன்.

"ஆனந்தா, நீ ஒரு கைதி என்பதை மனதில் ஞாபகம் வைத்துக் கொண்டு பேசு. ஒழுக்கம் கெட்டவர்களுடைய கதி எல்லாம் இப்படித்தான்.'

"ஆனந்தன் கைதியா? அது இந்த உலகத்தில

நடக்காத காரியம்! நீர்தான் பல்லவராஜ்ய மன்னரின் கீழ்ஊழியம் செய்யும் ஒரு கைதி!"—சிரித்தான்.

வீரவர்மன் கோபங்கொண்டான். "நாவை அடக்கிப் பேசு. உனக்கு அளித்த மரணதண்டனையை அரசர் மாற்றியது பெரிய குற்றம். அரச ஆக்ஞை இல்லாத தினல் உன்னைக்கொல்லாமல் விடுகிறேன். இல்லையேல் வீரவர்மனின் வாள் உன் ரத்தத்தைஇதற்குள் ருசிபார்த்திருக்கும்" என்று சொல்லிவிட்டு ராஜசே வகர்களை நோக்கி "இவனை அழைத்துச் செல்லுங்கள். உங்களுக்கு உதவியாக வேறு வீரர்களையும் அனுப்பு கிறேன்" என்றான். அடுத்த நொடியில் தன் குதிரையின் மீது பாய்ந்து அமர்ந்தான். அவனைச் சுமந்த அக்குதிரை ஒரு துள்ளுதுள்ளி மறுபக்கம் திரும்பி ஓடியது.

"கோதை, நீ என் வீட்டில் போய் இரு. நான் அடுத்த நாட்டில் சென்று வசிக்க ஆரம்பித்த பிறகு உன்னை அழைத்துக்கொள்ளுகிறேன்"— என்றான் ஆனந்தன்.

"தயவு செய்து என் மனத்தை மேலும் துன்பப் படுத்தாதீர்கள்! நான் தங்கள் நிழல். அந்நிழல் தனித்து நிற்காது. இனி திலகவதியிடம் கோதையைப் பார்க்க முடியாது. ஆனால் கோதையிடம் திலகவதியைப் பார்க் கலாம்! அதற்கு உதவியாக நான் உங்களுடன் வரக் கூடாதா? தாங்கள் திலகவதியின் சித்திரத்தை அனுமதி யின்றி எழுதினீர்கள் என்பதை அறிந்தே அரசர் இத் தண்டனையை அளித்ததாக நான் கேள்விப்பட்டேன். இனி திலகவதியைப்பற்றி......"

"கோதை, போதும். நீயே திலகவதியாகக் காட்சி அளிக்கிறாய்! திலகவதியின் ஆத்மா உன்னிடமிருக்கிறது. ஆனால், ஒரே ஒரு வேண்டுகோள். அவளைப்போல நீயும் மறைந்துவிடாதே!"

அதோ, இப்பொழுது ராஜசேவகர்களின் காவலு டன் அவர்கள் பக்கத்து கிராமம் ஒன்றை நோக்கி போய்க்கொண்டிருக்கிறார்கள்.

# இயல்-20.

மேலே கூறிய சம்பவம் நடப்பதற்கு முதல் நாள் இரவு பௌர்ணமி அல்லவா?

இன்பத்தை இனிய மயக்கமாக்கும் பரிபூர்ணமான வெண்ணிலவு.

அந்த வேளையில்தானே நதிக்கரையை நோக்கி பிரேமாவும் பரந்தாமனும் ஓடினார்கள்? இல்லை; இது வரையில் அனுபவித்தறியாத ஒருவித இன்பம் அவர்களை எடுத்துச் சென்றதல்லவா?

அவர்கள் இப்பொழுது அதோ, அம்மரத்திற்கு அருகே, நதியின் ஜலமடிப்பு முத்தமிடும் கரையிலே நிற்கிறார்கள். சுற்றியும் வியாபித்திருக்கும் பிரகிருதியின் வனப்பு அவர்களது உணர்ச்சியாழை மீட்டத் தொடங்கியது!

அமிர்தமாகப் பொழியும் சந்திர ஒளியிலே 'நதிப்பெண்' 'ஸ்நானம்' செய்துகொண்டிருக்கிறாள்!

"பிரேமா, அதோ பார், நமக்காகவே அப்படகு காத்துக்கொண்டிருக்கிறது" என்றான் பரந்தாமன்.

பிரேமா அவன் கைகாட்டிய பக்கம் திரும்பினாள். நதியின் ஓரமாக இருந்த மரத்தடியிலிருந்து ஜலத்தின் மீது படுத்திருந்த ஒரு கயிற்றில் அழகிய படகொன்று கட்டப்பட்டிருந்தது. அதற்குள் துடுப்புகளும் வைக்கப் பட்டிருந்தன. அவற்றையே பிரேமா பார்த்தாள். "படகில் ஏறி பரந்தாமனுடன் சென்று பரவசமடை" என்று ஆசை துரிதகாலத்தில் பாடியது. அடுத்த நொடியில் காரணத்தோடு கூடிய ஒரு நிகில். அதன் எதிரொலிபோல தேகத்தில் ஓர் அதிர்ச்சி. 'பிரேமா' என்று பரந்தாமன் மறுபடியும் விளிக்கும்போது அத்திகிலுணர்ச்சியை மறைத்து சமாளிக்க ஒரு முயற்சி.

பிரேமா திரும்பினாள். பரந்தாமன் சட்டென்று படகுக்கும் மரத்துக்கும் இணைப்பாக விளங்கிய கயிற்றை

அவிழ்த்தான். படகை கரை ஓரமாக இழுத்து நிறுத்தி விட்டு பிரேமாவுக்குக் கைலாகு கொடுத்து, அதிலே ற்றினான். பின் புறமாய் நின்றபடியேபடகை கரையிலிருந்து சிறிது தூரம்வரையில் தள்ளிவிட்டு, பின் புதானும் தாவி அதிலேறி உட்கார்ந்தான். அதில் தாவி ஏறும் அவனுக்கு அவள் கைலாகு கொடுத்தாள். கரஸ்பரிசம் இன்ப மின்சாரத்தை ஏற்றியது.

படகில்ஏறியதும் பரந்தாமன் அவளின் கோமளமயமான இரு கரங்களையும் உணர்ச்சியோடுபற்றி தன் கன்னங்களில் பதிய வைத்துக்கொண்டே சொன்னான்: "இக்கொடியை நம்பி வாழ்க்கைப்படகில் ஏறி விட்டேன். காதல் துணைசெய்யும்! இல்லையா? பிரேமா"—சிரித்தான்.

படகு ஜலவேகத்தில் நதியின் மத்திய பாகத்திற்கு அதற்குள் வந்துதள்ளாடியது. உடனே பரந்தாமன் சட்டென்று பிரேமாவுக்கெதிர்ப்புறமாக உட்கார்ந்து துடுப்பைஎடுத்து ஜலத்தில் வலிக்கத் தொடங்கினான். பிரேமாவும் மற்றொரு துடுப்பை எடுக்கப்போனாள்.

"பிரேமா, படகு ஓட்ட உனக்குத் தெரியுமா?" என்று ஆவலுடன் கேட்டான்.

புன்னகையை மலரவிட்டுக்கொண்டே "தெரியாதுதான்! ஆனால் துணைசெய்யும் காதல் வழி காட்டாதா, என்ன?" என்றாள். அதே சமயத்தில் தண்டை எடுத்து வலிக்கமுயற்சித்தாள்.

"வேண்டாம். உன் கை சிவந்துவிடும்! நீ பேசாமல் உட்கார்" என்று கூறிவிட்டு அத்துடுப்பை வாங்கிக் கொண்டான். பின்பு படகை நதியின் ஓட்டத்திற்கு எதிர்ப்புறமாகச் செலுத்தாமல் ஜலஓட்டத்தின் பக்கமே திருப்பிவிட்டான். "பிரேமா, இனி நாம் படகைத் தள்ளவேண்டியதில்லை. இதோ பார், எவ்வளவு உற்சாகமாக இந்நதி பெருக்கெடுத்து ஓடுகிறது; ஜலவேகமே இப் படகைத் தள்ளுகிறது பார்.சிறிது தூரம்வரையில் இப்படியே போவோம்" என்றான்.

"என்ன ஆச்சரியம்! காதலுக்கு நதிகூட துணை செய்கிறதே!"

"இதில் என்ன ஆச்சரியம்? காதல் தெய்வ நிலை அடையும்போது பிரகிருதியில் உள்ளவை எல்லாம் அதற்கு அடிபணிந்துதானே ஆகவேண்டும்!"

"அப்பாடா! இப்படி ஒரு வார்த்தையை உங்களிடம் கேட்கக் கொடுத்துவைக்கவேண்டுமேஎன்று ஏங்கிய காலம் ஒன்றுஉண்டு. அத்தகைய ஏக்கத்திற்கு இனி இடமேயில்லை என்று நிச்சயமாக நம்பலாம் அல்லவா?"

"பைத்தியமே, உன்னை அழைத்துவரும்போதே வழியில் நான்சொன்னதை மறந்துவிட்டாயா?......"

குறுக்கிட்டு ஒன்றும் தெரியாதவள்போல் "எது... எது?" என்றாள் இன்பத்துண்டங்கள் போன்ற உதடுகள் அசைய பிரேமா.

"அதுதான்; நீ இல்லாவிட்டால் நான் இல்லை என்ற சத்தியம். இது ஓர் ஆத்ம இரகசியம். இந்த இரகசியத்திலும் ஒரு சுகம் உண்டு! ........"

"ஓ! அதென்ன....? ஆத்ம சுகம் என்று சொல்லப் போகிறீர்களோ?........"

"ஆத்மசுகம்தான். அந்த ஆத்மசுகம் நீதான்!"— பரந்தாமன் உள்ளத்தில் துள்ளும் பரவசத்தைக் கண்களில் படரவிட்டுக்கொண்டேபேசினன்.

பிரேமா சம்பாஷணையை நீடிக்கவிரும்பினுள். அவள் கேட்டாள்: "அந்த ஆத்ம சுகத்தை நீங்கள் இதுவரையில் அனுஷ்டித்துவந்த ஞானத்தால் பெறக்கூடாதா?"

"சரியான கேள்வி. பெறலாம். ஆனல்அது வீணான வெறும் சுமையாகவே இருக்குமென்று எனக்குப் படுகிறது."

"சுமையா? சுமையைப் போக்கி பூரண விடுதலையை அளிக்கக்கூடியது ஞானம் என்றல்லவோ சொல்லுவார்கள்......."

“வாஸ்தவம். பிரேமா, உனது ஞானம் என் புத்தியைத் தெளியவைக்கிறது. என் கட்சியிலிருந்தே உன் கட்சிக்குப் பலம் தேடிக்கொள்ளுகிருய்! அவ்வளவு தானே?”

“இல்லை, இல்லை, ஞானம் எப்பொழுதும் சுமையாகாதென்று சொல்லவே வந்தேன்......”

“உண்மை, ஆனால், அன்பின் அருள் இல்லாவிட்டால்—இதய வளர்ச்சியைப் பெருவிட்டால் அந்த ஞானம் வெறும் சுமைதான் என்னும் சத்திய தரிசனத்தை ஒரு பெண்—அதுவும் இந்தப் படகில் உட்கார்ந்து கொண்டு எந்தப் பெண் என் வாயைக் ‘கிண்டு’கிருளோ, அந்தப் பெண்ணின் இனிமையின் மூலம் நான் கண்டு கொண்டுவிட்டேன். இனியும் உனக்குச் சந்தேகம் தானு?”—புன்னகைத்தான்.

“சந்தேகமொன்றுமில்லை. ஆனால், எனக்குமாத்திரம் சாபமிடும் சக்தியில்லையே என்றுதான் வருத்தப்படுகிறேன்.”

“ஏன்? எதற்காக?”

“எதற்காகவா? அம்மாதிரி இதயவளர்ச்சி பெருத ஞானம் அடியோடு இந்த உலகத்தில் தலை காட்டாமல் நாசமாகப் போகட்டும் என்று சபிப்பதற்காகத்தான்!”-அவளின் அமிர்தமான அதர தளங்களில் எவ்வளவோ ‘புண்ணியம்’ செய்ததின் பலனுகவே அப்புன்முறுவல் விளையாடியது!

இதைக் கேட்ட பரந்தாமனும் ‘கலகல’வென்று சிரித்துவிட்டுக் கூறினன்.

“இம்மாதிரி சாபமிட வேண்டிய தேவையேயில்லை. ஏன் தெரியுமா? பெண்ணினம் என்று ஒன்று இவ்வுலகத்திலிருக்கும்வரையில், அது ‘வறண்ட’ ஞானத்தின் தலையில் குட்டி பக்குவப்படுத்திவிடும்! அந்தப் பெண் இனிமை கலக்காவிட்டால் இதய வளர்ச்சியுமில்லை;

ஞானமுமில்லை; பிறகு எல்லாம் சூன்யந்தான்! "சக்தியின்" ஜீவ-பசையில்லாமல் எந்த ஞானமும் பரிபூரணமடையாதென்பதை உணர்கிறேன். பிரேமா, நீ இனி என்னைப் பூரணமாக நம்பலாம். பெண் ஒரு பாவ சிருஷ்டி என்று எண்ணிய பாவத்திற்காக நான் இதுவரையில் அனுபவித்தது போதாதா? இதோ, என்னைப் பார், வாழ்வை சூன்யமாக்கும் 'வேதாந்த'த்தை மறந்துவிட்டு, வாழ்க்கையை இன்பமயமாக்கும் வேதாந்தத்தைப்பற்றியே இனி பேசுவோம்! இப்பொழுதாவது உன் மனம் சமாதானமடைந்ததா?—" இவ்விதம் இதய உருக்கத்தோடு பேசிக்கொண்டே போனான்.

உற்சாகத்தில் தலைகால் தெரியாத உணர்ச்சியின் தடுமாற்றத்தைப்போல படகு நதிஜலத்தின் இழுப்பில் அங்குமிங்குமாக ஆடிக்கொண்டே போய்க்கொண்டிருக்கிறது. பல முறைகள் துடுப்பை அவன் தள்ளவுமில்லை. வானப் பிரதேசத்தில் மதியப் பெண்ணின் பிரகாசம் வரவர கூடிக்கொண்டேயிருந்தது. அப்பிரகாசத்தைக் கண்டு பொறாமைக்கொண்ட சில மேகக்கூட்டங்கள் இடை இடையே குறுக்கிட்டு ஓடின.

அப்பொழுது அடித்துக் கொண்டிருந்த காற்றில் மாத்திரம் உக்ரம் அதிகமாய்க்கொண்டேயிருந்தது! வசந்தமாக இருக்கவேண்டிய அது எந்தக் காரணத்தினாலோ 'ருத்ரவேஷம்' போட்டுக் கொண்டு விட்டது!

இன்ப அச்சுக்களைப்போல பதிந்த பாந்தாமனின் வார்த்தைகளைக் கேட்டதும் பிரேமாவின் உள்ளம் பரவசத்தில் பாய்ந்தது. இன்பத்தின் 'பல்லவி எடுப்பு' போல அவள் முகம் விளங்கியது. அதே நொடியில் உள்ளூர உதித்த ஓர் எண்ணம்—வெளிப்படுத்த முடியாத எண்ணம் அரித்தும் கரையும்போது விஷம் தலைகாட்டியது போல கிளப்பி வேதனையைப் பரப்பியது. உடம்பை ஒரு முறை குலுக்கிக்கொண்டு தன்னைச் சமாளித்த பிரேமா குவிந்த தாமரையைப் போல பாந்தாமனை நோக்கினாள். அந்நோக்கில் அர்த்தமில்லாமல் இல்லை. "ஆத்ம சுகத்தைப் பற்றியும் இதய வளர்ச்சியைப் பற்றியும், அன்பின்

அருளைப் பற்றியும் இதுவரையில் கூறினீர்களே! அவை எங்கே? எங்கே?" என்று அவளுடைய ஆத்மா தேக முழுவதையும் தன் வயப்படுத்திக்கொண்டு கண்களின் மூலம் கேட்டது!

அச்சமயம் பார்த்து சந்திரிகையை ஒரு மேகப் படலம் சிறிது மறைத்தது.

பரந்தாமன் பேசவில்லை; அவள் கண் காட்டிய ஆத்ம வேட்கையைக்கண்டான். சட்டென்று நகர்ந்து பிரேமாவின் புஜங்களில் தன் கரத்தைப்படரவிட்டான். அதிகம் கூறுவானேன்? அவள் அவன் பக்கத்தில் நெருக்கமாக உட்காரும்படி செய்துவிட்டது அக்கரம்.

பரந்தாமன் துடுப்பைக்கொண்டு தள்ளாததினால் இப்பொழுது படகு அலைகளின் இஷ்டப்படி தள்ளாடியது. இன்பத்தில் தள்ளாடும் பிரேமாவும், அவனும் அதைக் கவனிக்கவில்லை.

"இதோ பார் பிரேமா, இந்த முக்காட்டை எடுத்துவிடு. இச்சந்திர ஒளி உன் முக ஒளியைக் கண்டு வெட்கப்படவேண்டும்." இவ்விதம் கூறி அவள் முக்காட்டை விலக்க முயற்சித்தான்.

அதற்கு அவள் இடம் கொடுக்கவில்லை. சிறிது தள்ளி அமர்ந்து "பரவாயில்லை, காற்று பலமாக அடிக்கிறது. குளிர்கிறது. அதனால்தான் காதை மூடி முக்காடு போட்டிருக்கிறேன்" என்று கூறி நிலைமையைச் சமாளித்தாள்.

அவள் இஷ்டத்திற்கு விரோதமாகப் போக விரும்பாத பரந்தாமன் அதைப்பற்றி மேலும் வற்புறுத்தவில்லை. "சரி, உன் இஷ்டம். சந்திரிகையின் களங்கம், அதன் பிரகாசத்தைக் குறைக்கவில்லை; கூட்டவே செய்கிறது. அதுபோல இந்த முக்காடும் உன் அழகுக்கு ஓர் அழகுதான் செய்கிறது!" என்று வேடிக்கையாகப் பேச ஆரம்பித்தான்.

"சந்திரிகையின் களங்கம். ஆம். என் இருதயத்திலும் ஒரு களங்கம்தான்; மன்னிக்க முடியாத களங்கம். ஆமாம், அதை மறைக்கத்தானே இவ்வேஷம்?" இவ்விதம் யாரோ அவளைப் பார்த்துக் கேட்கவில்லை; உள்ளூர உதித்த ஓர் எண்ணம்தான். அது அவளைத் திடுக்கிட வைத்தது. மலையின் உச்சியிலிருந்தபடியே சுற்றியுள்ள இயற்கைக் காட்சிகளைக் கண்டு ரசித்து மகிழும் நேரத்தில் திடீரென்று கிடுகிடு பாதாளம்போல தென்படும் கீழ்ப்பிரதேசத்தைக் கண்டதும் தலை சுற்றுகிறதல்லவா? அந்நிலையில் விளங்கினாள் அவள்.

"பிரேமா, என்ன யோசிக்கிறாய்?"

"ஒன்றுமில்லை. சந்திரிகையில் உள்ள களங்கத்தைப்பார்த்ததும்...."

"உம்........பார்த்ததும் என்ன தோன்றியது உனக்கு?..."

"வாழ்க்கையில் வந்து ஒட்டிக்கொள்ளுகிற ஒரு பெண்ணும் களங்கம்தான் என்று சிலர் சொல்லுகிறார்கள் அல்லவா? அவர்கள் எண்ணுகிறபடி பெண் ஒரு களங்கமாகவே இருந்த போதிலும் சந்திரனுடைய பிரகாசத்தைக் கூட்டிக் காட்டும் களங்கம் போலவே பெண்ணும் வாழ்க்கையின் பிரகாசத்தை அதிகமாக்குகிறாள் என்றே எனக்குத் தோன்றியது. இது வாஸ்தவந்தானே?"

"உண்மை. ஆனால் ஒரு தப்பு...."

"அதென்ன?"

"வாழ்வின் களங்கம் பெண் அல்ல. பெண் இல்லாவிட்டால் வாழ்க்கையே பிரகாசிக்காது; யோசித்துப் பார்க்கப் போனால் பெண் இல்லாவிட்டால் வாழ்வேயில்லை; ஏனெனில் பெண்மையைக் கொண்டுதான் இந்த வாழ்வு இவ்வுலகத்தில் பெயர் சொல்லிக் கொண்டிருக்கிறது! அதொன்று மாத்திரமில்லாவிட்டால் நீ யார்? நான்யார்? ஏன்?, இந்த உலகம் தான் ஏது....?"

பரந்தாமனின் அழகு மின்னும் இன்பப் பேச்சுக்களில் லயித்ததும் பிரேமா தன் அகத்தே இடை இடையே தலைகாட்டும் துன்ப நினைவை மறந்து தானும் உற்சாகமாகப் பேச ஆரம்பித்தாள். "அப்பாடா! இத்தனையா 'இன்ப ஆத்ம விசாரணை'யைக் கேட்க நான் எவ்வளவு நாள் தவம்கிடக்க வேண்டியிருந்தது!" —இளநகைப்பூத்தாள்.

"பிரேமா, உண்மையை நான் உணர்ந்துவிட்டேன். இது வெறும் வேடிக்கையல்ல. காதலிப்பதைவிட இந்த உலகத்தைத் துச்சமென்று துறந்துவிடுவது ஆயிர மடங்கு சுலபமானதென்பதை நான் உணர்ந்துவிட்டேன்."

"அப்படியானால் காதல் அவ்வளவு கஷ்டமானதா?"

"கஷ்டமில்லை. கருத்தொத்து ஆதரவுபடும்போது கஷ்டமேது? ஆனால் காதலின் இன்பத்திலும் வேதனை உண்டு! பரிபூரணத்வத்தை அடைந்த காதல் கஷ்டத்தைப் பொருட்படுத்துவதில்லை; ஏனெனில் அது தியாகமயமானது; சுயநலமற்றது...." இவ்விதம் பரந்தாமன் பேசிக்கொண்டே போகும்போது அவள் தனக்குள், "ஆம். காதல் தியாகமயமானது; சுயநலமற்றது, சுயநலமற்றது" என்று எத்தனையோ தடவை உச்சரித்துக்கொண்டாள். மன்னிக்க முடியாத பெரிய தவறுதல் செய்துவிட்டதாக உணர்ந்தாள். இதற்குப் பிராயச்சித்தமில்லையா? இந்தக் கேள்வி அவள் உள்ளத்தைப் பிளந்து கொண்டு படமெடுத்தது! "பிராயச்சித்தம் வேறொன்றுமில்லை. எந்த இச்சை இந்த வேஷத்தைப் போட்டதோ, அதே இச்சையைத் தாங்கி நிற்கும் ஒன்றுக்கு முடிவு தேடுவதுதான். அதொன்றுதான் சரியான வழி" என்று எண்ணினாள். ஆனால், எதிரே பரந்தாமனைப் பார்க்கும்போது தன் உள்ளத்தில் பரவும் உணர்ச்சிகள் அந்த எண்ணம் ஈடேறாதென்று கூறின. இன்னும் அவன் மனத்தை சரியாக அறிந்துகொள்ளாமல் அவசர முடிவுக்கு வருகிறாயோ என்று புத்தி கூறியது. உணர்ச்சிகளின் புயலை பெருமூச்சால் சமாளித்துக்கொண்டே சொன்னாள்: "தயவுசெய்து என்னை இனி, தீண்டாதீர்கள்."—அவள் குரல் கம்மியது.

"பிரேமா, வேண்டாம். மறுமுறை அவ்வார்த்தையைக் காதில் போடாதே. வேடிக்கைக்காகவே சொன்னேன் என்று நீ சொன்னால்தான் என் மனம் நிம்மதி அடையும்"—என்றான். ஆனால் பிரேமா அந்த வார்த்தையை வேடிக்கைக்காகச் சொல்லவில்லை என்று அவனுக்குத் தெரிந்துவிட்டது. அவள் முகத்தோற்றமே அதை அறிவித்தது. பிரேமா மௌனமாகத் தலைகுனிந்தாள்.

"பிரேமா, உன் முடிவு இறுதியானதா? அப்படியானால் என் வாழ்வு சூன்யம்தானா? நான் இதுவரையில் கட்டிய இன்பக் கோட்டை எல்லாம் கனவுதானா? பிரேமா, தலைநிமிர்ந்து பார். வீணையைச் சுருதி கூட்டி விட்டு, அதன் நரம்புகளை ஒவ்வொன்றாக அறுப்பது நியாயமா? எதற்காக நீ திடீரென்று இப்படிக் கூறினாய்?"—இவ்விதம் உணர்ச்சிகள் வார்த்தைகளைக் கோத்து அடுக்கிக்கொண்டே போயின.

"எதற்காகக் கூறினேன் என்றுதானே கேட்கிறீர்கள்? நான் ஒரு பாவி. என் காதல் சுயநலமானது; வெறும் இச்சை மயமானது. இது உண்மை. பொய் சொல்லுவதாக எண்ணவேண்டாம். நான் வேஷக்காரி. சொன்ன சொற்படி நடக்காதவள்."

"இதென்ன? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே! எதனால் இப்படியெல்லாம் கூறுகிறாய்?"—ஆச்சரியமுடன் கேட்டான்.

"எதனாலா? நான் இங்கு இருப்பதினால்தான்."

"இங்கு இருப்பது தவறுதல் என்று உணர்கிறாயா?"—அவன் குரலில் ஒரு தத்தளிப்பு. பதிலை அறிய ஓர் ஆவல். சரீரம் முழுவதும் ஒரு திணறல்.

"ஆம். தவறுதல்; மன்னிக்கமுடியாத தவறுதல்."

"எந்த வகையில்? அதை நான் அறியக்கூடாதா?"

"அறியலாம். தயவுசெய்து முதலில் படகைத் திருப்புங்கள்."

"எங்கே?"

"ஆச்சிரமத்தின்பக்கம்."

"பிரேமா, உண்மையிலேயே இதைச் சொல்லுகிறாயா? உன் மனம் திடீரென்று மாற நான் என்ன தவறு செய்தேன்? அல்லது என்னை மேலும் பரிசோதிக்க விரும்புகிறாயா?"

"அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. தவறு செய்திருப்பவள் நான்தான். என்னை நானே பரிசோதித்துக் கொண்டேன். வேஷம் வெளிப்பட்டது. உண்மை எச்சரித்தது. சுயாலக்காரி என்று எடுத்துக்காட்டியது. அவ்வளவுதான். உங்களிடம் பாவ மன்னிப்புக் கேட்டுக் கொண்டு வந்தவழியே போக விரும்புகிறேன்."

படகு போய்க்கொண்டேயிருக்கிறது, அப்படியும் இப்படியும் ஆடிக்கொண்டே.

காற்றின் சுருதி கூடிக்கொண்டே போகிறது.

மேகங்கள் கூடுகின்றன; காதலர்போல அணைகின்றன; அணைந்தபின் பிரிகின்றன!

இப்பொழுது நிலவு மங்கிவிட்டது. அந்த மங்கிய நிலவினிலும் சொல்ல முடியாத ஒரு சௌந்தரியக் கற்பனையின் விலாசம் 'தூங்காமல் தூங்கி'க்கொண்டிருக்கிறது!

"மூடுமந்திரமாகப் பேசியது போதும். சுயாலக்காரி சுயாலக்காரி என்று கூறுகிறாயே. எந்த வகையில் நீ சுயாலக்காரியாவாய்?"—படபடப்புடன் கேட்டான்.

அவள் முகமும் மங்கிய நிலவுமாதிரி மாறிவிட்டது; ஏனெனில் பலவிதமான சிந்தனை மேகங்கள் மொய்த்து விட்டன.

அவள் சொன்னாள்: "தங்களுக்காக சகல தியாகமும் செய்யக் காத்துக்கொண்டிருப்பவள் என் குடிசையில் காத்துக்கொண்டிருப்பாள். அவளுக்குக் கொடுத்த வாக்குறுதியைக் கொலைசெய்துவிட்டு, உங்களைப் பார்த்ததும் நான் இங்கு வந்துவிட்டேன்! சுயநலம்தான் என்னை இங்கு இழுத்தது. தங்களைச் சந்திக்க ஏங்கிக் கொண்டிருக்கும் அவளை நான் மோசம் செய்தேன்........"

பரந்தாமன் குறுக்கிட்டு "யாரைப்பற்றி குறிப்பிடு கிறாய்?" என்றான்.

"திலகவதிதேவியார்தான்."

"என்ன? திலகவதியா? அவள் எதற்காக உன் குடிலுக்கு வரவேண்டும்?"

"நான்தான் அழைத்திருந்தேன்."

"ஏன்?"

"ஏன்? அவள் தங்களிடம் கொண்டுள்ள காதலை மறந்துவிட்டீர்களா? அவளுக்கு நான் அளித்த வாக்குறுதியையும் நான் மறந்துவிட்டேன் என்று நினைத்து விட்டீர்களா? சிறிது தவறினேன் என்பது வாஸ்தவம். இனி அத்தவறை பிரேமா மறுபடியும் செய்யமாட்டாள். பல்லவராஜ்ய மன்னரின் மருமகராக பரந்தாமர் மாற வேண்டும் என்பதே என் முடிவு"—பிரேமா மிகவும் தந்திரமாகவும், வாக்குச் சாதுரியமுடனும் பேசினாள். பரந்தாமனின் பதில்களை அறியவே அவள் துடிதுடித்தாள். ஆனால், அப்பதில்கள்தான் அவளின் உயிரை நிலைக்கவைக்கத்தக்கவை; அல்லது நிலைகுலையவைக்கத் தக்கவை என்பதை பரந்தாமன் எப்படி அறிவான்? அவன் தன் உள்ளத்தில் உள்ளதை அப்படியே கூறினான்.

"பிரேமா, தயவு செய்து திலகவதியைப்பற்றி பேசாதே. அது பேசி முடிந்துபோன கதை என்பதை மறந்துவிட்டாயா?"

"அப்படியானால் அவளைத் தாங்கள் வெறுக்கிறீர்களா? அந்தோ! அவள் செய்த பாவமென்ன? அவள் இருதயத்தை நான் அறிவேன். இன்று தங்களுடன் படகில் அனுப்பிவைக்கிறேன் என்று அவளுக்குக் கூறினேன். அவளும் என்னை நம்பி வந்திருப்பாள். அவளை நான் உடனே போய்ப் பார்க்கவேண்டும். அவள் அங்கு என்னைப்பற்றி என்ன நினைத்துக்கொண்டிருக்கிறாளோ? தயவு செய்து படகைத் திருப்புங்கள்."

"அது முடியாத காரியம்."

"இல்லை, நான் சொல்லுவதைக் கேளுங்கள். திலகவதியின் உள்ளத்தை அறிவேன். தங்களை அடைய முடியாவிட்டால் அவள் கட்டாயம் உயிரையே விட்டுவிடுவாள். அது எனக்கு நன்றாகத் தெரியும். பிரேமா இனி உங்களுக்குச் சகோதரிதான். அவளிடம் இனி நீங்கள் வாஞ்சையைத்தான் எதிர்பார்க்க முடியும்."

"அவ்வார்த்தையை என் காதில் போடாதே. பிரேமா, என்னை நீ பரிசோதிக்கிறாய் என்று நன்கு தெரிந்துகொண்டுவிட்டேன். திலகவதியிடம் எனக்கு யாதொரு வெறுப்பும் இல்லை. அவளுக்காக நான் அனுதாபப்படுகிறேன். நீ சொல்லலாம்; அவள் எந்த வகையிலும் உன்னைவிட சிறந்தவள் என்று. உலகம் அதை ஒப்பும். உண்மையில் உன்னைப் பார்த்தால் அவளைப் பார்க்கவேண்டியதில்லை; அவளைப் பார்த்தால் உன்னைப் பார்க்கவேண்டியதில்லை என்று எல்லோரும் சொல்வார்கள். ஏனெனில், உருவ ஒற்றுமையுமிருக்கிறது. ஆனால் பரந்தாமன் திலகவதியிடம் விரும்புவது வாஞ்சைதான். பிரேமா இருக்கும் ஸ்தானத்தில் அவளுக்கு இடமேயில்லை. இது நிச்சயம்......"

பிரேமா குறுக்கிட்டு, "அவசரப்படாதீர்கள், பிரேமாவுக்காக அந்த அபிப்பிராயத்தை தயவு செய்து மாற்றிக்கொண்டுதானாகவேண்டும். அப்பொழுதுதான் என் ஆத்ம சேவை பூர்த்திபெறும்...."

"திரும்பித்திரும்பி அதைச் சொல்லாதே. நீ படகை-வாழ்வுப் படகையே கவிழ்க்கப் பார்க்கிறாய். இந்தப்

படகு பிரேமாவுடன் ஜலத்தின் மீது யாதொரு அபாய முமின்றிபோகும். ஜலத்தின்மீது படகு இருக்கும் வரையில் அபாயமில்லை. ஆனால், அதே ஜலம் படகுக்குள் வந்துவிட்டால்....? அதுபோலத்தான் திலகவதியை என் வாழ்வில் புகுத்தப்பார்க்கிறாய். யோசித்துப்பார். இது நியாயமா? மீண்டும் சொல்லுகிறேன். திலகவதியைப்பற்றி என் காதில் போடாதே. என்னை நீ பரிசோதித்ததும் போதும். நான் பரிபூரணமாக மாறிவிட்டேன். நான் புது மனிதன்; பெண்மையின் இனிமையான சக்தியில் லயித்து இன்ப மோட்சத்தை அடைய விரும்புகிறவன்.”

இவ்வார்த்தைகளைக் கேட்டதும் பிரேமா திகைத்து விட்டாள். உள்ளூர ஆத்மா குடைசாய ஆரம்பித்தது. பரந்தாமனின் உறுதியையும், அவன் திலகவதியிடம் மனம் குவியாத நிலையையும் அறிந்ததும் அவள் இதயத்தில் வெடிப்புகள் கண்டன. பரந்தாமனிடம் அடைந்த அப்படு தோல்வியை அவளால் பொறுக்க முடியவில்லை. அதே சமயத்தில் சுயநலத்தின் காரணமாகத்தான் அங்கு வந்து இதுவரையில் நடித்த நாடகங்களை நினைக்க நினைக்க அவள் உயிர் குன்றியது. அவள் யோசனையை ஏற்று அங்கு அவ்விதம் வந்தது பெரிய பிசகு என்று உணர்ந்து தன் புத்தியைத் தானே திட்டிக்கொண்டாள். இரு ஆத்மாக்கள் ‘பிரேமாஞ்சலி’ செய்து கொள்ளுவதற்கு இடையூறாகத் தான் இருப்பதை உணர்ந்து சட்டென்று ஒரு முடிவுக்கு வர விரும்பினாள். உடனே பரந்தாமனைப் பார்த்து “அப்படியானால் திலகவதியின் கதி என்ன?” என்று கேட்க அவள் விரும்பினாள். ஆனால், வாய் திறந்து கேட்கவில்லை. ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவளாய், திடீரென்று எழுந்தாள். அப்படியே நதியில் பாய முயற்சித்தாள்.

நிலவின் மங்கல் இன்னும் மாறவில்லை. கறுத்த மேகங்களில் பல, பரிபூரணமான சந்திரனை மறைத்துக் கொண்டிருக்கின்றன. அக்கறுத்த மேகங்களின் விளிம்புகளில் மாத்திரம் வெள்ளிக்கோடு இழுத்த மாதிரி சந்திர ஒளியின்ரேகை படர்ந்திருந்தது.

பிரேமா நதியைநோக்கிப் பாயப் போகிறாள். பரந்தாமன் அப்படியே பாய்ந்து அவளைப்பிடித்து தன் பக்கமாகத் திருப்பி "என்ன காரியம் செய்யத் துணிந்தாய்? ஆத்மஹத்தி ஆகாது. பைத்தியமே," என்று தடதடத்தான். அவளால் பேசமுடியவில்லை. நிற்கவும் முடியவில்லை. ஒடிந்து விழுந்தாள். பரந்தாமன் அவளை அப்படியே தன் மார்பகத்தில் அணைத்துக் கொண்டான். அவள் தேம்பித்தேம்பி அழுதாள்.

படகில் அவ்விருவரும் எழுந்து நின்றதால், அது ஒரு பக்கம் சாய்ந்தும், மற்றொரு பக்கம் சிறிது உயர்ந்தும் தள்ளாடியது. காற்றின் வேகம் கூடியது. நதியின் ஜலம் படகுக்கு உள்ளேயும் வந்து தெறித்தது. அதே சமயத்தில் படகு நதியில் ஏதோ கட்டையைப்போல மிதந்து போய்க்கொண்டிருந்த ஒரு வஸ்துவின்மீது மோதி திரும்பியது.

இந்நிலையை உணர்ந்த பரந்தாமன் சட்டென்று பிரேமாவை ஒரு பக்கமாக உட்காரவைத்துவிட்டு துடுப்பை எடுத்து வலித்து படகை நிதானப்படுத்தித் தள்ளினான். படகின்மீது இடித்த வஸ்து என்ன என்பதை அறிய அவன் விரும்பினான். அங்கு மிதந்துச் செல்லும் வஸ்துவின்மீது திருஷ்டியைச் செலுத்தினான்; திடுக்கிட்டான். கண்கள் விரிந்தன. அவன் முகத்தையே கவனித்துக்கொண்டிருந்த பிரேமா சட்டென்று திரும்பி ஜலத்தில் மிதந்துசெல்லும் வஸ்துவை நோக்கினாள். அவளும் திடுக்கிட்டு "ஆ! ஏதோ மனித உருவம் மாதிரி தெரி....கிறதே...." என்றாள். வார்த்தைகள் தடதடத்தன.

"பிரேமா, பயப்படாதே. யாரோ நதியில் தவறி விழுந்திருக்கவேண்டும் என்று நினைக்கிறேன்."

"சீக்கிரம் படகை அந்த உருவத்திற்கு அருகே தள்ளுங்கள்'" என்றாள். அவள் மனத்தில் பற்பல சந்தேகங்கள் கிளம்பின. அந்த உருவம் யாராக இருக்கலாம் என்று ஊகிக்க ஆரம்பித்தாள். அதே நொடியில் அந்த உருவத்தைப் போல தானும் நதியில்

ந்து சென்றிருந்தால் ஒரு கவலையுமில்லையே என்று னைத்தாள்.

அதற்குள் படகு மறுபடியும் அந்த மிதக்கும் உருவத்திற்கு அருகே வந்துவிட்டது.

பரந்தாமனும், அவளும் அதைப் பார்த்தார்கள். ஏககாலத்தில் "ஹா! பெண் உருவமாதிரி தெரிகிறதே!" என்றார்கள்.

பிரேமா சொன்னாள்: "சீக்கிரம் அந்த உருவத் தைத் தூக்கவேண்டும். யார் என்று பார்க்கவேண்டும்"- அவள் நெஞ்சம் ஆடியது. தேகம் நடுங்கியது.

பரந்தாமனும் அப்பெண் உருவத்தைத் தூக்கவே விரும்பினான். படகில் உள்ளபடியே அதைத் தூக்குவது எளிதான காரியமல்ல என்று தோன்றியது. உடனே அவன் தன் நீண்ட அங்கவஸ்திரத்தை எடுத்து சிறிது முறுக்கினான்.

பின்பு படகை அந்த உருவத்தின் அருகே செலுத் தினான். படகிலிருந்தபடியே அங்க வஸ்திரத்தினால் அந்த உருவத்தின் காலில் இறுகக்கட்டினான். வஸ்தி ரத்தின் மற்றொரு முனையை படகின் முகப்பில் அழுத்த மாகப் பிணைத்தான்.

பிரேமா பெருமூச்சு விட்டுக்கொண்டே எழுந்து நின்று இக்காட்சியைப் பார்த்துக்கொண்டிருந்தாள். பின்னர் பரந்தாமன் படகைக் குறுக்காகத் திருப்பி, அந்நதி ஓடும் பக்கமாக சமீபத்தில் உள்ள கரையை நோக்கித் தள்ளினான். வஸ்திரத்தில் கட்டுண்டிருந்த பெண் உருவத்தைப் படகு இழுத்துக்கொண்டே கரையை நோக்கிச் சென்றது.

இருவர் உள்ளமும் அந்நதியின் ஜலத்தைப்போ லவே நிலைகொள்ளாமல் ததத்தளித்துக்கொண்டிருந்தது.

நதிக்கரை. மதியை மூடிக்கொண்டிருந்த முகில் ஜாலங்கள் சிறிது சிறிதாக விலகிக்கொண்டேயிருக் கின்றன.

காற்றில்— அப்பொழுது வீசிக்கொண்டிருந்த காற்றில் லளிதம் இல்லை; இரைச்சலுடன். சுழன்று சுழன்று வீசிக்கொண்டிருக்கிறது.

ஆற்றங்கரையில் பாதி பாகமும், பற்ற பாதி ஜலத்திலுமாக விளங்குகிறது அப்படகு.

பிரேமா திகிலைக் கவ்விக்கொண்டிருக்கும் பார்வையுடனும், துடிக்கும் இதயத்துடனும் நிற்கிறாள், கரையிலே.

அதேசமயத்தில் பரந்தாமன் ஜலத்திலிருந்து தூக்கி வந்த அப்பெண் உருவத்தை நதிக்கரையில் மணல்மீது படுக்கவைத்தான். நிலவு மங்கியிருந்ததினால் சட்டென்று அந்தப் பெண்ணின் அடையாளத்தை அவனால் கண்டு கொள்ளமுடியவில்லை. சற்று குனிந்து அவ்வுருவத்தையே உற்று நோக்கினான்.

பிய்த்தெறியப்பட்ட தாமரைக்கொடிபோல அவள் துவண்டு போய்க்கிடந்தாள். பேச்சு மூச்சுயில்லை. முகத்தில் "நீலம்பூத்து" விட்டது. தேகம் கட்டையாகி விட்டது. ஜலத்தில் முழுவதும் நனைந்திருந்ததினால், கட்டியிருந்த அழகான பட்டாடை அவளின் தேகத்தோடு தேகமாக ஒட்டிக்கொண்டிருந்தது.

அப்பெண் உருவத்தை பரந்தாமன் குனிந்து பார்க்கும் அதே சமயத்தில் "ஹோ, சந்திரிகையே, பூலோகத்தில், இதோ, இந்நதியின் கரையில் ஒரு சோக நாடகம் நடக்கிறது. நீயே நன்றாகப் பார். நாங்கள் விலகிக்கொள்ளுகிறோம்" என்று சொல்லுவதுபோல வானத்தில் சசியை மறைத்துக்கொண்டிருந்த மேகங்கள் எட்டி ஓடிவிட்டன. உடனே மங்கிய நிலவு மாறியது. பளீச் என்று எங்கும் ஒளி பரவியது. மணல்மீது கிடக்கும் மங்கையின்மீதும் அதுபடர்ந்தது.

கண்டான் பரந்தாமன்; ஆச்சரியம் கண்களை மலைக்கவைத்தது. அதிர்ச்சி ஆத்மாவையே பிடித்தாட்டியது. தன்னையும் அறியாமல், "ஹா....யார்....? இலகவதியா?..." என்று கடகடத்தான். வார்த்தைகள் குடைசாய்ந்தன.

அப்பெண் உருவத்தைக் கீழே கிடத்தும்போதே அவளுக்கு அது யாராக இருக்கலாம் என்பது தெரிந்துவிட்டது. பரந்தாமன் 'திலகவதி' என்று சொல்லி முடிப்பதற்குள் அவள் அந்த உருவத்தின் அருகே பாய்ந்து, "ஹா, பிரேமா, மோசம் செய்தாயா?..." என்று கதறினாள். நேத்திரங்கள் தாரை தாரையாக கண்ணீரை வர்ஷித்தன. மேலே பேச முடியவில்லை. சோகம் தாங்காது உணர்ச்சிகள் 'மூர்ச்சை'யுற்றன. பெருமூச்சு விட்டுக்கொண்டே தேம்பினாள்.

இதைக்கண்ட பரந்தாமன் திக்பிரமை கொண்டுவிட்டான். இரு உருவங்களையும் சிறிது மாறிமாறி பார்த்தான். ஒன்றும் விளங்கவில்லை. "பிரேமாவா? யார் பிரேமா?" என்ற கேள்வி அவன் மூளையைக் கலக்கியது. "ஆமாம், திலகவதி எதற்காக ஆற்றில் விழுந்து இறக்கவேண்டும்?" என்ற சந்தேகம் அவன் சிந்தனையைப் பாரமாக்கியது. சட்டென்று ஒரு முடிவுக்குவர அவனால் முடியவில்லை. சோகத்தின் அதிவேகமான அலைமோதல்களைச் சமாளித்துக்கொண்டு "பிரேமா, பிரேமா" என்று கூப்பிட்டான். பதில் இல்லை. மறுபடியும் அழைத்தான். தேம்பித் தேம்பி அழும் குரலே பதிலாக விளங்கியது.

அவள் பைத்தியம் பிடித்தவள்போலப் பேச ஆரம்பித்துவிட்டாள்: "பிரேமா, நீ இப்படிச் செய்வாய் என்று கனவிலும் நினைக்கவில்லையே. இவ்விதம் செய்வாய் என்று தெரிந்திருந்தால் நான் ஒருகாலும் உன் ஆலோசனைக்கு இணங்கியே இருக்கமாட்டேன். ஐயோ! நான் மகாபாவி; சண்டாளி. உன்னைக் கொன்றது நதியல்ல; நான்தான்; இந்தக் கொலைகாரிதான். நீதான் புண்ணியவதி. உன் பிரேமைதான் மகா புனிதமானது. சுயநலத்தால் உன் ஆத்ம வேட்கையை அறியாத பாதகியானேன். நான் இன்னும் உயிருடனிருக்கிறேன். நீயோ பிரேமைக்காக ஆத்ம சமர்ப்பணம் செய்துகொண்டுவிட்டாய். உலகம் உன்னைப்போற்றும். நீயே உத்தமி. உன்னிடம் மன்னிப்புக் கேட்க எண்ணியே திரும்ப முயற்சித்தேன். அதற்குள்....ஐயோ!..."

பரந்தாமன் சட்டென்று அவள் புஜங்களைப் பிடித்து மெதுவாகத் தூக்கி, "பிரேமா, ஈதென்ன? ஏதேதோ உளறுகிறாய்? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே. திலகவதியைப் பார்த்து பிரேமா என்று கூப்பிடுகிறாய்? திலகவதி ஆற்றில் இவ்விதம் விழக் காரணமென்ன? இதைப்பற்றி உனக்கு ஏதாவது தெரியுமா?" என்று மளமளவென்று கேட்டுக் கொண்டே போனான்.

அவள் நிலைகுலைந்தவள்போல் தள்ளாடினாள். அவளால் பேசமுடியவில்லை. பரந்தாமன் அவளை அணைத்துக்கொண்டு, "பிரேமா, எனக்கு ஒன்றுமே விளங்கவில்லையே" என்று கண்களில் சோகத் துடிப்போடு, மறுபடியும் புகன்றான்.

திடீரென்று ஓர் உணர்ச்சி அவளை நிமிரவைத்தது. அழுகையும், துக்கமும் சிறிது ஓய்ந்து, பின்பு அவை ஓர் ஆவேசத்தை உண்டாக்கின. கடைசியாக ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவள் போல விளங்கினாள். அதே க்ஷணத்தில் அவள் பரந்தாமன் பிடியினின்று விலகிக் கொண்டு "தயவு செய்து என்னைத் தீண்டாதீர்கள். நான் ஒரு வேஷக்காரி. என்னை நீங்கள் இன்னும் தெரிந்து கொள்ளவில்லையா? இந்த மகா புண்ணியவதியின் உயிர் போவதற்குக் காரணமான பாதகி நான் தான்...."

"வேஷக்காரியா? பிரேமா, உனக்குப் பைத்தியமா, என்ன?"

"பைத்தியமில்லை. சுயநலம், சுயநலம். இது அருமையான ஓர் உயிரை பலிவாங்கிவிட்டது. பிரேமா என்று அப்புனிதமான பெயரில் என்னை அழைக்காதீர்கள். நான் அவ்வளவு புண்ணியம் செய்யவில்லை..." —மீண்டும் நயனங்களில் கண்ணீர் திரண்டது.

"என்ன? என்ன? நீ பிரேமா அல்லவா? இது உண்மையா? என் கண்கள் என்னை ஏமாற்றிவிட்டனவா? மாயையால் நான் மதிமயங்கிவிட்டேனா?...அப்படியானால் நீ யார்?"—படபடப்புடன் கேட்டான். ஆனால், குரலில்

கம்மல் குறுக்கிட்டது. அக்கம்மலிலும் சொல்லமுடியாத ஒரு நடுக்கம்.

"மகா புண்ணியவதி பிரேமாவைக் கொன்ற கொலை பாதகி திலகவதிதான் உங்கள் முன் நிற்கிறாள்! நன்றாகப் பாருங்கள்! வேண்டாம், வேண்டாம். அவள் முகத்தில் தாங்கள் விழிப்பதுகூட மகா பாவம். தங்கள் காதலை, எப்படியும் பெறவேண்டும் என்ற சுயநலத்தால் மற்றோர் அரிய பிராணனையே வாங்கிவிட்டாள். அச்சண்டாளி இன்னும் உயிருடன் உங்கள் முன் நிற்பதற்காகத் தாங்கள் ஆத்திரப்பட வேண்டும். அது நியாயம். ஆனால், கொஞ்சம் பொறுங்கள். ஒரே ஒரு வேண்டுகோள்; ஒரே ஒரு வார்த்தை தங்களிடம் பெறுவதற்காகவே அவள் நிற்கிறாள். இதுவரையில் பிரேமா வேஷத்தில் தங்களை ஏமாற்றியதற்காக அவளை மன்னித்தேன் என்று கூறுங்கள். அதுதான் அவள் தங்களிடம் கடைசியாக யாசிக்கும் வரம்..." மேலே பேச முடியாமல் பரிதாபமுடன் பரந்தாமனை நோக்கினாள். அவளின் விழிப் பிரதேச முழுவதையும் கண்ணீர் வெள்ளம் விழுங்கிவிட்டது. அது கண்ணாடி போன்ற கன்னங்களில் வழிந்தது.

அவள் பேசிக் கொண்டிருக்கும் போதே பரந்தாமன் யோசித்தான்: "என்ன ஆச்சரியம்! பிரேமா திலகவதியாயிருக்கிறாள். திலகவதி பிரேமாவதியாகி விட்டாள்! என் கண்கள் சிறிதும் சந்தேகிக்கவில்லை! ஏன்? என் அறிவு முழுவதையும் அந்த அழகில், அந்த ஒரே மோகன சிந்தனையில், அந்த ஒரே பிரேமாவின் கவர்ச்சியில் அடகு வைத்துவிட்டேன்! தெய்வ, கடவுளே, சங்கற்பத்தின் மூலம் உண்மையைப் போதித்துவிட்டாய்! இன்று நான் மாயையின் சக்தியைச் சரியாக உணர்ந்துவிட்டேன். பழுதையில் பாம்பு என்பார்கள்! ஆம், அறிவு மங்கும்போது பழுதையில் பாம்பு தோன்றுகின்றது! பிரேமையின் உச்சத்திலே பாம்பையும் பழுதை என்று நினைத்து நிச்சயித்தவனாய், அதைப் பற்றி ஏற முயற்சிப்பதும் உண்டு என்று சொல்லக் கேட்டிருக்கின்றேன். அது வாஸ்தவம். என் காதலின்

உணர்ச்சி ஆவேசத்தில் திலகவதியிடம் பிரேமாவையே கண்டேன்....ஆனல், பிரேமாவோ, கேவலம் இங்காக ஆங்காக சிருஷ்டியிலேயே மகா சிரேஷ்டமான பிராணனையே தியாகம் செய்து விட்டாள். ஆனல் திலகவதிக்காகவும் எனக்காகவும் அவள் செய்திருக்கும் தியாகம்... ஹா, தெய்வமே, இதெல்லாம் உன் சோதனையா? ஐயோ! என் புத்தியைத் தெளியவை. என் உள்ளம் குழம்புகிறது. அது எரிமலையாகிவிட்டதே. பிரேமாவை விட்டு நீ வாழ்வதா? என்று யாரோ கேட்கிறார்களே! நான் என்ன செய்வேன்? பைத்தியம் பிடித்துவிடும் போல்தெரிகிறதே!"

இச் சிந்தனைகளின் 'அடி'யைத்தாங்காது தவித்தான். வாய்திறந்து பேசவும் அவனுல் முடியவில்லை. நீறு பெத்துக்கிடக்கும் திலகவதி வேஷத்தில் உள்ள பிரேமாவையே பார்த்தான்; பார்க்கிறன்; பார்த்துக்கொண்டேயிருக்கிறன். கண்ணைக் காக்கும் இமைகள் துக்கம் தாங்காது கனத்தன. இத்துக்கக் காட்சியை இக்கண்கள் பார்க்கவேண்டாம் என்று சொல்லுவது போல நயன நீர் திரையிட்டு மறைத்தது.

"இதோ, என்னைப் பாருங்கள். நான் இறக்கவில்லை. திலகவதிக்கும் தங்களுக்கும் கல்யாணம் செய்துவைத்து அந்த வைபவத்தைப் பார்க்காதவரையில் என் ஆத்மா சாந்தியை அடையாதென்பது உங்களுக்குத் தெரியுமா? திலகவதிதேவிதான் தங்களுக்கு ஏற்றவள். அவள் காதலின் புனிதத்தை நான் நன்கு அறிந்திருக்கிறேன். அவளைக் காப்பாற்றவேண்டியது உங்கள் பொறுப்பு. அவளை உங்களிடம் ஒப்புவிக்கிறேன். ஏற்றுக்கொண்டேன் என்று சொல்லுங்கள். அப்பொழுது தான் என் மனம் சாந்தி பெறும். திலகவதியின் காதல் தியாகத்துக்கு அஞ்சாதது. அதை மறந்துவிடாதீர்கள். வீணாக மற்றோர் உயிருக்கும் உலைவைத்து விடாதீர்கள். பிரேமாவின் ஆத்மா சந்துஷ்டியடைய வேண்டுமென்ற விருப்பம் தங்களுக்கு இருக்குமானல் இதைச் செய்யுங்கள். பிரேமாவின் காதல் நல்ல பலனையே தந்ததென்று உலகம் சொல்லச் செய்தவராவீர்கள்.

வேறு யோசனை வேண்டாம். திலகவதியை ஏற்றுக் கொண்டு சுகமாக வாழ்வதாக வாக்கு அளியுங்கள்." இப்படி யார் வந்து அங்கு சொன்னார்கள்? வேறு ஒருவருமில்லை. ஆனால், பரந்தாமன் கண்களுக்கு கீழே செத்துக்கிடக்கும் பிரேமாவின் தேகத்திலிருந்து, அதே உருவம் எழுந்து வந்து பேசியதாகத் தோன்றியது. பிரேமாவே உயிர் பெற்று பேசுவதாக உணர்ந்தான். அந்த உருவம் அவன் கையைப் பிடித்து திலகவதியின் கரத்தோடு வைப்பதுபோல அவனுக்குப் புலப்பட்டது.

என்ன ஆச்சரியம்! ஒரு நொடிக்குள் தோற்றம் மறைந்தது. சுய நினைவு வந்தது. அவன் திலகவதியின் கையை நிஜமாகவே பிடித்துக்கொண்டிருப்பதை உணர்ந்தான். சட்டென்று தன் கையை உதறிக் கொண்டு விலகி நின்றான் பரந்தாமன். "ஐயோ! மூளையில் அதிர்ச்சி ஏற்பட்டுவிட்டதோ?" என்று திலகவதி நினைத்து விம்மினாள். அவளுக்கும் என்ன செய்கிறதென்று ஒன்றும் புரியவில்லை.

"வைத்தியக்காரா? ஏன் இப்படித் தடுமாறுகிறாய்? ஆத்ம இரகசியத்தை இன்னும் நீ தெரிந்து கொள்ளவில்லை. திலகவதியைக் கண்டு ஏன் வெறுப்புக் கொள்ளுகிறாய்? திலகவதி பிரேமாவாகவும் பிரேமா திலகவதியாகவும் மாறியுள்ளதின் தத்துவத்தை உணரவில்லையே. ஸ்தூல வித்தியாசத்தைக் கண்டு தட்டு தடுமாறுகிறாய்? சூட்சமத்தில் எல்லாம் ஒன்றுதான். ஆத்மாவுக்கு இந்த வித்தியாசமெல்லாம் கிடையாது. ஆத்ம பக்குவமடையாததினால்தான் இப்படித் திணறுகிறாய். வெறுப்பு, விருப்பு இரண்டையும் விட்டுவிடு. எல்லாவற்றிலும் இருப்பவன் "நான்." என்னை தரிசனம் செய். வெறும் சதைப்பற்றினால் மாத்திரம் நிரந்தரமான இன்பம் கிடைத்துவிடாது; அதையும் வெல்லும் போதுதான் ஆத்மானந்தம் ஏற்படுகிறது. இதை மறந்து ஏதேதோ எண்ணித் திகைக்கிறாயே! வித்தியாசத்தை மறந்து வினையை இயற்று."

இவ்விதம் அவன் படித்த பழைய தத்துவங்கள் எல்லாம் ஒரு கடவுள் உருவத்தில் வந்து கூறுவது

போல் தோன்றியது. சலனமான தன் நிலையை மாற்றிக்கொண்டு நிமிர்ந்தான். தேவகிருபையால் மகா அக்கினி பிரவேசத்திற்கும் பிறகு உயிர்பெற்று வந்தவன் போல பரந்தாமன் விளங்கினான். உண்மையில் பற்பல சிந்தனைகள் அவனை எரித்துவிட்டன. புலன்களை வியாஜமாக்கிக்கொண்டு ஜ்வாலை வீசும் அவ்வெண்ணங்களை எல்லாம் அணைத்து விட்டவனைப்போல மாறி அமைதியை முகத்தில் வரவழைத்துக் கொண்டவனாய் திலகவதியைப் பார்த்துக் கேட்டான்: "இச்சம்பவங்கள் எல்லாம் எப்படி நடந்தன? உனக்குத் தெரிந்த விபரத்தைக் கூறக்கூடாதா? வீணாக உணர்ச்சிகளுக்குப் பலியாகி உள்ளத்தை நொந்து கொள்ளுவதில் இனி பயனில்லை."

விவரிக்க முடியாத வேதனையையும், மூச்சு முழுவதையுமே வாங்கப்பார்க்கும் துன்பத்தின் வேகத்தையும் அனுபவித்துக்கொண்டு நிற்கிறாள் திலகவதி. ஏன்? எதையோ நினைத்துக்கொண்டு அவளின் காதலை வெளியேற்றினான் பரந்தாமன்; அடுத்த விநாடியில் தன் காதலை உதறி விலக்கிக்கொண்டு எட்டி நின்று பேசினான் அல்லவா? அச்செய்கை அவள் இதயத்தையே பிய்த்துவிட்டது. மேலும் உயிருடன் நிற்பது எவ்வளவு பிசகான காரியம் என்று சிந்தித்தாள். பிரேமாவின் சாவுக்குத் தானே காரணமென்று எண்ணியே பரந்தாமர் வெறுக்க ஆரம்பித்து விட்டார் என்று முடிவு கட்டினாள். ஆனால், சகஜமாகவும் அமைதியாகவும், சாந்தமாகவும் அவர் மறுபடியும் தன்னுடன் பேச ஆரம்பித்ததைக் கண்டதும் ஆச்சரியப்பட்டாள். மன்னிப்புக் கேட்க இதுவே சரியான சமயம் என்று தோன்றியது. அவள் முதலில் பரந்தாமனிடம் மன்னிப்புக் கேட்டாள். ஆனால், அவன் ஒன்றும் பதில் பேசவில்லை. மறுபடியும் அவனிடம் மன்னிப்புக் கேட்காதவரையில் அவள் தான் எந்த வகையிலும் திருப்தியுடன் பிரிவதற்கில்லை என்று முடிவு கட்டினாள். முன் ஓடிவந்து மண்டியிட்டு நமஸ்கரித்து பரிதாபமுடன், "என்னை தங்கள் வாய்திறந்து 'மன்னித்தேன்' என்று சொல்லமாட்டீர்களா? இந்த வரத்துக்காகவே காத்துக்கொண்டிருக்கிறேன். மன்னித்

தேன் என்று சொல்லுங்கள். உங்களை ஏமாற்றிய பாவியை—பிரேமாவின் உயிர் போவதற்குக் காரணமான சண்டாளியை மன்னித்தேன் என்று சொல்லுங்கள். அப்பொழுதுதான் என் ஆத்மா நிம்மதியாகப் பிரியும். எனக்குத் தெரிந்தவற்றை எல்லாம் கூறி நானும் விடைபெற்றுக் கொள்ளுவேன்...." என்று சொன்னாள். மீண்டும் அவள் விழிகளிலிருந்து கண்ணீர் சோகச் சுருள் மாதிரி சுருண்டு வந்து கரைந்தது.

"பைத்தியமே, உன்னை மன்னிக்க நான் யார்? நீ யாதொரு குற்றமும் செய்யவில்லையே. எழுந்திரு. நீ என்னை ஏமாற்றியதாகவோ, அல்லது பிரேமாவின் மரணத்திற்கு நீ தான் காரணம் என்றோ நான் நினைக்கவில்லை. அப்படி நினைப்பது அஞ்ஞானம். நீயும் அந்த எண்ணத்துக்கு இடம் கொடாதே. பிரேமா இறந்ததற்கு நீ என்ன செய்வாய்? நான்தான் என்ன செய்ய முடியும்? மரணம் சகஜம். இயற்கை. மேலும் மரணத்தைக் கொண்டுதான் உயிர் நித்யத்வத்தை அடைகிறது; யௌவனத்தோடு விளங்குகிறது. ஆகவே திலகவதி, உலக நியதியைப்பற்றி கேள்வி கேட்க நாம் யார்? எல்லாம் அவன் செயல் என்று தைரியம் கொள். எழுந்திரு. கண்ணீரைத் துடைத்துக்கொள். நடந்ததைச் சொல்."

"கடைசிக் காலத்தில் மன்னித்தேன் என்ற ஒரு சொல்லைக்கூட கேட்க நான் கொடுத்து வைக்கவில்லையா?...."—தேம்பினாள்.

திலகவதியின் நிலையைக் கண்ட பாஸ்கரனின் மனம் உருகித் ததத்தளித்தது. "திலகவதி, நீ குற்றம் செய்யாத போதிலும், உன் ஆத்ம திருப்தியை விரும்பி பாஸ்கரன் மன்னிக்கிறேன்! எழுந்திரு" என்று கூறிக் கொண்டே அஞ்சலி செய்த அவள் கரங்களைப்பற்றி தூக்கிவிட்டான்.

"என் ஆத்மா இனி நிம்மதியாகப் பிரியும்" என்று சொல்ல விரும்பினாள் திலகவதி. ஆனால் சட்டென்று அதை "மென்று விழுங்கி"விட்டு பெருமூச்சால் சமாளித்

தாள். ஏனெனில் தன் திடமான மனோநிர்மாணத்தை ஸ்பஷ்டமாக வெளிப்படுத்த அவள் விரும்பவில்லை.

கண்ணீரைத் துடைத்துக்கொண்டு உணர்ச்சியோடு பரந்தாமனை ஒரு முறை பார்த்தாள்; மீண்டும் கீழே பிரேதமாகக்கிடக்கும் பிரேமாவையும் பார்த்தாள். பிரேமாவைப் பார்த்ததும் அவள் உள்ளம் உருகியது. அதே சமயத்தில் அவளுக்கு என்னத் தோன்றியதோ? ஓர் உத்வேகம் உண்டாயிற்று. ஆவேசங்கொண்டவள் போல மறுபடியும் பரந்தாமனைப் பார்த்துக் கூறினாள்.

“பரந்தாமரே, ஒரு தேவ புருஷரைப்போல் தாங்கள் என்னை மன்னித்தீர்கள். என் மனசு சிறிது நிம்மதி அடைகிறது. ஆனால், பிரேமா செய்ததை நினைக்கும் போது நான் இன்னும் உயிருடன் இருக்கிறேனே என்று தோன்றுகிறது. பிரேமா ஒரு தெய்வப்பெண். தன்னையே தியாகம் செய்து கொள்ளுவதற்கு இப்படி என்னை ஏமாற்றுவாள் என்று நான் சிறிதும் நினைக்கவில்லை. அந்தோ! அவள் பேசிய பக்குவத்தை நினைக்கும்போது, இம்மாதிரி திட்டத்தோடு பேசினாள் என்று லவலேசங்கூட நான் ஊகிக்காமல் போனேன். மூடுபல்லக்கில் என்னை அரண்மனையிலிருந்து அழைத்து வந்தாள். “நான் சொல்லுகிறபடியெல்லாம் நீ கேட்க வேண்டும்” என்று என்னிடம் வாக்குறுதி பெற்றுக் கொண்டாள். உடனே எனக்கு அவள் வேஷத்தைப் போட்டாள். “பரந்தாமர் உன்னை அழைத்துப்போக இங்கு வருவார். படகிலேறி நதியில் செல்ல அவர் ஏற்பாடு செய்திருக்கிறார். நீ அவருடன் சென்று பிரேமாவைப்போலவே நடிக்கவேண்டும். முதலில் சிறிதும் சந்தேகத்திற்கு இடம் அளிக்காதே!” என்றாள். நான் ஆக்ஷேபித்தேன். வேஷம் போட்டு தங்களை ஏமாற்ற என் மனச்சாட்சி இடங்கொடுக்கவில்லை. “பைத்தியமே, பரந்தாமர் மனது மாறிவிட்டது. மேலும் நான் சகல விஷயங்களையும் முன்னேயே கூறிவிட்டேன். ஒரு வேடிக்கை செய்து விளையாடுவதற்காகவே இந்த ஆலோசனை. என் வார்த்தையை நம்பு” என்று பிரேமா மறுபடியும் கூறினாள். மேலே பேச வாயெடுத்தேன்.

"சரி, சரி, நேரமாகிறது. நான் சொல்லுகிறபடி கேட்கிறேன் என்று கூறிவிட்டு இப்பொழுது மறுத்துப் பேசுகிறாயே" என்று என் வாயை அடக்கிவிட்டாள். வேஷம் போட்டு முடிந்ததும் "திலகம், உனக்கும் எனக்கும் வித்தியாசமேயில்லை! பரந்தாமரால் உன்னை அடையாளமே கண்டுபிடிக்கமுடியாது" என்று கூறி உற்சாகத்தோடு குதித்தாள். நான் மௌனம் சாதித்தேன். அந்நேரத்தில் நந்தருடன் ஏகாந்தமாகப் பேச வேண்டுமென்று இயற்கையில் எழுந்த இச்சை என் புத்தியை விழுங்கிவிட்டது. பிரேமாவின் வேஷத்தில் இருக்க நான் துணிந்துவிட்டேன். அத்துணிவு ஓர் அரிய உயிரையே பலிவாங்கிவிடுமே என்று நான் சிறிதும் எண்ணவில்லை. நந்தனைச் சந்திக்கவேண்டுமென்று என் ஆத்மா துடிதுடித்துக்கொண்டிருந்த அச் சமயத்தில் பிரேமா சொன்னாள்: "திலகவதிதேவி, அரண்மனையில் உன்னைக் காணாமல் தேடக்கூடுமல்லவா? உனக்கும் மனத்தில் அந்தத் திகில் இருக்குமல்லவா! அத் திகிலுக்கு இடமில்லாமல் செய்ய ஓர் ஆலோசனை செய்திருக்கிறேன்." "என்ன? என்ன!" என்று நான் ஆவலுடன் கேட்டேன். "திலகவதிதேவி பிரேமாவதியாக மாறியிருக்கிறாள் அல்லவா? அதுபோலவே பிரேமாவதி திலகவதியாக மாறப்போகிறாள்! ஆமாம். சில மணி நேரங்கள்வரையில்தான்" என்றாள். இவ்விதம் கூறிக்கொண்டே என்னுடைய ஆடை ஆபரணங்களை எல்லாம் அவள் தரித்துக்கொண்டாள். என்ன ஆச்சரியம்! நானே மலைத்துவிட்டேன். என் வேஷம் அவளுக்கு அவ்வளவு பொருந்திவிட்டது. உண்மையில் அவள் கேவலம் தாசி குலத்தில் பிறப்பதற்குப் பதில் ராஜ குடும்பத்தில் பிறக்கவேண்டியவள்தான். "நான் இதோ, மூடுபல்லக்கிலேறி அரண்மனைக்குப் போகப் போகிறேன். உன்னைப்பற்றி எத்தகைய சந்தேகமும் பரவாமல் தடுக்க இதுதான் சரியான வழி. நீ சிறிதும் கவலையில்லாமல் நிம்மதியாகப் பிறகு வந்து சேரலாம். என்ன? உன் வேஷத்தில் நான் அங்கு போயிருப்பதில் ஆக்ஷேபணை யில்லையே?" என்று கேட்டாள் பிரேமா. "என்றுமே திலகவதியாய் அரண்மனையிலேயே இருந்துவிடு, நான் என்றுமே பிரேமாவாக இங்கு இருந்துவிடு

கிறேன்" என்று சொல்ல விரும்பினேன். அவ்விதம் சொல்லாமல் புன்னகைத்தேன். "சரி; நேரமாகிறது, பரந்தாமர் வரும் நேரமாயிற்று. பிரேமா, அப்புஷ்பங்களை எடுத்துக் கொடுத்துக்கொண்டே குடிலின் வாயிலில் உட்கார்ந்திரு. இது பல்லவராஜ்ய ராஜகுமாரி திலகவதியின் கட்டளை. தெரிந்ததா?" என்று பிரேமாவே என்னைப்பார்த்துக் கூறிவிட்டு சிரித்தாள். என்ன பதில் சொல்லுகிறதென்று தோன்றாதிருக்கும்போது என் கன்னத்தில் தட்டி "பிரேமா, வேஷத்திலிருக்கும் திலகவதிக்குச் சீக்கிரம் வந்து விடுதலை அளித்துவிடு. மறந்து விடாதே" என்று சொல்லிக்கொண்டே வெளியே போய்விட்டாள். நான் பின்னே ஓடிவந்தேன். அவள் மூடு பல்லக்கில் ஏறிப்போவதைப் பார்த்தேன். பிறகுதான் தாங்கள் வந்தீர்கள்...."

இவ்விதம் கூறி முடித்த திலகவதி பெருமூச்சு விட்டுக்கொண்டே சட்டென்று பிரேமாவின் பிரேதத்தின் அருகே சென்றாள்; அப்பிரேதத்தின் பாதத்திற்கு முன்பு தலையணங்கினாள்: "பரந்தாமரே, இதோ, கிடக்கும் பிரேமாவின் பாத தூசிக்குக்கூட நான் சமானமானவள் அல்ல. இச்சை என் கண்ணைக் கெடுத்தது மல்லாமல் இதய சுபாவத்தையும் கெடுத்து விட்டது என்று உணர்கிறேன். என்னிடம் அரண்மனைக்குப் போகிறேன் என்று கூறி பிரேமா நதிக்கே தன்னை அர்ப்பணம் செய்துவிட்டாள். ஏன்? காரணம் தாங்கள் அறிந்ததே. பிரேமா என்னை உயிராக நேசித்தாள். அவளையே கொன்ற திலகவதிக்கு இந்த உலகத்தில் இனி இடமில்லை" என்று கதறினாள்; எழுந்தாள். நதியை நோக்கினாள்; திரும்பி பிரேமாவின் சவத்தைப் பார்த்தாள்: "பிரேமா, உன் உயிரும், என் உயிரும் ஒன்று. ஒருவர் உள்ளத்தில் ஒருவர் இருந்தோம். இன்று என்னைவிட்டுப் பிரிந்துவிட்டதாக எண்ணுகிறாய். இல்லை. திலகவதியும் நீ இருக்கும் இடத்திற்கே வருகிறாள்" என்று சொல்லி முடிப்பதற்கு முன்பே அவள் மகா பிரவாகத்துடன் ஓடும் நதியில் பாய்ந்துவிட்டாள்.

ஆச்சரியத்தோடு அவள் கூறிய சம்பவங்களை எல்லாம் கேட்டு அப்படியே மலைத்துப்போய் மௌனமாய் நின்றிருந்த பரந்தாமன் திலகவதி நதியில் திடீரென்று பாய்ந்ததைக் கண்டதும் திடுக்கிட்டு "திலகம், திலகம், நில். நில், நீயுமா தற்கொலை செய்துகொள்ளப் போகிறாய்?" என்று சொல்லிக்கொண்டே பின்னே ஓடி ஆற்றில் பாய்ந்து நீந்தினான், திலகவதியைக் காப்பாற்றுவதற்காக. ஆற்றின் வேகம் அவர்களை இழுத்துக்கொண்டு போய்விட்டது.

இச்சம்பவம் நிகழ்வதற்குச் சிறிது முன்பே நிலவு மறுபடியும் மங்கிவிட்டது. இப்பொழுது மங்கிய நிலவு முழுவதும் மறைந்தேவிட்டது. கார்மேகங்கள் பெருங் கர்ஜனையுடன் வானமெங்கும் மூடிவிட்டன. பௌர்ணமி நிலவின் வனப்பெல்லாம் அந்தகாரத்தால் ஆக்கிரமிக்கப்பட்டுவிட்டது. காற்றோ கோர ஸ்வரூபமெடுத்து தனது பூரண சக்தியையும் காட்ட ஆரம்பித்துவிட்டது. புயல் காற்றாக மாறிவிட்டதால் பக்கத்தில் இருந்த தருக்கள் எல்லாம் தள்ளாடின. பயங்கரமான பேரிரைச்சல் கேட்டது.

சில நிமிடங்களுக்கெல்லாம் மழையும் பெய்யத் தொடங்கியது. அதன் ஆரம்பமே அதிக வேகமாயிருந்தது.

மழையும் புயலும் கலந்து "சர்வாதிகாரம்" செலுத்தும் இச்சந்தர்ப்பத்தில் அந்நதி கொந்தளிக்கிறது. திலகவதி எங்கே? அவளைக் காப்பாற்ற சென்ற பரந்தாமன் எங்கே? "நானே கொந்தளிக்கிறேன். இந்தக் கஷ்டத்தில் அவர்களைப்பற்றி எனக்கென்ன தெரியும்?" என்று சொல்லுவதுபோல் நதி விளங்கியது. அந்த நதிக்குக் கரையில் தனித்து கிடக்கும் பிரேமாவின் உடலில் கருணை உதித்துவிட்டது போலும்!

வேகமாக வீசும் காற்றின் உதவியால் கரையில் நதியின் ஜலம் வந்து மோதியது; ஒரு முறை, இரண்டாம் முறை, இதோ, மூன்றாம் முறையாக அதிவேகமாய் வந்து மோதியது. "உன்னை உயிராக நேசித்த இருவர் என்னு

டனிருக்கும் போது நீ மாத்திரம் தனியாக ஏன் கிடக்க வேண்டும்? வா. அவர்களுடன் உன்னையும் சேர்த்து விடுகிறேன்." என்று சொல்லுவதுபோல அந்தப் (பெண்) பிரேமாவின் தேகத்தையும் தன்னிடம் இழுத்துக்கொண்டு போய்விட்டாள்!

இத் துக்கத்தைத் தாங்காது இயற்கையோ கதறுவதுபோல மழை 'சோ'வென்று கொட்டிக் கொண்டிருக்கிறது!

அஹோ, அந்நதியின் 'அங்கம்' விம்மி விம்மி விழுகிறது; மேலும் மேலும் விம்மி விம்மி விழுகிறது!

கரையிலிருந்த அப்பர் குளம் எங்கே?

பரந்தாமன் எங்கே?

பிரேமா எங்கே?

திலகவதி எங்கே?

தத்துவப் பெண்போல நதி மௌனம் சாதிக்கிறாள்!

## கிளை-21.

ஒரு மாதம் எப்படியோ ஓடிவிட்டது. ஆனால் அந்தப் பல்லவ நகரில் அந்தப் பேச்சு இன்னும் ஓயவில்லை. ஒவ்வொரு குடும்பத்திலும் அதைப்பற்றியே பேச்சு. ஆமாம், அச்சோக மயமான சம்பவத்தை எப்படி மறக்கமுடியும்? பிரேமா, பரந்தாமன், திலகவதி முதலியவர்களின் பரிதாபகரமான முடிவைப்பற்றி நகர் ஜனங்களில் பலர் பலவிதமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

அன்று. அந்நகரின் தெரு ஒன்றில் காணப்பட்ட கபாலி நாண்டவனின் வீடு அலங்காரமாக விளங்கியது. இரவு நேரமாதலால், அந்த இல்லத்தின் உட்பக்கங்களில் குறிப்பிட்ட இடங்களில் ரேகை ரேகையாய்—

—பந்திபந்தியாய் அழகான பல தீபங்கள் ஜொலித்துக் கொண்டிருக்கின்றன. உட்புறம் நடுநாயகமாகக் காணப்பட்ட கல்யாண மண்டபம் புஷ்பச் சரங்களால் நன்கு அலங்கரிக்கப்பட்டிருந்தது. ஒரு புறம் நறுமணம் கமழும் புகை ஜாலங்கள் சுருண்டு சுருண்டு அங்கு உல்லாசமாகச் சுற்றிக்கொண்டிருக்கின்றன.

கீழே போடப்பட்டிருந்த சித்திரவேலைப்பாடு மிக்க வடிவான விரிப்பின் மீது நன்கு அலங்காரம் செய்து கொண்டிருந்த ஆண்களும் பெண்களும் உட்கார்ந்திருக்கிறார்கள். இன்னும் சிலர் வெளியேயிருந்து உள்ளே வந்து கொண்டிருந்தார்கள். அவர்களை கபாலிதாண்டவனும், அவன் மனைவி சிவகாமியும், கோதையும் வரவேற்றார்கள்.

வியாபார சம்பந்தமாக வெளியூருக்குப் போயிருந்த கபாலி தாண்டவன் நகருக்குத் திரும்பி ஒரு வாரம்தானிருக்கும். அவன் வரவையே சிவகாமி எதிர்பார்த்திருந்தாள். ஏனெனில், அவள் கோதையின் சார்பாக ஒரு சுபகாரியத்தைச் செய்ய விரும்பினாள். தாண்டவன் வந்ததும், ஒரு காரணத்தைக் கூறி விருந்து ஒன்றை நடத்தவேண்டுமென்று கூறினாள். உடனே தாண்டவன் "ஆமாம், நீ சொல்லுகிறபடியே செய்து முடித்துவிடுவோம். இதன் உண்மையை அனைவருக்குத் தெரிவிக்கவேண்டாம். உன் பிறந்தநாள் இந்த வாரக் கடைசியில் வருகிறதல்லவா? அதை ஒரு காரணமாகக் கொண்டு விருந்தை வைப்போம், நெருங்கிய நண்பர்களை அழைப்போம்" என்றான். அதன்படியே அன்று விருந்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டது.

விருந்துக்கு அழைக்கப்பட்டிருந்தவர்கள் எல்லாம் வந்து விட்டார்கள். ஆனால், முக்கியமான ஒரு பேர்வழி இன்னும் வரவில்லை. கோதை சிவகாமியைப் பார்த்தாள் சிவகாமி கோதையைப் பார்த்தாள். "இந்த விருந்தின் நோக்கம் அவருக்குத் தெரிந்து வராமலிருந்து விடுவாரோ?" என்ற பயம் கோதைக்கு. "கோதை, நம் ஆலோசனை அவருக்குத் தெரிந்திருக்க முடியாது.

கொஞ்சம் பொறு. அவர் கட்டாயம் வருவார்" என்றாள் சிவகாமி. அதேசமயத்தில் தாண்டவன், "ஆனந்தனை இன்னும் காணோமே. வேண்டுமென்று வராமலிருந்து விட்டானோ?" என்று தனக்குள் நினைத்துக்கொண்டே வாயல்படியின் பக்கம் போனான்.

அப்பொழுதுதான் அதிவேகமாக ஆனந்தன் உள்ளே நுழைந்தான்.

"ஆனந்தா, வா, வா, உனக்காகவே காத்துக் கொண்டிருக்கிறோம். ஏன் இவ்வளவு நேரம்?" என்று கேட்டுக்கொண்டே கபாலி அவனை வரவேற்று உபசரித்தான். ஆனந்தன் வந்ததைப்பார்த்ததும் கோதையின் முகத்தில் உற்சாகக்களை பரிமளித்தது. உடனே சிவகாமி, "நான் சொன்னேனே? பார்த்தாயா? முதலில் நம்பமாட்டேன் என்றாயே" என்று கோதையின் கன்னத்தில் வேடிக்கையாக இடித்துக் கூறினாள், இரகசியமாக.

அதே சமயத்தில் ஆனந்தன் கபாலியைப் பார்த்து "அதை ஏன் கேட்கிறாய்? அரண்மனையை விட்டு அப்படி இப்படி அசைய முடியவில்லை....'' என்றான்.

"ஏன்?"

"ஏனா? காதலியையும், சகோதரியையும் ஏககாலத்தில் இழந்த ராஜசேகரவர்மன் பைத்தியம் பிடித்தவன்போல மாறிவிட்டான்...."

"இந்தக் காதலே இப்படித்தான்!"

"உம். காதல் என்ன செய்யும்? காதலுக்கு இடம் கொடுத்தால் அப்படித்தான் என்று சொல்."

"அப்படியானால் இளவரசர் புத்தி ஸ்வாதீனத்துடன் இல்லையா?" என்று சிவகாமி முன்னே வந்து கேட்டாள்.

"புத்திமாறாட்டம் ஏற்படவில்லை. பிரேமாவை இளவரசர் அளவுக்குமீறி காதலித்தார் என்ற விஷயம் அநேகருக்குத் தெரியாது. அக்காதல் கைகூடாமல் போய்விட்டது. பிரேமா ஆற்றுக்குப் பலியான சம்பவத்துக்குப் பிறகு அவர் புத்தியே மாறிவிட்டது. இந்த அரிய வாழ்க்கையையே வெறுக்க ஆரம்பித்துவிட்டார். போதாக் குறைக்கு யாரோ ஒரு பிக்கு ஒரு நாள் சோலையில் அவரைச்சந்தித்து துக்கோற்பத்தியைப் பற்றிய ஞானோபதேசத்தைச் செய்துவிட்டாராம். அதிலிருந்து கௌதம புத்தரைப்போல நானும் ராஜ்யத்தை எல்லாம் துறந்து சந்யாசியாக மாறிவிடவே இளவரசர் எண்ணங்கொண்டிருக்கிறார். இதை அறிந்த பல்லவ மன்னர் சந்திரவர்மன் திடுக்கிட்டுவிட்டார். தன் மகனின் விபரீத மனப்பான்மையை மாற்ற என்னையே அரசர் நியமித்திருக்கிறார். வறண்டுபோன துறவுக் கொள்கையை எதிர்த்து வாழ்வை விரும்பும் இன்பக் கொள்கையைப்பற்றி தினசரி இளவரசருக்கு எடுத்துச் கூறும் பொறுப்பு எனக்கு வந்துசேர்ந்திருக்கிறது. நான் அரண்மனையைவிட்டுக் கிளம்பினால் போதும். உடனே ராஜசேகரவர்மனை பௌத்தாலயத்தில் பார்க்கலாம். 'புத்தம் சரணம் கச்சாமி' என்று உச்சரிக்க ஆரம்பித்துவிடுகிறார்........"

"இதெல்லாம் வீண் பிரயாசை. நல்ல அழகி ஒருத்தியைத் தேர்ந்தெடுத்து அவருக்குக் கல்யாணம் செய்துவைத்தால் எல்லாம் சரியாகப் போய்விடும்" என்று கபாலி சிரித்துக்கொண்டே கூறினான்.

"ஆமாம். அதற்காகத்தான் அரசர் ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறார். காதலும், வீரமும் நிறைந்திருக்க வேண்டிய தமிழன் வாழ்வில் இந்த வறண்டுபோன துறவுக்கொள்கை தலைகாட்டக்கூடாதென்று தினசரி இளவரசருக்குப் பலவகையிலும் கூறி மனத்தை மாற்றி வருகிறேன். ஆனால், வாழ்வையே தின்னும் காதலின் 'அடி' அவரை நிலைகலங்க வைத்துவிட்டது...."

"சரி-நேரமாகின்றது. விருந்தை ஆரம்பிப்போம்.

பிறகு மற்ற கதைகளைப்பற்றி பேசுவோம்" என்றாள் சிவகாமி.

சாப்பாடு முடிந்தது. எல்லோரும் கல்யாண மண்டபத்தில் மறுபடியும் வந்து உட்கார்ந்தார்கள். சந்தனம், தாம்பூலம் எல்லாம் வழங்கப்பட்டன.

சிவகாமி கபாலிதாண்டவனிடம் ஏதோ இரகசியமாகக் கூறினாள். உடனே கபாலி, ஆனந்தனைப் பார்த்து "ஆனந்தா, பிரேமா, திலகவதி, பரந்தாமன் ஆகிய மூவரும் இறந்ததைப்பற்றி ஊரில் பலர் பலவிதமாகப் பேசிக்கொள்கிறார்கள். எனக்கு விபரமாக ஒன்றும் தெரியவில்லை. இங்கு கூடியிருப்பவர்களும் உன்னைக்கொண்டு அந்த விபரத்தை அறிந்துகொள்ள விரும்புகிறார்கள் என்று சிவகாமி கூறுகிறாள். நானும் அதைக்கேட்க ஆவலாகயிருக்கிறேன். மேலும் உன்னையும் அரசர் நாடு கடத்தினாரே. அந்த உத்தரவு எப்படி மாற்றப்பட்டது? உன் சார்பாக இளவரசர் அரசரிடம் மன்றாடி, அந்த உத்தரவை ரத்துசெய்துவிட்டதாகக் கேள்விப்பட்டேன். அதெல்லாம் வாஸ்தவந்தானா?" என்றான்.

"வாஸ்தவம். இளவரசர் தலையிடாமலிருந்திருந்தால் நான் இந்த நாட்டிலேயே தலைகாட்ட முடியாமல் போயிருக்கும். ஆனால், நான் தண்டனைக்குள்ளானதும், தப்பித்ததும் ஒரு வேடிக்கையான கதை. அதைச் சொல்லுவதற்கு முன்பு ஒரு கேள்வி கேட்கப்போகிறேன்" என்றான் ஆனந்தன்.

"என்ன?" என்றான் கபாலி.

"வாழ்க்கை பெரிதா? காதல் பெரிதா?"

"வாழ்க்கை வாழ்க்கைக்குப் பெரிது. காதல் காதலுக்குப் பெரிது" என்று கபாலி சிரித்துக் கொண்டே கூறி சமாளித்தான்.

"மழுப்பவேண்டாம். வாழ்க்கை வேண்டுமா? காதல் வேண்டுமா? என்ற நெருக்கடி வரும்போது நீ வாழ்வைத்

தேர்ந்தெடுப்பாயா? அல்லது காதலைத் தேர்ந்தெடுப்பாயா? இதற்குரிய பதிலைத்தான் நான் விரும்புகிறேன்."

கோதை தன்னையுமறியாமல் "காதல்" என்றாள். சிவகாமி அதை ஆமோதித்தாள். அதே சமயத்தில் அங்கு உட்கார்ந்திருந்த யுவர்களும் யுவதிகளும் உற்சாகமாகக் "காதல்" என்று கூறித் தீர்ப்பு அளித்தனர்.

இதைக்கேட்டு ஆனந்தன் புன்னகைத்தான்; "உங்கள் தீர்ப்பு தப்பு என்று நான் சொல்லுவதற்காக மன்னியுங்கள். என்னைப் பொறுத்தவரையில் காதலை வாழ்வுக்கு அடுத்தபடியாகவே வைக்க விரும்புகிறேன். யோசித்துப் பார்த்தால் காதல் வாழ்க்கையாகாது. வாழ்க்கை இல்லாவிட்டால் காதல் ஏது? ஆனால் காதலுக்கோ வாழ்வு முழுவதையும் தின்னும் சக்தி உண்டு என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். அதனால்தான் காதலைப் பிரதானமாக்கிக் கொள்ளக்கூடாதென்று கூறுகிறேன். வாழ்க்கையைப் பரிமளிக்கவைக்க காதல் அவசியம் என்பதை நான் மறுக்கவில்லை. காதல் மிக மிக அவசியந்தான். ஆனால், அது வாழ்வில் ஓர் அம்சமாகவே இருக்கவேண்டும். வாழ்வோ பரந்தது. காதலுக்காக இந்த வாழ்வையே பலியிடுவது சுத்தபைத்தியக்காரத்தன மாத்திரமன்று; அப்படி பலியிடுவது அந்தக் கடவுளுக்குக்கூட அடுக்காதென்றே நினைக்கிறேன். காதலுக்காக வாழ்க்கையை—மகா சிரேஷ்டமான உயிரையே பலியிடும் காதலர்களை காவியங்கள் புகழ்ந்து கொண்டேயிருக்கட்டும்! அந்தக் காவியக் கற்பனைகளைப் படித்துவிட்டு நாமும் காதலுக்காக வாழ்க்கையை பலியிடவேண்டாம். இதை வெறும் வேடிக்கைக்காகச் சொல்லுவதாக எண்ணாதீர்கள். நம் நாட்டில் ஒரு புறம் வாழ்வை வெறுக்கும் துறவுக் கொள்கை பரவிவருகிறது. மற்றொரு புறம் சாக்குருவி வேதாந்தம் தலை எடுக்கிறது. இதற்கெல்லாம் நாம் இடந்தரலாகாது. தமிழனுக்கு வேண்டியது காதல்; கலை; வீரம்; வாழ்வு. பிரேமாவும், திலகவதியும் காதலுக்காகவே தங்கள் உயிரை பலியிட்டு விட்டார்கள். அவர்கள் கதையை—சோக நாடகத்தை ஒரு கலைஞன் "பிரேமாஞ்சலி" என்ற பெயரில் ஒரு

சிறந்த காவியமாக எழுதலாம். நான் அவர்களின் கதையை எழுதினால், கட்டாயம் காதலுக்காகப் பிராணனைப் பலியிடும் கொள்கையைக் கண்டித்தே எழுதுவேன். காதலுக்காக உயிரை விடுவதைவிட உயிரை வைத்திருப்பதே மேல் என்று சொல்லுவேன்..." இவ்விதம் ஆனந்தன் பிரசங்கம் புரிந்துகொண்டே போனான்.

"ரொம்ப சரி. காதலுக்காகத்தானே நீ உயிர் வைத்திருக்கிறாய்?" என்று கபாலி கேள்வியை மடக்கிக் கேட்டான்.

"காதலுக்காக மாத்திரமன்று; மனிதன் வாழ்வில் கவனிக்கவேண்டிய கடமைகள் எத்தனையோ இருக்கின்றன. அவற்றின் மூலம் அவன் வாழ்வு நிறைவை அடைந்து இன்பமடையவேண்டும்" என்று சாமர்த்தியமாகப் பதில் கூறினான்.

"விவாதமிருக்கட்டும். உண்மையில் பிரேமாவும் திலகவதியும் காதலுக்காகவே உயிரை பலியிட்டுக் கொண்டு விட்டார்கள் என்று நீ நினைக்கிறாயா?" என்று கேட்டான்.

"ஆமாம். அதில் என்ன சந்தேகம்? அவ்விருவரும் பரந்தாமனை அளவுக்கு மீறி காதலித்தார்கள் என்பது எனக்குத் தெரியும். படகில் மூவரும் சேர்ந்து போயிருக்க முடியாதென்றே நினைக்கிறேன். பிரேமாவும் பரந்தாமனும் படகிலேறிப் போனதாக நாங்கள் விசாரித்ததில் தெரிந்தது. ஆனால், திலகவதியும் பிரேமாவின் உதவியினால் இரகசியமாக அரண்மனையிலிருந்து ஆச்சிரமத்திற்குப் போய்விட்டாள். ஆற்றிலிருந்து தேடிப்பிடித்து எடுக்கப்பட்ட பிரேமாவின் பிரேதத்தையும், திலகவதியின் உடலையும் நாங்கள் பார்த்தோம். என்ன ஆச்சரியம்! திலகவதியின் உடலில் பிரேமாவின் உடையும் பிரேமாவின் தேகத்தில் திலகவதியின் ஆடை ஆபரணங்களும் காணப்பட்டன. இதிலிருந்து திலகவதி பிரேமாவின் வேஷத்தோடு பரந்தாமனுடன் சென்றிருக்கவேண்டுமென்று நான் ஊகிக்கிறேன். பிரேமா தன்

காதலன் பரந்தாமனுக்குத் திலகவதியை மணம் செய்து வைக்க எண்ணி அதற்குத் தடையாக இருந்த தன்னையே ஆற்றிற்குப் பலியாக்கிக் கொண்டிருக்க வேண்டும். திலகவதிதான் பிரேமாவின் வேஷத்தில் வந்திருக்கிறாள் என்பதை பரந்தாமன் அறிந்து வெறுப்புக்கொண்டிருக்கலாம்; அல்லது திலகவதியின் வேண்டுகோளை வேதாந்தக் கிறுக்குள்ள அவன் நிராகரித்திருக்கலாம். இதன் விளைவாக மனம் உடைந்து திலகவதியும் ஜலத்தில் குதித்திருக்கலாம். அவளைக் காப்பாற்ற பரந்தாமன் முயலுகையில் வெள்ளத்தில் அகப்பட்டிருக்கலாம்; அல்லது புயலின் காரணமாக அவர்கள் ஏறியிருந்த படகும் கவிழ்ந்திருக்கலாம். எப்படியோ மூன்று அரிய உயிர்களை நாம் இழந்து விட்டோம்...."

"இப் பிரேதங்கள் எப்படிக் கண்டுபிடிக்கப் பட்டன?" என்று ஒருவர் கேட்டார்.

"அதெல்லாமிருக்கட்டும், நீ எப்படி ராஜ தண்டனையினின்று விடுவிக்கப்பட்டாய்?" என்று கபாலி கேட்டான்.

"உணவை நிறையக் கொடுத்துவிட்டுச் சரியாக வேலை வாங்குகிறீர்களே!" என்று கூறிச் சிரித்தான்.

மற்றவர்களும் 'கொல்'லென்று நகைத்தனர்.

பின்பு ஆனந்தன் சொன்னான்: "நான் ஆபத்தில் அகப்பட்டுக்கொண்டதற்கு காரணம் கோதைதான்."

கோதை ஏதோ சொல்ல வாயெடுத்தாள். அவளைப் பேச விடாமல் தடுத்து, "அதெப்படி?" என்று சிவகாமி குறுக்கிட்டு வினவினாள்.

"அதைப்பற்றி கோதை ஒன்றும் தங்களுக்குச் சொல்லவில்லையா?"—குறும்புத்தனமான சிரிப்புடன் கூறிக் கொண்டே கோதையைப் பார்த்தான்.

"சொல்லவில்லையே" என்று ஏககாலத்தில் தாண்டவனும் சிவகாமியும் சொன்னார்கள்.

"குற்றஞ் செய்தவர்கள் மறைக்கத்தான் பார்ப்பார்கள்..." என்றான் பரிகசிக்கும் கண்ணொளியுடன் ஆனந்தன்.

"போதும். நீங்கள்தான் நடந்ததையெல்லாம் சொல்லுங்களேன். பிறகு குற்றம் யார் மேலிருக்கிறதென்பது தெரிந்துவிடுகிறது!" என்றாள் கோதை, படபடப்போடு.

"அடேயப்பா! அதற்குள் கோபம் வந்துவிட்டதா? யார்மேல் குற்றமிருந்தால்தான் என்ன? மற்றும் குற்றமறைப்பதென்பது மனித இயற்கைதானே?"

"போதுமே வியாக்கியானம்" என்றாள் கோதை.

"வியாக்கியானம் போதுமென்றால் நடந்த கதையைச் சொல்லுகிறேன்...."—சிரித்தான் ஆனந்தன்.

சிவகாமி, "கோதை, சற்று சும்மா இரு. அவர் சொல்லுவதை முதலில் கேட்போம்" என்று கூறினாள்.

"ஆகா! நன்றாகச் சொல்லட்டும். மடியில் கனமிருந்தால்தானே வழியில் பயம்!" என்றாள் கோதை.

கபாலி தாண்டவன், "சரி, நீ சொல், கேட்போம்" என்றான்.

"பெண்கள் வேஷம் போடுவதில் மிகவும் கெட்டிக்காரர்கள்! எல்லாப் பெண்களையும் சொல்லுகிறேன் என்று நினைத்து சண்டைக்கு வரவேண்டாம். அதுவும் கோதைபோன்ற பெண்கள் வேஷம் போடுவதில் மகா கெட்டிக்காரர்கள்...." என்று கிண்டல் சுவையுடன் பேச ஆரம்பித்தான் ஆனந்தன்.

"வேஷம் போடுவது ஆண்களின் இலட்சணம்; சுபாவமும்கூட. பெண்ணுக்கு வேஷம் போடவேண்டிய தேவையேயில்லை...." என்று குறுக்கிட்டு, வார்த்தைகளின் வேகம் வெளிப்படக் கூறினாள் கோதை.

"ஆமாம், பெண்மை அத்தனையும் உண்மை. அங் வேஷத்திற்கே இடமில்லை" என்றாள் சிவகாமி.

"அடடா! நான் பெண்மையைப்பற்றிக் குறைகூறவில்லை. நான் சொல்லவந்தது கோதைக்கு வேஷம் போட்டுக்கொள்ள நன்றாகத் தெரியும் என்பதே."

"வேஷமா? அதென்ன?" என்றான் கபாலி தாண்டவன்.

"கேளுங்கள் அந்தக் கதையை, வேடிக்கையாக இருக்கும். திலகவதிதேவி பரந்தாமனைச் சந்திப்பதற்காகப் பிரேமாவின் குடிலுக்குச் சென்றாள் என்று ஏற்கெனவே சொன்னேனல்லவா? அன்று இரவு அரண்மனையில் நடந்த சம்பவம் ரசமானது. திலகவதி ஆச்சிரமத்திற்குச் சென்றதை ஒரு சாதகமாக்கிக் கொண்டு கோதை ஒரு வேடிக்கையைச் செய்தாள். அதை நினைத்தால் எனக்கு இப்பொழுதும் சிரிப்பு வருகிறது. திலகவதி என்னைச் சந்திக்க விரும்புவதுபோல ஒரு ஓலையை எழுதி, கோதை எனக்கு அனுப்பிவைத்தாள். நான் அரண்மனையில் உள்ள ராஜகுமாரியின் மாளிகைக்குச் சென்றேன். அங்கே கோதை திலகவதியைப்போல் வேஷத்தைப் போட்டுக்கொண்டு நின்றாள். என்னை ஏமாற்றவேண்டுமென்ற எண்ணம் பரிபூரணமான வெற்றியை அடையவில்லை என்பதை கோதையினால் கூட மறுக்க முடியாது. விஷயம் வெளிப்பட்டபின் நாங்கள் இருவரும் சம்பாஷித்துக் கொண்டிருக்கும் போது இளவரசர் வந்தார். அதே சமயத்தில்தான் புயல் அடித்துக் கொண்டிருந்தது. நான் திலகவதியுடன் பேசிக்கொண்டிருக்கிறேன் என்று இளவரசர்கூட அவசரத்தில் என்னைக் கோபிக்க ஆரம்பித்தார். உண்மையை வெளிப்படுத்தியபிறகு அவரும் சிரித்துவிட்டார். பிறகு மறுநாள் அதிகாலையில் நானும் அவரும் திலகவதியைத் தேட ஆச்சிரமத்துக்குச் சென்றோம். திலகவதி, பிரேமா, பரந்தாமன் ஆகிய மூவரையும் காணாமல் நாங்கள் பற்பல விதமாகச் சிந்தித்துக்கொண்டே நகருக்குத்திரும்பி வந்து கொண்டிருந்தோம். அப்பொழுது வழியில் கோதை ஓடிவந்து என்னை அரசர் நாடுகடத்தி

விடும்படி [உத்தரவிட்டிருப்பதாகக் கூறினள். அந்தற் இடையில் ராஜகட்டளையை நிறைவேற்ற சேவகர்கள் சகிதம் நமது தளபதி வீரவர்மனே அங்கு வந்து தகவலை அறிவித்தார். ஒரு குற்றமும் செய்யாத என்னை இவ்விதம் தண்டிப்பதற்குரிய காரணத்தை அறியாமல் இளவரசரே திகைத்துப்போய் விட்டார். என்னை விடு தலைசெய்ய அரசரிடம் போய் மன்றாடப்போவதாகக் கூறி ராஜசேகரவர்மன் என்னை ராஜசேவகர்களிடம் ஒப்புவித்துவிட்டுச் சென்றார். பின்பு ராஜசேவகர் களுடன் நானும் கோதையும் புறப்பட்டோம். குதிரை களின்மீது ஏறியே நாங்கள் சென்றோம். நதியிலோ ஜலம் நிறைய ஓடிக்கொண்டிருந்தது. பக்கத்தில் உள்ள இடங்களிலெல்லாம் ஜலம் பரவிக் கொண்டிருந்தது. நாங்கள் அந்நதிக்கரையில் உள்ள ஒரு கிராமத்தை அன்று சாயங்காலத்தில் அடைந்தோம்.

"பசியோ அதிகமாய் விட்டது. பொழுதும் சாய்ந்து விட்டது. ஒரு மரத்தடியில் நாங்கள் தங்கினோம். அச்சமயம் காவியுடையுடன் விளங்கிய ஒரு துறவி அங்கு வந்து சேர்ந்தார். அச்சந்நியாசியை நான் அறிவேன். அவர் அடிக்கடி நிர்மலானந்த அடிகளின் ஆச்சிரமத்திற்குவந்து தங்குவதுண்டு. அவருடன் நான் பலமுறை தத்துவ விஷயங்களைப்பற்றி விவாதித்திருக் கிறேன். அவர் என்னைப் பார்த்ததும் ஆவலுடன் "ஏது இப்படி புறப்பட்டாய்? ஆனந்தா, எங்கே பிரயாணம்?" என்று விசாரித்தார். பரந்தாமன், நிர்ம லானந்த அடிகள் முதலியவர்களைப்பற்றியும் கேட்டார். பின்பு அவர் கையிலிருந்த பிட்சா பாத்திரத்திலுள்ள அன்னத்தை எங்களுக்கு முதலில் கொடுத்து பசியை ஆற்றினர். நான் சகல விவரங்களையும் அவரிடம் சொல்லும்படி நேரிட்டது. நிர்மலானந்த அடிகள் இறந்து போன சங்கதியைக்கேட்டு அவர் கண்களில் ஜலம் ததளித்தது. "என்ன ஸ்வாமி! சகலவற்றையும் துறந்த தாங்களா கண்ணீர்விடுவது? சந்நியாசிகளுக்கு இது அழகல்ல என்று சொல்லுவார்களே?" என்று குறும்புத்தனத்துடன் கேட்டேன். என் மனோ பாவத்தை அவர் நன்கு அறிந்தவராதலால் உடனே

சொன்னார்: "ஆனந்தா, சந்நியாசிகளும் மனிதர்கள் தானே?" அவர் பதில் எனக்கு நிரம்பவும் பிடித்திருந்ததால், "இம்மாதிரி இதய சுபாவமுடைய சந்நியாசிகளால் சமூகத்திற்குக் கெடுதல் இல்லை. கடவுளுடைய நல்ல பெயரை இவர்கள் காப்பாற்றுகிறார்கள்!" என்று புன்முறுவலுடன் கூறினேன். அதே சமயத்தில் அங்கு ஒரு குதிரை ஓடிவரும் காலடியின் சப்தத்தைக் கேட்டு நாங்கள் எல்லோரும் திரும்பினோம். எங்கள்முன் வந்து நின்ற புரவியிலிருந்து கீழே இறங்கினார் இளவரசர் ராஜசேகரவர்மன்.

"ஆனந்தா, நீ குற்றவாளி அல்ல. அரசர் உனக்கு விடுதலையை அளித்துவிட்டார். புறப்படு" என்றார். விபரத்தைக்கூட கேட்கப் பிரியப்படவில்லை. கோதை உடனே நகருக்குப் புறப்படத் தயாராகிவிட்டாள்..." என்று சொல்லிக்கொண்டேவந்த ஆனந்தன் கோதையைப் பார்த்து சிரித்துக்கொண்டே மறுபடியும் பேச ஆரம்பித்தான். சிவகாமி மெதுவாக கோதையை நோக்கி வேடிக்கை விலாசம் நிறைந்த முகத்துடன் ஜாடை காட்டினாள்.

"பிறகு என்ன நடந்தது?" என்று கபாலி தாண்டவன் கேட்டான்.

ஆனந்தன் சொன்னான்: "என்மேல் சுமத்தப்பட்ட குற்றமென்ன என்று இளவரசரைக் கேட்டேன். இளவரசர் என்ன பதில் சொன்னார் என்பதைக் கோதையையே கேளுங்கள். நான் ஒன்றும் மறைக்கவில்லை. ராஜசேகரவர்மன், எல்லாம் கோதை செய்த வேடிக்கைதான் என்று பதில் கூறினார். எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே என்றேன். "நேற்று இரவு நீயும் என் தங்கை திலகவதி வேஷத்தில் கோதையுமாக நெருங்கிநின்று பேசிக்கொண்டிருந்தசமயத்தில் நான் வந்து பார்த்து உன்னிடம் முதலில் கோபங் கொண்டேன் அல்லவா? அதற்கு முன்பே திலகவதியைப் பார்க்க அரசர் சந்திரவர்மரே அங்கு வந்திருக்கிறார். வெளியே நின்றபடியே சாளரத்தின் வழியாக உள்ளே உங்களைப் பார்த்தாராம். திலகவதியுடன்தான் நீ தகாத

முறையில் நடந்துகொண்டிருக்கிறாய் என்று நினைத்து கோபங் கொண்டுவிட்டார். உடனே பொழுது விடிந்ததும் உன்னை நாடுகடத்தும்படி தண்டித்திருக்கிறார். உன்னுடன் பேசிக்கொண்டிருந்தது திலகவதியல்ல என்றும், கோதைதான் என்றும் நான் எடுத்துச் சொன்ன பிறகுதான் அரசர் தான் அவசரப்பட்டு நியாயத்திலிருந்து தவறியதற்காக வருந்தி உனக்கு உடனே விடுதலை அளித்திருப்பதாகக் கூறிவிட்டார்" என்று இளவரசர் பூரா விபரங்களையும் கூறினார். அப்பாடா! என்று நான் பெருமூச்சு விட்டேன். பிறகு, திலகவதி, பிரேமா முதலியவர்களைப்பற்றி ஏதாவது தகவல் உண்டா? என்று கேட்டேன். "இதுவரையில் தகவல் ஒன்றுமில்லை. அரசர் மிகவும் கவலையுடன் படுத்திருக்கிறார். நான் சிறந்த 'நீச்சல்' வீரர்களை அழைத்து நதியில் ஏதாவது பிரேதங்கள் மிதக்கின்றனவா என்று பார்க்கும்படி கட்டளையிட்டிருக்கிறேன். மேலும் குறிப்பிட்ட தூரம் வரையில் அங்கங்கே மதகுகளையும் மூடும்படி உத்தரவிட்டிருக்கிறேன்" என்றார் இளவரசர். திலகவதி, பிரேமா, பரந்தாமன் ஆகிய மூவரின் கதி தெரியவில்லையே என்று நாங்கள் துக்கப்பட்டோம். கூட இருந்த அந்தத் துறவி எங்களைத் தேற்றி "துக்கத்தின் உற்பத்தியைப்பற்றி விசாரணை செய்து பார்த்தால் நாம் விசனப்படுவதில் அர்த்தமே இல்லையென்று வெளிப்படும்" என்று கூறினார். சிறிது தூரத்திற்கப்பால் நதிக்கரையிலே ஒரே கூட்டமாக ஜனங்கள் நிற்பதையும், அங்கிருந்து இரைச்சல் கிளம்புவதையும் இளவரசர் கவனித்தார். "வாருங்கள், அங்குப் போய்ப் பார்ப்போம்" என்றார். நாங்கள் எல்லோரும் அங்குப்போய்ச் சேர்ந்தோம். இளவரசரைக் கண்டதும் கூட்டம் வழிவிட்டது. அங்கு இருந்த நீந்துவதில் நிபுணர்களான மல்லர்கள் ராஜசேகரவர்மனை வணங்கி "யுவராஜா, சவங்கள் அகப்பட்டன...." என்றனர். அந்த வார்த்தைகளை நாங்கள் காதில் வாங்கவில்லை. எங்கள் உயிரையே பிய்த்தெடுப்பது போன்ற காட்சிகளைப் பார்த்தோம். நதிக்கரையிலே திலகவதி, [பரந்தாமன், பிரேமா ஆகியவர்களைக் கண்டோம், அலங்கோலமான சவங்களாக. ஒரு பிரேதம் கிராமத்திற்குள்

பரவிய வெள்ளத்தோடு வெள்ளமாக மிதந்துவந்து விட்டதாம். மற்ற இரு உடல்கள் நதியின்மீது குறுக்கே விழுந்துகிடந்த மிகப்பெரிய மரத்தின் இடுக்கில் சிக்கிக் கொண்டிருந்தனவாம். அவற்றை அம்மல்லர்கள் தூக்கி அப்பொழுதுதான் கரைக்குக் கொண்டுவந்திருக்கிறார்கள். எதிர்பாராத விதமாக மற்றொரு பிரேதத்தை கிராமத்தார்கள் எடுத்துவைத்திருப்பதை அவர்கள் கண்டார்கள். அது சம்பந்தமாக ஏதோ பேசிக்கொண்டிருக்கும் சமயத்தில்தான் நாங்கள் அங்குப் போனோம். இளவரசர் பிரேமாவையும் திலகவதியையும் மாறி மாறி நோக்கினார். பரந்தாமனின் தேகத்தையும் பார்த்தார். அவரால் ஒன்றும் பேசமுடியவில்லை. கண்கள் கொட கொடவென்று கண்ணீரைக் கொட்டின. கண்ணீர் விட்டு அறியாத நான்கூட கலங்கி விட்டேன். கோதையோ அப்பிரேதங்களுக்கு அருகில் சென்று சிறு குழந்தைமாதிரி வாய்விட்டு அழ ஆரம்பித்து விட்டாள். எங்கள் எல்லோருக்கும் ஆறுதல் சொல்லக்கூடிய நிலையில் உள்ளவர் அந்தத் துறவிதான். அந்த மூன்று சவங்களைப் பார்த்துவிட்டு சங்கடத்தை வென்ற சாந்தமான முகப் பொலிவுடன் எங்களைப் பார்த்துச் சொன்னார்: “கவலைப்படுவதில் பிரயோஜனம் இல்லை. கொஞ்சம் ஆழ்ந்து இந்த மூவர்களையும் பாருங்கள்.” பின்பு அவர் திலகவதியின் உடலைச் சுட்டிக்காட்டி ‘இது இச்சா சக்தி’ என்றார். பிரேமாவின் தேகத்தைக் காட்டி இது ‘கிரியா சக்தி’ என்றார். பரந்தாமனைச் சுட்டிக்காட்டி ‘இதுஞானசக்தி’ என்றார். ‘இச்சா சக்தியும், கிரியா சக்தியும் ஒன்றுகூடி ஞானத்தை ஆலிங்கனம் செய்து கொண்டிருக்கின்றன. இந்த ஞானம் பிரம்மம் என்ற நதியில் கலந்து ஒன்றாகிவிட்டது. இதைக்கண்டு நாம் வருந்தவேண்டியதில்லை’ என்று அவர் தாம் படித்த தத்துவத்தை உபயோகித்துக் கூறினார்' ஒரு கவளம் அன்னமில்லாவிட்டால் உயிர் போய்விடுமென்று தவிக்கிற ஒருவன் முன்பு கடவுளைப் பற்றிப் பிரசங்கம் புரிவதுபோலிருந்தது அவர் அச்சமயம் பேசியது. அவர் சொன்ன விஷயம் இளவரசர் காதில் ஏறவேயில்லை. அவர் நிர்ஜீவனாய் நின்றார். அழிந்து போன ஸ்வர்க்கத்தின் இழந்துபோன தேவப்பெண்கள்

மாதிரி தோன்றிய அவர்களைப் பார்க்கப்பார்க்க இந்தக் காதல்மீது—இந்தப் பிரேமையின்மீதுதான் எனக்குக் கோபம் கோபமாக வந்தது. வாழ்க்கையையே தின்னும் இக்காதல் உலகிலிருந்தே நாசமாகப் போகட்டும் என்றுகூட சொல்லலாமெனஎனக்குத் தோன்றியது. நான் அத்துறவியைப் பார்த்து "ஸ்வாமி, இவர்கள் இறந்ததற்காக நான் வருந்துவதைவிட, இக்காதலை இவர்கள் இவ்வளவு பயங்கரமாக்கிவிட்டார்களே என்பதை நினைத்துத்தான் அதிகமாக வருந்துகிறேன். உலகில் ஆணும் பெண்ணும் காதலைவிட வாழ்க்கை பெரிது என்று எண்ணவேண்டும். எக்காரணத்தைக் கொண்டும் காதலுக்காக வாழ்வை பலியிடக்கூடாது" என்றேன். அவர் புன்னகைத்துக் கொண்டே "அப்பா நீ சொல்லுவது உண்மை. ஆனல், காதல் அன்பாக மாறி, அது உலகத்தை எல்லாம்—சர்வஜீவராசிகளை யெல்லாம் காதலிக்க ஆரம்பித்துவிட்டால், வாழ்வின் பலி தேவையில்லாமல் போய்விடும். அப்படி ஒரு வேளை வாழ்வின்பலி ஏற்பட்டாலும் அதனல் உலகத் துக்கு நன்மையே ஏற்படும். அந்தத் தியாகத்தில்தான் தெய்வ ஒளி ஒளிர்விடுகிறது........" பின்பு நாங்கள் எல்லோரும் இளவரசரைத் தேற்றி அழைத்துக் கொண்டுபோவதில் கவனம் செலுத்தினோம்."

இந்த விபரங்களைக் கேட்டதும் அங்கிருந்தவர் களும் மனம் உருகினர். இடை இடையே ஆனந்தனின் கருத்துக்கள் அவர்கள் மனத்தில் படரப்பார்த்த சஞ்சலத்தின் சாயலை மாற்றின என்று கூறலாம்.

"எப்படியோ அவர்கள் செத்து தெய்வமாகி விட்டார்கள். நாம்தான் கஷ்டப்பட இன்னும் உயிரு டனிருக்கிறோம்" என்றாள் கோதை.

"ஓ! அப்படியா? இறப்பவர்கள் எல்லாம் தெய்வ மாகிவிடுகிறார்களா? அப்படியானல் நானும் இறந்து விட்டால் பரவாயில்லை என்று தோன்றுகின்றதே"— சிரித்தான் ஆனந்தன்.

"நீங்கள்தான் இறக்கப் பிரியப்படாதவராயிற்றே?" என்றாள் சிவகாமி.

"அட்டா! அந்தக் காரியத்தைச் செய்துவிடாதே. நீ இறப்பதற்கு முன்பு அவசியம் ஒரு காரியம் ஆகவேண்டியிருக்கிறது. அதை நானும் சிவகாமியு மாகச் சேர்ந்து இன்று முடித்துவைத்து விடுகிறோம். பிறகு நீ தாராளமாக இஷ்டப்படி சாவை ஒரு கைபார்க் கலாம்" என்று கபாலி-தாண்டவன் கூறிவிட்டுக் கலகல வென்று சிரித்தான்.

"அதென்ன காரியம்? நிணறுவெட்ட பூதம் புறப்படுகிறதா?" என்றான் ஆனந்தன்.

"இல்லை. வாழ்வைப் பரிமளிக்கவைக்க காதல்தான் புறப்பட்டிருக்கிறதென்பது என் சித்தாந்தம். தெரிந்த தோ? வாழ்வின் பரிமளிப்பு காதலின் பரிபூரணத்தில் தான் இருக்கிறது."

"தாண்டவா, ஈதென்ன தத்துவம்? ஒன்றும் விளங்கவில்லையே."

"விளங்கவைக்கிறேன்" என்று சிவகாமியைத் திரும்பிப்பார்த்தான் தாண்டவன். அதேசமயத்தில் சிவகாமி "கோதை, சட்டென்று எழுந்திரு" என்று கோதையின் கரத்தைப்பற்றி இழுத்துக்கொண்டே எழுந்தாள். அக்கணமே தாண்டவன் ஆனந்தன் கையைப்பற்றித் தூக்கிக்கொண்டே எழுந்தான். அங்கு உட்கார்ந்திருந்த நண்பர்களையும், அவர்களின் மனைவி மார்களையும், மற்ற பெண்களையும் பார்த்துக் கூறினான்: "நீங்கள் எல்லோரும் சாட்சி. உங்கள் எல்லோருக்கு மேல் அந்த ஈஸ்வரன் சாட்சி. இதுவரையில் ஆனந் தனும், கோதையும் நமது நாட்டு வழக்கத்தை ஒட்டி களவு முறைப்படி காதலர்களாக இருந்தார்கள். இன்றைய தினத்திலிருந்து கற்பு முறைப்படி காதல் தம்பதிகளாகிறார்கள். நாம் ஆசீர்வதிப்போமாக."

இருவர் கரங்களையும் ஒன்றுசேர்த்து வைத்தனர். அங்கு இருந்தவர்கள் எதிரே ஒரு தட்டில் இருந்த உதிர்ந்த புஷ்பங்களை எடுத்துத் தூவினார்கள். அப் பொழுதுதான் அவசர அவசரமாக ஆனந்தனின் தந்தை சந்திரசேகரப் புலவரும் அவர் மனைவி மீனாட் சியும் அங்கு வந்தனர். அவர்களிடம் தாண்டவனும் சிவகாமியும் புஷ்பங்களைக் கொடுத்து தூவச் சொன்

ஞர்கள். "ஆனந்தா, இனி தப்பமுடியாது. நாங்கள் சொல்லுகிறபடிக் கேட்டேயாகவேண்டும்" என்றனர்.

புன்னகையுடன் "உங்கள் இஷ்டம்" என்றான் ஆனந்தன்.

பின்பு "தாண்டவா, உன்நோக்கம் இப்பொழுது தான் வெளிப்பட்டது! நான் இம்மாதிரி சம்பிரதாயத்திற் கெல்லாம் கட்டுப்பட்டவன் அல்ல என்று உனக்குத் தெரியாதா?" என்று கேட்டான் ஆனந்தன்.

"கோதை வேஷம் போடுவதில் கெட்டிக்காரி என்று சொன்னீர்கள் அல்லவா? அவள் வேஷக்காரி அல்ல என்று நிரூபிக்க நான்தான் இந்த ஏற்பாட்டை செய் தேன்" என்றாள் சிவகாமி. மீனாட்சி சிவகாமியின் சொல்லை ஆமோதித்தாள்.

"ஆமாம், அப்பா, ஆமாம். நீ வேஷக்காரன் அல்ல என்பதை நிரூபிக்கவே இவ்வேற்பாட்டுக்கு நானும் இணங்கினேன். இது சம்பிரதாயமல்ல; மகிழ்ச்சிக்குரிய சம்பவம்."

இவ்விதம் கூறிவிட்டு கபாலிதாண்டவன் சிவகா மிக்கு ஏதோ சமிக்ஞை செய்தான். அடுத்த நொடியில் அவள் நடனமாடத் தொடங்கினாள்.

அவள் பார்வதியாக மாறிவிட்டாள். தாண்டவன் பரமசிவனாகிவிட்டான்.

நடனக்கச்சேரி நடக்கிறது.

அழகின் ரச உணர்ச்சி ஜதிபோடுகிறது!

அங்கிருந்தவர் எல்லோரும் மெய்ம்மறந்து நாட்டி யத்தில் லயித்திருக்கிறார்கள்.

தாண்டவனும் சிவகாமியும் ப... நடனமா டுகிறார்கள்; ஆடிக்கொண்டேயிருக்கிறார்கள்.

நடனம் இன்னும் முடியவில்லை.

("முத்தாய்ப்பு")



Printed at the Crown Printing Works, Colombo.

னும், குணம் "சிறுகுணத்தர்க்கறிவருநன்னிலே" என்றபாடலினு னும், நாமம். "ஆதியந்தமரியென யாவையும்" என்றபாடலினுனு ம்,சொல்லப்பட்டனவென்றும் சமாதானமாக உத்தரம்சொல்லக் கேட்டு, அவர்கள் சரஸ்வதியம்சமாகிய உமதுவல்லமையை நாங் கள் என்னென்று சொல்லுவோமென்று அதிசயித்துப் பின்புபா ரகாவியமாதலால் இதில்லங்களுக்கு ஆதாரமேதாவது உண்டோ வென்ன, இவர் உண்டென்று யுத்தகாண்டத்தில் இந்திரஜித்துவ தைப்படலத்தில், இளையபெருமாள் ஏவினபாணத்தால் இந்திரஜி த்து தலையறுபட்டு விழுந்தபோது, அவனால் முன்பு உபத்திரவப் பட்ட தேவர்கள் நிர்ப்பயமாய் ஆகாசவீதியிற்கூடிநின்று,வில்லெ டுத்துப் போர்செய்யும் வீரர்களுக்கெல்லாம் மேலானவீரனாகிய இந்திரஜித்து இறந்தபடியினாலே இலங்காதிபதிக்கு நெடுங்காலம் அவிச்சின்னமாய்ச் சென்றுவந்த அரசாட்சியானது இனி ஒரு பொழுதும் சொல்லமாட்டாதென்று பெருங்களிப்புற்று, அரை யில் உடுத்தஉடையையும், தோள்மேலிட்ட உத்தரீயமுதலானவை களையும், ஒக்கஉரிந்து பந்துபோலச்சுருட்டி மேலேவீசி எறிந்து கொல்லாவிரதிகளென்னும் சமணர்களுடைய உபாசனதேவர்க ளாகிய அருகர்கூட்டம்போல நிர்வாணிகளாய்ஆனந்தக்கூத்தாடி னார்களென்னும் கருத்ததை உள்ளிட்ட,

"வில்லாள ரானார்க் கெல்லாமேலவன் விளிதலோடும்
செல்லாத விலங்கைவேந்தர்க்கரசெனக் களித்ததேவர்
எல்லாருந் தூசுநீங்கி யெழுந்தவ ரார்த்தபோது
கொல்லாத விரதத்தார்தங் கடவுளர் கூட்டமொத்தார்."

என்றபாடலைச்சொன்னார், அதையவர்கள் கேட்டு வியந்து கையொப்பம் கொடுத்தார்கள்.

அக்கையொப்பத்தைக் கொண்டுவந்து காட்டியும் ஸ்ரீரங்கத் துவைஷ்ணவர்கள் மாவண்டூரிற் பண்டிதசிரேஷ்டனாகிய ஒருகரு மானிருக்கிறான். அவனுடையகையொப்பமும்வாங்கிவாருமென்று ர்கள். கம்பர்மாவண்டூருக்குப்போய்அந்தக்கருமானுக்குத்தமதுவ ரவையறிவிக்க அவன்இதற்காகத்தாங்கள்இவ்வளவுதூரம்பிரயாசப் ப்பட்டுவரவேண்டுமா, அப்படிப்பட்டதில்லைமூவாயிரவர்களும்,தி ருநறுங்கொண்டையிலுள்ள சமணர்களும்அங்கீகரித்தநூலுக்கு

ச்சங்கையென்னவிருக்கிறது. மேலும் சாரதாவிக்கிரகமாயிருக்கிற தங்களுக்குச்சிற்றறிவுள்ளதாவெனம்பரத்திரமென்று சொல்லிப்புஸ்தகத்தை அவிழ்த்துச் சிற்சில சந்தர்ப்பங்களிற் சோதித்து இரண்டொருகேள்விகேட்டுப்பிறகு, இந்தமகாகாவியத்தில்[illegible]க்களுக்கு ஆஸ்பதமொன்றுமில்லையாவென்றுகேட்ககம்பர் உங்களுக்கில்லாமற் போவானேனென்று ராமராவணயுத்தத்திற் பிரதாபலங்கேசுரன் ராமர்மேல் மாயாஸ்திரபிரயோகஞ்செய்தபொழுது அவர்விபீஷணாழ்வானைநோக்கிஇதென்னவென, விபீஷணன் கேளுமையா! கருக்கொண்டுநிறைந்த கார்மேகம்போன்றகரியதிருமேனியையுடைய ஸ்ரீராமா திக்கஜங்களின் கொம்புகளை ஒடித்த ராவணன், இழைநுழையும் ஊசியொன்றை உண்டாக்கி, அதைக் கருமாரிடத்திற் கொண்டு போய்க்காட்டி இவ்வூசி நல்ல வேலைப்பாடாகச் செய்யப்பட்டது இதைத் தக்க விலைகொடுத்து வாங்கிக் கொள்ளுங்களென்று சொல்லத்தெருவில் ஊசிவிற்கிறவர்களைப்போல, மூலப்பிர கிருதிமாயை, யோகமாயை அதிரோகமாயை மகாமாயை முதலான சகலமாயைகளுக்கும் உற்பத்தி ஸ்தானமாயிருக்கின்ற மாயனாகிய உன்மேலேதானே மாயாஸ்திரத்தைப் பிரயோகித்தானென்றுசொன்ன இக்கருத்தை உள்ளிட்ட,

"இருப்புக் கம்பியர்க் கிழைநுழை யூசியொன்றியற்றி
விருப்பிற் கோடிரால் விலைக்கெனும்பதகரின விட்டான்
கருப்புக்கார் மழைவண்ணவக் கடுந்திசைக் களிற்றின்
மருப்புக்கல்விய தோளவன் மீளரு மாயை,,

என்ற பாடலைச்சொன்னார். அதற்கவன் சந்தோஷப் பட்டுக்கையொப்பங் கொடுத்தான்.

அதைக் கொண்டுவந்து காண்பித்தபொழுது, ஸ்ரீரங்கத்தார் தஞ்சாவூரில் அஞ்சனாட்சியென்ற ஒருதாசி, பிரபலவித்துவாமிசையா யிருக்கிறாள். அவள் கையொப்பமும் வாங்கிவந்தாற் சர்வோத்தமமாயிருக்குமென்றுசொல்ல, கம்பர் ஆராயினுமென்ன,

"கடைநிலத்தோ ராயினுங் கற்றுணர்ந் தோரைத்
தலைநிலத்து வைக்கப்படும்,

என்பதனால் தோஷமில்லையென்று அவளிடத்திற்குப்போன பொழுது, அவள் உடனடங்கித் தேவரீர் இவ்வளதூரம் வந்தது ஆர்செய்த பாக்கியமோ, ஆயினும் என்ன காரியமென, இவர் தமது கருத்தை வெளியிட, இதற்குத்தானா இத்தனை பிரயத்தனம் தாங்கள் இருக்குமிடத்திலிருந்தே அடியாளை வரும்படி நியமித்தால் தலையாலே நடந்துவரேனா, இதென்ன அபசாரமென்று வருந்த முற்று மற்றும் தமது கல்விக்குமுன்னே எளியேன்கல்வியெம்மாத்திரம் சூரியனுக்குமுன்னே மின்மினியும், கடலுக்குமுன்னே கால்வாயும்போல்வது தானேயென்று நைச்சியமாகச் சொல்லிப் பின்பு இந்தப்பெருங்காப்பியத்திலெங்களுக்கெவ்வளவாவது பற்றுண்டோவென்ன கம்பர் அநேகவிடங்களிலிருக்கிறது, அவற்றுள் ஒன்றுசொல்லுகிறேன் கேளென்று, பாலகாண்டம் மிதிலைக்காட்சியில், மிதிலைநகரத்தின் ராஜவீதியிலுள்ள விசித்திரங்களையெல்லாம் பார்த்துக்கொண்டே விசுவாமித்திர முனிபின்னேபோகிய ராமலட்சுமணர்கள், அங்கங்கே அனந்தம் ஸ்திரீகள், ஆணிமுத்திழைத்த பந்துகளை எறிந்து விளையாடுகையில், அப்பந்துகள் சரீரசம்பந்தத்தால் உண்டாகும் போகசுகத்தைத் தங்களைத் தழுவும் புருஷர்களுடனே சமானமாய்த்தாமும் அனுபவிப்பதல்லாமல். அதற்காக அவர்களிடத்தில் விலையும் பெற்றுக்கொள்ளும் சாமர்த்தியவதிகளாகிய வேசையருடைய அனிதப்பட்ட மனம்போலவும் அடுத்த பொருள் மயமாய்க் காண்கின்ற பளிங்குபோலவும் மைதீட்டிய கண்ணொளிபாய்ந்தபொழுது கறுத்து நீலப்பந்தாகவும், செங்காந்தள் மலர்போன்ற கையில்வந்து சேர்ந்தபொழுது சிவந்து பவளப்பந்தாகவும் காட்டும் கையில்வந்து சேர்ந்தபொழுது சிவந்து பவளப்பந்தாகவும் காட்டும் அதிசயத்தைக் கண்டார்களென்னும் கருத்தை உள்ளமைத்துப் பாடிய.

“மெய்வரு போகமொக்க வுடனுண்டு விலையுங்கொள்ளும்
பையரவல்குலார்தம் முள்ளமும் பளிங்கும்போல
மையரி நெடுங்கணோக்கம் படுதொறுங் கருகிவந்து
கையுறிற் சிவந்துகாட்டுங் கந்துகம் பலவுங்கண்டார்,

என்று பாடலைச்சொன்னார் அதுகேட்டு அவள் மனமகிழ்ச்சிகூர்ந்து தங்களுக்கு நான் கையொப்பம் கொடுப்பது மரியாதையல்லவே யென்றுஸ்தோத்திரமாக,

"அம்பரா வணிசடை யானையன்றுதல்
உம்பரான்முனிவரால் போகரா லுயர்
இம்பராற் பிணிக்கரு மிராமவேழஞ்சேர்
கம்பராம் புலவரைக் கருத் திருத்துவாம்"

என ஒரு பாடல்பாடிக்கொடுக்க, அதைக் கொண்டுவந்து நம்பெருமாள் கோயிலின் முதலிகளாகிய வைஷ்ணவர்களுக்குக் காட்டினார்.

அந்தக் கவியைப்பார்த்தும் ஸ்ரீரங்கத்தார்கள் வாய்கூசாமல்பின்னும் இத்திலரைக்குறித்துக் கையொப்பம் வாங்கிவரச்சொல்ல இவர் அப்படியேவாங்கிவர, அவர்கள் எல்லாஞ்சரிதான் இன்னம் அம்பிகாபதி யென்பவருடைய கையொப்பம் ஒன்றுமாத்திரங்குறைவாயிருக்கிறது அவர் சிறந்தவித்வானாகையால் அவருடையகையொப்பமுமிருந்தால் உம்முடைய காவியத்திற்குச்சிறப்பென்றுநினைக்கிறோம் அது உமக்குத்தெரியாததல்ல அப்புறம் உமதிஷ்டமென்றார்கள் கம்பர் அம்பிகாபதி என்பிள்ளைதானே அவனுடையகையொப்பம் எனக்கு அத்தனை லக்ஷியமானதாவென்று நினையாமல் முன்னேயிறந்த காதைப்பார்க்கிலும் பின்னேமுளைத்த கொம்பு வலியுடைய தல்லவா வென்றெண்ணி, தம்முடைய சுற்றுச்சொல்லிகளில் இருவரை அனுப்பி அம்பிகாபதியை அழைத்துவரச்சொல்லி அவன்வந்தவுடனே அப்பா, ராமாயணத்திற்கு எல்லாரும்போலநீயுங்கையொப்பம் கொடுக்கவேண்டாமாவென்ன, அவன் ஐயா, அதிலெனக்கென்ன ஆஸ்பதமிருக்கிறதெனக் கம்பர் தமக்கு அவன்பிள்ளையாகையால் அவனுடனே விளையாட்டாகவும் வித்வசாதுரியமாகவும், உனக்கு நான்கு அதிசயம் வைத்திருக்கிறேன், அந்நான்கும் ராமாயணத்தில் சளசள களகள, கொள-கொள-கிருகிரு வென்பனவாம்,

அவைகளுள், 1-வது சளசளப்பு, பாலகாண்டத்தில் திருவவதாரப்படலத்தில், ரோமபாத மகாராஜனுடைய நாட்டிற்குக்கலைக்கோட்டுமாமுனிவந்தபொழுது, அதற்குமுன்பன்னிரண்டு வருஷகாலமாய்மழைபெய்யாமையால்அக்காட்டிலுள்ளநதிகளுக்குண்டாயகுறைவுதீரவும்மேற்படி ராச்சியத்தாரைப்பிடித்தவா

தாவருக்ஷக்ஷாமம் நீங்கவும் மேகமானது ஆகாயத்தில்தோன்றிச் சிவனது கண்டத்திலிருக்கும் விஷம்போலக் கருத்துச் சந்ததாரையாக மழைபெய்ததென்பதைச் சொல்லிய,

"வளநகர் முனிவரன் வருமுன் வானவன்
களனமர் நடுவெனக் கருகி வான்மிசை
சளசள வென்மழைத் தாரைகான்றன
குளனொடு நதிகடங் குரைகடாவே."

என்னும் பாடலினும்.

2-வது. களகளப்பு மேற்கூறிய காண்டத்தில்உண்டாட்டுப்படலத்தில்சீதாகல்யாணத்திற்குப்பிரயாணப்பட்டுப்போகியதசரதமகாராஜாவின்சேனையில் இரண்டுபெண்டுடையபுருஷனொருவன் இளையாளை வீட்டில்விட்டு மூத்தாளைக்கூட அழைத்துக்கொண்டு போய்மார்க்கமத்தியிலொருசோலையில் இறங்கிப்புனலாடிமதுவுண்டுகளித்திருக்கையில், அம்மதுமயக்கத்தால்மறந்துதன்னருகிலிருக்கின்றமூத்தாளை அவ்விளையாள்பெயரைச்சொல்லி அழைத்ததனால்அவளுக்குத்தன்கணவன்தன்னை இளையாளுக்குச் சமானமாகப் பாவித்தானென்பதுபற்றிப் பிறந்தசந்தோஷத்தால் நகைப்பு வந்தது அக்கணத்திலேயே தன் சக்களத்தியை அவன்வீட்டில்விட்டு வந்தவிடத்திலும், அவள்மேல்தனக்குள்ள மோகத்தால்அவள்பெயரை மறக்கவில்லையே யென்று ஜனித்த துக்கத்தால் கண்ணீர்வந்தது என்பதைச் சொல்லிய.

" வளையமர்முன்கையோர் மயிலனாடனக்
கிளையவள்பெயரினைக் கொழுநனீதலும்
முளையெயிறிலங்கிட முறுவல்வந்தது
களகளவுதிர்ந்தது கயற்கணாலியே,

என்னும் பாடலினும்.

3-வது-கொளகொளப்பு, யுத்தகாண்டத்தில்கடல்சுட்டப்படலத்தில், ஸ்ரீராமர் வருணன்வரவில்லையென்றுகோபங்கொண்டுசமுத்திரத்தின்மேல் அக்கினியாஸ்திரப்பிரயோகஞ் செய்தபொழுது, பிரமாண்டத்திற்கு அப்புறத்திலுள்ள பெரும்புறகடலும் கொதித்

து என்றால், அதற்குட்புறத்திலுள்ள சப்தசமுத்திரமுங்கட்ட பாட்டைச் சொல்லவேண்டியதென்ன, அன்றியும் சிவனது ஜடா மகுடத்தில் அனேககாலமாயிருக்கின்ற கங்கையும்கொதித்தாள். அதுவும் அதிசயமல்ல. பிரமனது கமண்டலத்திலுள்ள கங்காஜலமும் அதிகமாகக் கொதித்ததென்று சொல்லிய,

"அண்டமூலத்துக்கப்பா லாழியுங்கொதித்ததேழு
தெண்டிரைக்கடலின்செய்கை செப்புவதெவனோசென்னிப்
பண்டைநாளிருந்தகங்கை நங்கையுங்கொதித்தாள்பார்ப்பான்
குண்டிகையிருந்தநீருங் கொளகொளகொதித்ததன்றே"

என்னும் பாடலிலும்,

4-வது கிருகிருப்பு, அக்காண்டத்தில் கும்பகருணன்வதைப்படலத்தில் இராவணன் அசோகவனத்திலிருக்கையில் கும்பகருணன் மடிந்தானென்றசெய்தியைச் சுகசாரணரோடிவந்துசொல்லக்கேட்டுத் தன்குரலோசை வானத்தளவும் எட்டும்படி அவனது பெயரைச்சொல்லிக் கூவியழைத்து, முன்பு கைலாசகிரியை எடுத்தகாலத்தில் அதை உமாபதிகண்டு திருவடியினால் அழுத்த, அம்மலையின்கீழகப்பட்டு மூட்டுப்பூச்சிபோல நசுங்கினான் அழுத காரணத்தால் தனக்குண்டானராவணனென்னும் பெயர்ப்பொருளை வெளியிட்டான். அதாவது அழுதானென்பதாம் (ராவணம் அழுமோசை) அதுகண்டுசீதையாளவள் ஆதொண்டைக்கனிபோன்ற வாயிதழ்துடிக்க, சரீரம் மயிர்க்குச்செறியத் தனக்குள்ளேமிகவும் சந்தோஷித்தா ளென்பதைச் சொல்லிய,

"அண்டத்தளவு மனையப் பகர்ந்தழைத்தான்
பண்டைத்தன் னாமத்தின் காரணத்தைப் பாவித்தான்
தொண்டைக் கனிவாய் துடிப்பமயிர்பொடிப்பக்
கெண்டைத் தடங்கண்ணா ளுள்ளே கிருகிருத்தாள்"

என்ற பாடலிலும் வருமாறு கண்டுகொள்ளலா மென்றார்.

அவைகளை அம்பிகாபதிகேட்டுச் சந்தோஷித்து நான்கையொப்பம், அல்லது சாற்றுகவிகொடுப்பதுவிசேஷமல்லவென்று ஸ்தோத்திரமாக,

"சம்பராட்டுழைமைசெவி சாற்றுபூங்
கொம்பனுடன் கொழுங்கிராமப்பேர்
பம்பராடனைழக் குங்களைத பாச்செய்த
கம்பராடன் கழறலையிற் கொள்வாம்"

என ஒர்கவி பாடிக்கொடுக்க, அதைக்கம்பர் ஸ்ரீரங்கத்தாருக்கு அறிவிக்கப்போனவிடத்தில் வைஷ்ணவசமையாசாரியர்களுக்குள்ளே பரமாசாரியராகிய ஸ்ரீமந்நாதமுனிகளெழுந்தருளியது கண்டு, அவருடைய திருவடிகளிலே சாஷ்டாங்கமாகவிழுந்துசேவித்துத் தமதுகருத்தை விண்ணப்பஞ்செய்ய, அவர் கம்பர்பாடினராமாயணத்தைக் கடாட்சித்தருளி அது சொற்சுவை பொருட்சுவை செறிந்ததாயும், பகவத்விஷயமானதாயும், அற்புதமாயுமிருப்பதுநோக்கி இவருடையபுலமை கேவலம் மானுஷிகமாயிருக்கவில்லையென்று அதிசயித்து இந்தக்காவியத்தை அவசியம்பிரசித்தம் பண்ணுவிப்பது நமது கடமையென்று திருவுளங்கொண்டு, கம்பரை மண்டபகைங்கரியம் ஒன்றுசெய்யச்சொல்லி நியமித்து அதை அவர்செய்துமுடித்தவுடனே சுபதினம்பார்த்து அரங்கேற்ற எத்தினமாயிருக்கையில், நம்பெருமாளாகிய ஸ்ரீரங்கநாதர் அர்ச்சகன்முகத்தால் ஆவிர்ப்பவித்துக் கம்பர், நீ நம் சடகோபனை பாடினையோ, பாடினல்தான் நாமுனதுராமாயணத்தைத்திருவுளம்பற்றுவோம், இல்லாவிடில் அது நமக்கு அங்கீகாரமாகாது பிள்ளாயென்றார்,

ஸ்ரீரங்கநாதர் அருளிச்செய்ததுகொண்டு கம்பர், ஆழ்வார்விஷயத்தில் நூறுகட்டளைக்கலித்துறையில் ஆழ்வாரந்தாதி, அல்லது சடகோபரந்தாதியென ஓரந்தாதிபாடினர். அதைக்குறித்துப் பின்னடியார் பாடியபாடல்,

"நஞ்சடகோபனைப்பாடினையோவெனநம்பெருமாள்
விஞ்சியவாதரத்தாற்கேட்பக்கம்பர்விரைந்துரைத்த
செஞ்சொலந்தாதிக்கலித்துறைநூறுந்தெரியும்வண்ணம்
நெஞ்சடியேற்கருள்வேதந்தமிழ்செய்தநின்மலனே"

என்பதாம் அவ்வந்தாதியிலே,

"வேதத்தின் முன்செல்க மெய்யுணர்ந்தோர் விரிஞ்சன்முதலோர்
கோதற்றஞானக் கொழுந்தின்முன் செல்க குணங்கடந்த
போதக்கடலெங்க டென்குருகூர்ப்புனி தன்கவியோர்
பாதத்தின் முன்செல்லுமோ தொல்லைமூலப் பரஞ்சுடரே."

என்பது முதற்பாடல் இதன்பொருள், புராதனமாயும், சர்வத்திற்கும் மூலகாரணமாயும், மேலானதாயும், ஜோதிஸ்வரூபமாயும் விளங்காநின்ற ஸ்ரீமந்நாராயணன் வேதசாஸ்திரங்களுக்கெல்லாம் அதீதனாகையால் அவன் அவைகளைக்கடந்து சென்றாலும் செல்லட்டும் அன்றியும், உண்மைநிலைகண்ட பிரமன்முதலானவர்களுடைய குற்றமற்ற ஞானத்தின் முடிவைக்கடந்துசென்றாலும் செல்லட்டும் ஏயகுணமில்லாத ஞானசமுத்திரமாய்த் தென்திசைக்கண் தாமிரவருணி நதிதீரத்திலுள்ள திருக்குருகூரில் அவதரித்த பரிசுத்தனாகிய எங்கள் சடகோபன் அருளிச்செய்தகவியின் ஒருபாதத்தைக்கடந்துசெல்வானோ, செல்லமாட்டானென்பதாம்.

ஸ்ரீமந்நாராயணனேசடகோபனுடையகவியின்ஒருபாதத்தைக்கடக்கமாட்டானென்பது என்னவெனில் பாண்டிநாட்டிலுள்ள திருக்குருகூரென்னும் திவ்யதேசத்தில் ஆழ்வாருக்குக் கோயிலிலும் வீதிப்பிறப்பாட்டிலும் வெகுகாலமாக வேதத்தமிழ்செய்த மாறன் சடகோபனென்பது முதலாகப் பற்பலவிருதுகூறித் திருச்சின்ன முதிருவதையும் பிரமோச்சவம் கண்டருளப் பண்ணுவதையும்பற்றி ஒருகாலத்தில் மதுரைச்சங்கத்தார் கர்வத்தால் அசூயைக்கொண்டு இந்தஆழ்வார்பக்தரேயல்லாமல்பகவானல்லவே இவருக்கு விருதுகூறித் திருச்சின்னமூதுவதாம் உச்சவம்நடத்துவதும் வியாத்தமே இது அணிபிள்ளையின்தலைமேலே அம்மிக்கல்லைவைக்கிறதுபோலிருக்கிறது இவர்பாடின திருவாய்மொழியென்ன சங்கமேறியசெய்யுளா, அதை வேதத்தமிழென்று அவ்வளவாகச் சிலாகிப்பது தகுதியல்லவேயென்று வாய்மதம்பேசி அபசாரப்பட்டார்கள். அத்தருணத்தில்ஆழ்வார் திருநகரியிலிருந்தவைஷ்ணவர்களுக்குச் சகியாமல் மனம்பதைத்தமையால்குருகைப்பிரான் சந்நிதியிற்போய் அவர்கள்சாஷ்டாங்கமாய்விழுந்துசேவித்து, ஆழ்வாரே உம்மையும் உமது திருவாய்மொழியையும் அவமதித்த சங்கத்தாருக்குக் கர்வபங்கமாம்படி தேவரீர்எதாவதுபிரா

யசித்தம் செய்வித்தாலொழிய அடியோங்கள் எழுந்திருக்கக்கடவோமல்லவென்று தீர்க்கவைராக்கிய சித்தர்களாய், மூன்றுநாள்வரையிலும் ஸ்நானம் அனுஷ்டானம் ஜெபம் ஹோமம் வேதபாராயணம் பகவதாராதனம் முதலானவைகளும் இல்லாமற்கிடந்த இடையாவெழுந்திராதிருந்தார்கள்.

அதுபற்றி, ஆழ்வார் ஒரு விர்த்தப்பிராமணனாகி வந்து ஆர்களும் மூன்றுநாளாக இக்கோயிலின் வாசலிற்கிடக்கிறவர்கள் என்னநிமித்தத்தால் இப்படிச்செய்வதென்றுகேட்க அவர்கள்நம்மாழ்வாரையும் அவரது திருவாய்மொழியாகிய திராவிடவேதத்தை சங்கத்தார் இகழ்ந்தபடியினாலே அவர்களுக்கு ஆழ்வார்யாதேனும் பிராயசித்தம் செய்விக்கவேண்டுமென்பது எங்கள் அபிமதமென்ன பிராமணன் இந்தக்கலிகாலத்திலும் அப்படிநடக்குமா, இதென்ன பயித்தியமென வைஷ்ணவர்கள்நடந்தால் எழுந்திருக்கிறோம்நடவாவிட்டால் இங்ஙனமே அன்னபானாதிகளில்லாமலிருந்துபிராணனைவிட்டுவிடுகிறோமென, ஆழ்வார் அவர்கள் மனோநிச்சயத்தை அறிந்து குறுகைகொண்டு நீங்கள் சடகோபர் அருளிச்செய்த திருவாய்மொழியில் இன்னபாடலின் இத்தனையாம்பாதத்தை ஒரு சிறுநறுக்கில் எழுதிக்கொண்டுபோய்ச் சங்கப்பலகையின்மேல் வையுங்கள் உங்கள்பீஷ்டப்படி நடக்குமென்றுசொல்லி அந்தர்த்தானமாய்விட்டார். வைஷ்ணவர்கள் திருக்குருகைப்பிரானோ இத்தன்மையாக எழுந்தருளினாரென்று தெரிந்து அவரருளிச்செய்தபடிசெய்தார்கள்.

அவர்கள் அந்தத்திருவாய்மொழிச் செய்யுளடியை எழுதிய ஒருசிறுமுறியைக் கொண்டுபோய்வைத்தமாத்திரத்தில்சங்கப்புலவர்கள் ஏறியிருந்தபலகையானது பொற்றாமரைத்தடத்தில் ஆச்சரியமாய் மூழ்கிவிட்டது அதிலிருந்தபுலவர்களெல்லாம் நீரில் திடரென்றுவிழுந்து அமிழ்ந்து கத்தித்தடுமாறி எழுந்துமெல்ல நீந்திக்கரைசேர்ந்து பார்க்கும்பொழுது அமிழ்ந்தபலகை உடனேகுபீரென்றுகிளம்பித்தன்னிடத்தில்வைக்கப்பட்டசிறுமுறியைமாத்திரம் ஏந்திக்கொண்டிருந்தது அவர்களதையெடுத்து அதிலெழுதியிருக்கின்ற ஆழ்வாரருளிச்செய்தஆயிரப்பிரபந்தத்தின்தொண்ணூ

றைந்தான் திருவாய்மொழியில் "கண்ணன் கழலிணை நண்ணு மனமுடையீர் - எண்ணுந் திருநாமம் - திண்ணம் நாரணமே" என்னும் முதற்கவியின் முதற்பாதத்தை வாசித்தறிந்து - உலகெலாம் உள்ளடியடக்கிய கண்ணன் கழலிணைகளைத் தன்னிடத்தில் அடக்கியஇச்சிறுமுறிக்கு இடங்கொடுத்த சங்கப்பலகை இதனோடுசமானஸ்கந்தமாக நமக்குமிடங்கொடுக்குமா கொடாதாதலால் நம்மை அகற்றிவிட்டதென்றும், சகலவேதசாஸ்திரங்களையும் பிறரால் கற்பிக்கப்படாமல் தாமேயுணர்ந்த சாட்சாத் பகவதம்சமாகிய ஆழ்வாருடைய தெய்வீகமான பாண்டியத்திற்கு நமது பாண்டித்தியம் சதாம்சத்தில் ஏகாம்சமும் காணாதென்றும் நினைத்துத் துக்கித்து - மற்றும் திருவள்ளுவர் குறள்செய்தகாலத்தில் அவருமௌவையும் உடைக்காடரும் சந்திரசமயத்தில் வள்ளுவனோக்கி மற்றையிருவரும் நீர்செய்தநூல் எத்தன்மைத்தாயதென்றுவினவ அவர் அகஸ்தியராற்பிரசித்தம்பண்ணப்பட்ட இயல்இசைநாடகமென முத்திறத்ததாகிய தமிழும் என்றூற்செய்யப்பட்டிறனும் உடையநங்கையின் திருக்குமாரராகிய சடகோபர் அருளிச்செய்த திருவாய்மொழியின் யுத்திரஸ்தானமாகியவழிநூலாமென்னும் கருத்தை உள்ளமைத்து,

"குறுமுனிவன் முத்தமிழு மென்றருளுநங்கை
சிறுமுனிவன் வாய்மொழியின் சேய்."

என்று சொன்னதையும்.

அதுகேட்டு ஔவை, அர்த்தபஞ்சகத்தையும்சதுர்விதபுருஷார்த்தத்தையும் அறப்பால்முதலிய முப்பாலுள் அடக்கிஅமைக்கப்பட்ட உண்மைப்பொருளை எவ்வகைப்பட்ட வேதங்களுக்கும் சம்மதமாகிய மேலானபொருளைக் குளிர்ச்சிதங்கிய தாமிரபரணி தீரத்திலிருக்கும் திருக்குருகூரிற் காரிமுதலியார் புதல்வராய் அவதரித்த நம்மாழ்வாரது திருவாய்மொழியாகிய திராவிடவேதமென்று சிலர்சொல்வார்கள்தான் அவர்கள் சொல்லைமறுத்து அக்குறளை இந்த உலகத்திற்குத்தாயாகிய ஸ்ரீமந்நாராயணனாற் பிரமனுக்கு உபதேசிக்கப்பட்டுவந்தகீர்வாணவேதமென்றேசொல்லுவேனென்னும் கருத்தை உள்ளிட்டு,

"ஐம்பொருளு நாற்பொருளுமுப்பொருளிற் பெய்தமைத்த
செம்பொருளை யெம்மறைக்குஞ் சேட்பொருளைத், தண்குரு
கூர்ச்செய்மொழிய தென்பர், சிலரியா னிவ்வுலகின்
தாய்மொழிய தென்பேன் றகைத்து"

என்றுசொன்னதையும்,

இடைக்காடர் திராவிட வேதமாகியசெய்மொழியையும் கீர்வாணவேதமாகிய தாய்மொழியையும் ஆராய்ந்து சொல்லுமிடத்தில் இரண்டும் ஒன்றேயாம், திருவாய்மொழியையாவரும் ஐயமின்றிவேத மென்றே சொல்லுவார்கள். திருவாய்மொழியைப் போலச்சிறந்தநூல்கள் அனேகம் உண்டென்று சிலர் குதர்க்கம் செய்தாலும் நானவர்களை மறுத்து அவைகளும் இந்தக்குறளும் அத்திருவாய் மொழியினது சாயையா யிருப்பவைக ளென்றே சொல்லுவேனென்னுங்கருத்தை அடக்கி,

"செய்மொழியோ தாய்மொழியோ செப்பிலிரண்டுமொன்றவ
வாய்மொழியையாருமறையென்ப—வாய்மொழிபோல்
ஆய்மொழிகள்சாலவுள்வெனினுமம்மொருயின்
சாய்மொழியென்பேன்யான்றகைத்து"

என்று சொன்னதையும் நினையாமற்போனோமே அவைகளை நினையாவிடினும்,

ஒருகாலத்தில்தாமிரபரணிநதியின்வடகரையில் வசித்திருந்த யோகியொருவர்வளர்த்தநாயொன்றுதென்கரையிலுள்ள ஆழ்வார் திருநகரிக்கு பிரதிதினமுமத்தியானவேளையிற்போய்வீதியிலிருக்கும்வைஷ்ணவர்களுடையஇச்சிஷ்டத்தைத்தின்றுவயிற்றைநிறப்பிக்கொண்டுவருவதுண்டு அவ்வழக்கப்படிஒருநாள்போய்த்திரும்பிவரநேரப்பட்டதனால்யோகியானவர்நாயின்னம்வரவில்லையேயென்று ஆற்றோரத்தில்வந்துபார்க்கும்பொழுது,அந்நாய்நட்டாற்றில் வருகையில்,அகம்மாத்தவெள்ளம்வந்தமையால்நீந்திக் கரையேறக் கூடாமல் நீரில் அமிழ்ந்துகிளம்பிற்று அத்தருணத்தில்அதன்கபாலம்வெடித்து அந்தரத்தின்வழியாய் நாயின் ஆத்மாவாகிய ஜோதி

யானது எழுந்து அமாவாசைஇருளில் அநேகம்மத்தாப்புக்கொளுத்தினதுபோலப் பிரகாசித்ததைப்பிரத்தியட்சமாகப்பார்த்து, அசேதனமாகிய நாயும் பெறுதற்கரிய பேறுபெற்றதே, இதென்னசாதனத்தையுடைத்தாயிருந்தது. ஒன்றுமில்லாதிருந்தும், ஆழ்வார் திருநகரியின் உச்சிஷ்டத்தை உண்டதனாலல்லவோஇப்படிச்சம்பவித்தது. இது தபசிகள் யோகிகள் ஞானிகள் முதலானவர்களுக்கும் சித்திக்கமாட்டாதேயென்று நினைத்து மனமுருகிக் கண்ணீர்விட்டு அழுது அவர்,

"வாய்க்குங்குருகைத் திருவீதியெச்சிலை வாரியுண்ட
நாய்க்கும் பரம பதமளித்தாயந்த நாயோடிந்தப்
பேய்க்கு மிடமளித் தாற்பழுதோபெருமாள்மகுடம்
சாய்க்கும்படிக்குக் கவிசொல்லுஞானத் தமிழ்க்கடலே,,

என்பது முதலாகச்சிலபாடல்களால் ஆழ்வாரை ஸ்தோத்திரத்தையாவது, அல்லது வல்லபதேவனென்னும் பாண்டியன்சபையிற் பெரியாழ்வார் கிழியறுத்துப் பரத்துவ நிர்ணயஞ்செய்தபொழுது நாம் கர்வபங்கப்பட்டதையாவது நினைக்கவேண்டுமே, அப்படியும் செய்யாமற் செருக்கினால் ஆழ்வார் விஷயத்தில் அபசாரப்பட்டோமே, அவர் திருவாய்மொழியையும் அவமதித்தோமேயென்று எண்ணியெண்ணி அநுதாபப்பட்டுப்பின்பு அவர்களெல்லாம் நிகர்விகளாய், அவ்வபசாரத்தை ஆழ்வார் க்ஷமிக்கும்பொருட்டு அவருடைய மகிமைதங்கிய பிரபாவக்கைக்குறித்து,

"சேமங்குருகையோ செய்யதிருப்பாற்கடலோ
நாமம்பராங்குசமோ நாரணமோ—தாமம்
துளவோவகுளமோ தோளிரண்டோ நான்கும்
உளவோ பெருமா னுனக்கு,,

என்றுபாடி ஸ்துதிசெய்தார்கள்.

சங்கப்புலவர்கள் அத்தனைபெயரும் ஆழ்வார் விஷயத்திற் பாடிய பாடல்களெல்லாம் ஒன்றுக்கொன்று ஒருசொல்லாவது ஓரெழுத்தாவது, எழுத்தின் உறுப்பாவது, அசைசீர் தளைமுதலியவைகளில் ஏதாவது சிறிதும் பேதமில்லாமல் இவ்வொரு பாட்டின்படியே இருக்கக்கண்டு இதென்ன அற்புதமென்று, அதிசயப்பட்டுப் பின்பு அவரது திருவாய்மொழியின் ஏற்றத்தைப்பற்றி,

"ஈயாடுவதோ கருடற்கெதிரேயிரவிற்கெதிர்மின்மினியாடுவதோ
நாயாடுவதோ வுறுவெம்புலிமுன் நரியாடுவதோ நரகேசரிமுன்
பேயாடுவதோவழகூர்வசிமுன்பெருமான்வகுளாபரணன்னருகூர்
ர், தோயாதுரையாவிரமாமறையி னொருசொற்பொருமோவுலகிற்
கவியே,, என்பதும்,

"நீயேயறிவை நின்னகத்தே நிற்குநேமியங்கை
யாயேயறியுமற் றாரறிவாரடி யோக்களுக்குத்
தாயேபொருநைத் திருக்குருகூர்த்தமிழ்க் காரிபெற்ற
சேயேநினது திருவாய்மொழியின் செழும்பொருளே,,

என்பதும் முதலாகச்சிற்சிலகவிகள்பாடி ஸ்தோத்திரஞ்செய்து அவ்வாழ்வாருக்கு அன்றுமுதல் விருதுகூறல் முதலிய சகல விபவங்களும் முன்னிலும் விசேஷமாக விராடங்கமாய் நடப்பிக்கும்படி செய்தார்களென்பதாம். இதனிற் சடகோபர் அந்தாதி பாடி முடிந்தவுடனே ஸ்ரீரங்கநாதன் சந்நிதியிற்கடல்போல விசாலமும் மலைபோலவுன்னதமுமாகிய பெரிய ஆயிரக்கால்மண்டபத்திற் சதுசாஸ்திரபண்டிதர்களாகிய சமஸ்கிருதவித்வான்களிலும் பூரணபாண்டித்தியமுள்ளதமிழ்க் கவிஞர்களிலும், உபய கவிகளிலும், வைதிக சம்பிரதாயத்தை யுடைய ஸ்மார்த்தர் மாத்துவர்களென்னும் திரிபதஸ்தர்களிலும், ராஜாக்கள்பிரபுக்கள் முதலானவர்களிலும் வெகுபெயர்கள் திரண்டு நிறைந்திருக்க, பிரபத்தி நிஷ்டாபரராகிய ஸ்ரீரங்கநாதமுனிகள் திருவோலக்கத்திற் கம்பர் தெய்வவணக்கம் செய்து அவையடக்கமும் கூறிக்கிரமமாக இராமாயணத்தை அரங்கேற்றினார்.

அரங்கேற்றும் பொழுது ஆரணியத்திற் சூர்ப்பநகி மூக்கறுப்பட்டு இராவணனை நினைத்துக்கொண்டு புலம்பினதைச் சொல்லிய பாடல்களில் ஒன்றாகிய,

"உருப்படிவ மன்மதனை யொத்துளரே யாயினுமுன்
செருப்படியிற் பொடியொவ்வாராளிடரைச் சீறுதியோ
நெருப்படியிற் பொடிசிதற நின்றமதத் திசையானை
மருப்பொடியப்பொருப்பிடியத்தோணிமிர்த்தவலியோனே,,

என்பதைவாசிக்கக்கேட்டு அதில் (உன்செருப்படியிற்பொடியொவ்வா மானிடரைச்சீறுதியோ) என்பதைக்குறித்து அவ்விடத்திலிருந்த வைஷ்ணவர்களில் ஒருவர் கம்பரை ஏனகாணும் சாட்சாத்பரப்பிரமமாகிய சக்கரவர்த்தி திருமகனையும் இளையாழ்வானையும் ராட்சதப்பட்டி மகனாகிய ராவணனுடைய செருப்புக்காலில் ஒட்டிக்கொண்டிருக்கின்ற பொடிக்கும் ஒவ்வாதமானிடரென்று சொல்லி அபசாரப்படுத்தினீரென்ன, கம்பர்பக்கத்தில் இருந்த அம்பிகாபதி அவருக்குத்தண்டன் சமர்ப்பித்துச் சுவாமி ஒரு விண்ணப்பம். மத்தகத்திற்கும்பகருணன் இறந்தசெய்தி அறிந்து இராவணன் அழுததைக்குறித்துச் சொல்லுமிடத்தில் அவன்சுத்தவீரனாகையால் அழுதானென்று சொல்வது கௌரவதாழ்வென்று நினைத்து பூர்வபட்சனுக்கு உண்டாகிய ராவணனென்னும் பெயரின் காரணத்தை அவன் வெளியிட்டானென்று உபகாரவழக்காகச்சொன்னவர் ஒப்பற்ற பகவான விஷயத்தில் அபகாரப்படுவாரா வென்ன, ஸ்ரீமந்நாதமுனிவன் நகைத்தருளி அவ்வைஷ்ணவரைநோக்கி, உன்செருப்படியிற் பொடியொவ்வா மானிடரென்றது, கம்பர் தாம் சொல்வதாகச் சொல்லாமல், துஷ்டராட்சசியாகிய சூர்ப்பனகை கூறும் கூற்றாகச் சொல்வதாதலால், ராமலட்சுமணர்கள் அவள் அபீஷ்டப்படி நடவாததனாலும், அவள்மூக்கை அறுத்ததனாலும் அவர்களைவிரோதித்து அவ்வாக்கில் தூஷிக்கையில் இப்படியே சொல்லுவளாகையால் இவ்வாக்கியத்திற்கு இதுவொருகருத்தும். செருப்படி என்பதை, செரு படி எனப்பிரித்து உனதுயுத்தபூமியில் ஒருவருக்கும் ஒப்பாகாத மனிதரெனவே வேறொருகருத்தும் கொள்ளும்படி சிலேஷையால் இரட்டுறமொழிதலாகச்சொன்னமையால் இது வித்வசாமர்த்தியமேயல்லது அபசாரமல்லவென, அதைப்பற்றிச் சகலமானவர்களும் பரமசந்துஷ்டியடைந்தார்கள்.

அப்பால்யுத்தகாண்டத்திற் கடல்தாண்டப்படலத்திற்சீதையைப்பிரிந்தபின்பு, தனதுதிருக்கண்களுக்கு இணையாக அவைகளைப்போன்றிருக்கின்ற தாமரைமலர்களும் இதழாகிய இமைமூடி உறங்குகின்ற இராக்காலத்திலும் நெடுநாளாகக் கண்ணுறக்கங் கொள்ளாத ஸ்ரீராகவன் இராவணன்மேற்படையெடுத்துப் போய்த்தென்சமுத்திரத்தின் வடகரையிற்பாளயமிறங்கி, தனக்குத்துணைசெ

ரயும்பொருட்டுப் பொங்கியெழுந்து எங்கும்பரந்துவந்த பெரிய வானரசேனைகள் புறத்திலும் அகத்திலும்புடைசூழும்படி அச்சமுத்திரத்தைக்கண்டானென்பதை உள்ளமைத்த.

பொங்கிப்பரந்த பெருஞ்சேனை புறத்துமகத்தும் புடைசுற்றச்
சங்கிற்பொலிந்த கையானைப் பிரிந்தபின்பு தமக்கினமாம் [ம்
கொங்கிற்பொலிந்த தாமரையின் குழுவுந்துயிலுற்றிதழ்குவிக்கு
கங்குற்பொழுதுந் துயிலாத கண்ணனலை கடலைக்கண்ணுற்றான்.

என்றும்பாடலை வாசிக்கும்பொழுது, பெருஞ்சேனை புறத்துப்புடைசூழ்வென்றது சகஜமே, அகத்துப்புடைசூழ்வென்றது விளங்கவில்லையே அது என்னவெனச் சிலர் ஆசங்கிக்க, ஸ்ரீமந்நாதமுனிவள், சுவாமியானவர் வானரசேனாவீரர்கள் தத்தமதாய்தந்தை அண்ணன் தம்பிமாமன் மைத்துனன்முதலாகிய இனத்தாரை யெல்லாம்விட்டுப்பிரிந்து நற்பொருட்டாகப் படைத்துணைவராயிருப்பதுமற்றி அவர்களுக்கு ராட்சதர்களால் ஏதாவது அபாயமேனேருமானால், அவர்களினத்தார் இந்தராமன் பகைவரைச்சண்டைசெய்து வெல்வதற்கு நம்முடையகுடும்பத்தாரை அழைத்துப்போனானேபோனவிடத்தில் தனதுயிரைமாத்திரம்நித்திப்பாகநினைத்து உபாயமாய் ரட்சித்துக்கொண்டு அவர்களைச்செல்வையாய் பராமரிக்காமல் ராட்சதப்பேய்களுக்கு அநியாயமாய்ப் பலிகொடுத்துவிட்டானே பாவியென்பதாக நம்மைப்பலவிதத்திலும் ஒர்துரைப்பார்களாதலாலும், ஒருசிக்குச் சிலுகில்லாமல் அவர்களைப்பாதுகாத்து மறுபடிநிலையிலே கொண்டுபோய்ச்சேர்ப்பது நமது கடமையாதலாலும எல்லாரும்வந்துசேர்ந்தார்களா, அவர்கள்க்ஷேமமாயிருக்கிறார்களா என்று அவர் ஒரு நொண்டிக்குரங்கையும் தப்பவிடாமல் மதிப்பிட்டுத் தமதுதிருவுளத்தில்வைத்தாரென்பதுகொண்டு, அகத்துப்புடைசூழவென்று சொல்லப்பட்டதெனக் கம்பரது கருத்தைவெளியிட்டருள, அவர்கள் அப்படியாவென்று அதிசயித்தார்கள்,

அதன்பிறகு இரணியவதைப்படலம் வாசிக்கையில், அங்குள்ளவர்களில் வேறு சிலர் இராமாயணத்தில்எங்கும் இரணியவதை சொல்லக்காணோமே இதேதுநவீனமா யிருக்கிறதென்றுகேட்க. கம்பர் இதுபுராணாந்தரமென்ன, அவர்கள்புராணாந்தரமாயினும், சமஸ்கிருதபாஷையில் இராமாயணஞ்செய்த வான்மீகி முதலான

வர்களாற் சொல்லப்படாததை நீர்சொன்னமையால் எவ்விதத்தி ல்ஒப்புக்கொள்வது, இதற்கு ஏதேனும் ஒருதிட்டாந்தம் காண்பி க்கவேண்டும், அதாவது, இதுசிங்கப்பெருமாள்சரித்திரமாதலால் இதைஇந்தத் திருவரங்கம்பெரியகோயிலில் எழுந்தருளியிருக்கு ம்மேட்டழகியசிங்காரனவர் சிரக்கம்பகரக்கம்பமசெய்து திருவுள ம் உவந்தருள்வதுதான். அப்படியவர் அங்கிகரிப்பாராகிலொப்புக் கொள்ளுகிறதற்கு எவ்வளவும்சந்தேகமில்லை யென்றார்கள் அதை ப்பற்றி ஸ்ரீமந்நாதமுனிவன் ஒன்றும்வார்த்தைசொல்லாதிருக்க க ம்பர்ஆகாதபஞ்சாங்கத்திற்கு அறுபதுநாழிகையும் தியாச்சியமெ ன்பதுபோல இக்காவியத்தைஆரம்பித்த நாள்முதல் இடையூறு சம்புவித்தபடியிருக்கிறதே இதென்னதவக்குறை நல்லது தெய்வ சங்கற்பம் உள்ளபடியாகிறதென்றெண்ணி, அவ்வியணியவதைப் படலத்தில், பிரகலாத, ழ்வானை நோக்கிச்சொல்லிய அரியென் பவன் எவ்விடத்திலிருப்பானென்று இரணியன் கேட்டதற்குப் பிரகலாதன் அந்தப்பரமாத்மன் அகண்டிதனானதால் அவனை இ ன்னஇடத்தில் இருப்பான்இரானென்று கண்டிதப்படுத்திச்சொ ல்லவும், அவனுடைய அணுத்துவவிபுத்துவ அதிசயங்களை இன்ன படியென்றறியவும்முடியாது, ஆயினும் ஒருவாறு சொல்லுகிறே ன். அதன் ஒருசாணளவாகிய சிறிய துரும்பிலுமிருப்பான், ஓரணு வைச்சதக்கூறுசெய்துபார்த்தால் அக்கூறுகள் ஒவ்வொன்றிலும் த னித்தனி இருப்பான். அன்றியும்பெரியமேருமலையிலுமிருப்பான் இங்கேநிற்கின்ற தூணிலுமிருப்பான். நீசொன்னசொல்லு மிருப் பான். அவனில்லாத இடம்எதுவுமில்லை இவ்வுண்மையை அறிய வேண்டுமாகில் தாமதியாமற்சோதிப்பாரென்றான். அதுகேட்டஇ ரணியன்சொல்லத்தொடங்கினானென்ற கருத்தைத் தன்னிடத்தி ற்கொண்ட.

"சாணிலு முளனோர்தன்மை யணுவினைச் சதகூறிட்ட
கோணினு முளன்மாமேருக் குன்றினு முளனிந்நின்ற
தூணிலு முளனீசொன்னசொல்லினு முளனித்தன்மை
காணுதிவிரைவி னென்றா னென்றெனக்கனகன் சொன்னான்.
என்னும் பாடலையும்.

தேவர்களுக்கும் உனக்கும் ஒரு தன்மையாய் இவ்வுலகமென் தம் நிறைந்திருக்கின்ற அரியென்பவன் மற்றவிடங்களிலெல்லாம்

இருப்பானென்பது அப்படியிருக்கட்டும். இத்தூணினிடத்திலு மிருக்கின்றானென்று நீசொன்னமையால் இதனிடத்தில் நான்காணும்படி அவனைப்பிரத்தியட்சமாகக் காட்டவேண்டும். காட்டாமற்போவாயானால், மஸ்தகத்தையுடையயானையைச் சிங்கமானது அறைந்துகொன்றதுபோல உன்னைக்கொன்று, என்பசிதீர உன்னுடலைத்தின்று உதிரத்தைக்குடித்துத் தாகத்தைத்தணித்துக்கொள்ளுகிறேனென்று பிரதிக்கினைபண்ணினான் என்றகருத்தை உள்ளிட்ட

"உம்பர்க்குமுனக்கு மொத்திவ்வுலகெங்கும் பரந்துளானைக்
கம்பத்தின் வழியேகாணக் காட்டுதி காட்டாயாயிற் [ன்
கும்பத்தின்கரியைக்கோள யாகொலைதேன் நின்னைக்கொன்று
செம்பொத்த குருதிதேக்கி யுடலையுந் தின்பேனென்றான்
என்னும்பாடலையும்,

அப்பிரதிக்கினையைக் கேள்வியுற்ற பிரமஞானியாகிய பிரகலாதனாழ்வான் ஐயா, இப்பொழுது என்னுயிரைக் கொல்லுகிறதாகப் பிரதிக்கினை பண்ணினையே இதுவினைதானா முன்பு என்னைக்கொப்பரையில் தள்ளினாய், கற்பாறையோடுகட்டிக்கடலில்விடுத்தாய். வாள்வேல்முதலான ஆயுதங்களைக்கொண்டு வெட்டிக்குத்தி எய்தும்எறிந்தும்பார்த்தாய். நானிறக்கும்படிமரணயாக்ருமம செய்வித்தாய். என்மேல் அஷ்டதிக்கஜங்களையும் ஏவினாய் அஷ்டமாநாகங்களையும் விட்டுக் கடிப்பித்தாய் வைக்குள்ளேபோட்டு இறுக்கிக்கட்டிச் சம்மட்டிகொண்டும் அடிப்பித்தாய், மற்றுமெத்தனையோ வாதைகளுஞ்செய்வித்தாய், அவைகளினாலெல்லாம் நானிறந்தேனோ, என்னுடைய உயிர்உன்னாலேகொல்லப்படுவதற்கு அத்தனை எளிதானதல்ல, உன்பிரதிக்கினை ஒன்றுங்கைகூடிவாராது இதோஎன்பிரதிக்கினையைக்கேள், உனக்கு நான் பின்பு சொன்னசர்வவியாபகன் நீதொட்டதொட்ட இடந்தோறும் அவசியந்தோன்றவேண்டும். தோன்றாமற்போவானானால்என்னுயிரை நானேமாய்த்துக்கொள்ளுவேன். அப்படிச்செய்யாமற்பின்னும் உயிரோடு வாழ்ந்திருக்கவிரும்புவேனாகில் நான் அந்தலோகாராட்டியனுக்குந் தாசபூதனல்லேனென்றான், என்பதைச்சொல்லிய.

"என்னுயிர் நின்னாற்கோற்ற கொளியதொன் றன்றியான்முன்
சொன்னவன் றொட்டதொட்டவிடந்தொறுந் தோன்றானாயின்

என்னுயிர் யானேமாய்ப்பன் பினனும்வாழ் வுகப்பனென்னின்
அன்னவற் கடியனல்லே னென்றனன் வறிவின்மிக்கான்.,,

என்னும் பாடலையும்,

இப்படிப் பிரகலாதனன் செய்த பிரதிக்கினையை இரணிய ன்கேட்டவுடனே தன் பருவாயைத் திறந்து நல்லது நல்லதென்று அதட்டித் தந்தங்களெல்லாம் குப்பென்று பிரகாசிக்கும்படிந கைத்து உக்கிரத்துடனே தனக்கெதிரே இருந்த நெடிய வச்சிர த்தூணியிற்பெரிய பர்வதத்தின்மேற்பிரளயகால இடிஇடித்து வி ழுந்ததுபோல, வெற்றிபெற்ற புகழ்விளங்கிய தன்கையினால் ஓங்கி விசைகொண்டு ஓரறை அறைந்தான் அறைந்தமாத்திரத்தில் சா வாந்தரியாமி யென்னும் தைத்திரியானவன் சிங்கவடிவுகொண்டு ஆவிர்ப்பவித்து அந்தத்தூணைப்பிளந்து அதில்நின்று அஷ்டதி க்குகளையும் திறந்து அண்டத்தையும் சீறி அப்புறத்திலும்லுங்கி அகிலபுவன சராசரங்களும திடுக்கிடும்படி கலகலவென்று சிரித் தானென்பதைச் சொல்லிய.

"நகைதிறந் திலங்கப்பொங்கி நன்றுநன் றென்னநக்கு
விசைபிறந் துருமுவிழ்ந்த தென்னவோர் தூணின்வென்றி
இசைதிறந்தமர்ந்தகையா லெற்றினனெற்ற லோடும்
திசைதிறந் தண்டங்கீறிச் சிறித்தது செங்கட்சீயம்.,,

என்றபாடலையும் ஜெகத்ரட்சகன் சிங்கவடிவெடுத்துத் தூ ணைப்பிளந்து அதனடியில் அவதரித்துப்பிரசன்னமாய்ச்சிரித்த துகண்டு, பிரகலாதனன் ஆனந்தத்தால் ஆடிப்பாடி அழுதுதொ ழுததைச்சொல்லிய,

"நாடினன் றருவனென்ற நல்லறிவாளனனும்
தேடினன் முகநுங்காணுச் சேயவன் சிரித்தலோடும்
ஆடினனழுதான்பாடி யாற்றினன்சிரத்திற்செங்கை
சூடினன் றொழுதாடுடி யுலகெலாந்துகைத்தான் றன்னி.

என்ற பாடலையும்வாசித்தார்.

வாசித்த மாத்திரத்தில் மோட்டமுகிய சிங்கர்தமது திருக்கர ங்களைநீட்டி திருமுடியைத்துளக்கிப் பவளம்போலும் சிவந்தவா

யைத்திறந்து கடகடவென்று அந்தமண்டபமும் அதிர, அங்குள்
ளசகலமகாஜனங்களும் கூடிச்சிரித்து ஆர்ப்பரித்தார், அப்பொ
ழுதுஎல்லாரும் அதிசயித்து சிதம்பரத்திற் பாம்புகடித்து இறந்
ததில்லை மூவாயிரவர்பிள்ளை நாகபாசபடலத்தை வாசிக்கப்பிழை
த்தது இங்கே இரணியவதைப்படலம் வாசிக்கக்கதைவடிவா யெ
ழுந்தருளியிருக்கின்ற மேட்டழகியசிங்கர் திருவுளமுவந்து அவ்
வவ்வபையார்க்கும் தெரியும்படி சிரகம்ப கரகம்பமுடனே அ
ட்டகாசமுஞ்செய்தார். ஆதலால் இந்தக் காவியம்அதிமகத்துவ
முடையதென்றும், இம்மகத்துவம் சகலருக்கும் பிரசங்கமாகவே
ண்டுமென்றல்லவோ இந்நாளில்அந்தந்தச் சந்தர்ப்பங்கண்டு அத
ற்குத்தக்கவாறு விசேஷார்த்தம் சொல்லிச்சமர்த்தித்து வந்தஸ்ரீ
மன்னாதமுனிகளும்இத்திவ்யத்தில் மாத்திரம்வார்த்தை சொல்
லாமல் மௌனமாயிருந்தனரென்றும் எண்ணிக்கம்பரைக்குறித்துமி
கவும்பேசிக் கொண்டாடினார்கள்,

அதற்குமேலும் அச்சபையிலுள்ள அறிஞர்கள் ஆங்காங்கு
க்கேட்ட கேள்விகளுக்கெல்லாம் ஏற்படி சமாதானஞ்சொல்லி இ
ராமாயணம் முழுவதும்வாசித்து முடித்தபின்பு ஸ்ரீமந்நாதமுனி
கள் இந்தக்காவியம் இவ்வளவுசிறப்புடையதாக இயற்றப்படும். பா
லில்விஷம் கலந்தாற்போல இடையிடையே நரஸ்துதி பண்ணப்
பட்டதனாலல்லவோ இங்கிருக்கும் வைஷ்ணவர்கள் ஆருயைகொ
ண்டுதில்லை மூவாயிரவர்முதலியோருடையகையொப்பம் வாங்கி
வரும்படி இவரைப் பழவிடங்களிலும் ஓடியுழலச்செய்தார்களெ
ன்றுஉய்த்துணர்ந்து, கம்பரைநோக்கி இதிகாசமாயும் பகவச்சரி
தமாயுமிருக்கின்ற இதில்என்னநிமித்தத்தால் நரஸ்துதி செய்யல
ந்ததென்றுவினவ, கம்பர்திருவெண்ணெய் நல்லூர்சடையப்பமு
தலியார்சிறுவயதுமுதல்தமக்குநெடுநாளாக அன்னவஸ்திராதிகள்
கொடுத்து ஆதரித்ததையும் அவரதுபிரயத்தினத்தால் அத்திரு
வெண்ணெய்நல்லூரிலேஇந்நூல் செய்யப்பட்டதையும் அம்பி
காபதிவிவாகத்திற்பாதபூசைநடக்கும் சமயத்திற்சகல மகாஜனங்
களும்வந்துநிறைந் திருக்கும்கலியாணவாசலில் மேற்படி முதலி
யார்வர, "ஆயிரம்பனையப்பனுக்குப் பல்லுக்குத்த ஈர்க்குக்கிடை
யா, தென்பனைபோல, சிராமாதிபதியாகிய அவருக்குஇருக்க இட
மில்லாததனால் அங்கிருந்தவர்களெல்லாம் எழுந்து அவரை இ
ங்கேவரலாம் இங்கேயிருக்கலாமென்று உபசரித்தபொழுது அவ

ர் நீங்கள் ஆரும் எழுந்திருக்கவேண்டாம் சும்மாவிருங்கள் எனக்கு இதோ இடமிருக்கிறதென்று சொல்லி அவர்களை அங்கிருக்கச்செய்து ஒருவரும் இருப்பதற்கு ஒக்கியமன்றி ஒழிந்திருந்த சாக்கடைவரம்பின்மேல் நின்றுகொண்டிருக்க, தாம் அவரைப்பார்த்து அது தான் அவ்விடத்திலேயே இருக்கிறீர்களல்லவென்ன அது கேட்டுத்தமது மனையாளை சகியாமற் பரிதபித்த இதனை ஜனங்களுக்கும் இங்கே இங்கே இடமிருக்க எங்கள் அண்ணு அவர்களுக்கு மாத்திரம் அந்தச்சாக்கடையாயினைடத்துதென்ன அநுபைத்தியகாரிஉங்கள் தமையனுரையிருந்த இடத்திலேயானைவைக்கிறது நானுனைக்குமிடத்தில் வைக்கிறேனென்று தாம்சொன்னதையும் விவரணமாகவின்னைப்பஞ்செய்து, இக்காரணங்கள் அனைத்தையும் கருதித்தான் அந்தப்பிரபுவை அடியேன் இதிற்சொல்லிவைத்தேனென்றார்,

ஸ்ரீமந்நாதமுனிகள் இதுஉபகாரஸ்மிருதியென்று திருவுளங்கொண்டு கம்பரைநோக்கிநீர் சொல்வதெல்லாம்சரிதான் உம்மாலேபாடப்பட்ட பதினாயிரம்பாடலுக்குள் நூற்றுக்கொன்றுவிழுக்காடு நூறுபாடலில் அவர்பெயரைச்சொல்லியிருக்கிறீரே இப்படி மகாகாவியத்தில் அடிக்கடி சொல்லுவதுயுக்தமல்ல அளவுக்குமிஞ்சினால் அமிர்தமும் நஞ்சாமாதலால், ஆயிரத்துக்கொன்றாகப்பத்துப்பாடலில் மாத்திரமிருந்தால் போதுமென்ன கம்பர் அதுகேட்டு அருமைப்பட்டுப் பாடியதொண்ணூறுபாடல் வீணாய்ப்போய்விடுகிறதேயென்று மனவருத்தப்படாமல் சுவாமிமகாபாக்கியம் கற்பகமும்காமதேனுவும நாணததக்க ஔதாரியமுடைய அந்தப்பிரபுவின்குணாதிசயம் அடியேனுடைய சிற்றறிவுக்குஎட்டாமையால்வில்லையுயர்ந்தமாணிக்கத்தைக்குருவிசர்தகலுக்குஒப்பாகமதிப்பவரைப்போல அவரை நூற்றுக்கொன்றாக மதித்தேன்தேவரீர் ஆயிரத்துக்கொன்றாக மதித்ததுவிசேஷமேயென்று சாதுரியமாகச்சொல்லஸ்ரீமந்நாதமுனிகள் திருவுளமகிழ்ந்து கிருபைகூர்ந்து கம்பருக்குக்கவிச் சக்கரவர்த்தியெனப் பட்டப்பெயர்கொடுத்து யவர்பாடினராமாயணத்திற்கு அச்சபையிலிருந்த வித்வஜனாகளிற்சிலர்சாற்றுகவி கொடுக்கவும் அதில் இரண்டுகவியை எடுத்துத்திவ்வியப்பிரபந்தத்தோடு சேர்க்கவும் அந்ததிவ்வியதேசத்தில்ந

மூலமாக இந்தச் சமாசாரம் தெரிவித்துச் சகலமானவர்களையும் தன்தேசத்தில் வரவழைத்துச் சபைகூட்டுவிக்க, அச்சபையிற் கம்பர் வந்திருந்து தமது கற்றுச்சொல்லி கையேடுபிடித்துவாசிக்கப் பிரசங்கிக்கத் தலைப்பட்டார்.

வரைகாட்சிப் படலத்தில்,

பாத்தயானையிற் பதங்களிற் படுமதநாறக்
காத்தவங்குச நிமிர்ந்திடக் கால்பிடித்தோடிப்
பூத்தவேழிலம் பாலையைப் பொடிப்பொடியாகக்
காத்திரங்களாற் றலத்தொடுந் தேய்த்ததோர்களிறு.

என்னும் பாடலைக்குறித்து மிதிலைக்குப்போன தசரதமகாராஜன் சேனையிலுள்ள மிருகமதங்கம், ராஜமதங்கம், பத்திரமதங்கமென மூவகையாகப் பகுக்கப்பட்ட யானைகளுக்குள்ளே ஒரு யானையானது, தான் செல்லும் வழிகளிலே ஏழிலம்பாலைமரம் புஷ்பித்து யானைமதம்நாற, காற்றின்வழியே மோப்பம்பிடித்து அங்குசம்நிமிர்ந்துபோயபடி பாகன் மஸ்தகத்திற் குத்திக் குத்தித் திருப்பியும் திரும்பாமற் காட்டுக்குள் ஓடி, அவ்வேழிலம் பாலையைப் பிடுங்கித் தரையுடனே மோதிப் பொடிப்பொடியாக முன்னங் கால்களால் தேய்த்ததென்று பிரசங்கிக்கக்கேட்டு, அங்கிருந்த குடகதேசாதிபதி கம்பரைநோக்கி ஐயா, அனேகம் தலைமுறையாக யானைகளைப் பிடிப்பதும், போஷிப்பதும், விக்கிரயிப்பதும் எங்கள் குலத்தொழிலாயிருப்பதனால் யானைகளின் சாதி, குணம், செய்கை, உற்பத்தின் தானம் முதலானவைகளையும் பலகாலும் ஆராய்ந்து அறிந்துவரும் பெருவழக்கமுடைய எங்களுக்கு இந்நாள்வரையில் ஏழிலம்பாலை யானைமதநாற்றம் நாறுகிற தென்றும், அது யானைக்கு விரோதமா யிருப்பதென்றும் தெரியாது. இப்படிப்பட்ட அபூர்வமான விஷயத்தையும் தாங்கள் அறிந்து சொன்னதைக்குறித்து நானென்ன சொல்ல மாட்டுவேன். ஆந்திரபாஷையில் (ரவிபெருகனிதாவு கவிபெருகுனு) என்பது வாஸ்தவந்தானென்றுசொல்லிக் கம்பரைமெச்சி அவருக்கு அதற்காக ஒரு * கடகம்யானை வெகுமதி செய்தான்.

* கடகம் - பன்னிரண்டுயானை. ஏழி லப்பாலையென வல்லொற்று மெல்லொற்றாய் மருவியது. இது வடமொழியிற்சப்தபாணமென்னப்படும்.

அப்பால்,

தெருண்டமேலவர் சிறியவர்ச்சேரினு மவர்தாம்
மருண்டதன்மையை மாற்றுவரெனுமிதுவழக்கே
உருண்டவாய்தொறும் பொன்னுருளுரைத்துரைத்தோடி
இருண்டகல்லையுந் தங்கிறமாக்கின விரதம்.

என்னும் பாடலைக்குறித்து, பலநூல்களையும் கற்றுத்தெளிந்த பெரியோர்கள் கல்லாத முழுமூடர்களைச் சேர்ந்தாலும், அவர்களுடைய மயக்கமாகிய பேதைமைப் புத்தியையும் மாற்றித் தங்களைப்போல அறிவுடையவர்களாச்செய்வார்களென்னு மிது ஆன்றோர் வழக்கமாதலால், சந்திர சைலத்தின் சாரலிலே பொன்னுற செய்யப்பட்ட தேர்ச்சக்கரங்கள் உருண்ட இடங்கள்தோறும் அப்பொன்னுருளைகள் தேய்த்துத்தேய்த்து ஓடுதலால் அந்தத் தேர்கள் அங்குள்ள இருண்ட கருங்கற்பாறைகளையும் தங்கிறமாக்கி விட்டனவென்று பிரசங்கித்தபொழுது, சேரன் இந்தத் தர்மம் உம்மிடத்திலேதான் விளங்கக் கண்டேனென்ன, கருணாகரபாண்டியன் அதென்னவென்று கேட்க, சடையப்பமுதலியார் சொல்லத்தொடங்கினார்.

பூர்வம் சோழராஜாவின்மேற் கவிபாடிப் பரிசுபெறும்புலவர்களை ஒரு விறகுதலையன் பெண்சாதிபார்த்து இவர்களெல்லாம் ஒருவேலையுஞ்செய்து கஷ்டப்படாமற் பாட்டுப்பாடி எளிதிற் பணம்சம்பாதித்துச் சுகமாகச் சீவனம்செய்துவர, நம்முடைய புருஷன்மாத்திரம் காட்டுக்குப்போய்க் காலிற் கடுமுள் தைக்க, கட்டைவெட்டிக் கைகாய்க்க, நாள்தோறும் மாடுபோலுழைத்து விறகுவிற்று அரைவயிறுக் கஞ்சிக்குமில்லாமல் அவதிப்பட வேண்டியதென்ன, இதுவரையில் இந்த உபாயம் தெரியாமற் போயிற்றேயென்று தனக்குள்ளே சிந்தித்து, (காரிகை கற்றுக் கவி பாடுவதிலும் பேரிகைகொட்டிப் பிழைப்பது நன்று) என்பதை அவள் சிறிதும் உணராமையால் அது சுலபமென்று நினைத்துத் தன்புருஷனை நீ சீக்கிரமாய்ச் சோழராஜனிடத்திற் பாட்டுப் பாடிக்கொண்டுபோ நமக்கு நல்லகாலம் வந்ததென்றாள். அவன் எனக்கோ பாட்டுத்தெரியாது. ஆயினும் பெரிதல்ல, இப்போது கற்றுக்கொண்டு வருகிறேனென்று தெருவிலே புறப்பட்டு வருகிறபொழுது, சில சிறுபிள்ளைகள் மரப்பாவைகளைவைத்து வி

நோதமாக விளையாடுமிடத்தில் அவர்கள் (மண்ணுண்ணிமாப்பிள்ளையே) என்று சொல்லக்கேட்டு அதை ஞாபகப்படுத்திக் கொண்டு அப்புறம் செல்லுகையில், ஒரு காக்கை காவென்று கத்தக்கேட்டுக் காவிறையே யென்றும், ஒரு சோலையில் குயில் கூவக்கேட்டுக் கூவிறையே யென்றும், ஒரு பிள்ளையார் கோயிலில் பெருச்சாளி ஓடக்கண்டு அதைக்கல்லெடுத்து அடிக்கப்போய் (உங்களப்பன் கோவிற்பெருச்சாளி) யென்றும் பாடம்பண்ணிக்கொண்டு திரும்பும்பொழுது, தனசினேகன் ஒருவன் எதிர்ப்பட்டு எங்கேபோய்வருகிறாயென, இவன் பாட்டுக் கற்றுக்கொண்டுவரப்போனேன் நீயுங்கொஞ்சங்கற்பிக்கவேண்டுமென அவன் அடகற்பிக்கிறதென்ன கன்று, பின்று, மன்று, தென்று வென்று பாடுகிறதுதானேயென, இவன் அதையும் பாடமுடன் றேங்கினைத்த யன்பு தான்விளையாட்டுப் பிள்ளைகளையும் காக்கையையும் குயிலையும் பெருச்சாளியையும் பார்த்துக் கற்றுக்கொண்டதோடு சேர்த்துக்கொண்டு இந்தமட்டிற் போதுமென்றுவிட்டுக்குப்போய் அதைத்தன் பெண்சாதியுடனே சொல்ல, அவள் கொஞ்சம் புத்திசாலியாகையால், இதிற்சோழன்பெயரில்லை, அதனையுமிருக்கவேண்டுமென்று இவனுக்குச்சொல்லிக்கொடுத்த சோழங்கப்பெருமானே யென்பதையும் அந்தப்பாட்டுக்கு அங்கமாகக் கடைசியில்வைத்துக்கொண்டு அச்சமில்லாமல் ராஜசபைக்குவந்து கம்பனைக்கண்டு கும்பிட, அவர் இவனை நீயாரென்ன நான்ராசாவின்மேல் பாட்டுப்பாடி வந்தேனென்ன, அவர் இவன்விறகுதலையனென்றும் நம்மைக்குறித்து ஆரோ சொல்லக்கேட்டுவந்து அடுத்தானென்றும், அடுத்தவனைக் கைவிடலாமா ஆசிரித சம்ரட்சணைசெய்யவேண்டுமல்லவோவென்றும்எண்ணி அபிமானித்து அவனுக்கு ராஜாவைக்காட்டிக் கும்பிடென்றுகுறிப்பித்து, அரசன் முதலானவர்களைப்பார்த்துப் பெரியோர்கள் இப்படித்தான் நீறுபூத்த நெருப்புப்போ லிருப்பார்கள், அவர்களை ஆரறியத்தக்கவர்களென்றுசொல்லிச் சிவுக்கென்றெழுந்து தாமிருந்த ஆசனத்தில் இவனை இருமிருமென்று உபசரித்துப் பிறகு நீர்பாடினபாடலைச் சொல்லுமென்றார்.

அவன் எவ்வளவும் அச்சமில்லாமல் தைரியத்துடனே (மண்ணுண்ணி மாப்பிள்ளையே, காவிறையே கூவிறையே, உங்களப்பன் கோவிற்பெருச்சாளி, கன்று, பின்று, மன்று, தென்று, சோழங்கப்பெருமானே) என்று தான்கற்றுவந்த பாட்டை அசுவதாட்டியாய்ச் சொல்லக்கேட்டுச் சபையிலுள்ளவர்கள் யாவரும் இது நல்லபாட்டென்று சிரித்தார்கள். கம்பரானவர் ஒட்டக்கூத்தர்

முதலான வித்வஜனர்களை நோக்கி இது வெண்பாமுதலியபாக்க ளிலாவது, பாவினங்களிலாவது காஃறேடு சம்பந்தப்பட்டது இதன்பொருள்யாதென்று அறிந்துசொல்வதல்லவோ வித்வசா மார்த்தியம் அதைவிட்டுநகைப்பதென்ன, பாடினவரைச்சொல் லச் சொன்னாற் பிரயாசமில்லாமற் சாதுரியமாகநொடிக்குள்ளே சொல்லுவார். ஆயினும் நூல் செய்தவனே உரைசெய்கிறது சம் பிரதாயமல்லவே அதுபற்றி இவரைச் சொல்லச் சொல்லுகிறது நியாயமல்ல. அன்றியும் நாம் வித்துவான்களாயிருந்து பிறரைப் பொருள் சொல்லுமென்று கேட்டால் நமக்கென்ன பெருமையி ருக்கிறது. நம்மிலே ஆராவது ஒருவர் சொல்வதே யுக்தமென் றார். அவர்கள் இவனெவனோ பைத்தியகாரன் தன்வாயிலேவந் தபடி தாறுமாறாக எதையோ உளறினால் அதைப் பாடலென்று ம், அதற்குப்பொருள் சொல்லவேண்டுமென்றும் சொல்லுகிறீ ரே இவர் அவனிலும் பெரிய பைத்தியகாரனாயிருக்கிறாரே யல் லாமல்வேறல்ல, பொருள் சொல்லுங்களென்று பரிட்சிக்கிறது போல நம்மைக்கேட்கிறதென்ன சொல்லத்தக்கதா யிருக்குமா னால் இவரே சொல்லலாகாதோவென்று கம்பரைநோக்கித் தாங் களே சொல்லலாமென்றார்கள். அவர் உங்களுக்குள் நானுமொ ருவனாகையால் நான்சொல்வது நீங்கள் சொல்வதுதான் உங்கள் அபிஷ்டம் அப்படியிருக்கிறபடியினாலே நானே சொல்லுகிறே னென்று தொடங்கினார்.

இப்பாடல் இடையிடையே சிலசீர் குறைந் தியல்வதனால் இணைகுறளாசிரியப்பாவாகும். இதன்பொருள். மண்-பூமியை உண்ணி—உண்டவனே, மா-இலக்குமியின், பிள்ளையே-புதல்வ னே, கா-கற்பகத்திற்கு, இறையே-தலைவனே, கூ-பூமிக்கு, இ றையே-அரசனே, உங்களப்பன்-உங்கள் தநதை, கோ-இராசன் வில்-விற்போரில், பெரிசு-பெரிதாகிய, ஆளி-சிங்கம்போல்வாய், கன்னா-கன்னனே, பின்னா-தருமனே, மன்னா-நிலைபெற்றவனே, தென்னா-பாண்டியனை ஒத்தவனே, சோழங்கம் - சோழதேசமா கிய அங்கத்தையுடைய, பெருமானே-பெருமையுடையானே எ ன்பதாம். இது பதவுரை, (மகாவிஷ்ணுப் பிருதிவிபதி) என்ற படி உலகாள்பவனாதலால் ஸ்ரீ விஷ்ணு அமிசம்பெற்றானெனபார் மண்ணுண்ணியென்றும, குறைவற்றசெல்வமுடையாயென்பார்

மிக்க செல்வமுடையோனை லட்சுமி புத்திரனென்றும் உலகவ ழக்குப்பற்றி மாப்பிள்ளையே யென்றும், போகத்தாற் சுரேந்திர னை ஒப்பாயென்பார். காவிறைமே யென்றும், மக்களாய்ப்பிறந் தவர்களில் மிகச்சிறந்தோனாதலால் நரேந்திரனே யென்பார். கூவிறைமே யென்றும், நீயேயன்றி உன் தந்தைமுதலியோரும் அரசாளப்பெற்றவர்தா மென்பார் உங்களப்பன் கோவென்றும் விற்போரிற் சிங்கம்போலப் புறங்கொடாது பகைவரைவெல்வா யென்பார் விற்பெரி சாளியென்றும், பெருங்கொடைவள்ளலே யென்பார். கன்னனென்றும், பொறுமையிற் கன்னனுக்குப்பின் னோனாகிய தருமனே யென்பார். பின்னனென்றும்,நெடுங்காலம அழிவின்றி வாழ்வாயென்பார். மன்னனென்றும், தமிழ்ப்புல மையிற் பாண்டியராசனைப் போல்வாயென்பார் தென்னனென் றும், மலைகடல்நாடு முதலிய தசாங்கத்தில் ஒன்றுமேய நாட்டிற் பெரியோனென்பார் சோழங்கப்பெருமானேயென் றும்கூறினார் இது பதசாரம். உங்களப்பன்-எழுவாய். கோ - பயனிலை. அ ன்றியும், நீ-தோன்றா எழுவாயும, விற்பெரிசாளி-பயனிலையுமா மென்றும், இச்செய்யுளில் இடை இடையே உவமை உருவக முதலிய சில அலங்காரங்களும் அமைக்கப்பட்டன வென்றும், அவைகளையெல்லாம் எடுத்துக்காட்டி வீரமுதலிய எண்சுவைக ளுந்தோன்றி அனைவர்க்கும் கர்ணானந்தத்தை விளைக்கும்படி அ ற்புதமாகப் பிரசங்கித்துச் சமர்த்தித்தார்.

குலோத்துங்க சோழராஜன் முதலானவர்கள் அதைகேகே ட்டு இந்தப்பாட்டுப் பாடினவன் மூடனும் பாடல் அரைக்காசு பெறாததுமா யிருந்தும், அவனை வித்வானென்றும், அதைப்பா டலென்றும் ஸ்தாபித்து அதற்கு இலக்கணத்தோடு பொருந் தப் பதப்பொருள் சொல்லிப் பதசாரம்கூறி மேற்கோளுங் கா ட்டிமெய்ப்பித்தாரே, இவருடைய வித்யா சாமர்த்தியமே சாம ர்த்தியம். இவரைச் சாரதாபீடமென்றே சொல்லவேண்டு மென் றுவியந்தார்கள். சோழராஜாவானவர் வழியேபோகிற விறகுத லையனுக்காகப் பரிந்துபட்டு அவன் குளறிவழிந்ததையும்பா டலாககொண்டு அதற்கு இவ்வளவாக நட்பித்துப் பொருள்

சொல்லிச் சமர்த்திக்க இவரைப்பற்றியாவது அவனைப் பெருமைப்படுத்த வேண்டுமென்று அவனுக்குச் சகல வெகுமதியும் செய்தனுப்பினார். அதுகண்டு கம்பர் நாம் முழுமூடனை ராஜசபையில் மகாவித்வானென்றுசொல்லி அவன் குளறலையும் பாடலென்று வற்புறுத்திப் பிரசங்கித்ததுபற்றிச் சன்மானத்துடனே அவனுக்கு வெகுமானஞ் செய்தனுப்பின அரசன் இனி ஒருகாலத்தில் அன்று கவிபாடிவந்த வித்வான் வெகுநாளாகியும் மறுபடி வரவில்லையே அவரை அழைப்பியுங்கள் அவரது வாக்கைக் கேட்கவேண்டுமென்றால், அப்பொழுது அவன்பண்டோளம் வெளிப்பட்டுப்போம். அதனால் நம்முடைய கௌரவத்திற்கும் குறைவுவருமென்று அந்தநாள்முதல் தமதுகற்றுச் சொல்லிகளைவிட்டு அவனுக்கு இலக்கணவிலக்கியத்துடனே கல்வி பயிற்றி அதிசீக்கிரத்தில் மகா சமர்த்தனாம்படிசெய்து, அப்புறம் ஒருநாள் அவனைச் சோழமகாராஜாவின் சபைக்குவரவழைத்து வேந்தனைக்கொண்டு சமிசைகொடுப்பித்துக் கவிபாடச்சொல்லி அதை அவன் வாக்கினாலேயே பூரித்துப் பிரசங்கிக்கும்படி செய்தார். அதைபபற்றித் தான் சோழமகாராஜா இந்தத்தாமத்தைத் தங்களிடத்திலே கண்டோமென்பதாகக் கம்பரைக்குறித்துச் சொன்னாரென்று சடையப்பமுதலியார் சொல்லக்கேட்டு, பாண்டியன் அதிக சந்தோஷப்பட்டு இப்படிப்பட்ட வித்வசிரோமணியானவர் நாள்தோறும் கால்நடையாய்ப் போக்குவரவு பண்ணப்பார்ப்பது நமக்கழகல்லவே இவரை இன்றுதொட்டாவது வாகனபிரதிஷ்டையோடிருக்கச்செய்ய வேண்டுமென்று அபிமானித்து அவருக்கு யானைத்தந்தத்தால் விசாலமானதொட்டிசமைத்து, கணைக்குப்பொற்றகடு சித்திரித்துவேய்ந்து அடியிலே நிலக்காற்கால்கடைந்து பொருத்தி மரகதரத்தினத்தாற்குமிழ்நிரைத்து, மேலுக்கு விசித்திரமாகிய சரிகைமுகமற் பன்னாங்குவிரித்து, நெருங்கமுத்துக்குச்சுத்தூக்கி, கணையின் இருபுறமும் தங்கத்தால் சிங்க உருவமைத்து, அதற்கு அதியுசிதமாகக் கொத்துவேலைசெய்து, கண்ணுக்கு நீலமும், பல்லுக்கு வச்சிரமும், வாய்க்குப் பத்மராகமும் அழுத்தி சிங்கலலாடம் அமைத்த விலையுயர்ந்த பல்லக்கொன்று வெகுமதியாகக்கொடுத்தான்.

பின்பு,

தியவரோடொன்றிய திறத்தருநலத்தோர்
ஆயவரையங்கிலே யறிந்தனர்துறந்தார்

அறியாமையுடையதென்பதற்குச் சாதாரண வழக்கத்தில் திருஷ்டாந்தம் சொல்லவேண்டுமென, கம்பர் அனேகமிருக்கின்றன அவற்றுள் ஒன்றுகேளுங்கள். ஆடிமாதத்தில் மாமிவீட்டில் வாழ்கிறபெண்ணைத் தாய்வீட்டுக்கு அழைத்துவந்து விடுகிறது தாய்வீட்டிலிருக்கிறபெண்ணை மாமிவீட்டுக்கு அனுப்பாமலிருக்கிறது இது நெடுநாளைய வழக்கமாயிருக்கின்றது. இதன்காரணமென்னவெனில், ஆடிமாசத்திற் கர்ப்பம் தரிக்குமென்றும், பத்தாமாதம் பிள்ளை பிறக்குமென்றும், அப்பத்தாமாதம் சித்திரை மாதமென்றும், சித்திரைமாதத்திற் செல்வன்பிறந்தால் ஆனகுடிக்கு அனர்த்தமாமென்றும் நினைக்கின்ற பிராந்தியே இவாகள் ஸ்ரீராமர் அவதரித்தது சித்திரைமாதமென்று அறியார்போலும், அந்த ஆடிமாதத்திலேயே கர்ப்பம் தரிக்குமென்ற நிச்சயந்தானென்ன, (ரிஷிபிண்டம் ராத்தங்காதென்பதோ) அப்படியன்றி, ஆவணி புரட்டாசிகளிற் கர்ப்பம்தரிக்கிறதில்லையா, நல்லது கர்ப்பம்தரித்த பத்தாமாதத்தில்தானு பிள்ளைபிறக்கிறது பத்துக்குமேல் பதினோராமாதம் பன்னிரண்டாமாதம் பிறக்கிறதில்லையா, அல்லாமலும் ஒன்பதாமாதம் எட்டாமாதங்களிலும் பிறக்கின்றதே கோசலைப் பிராட்டியானவள் கர்ப்பம்தரித்த பன்னிரண்டாமாதத்திலல்லவோ பிரசவித்தாள். இத்தனை கொள்ளையும் பிரவிடையான பெண்ணுக்குத்தானே, பிரவிடையாகாத பெண்ணுக்குவந்த விதியென்ன, அவளையும் தாய்வீட்டுக்கு அழைத்துவந்து விடுகிறார்களே இதுவும் விவேகமா, பூமலர்ந்த பின்பல்லவோ மணம்வீசும், மலராதபூவுக்கு மணமேது இதென்ன பேதைமையென்று சொல்லக்கேட்டு, இவருக்கு உலகவழக்கங்களும் விசேஷமாய்த் தெரிந்திருக்கின்றனவென்று அதிசயித்து, அவ்வரசன் தன்தேசத்தில் நெசவுசெய்யப்பட்டு ஒவ்வொன்று ஆயிரம் இரண்டாயிரம் விலையேறப்பெறற சால்வைகளில் மிகவும் உயர்ந்த பத்துச்சால்வை வெகுமானம்பண்ணி அவற்றுள்ஒன்றை எடுத்துவிரித்துத் தன்கையாற் கம்பருக்குப் போர்த்துவிட்டான்.

பின்னும் அப்படலத்தில்,

கோணணிசங்கம்வந்து குடியிருந்தனையகண்டத்
தினமில்கலன்கடம்மி லிசையவணவணிதல்செய்தார்

மானனைநோக்கினார்த மங்கலக்கழுத்திற்கெல்லாம்
தானணியாயபோது தனக்கணியாதுமாதோ.

என்ற பாடலைக்குறித்து, சீதைக்குமணக்கோலம்செய்வோர், மான்போன்ற அழகிய பார்வையையுடைய பெண்களின் மங்கலமாகிய கழுத்துக்கெல்லாம் சீதைபிரதான பூஷணமாயிருக்கும் பொழுது, அவளுக்குப் பூஷணமேதுக்கென்று நினையாமற்பூஷணத்திற்குப் பூஷணமிடுவதுபோல, ஸ்ரீமந்நாராயணன் கரத்தில் ஏந்துவதும் ஆயிரம சலஞ்சலச் சங்கம புடைசூழ அவைகளின் நடுவே அரசு வீற்றிருப்பதுமாகிய மாட்சிமை தங்கிய பாஞ்சசன்னியம்வந்து குடிபுகுந்ததுபோன்ற அவளது திருக்கழுத்தில் ஆடகம் கிளிச்சிறை சாதரூபம் சாம்பூநதமென்னும் நால்வகைப் பொன்னிற் களங்கரகிதமாய் மாற்றுயர்ந்த ஓர்வகைப்பொன்னாற்செய்து, மாசற்றமணிபதித்த பூஷணங்களுக்குள் கழுத்துக்கிசைந்து சிறந்தவைகளாகிய பலபூஷணங்களையும் அணிந்தார்களென்று பிரசங்கிக்கக்கேட்டு, கூர்ச்சரதேசத்து ரத்னவர்த்தகனொருவன் பெண்கள் கழுத்திற்குச் சீதை ஆபரணமாயிருக்கிறாளென்பது என்னவென, கம்பர் மாதர்கள் கழுத்திற்கு மங்கலக்குறியாயிருப்பது தாலி, அது திருவாகிய லட்சுமியிலம்சம் பெற்றமையால் அதற்குப்பெயர் திருவென்றும், இச்சீதையே அத்திருவாதலால் இவளே அப்பெண்கள் கழுத்திற்கு ஆபரணமாயிருப்பவளென்றும் இங்ஙனம் கூறியதென்றார். அதற்காக அவ்வர்த்தகன் சந்தோஷமுற்றுக் கம்பருக்குப் பச்சை கெம்பு வச்சிரம் நீலமுதலான நவரத்னமிழைத்த பற்பல ஆபரணங்கள்வெகுமதிசெய்தான்.

ஆரணியகாண்டத்திற் சரபங்கபடலத்தில் சரபங்கர் ஆசிரமத்துக்குச்சென்று அவரிடத்தில் தான் குறித்துப்போனசெய்தியைப்பற்றிப்பேசிப் பயன்படாமையால் திரும்பிவரும் இந்திரன் தனக்கெதிரே ஸ்ரீராகவர்வரக் கண்டமாத்திரத்தில் ஆனந்த பரவசமாய் அவரை ஸ்துதிசெய்கையில்.

(நாழிநவை யுலகெலாமாக நளினத்துநீதந்த நான்முகனுந்
தாமே, ஊழிபலபலவு நின்றளந்தாலொன்று முலவாப்பெருங்
குணத்தவுத்தமனேமேனாள், தாழிதரையாகத் தண்டயிர்நீராக

த் தடவரையேமத்தாகத் தாமரைக்கைநோவ, ஆழிகடைந்தமுதமெங்களுக்கேயீந்தாயவுணர்கடாமுனக் கடிமையல்லாமறையுண்டோ.)

என்ற பாடலைக்குறித்து, குற்றமற்ற அண்டங்களெல்லாம் அளவுகருவிகளாக, திருநாபிக்கமலத்தின் வழியாக நீயீன்றருளிய சதுர்முகப்பிரமன் அளவுகாரனாக அவன் தன் வாழ்நாளாகிய ஒரு கற்பகாலமேயன்றி, அனேக கற்பகாலம் உன்கடாட்சத்தால் முடிவின்றியிருந்து உனது கல்யாணகுணங்களைத் தானியராசிகளாகக்கொண்டு அளந்தால அவற்றுள் ஒருராசியாயினும் மாளாது. அப்படிமாளாதிருக்கின்ற அனந்தமாகியபெருங்குணத்தையுடைய புருஷோத்தமனே, பூர்வம் பூமியே தயிர்த்தாழியதாக, தண்ணீரே தயிராக, பெரிய மந்திரகிரியே மத்தாக, தாமரைமலர்போன்ற உன் திருக்கைகள் நோவ, கடலைக்கடந்து அமுதத்தை எடுத்து, பள்ளம்நிறைத்தவனுக்குப் பங்கென்றபழமொழிப்படி, எங்களுடனே கூடப்பாடுபட்ட அசுரர்களுக்குப்பகிர்ந்துகொடுக்க நியாயமுண்டாயிருந்தும், அவர்களுக்குக் கொடாமல் எங்களுக்குமாத்திரமே கொடுத்தருளினாய். அப்படிச் செய்தது உனக்கு நாங்கள் அடிமையாயிருப்பது பற்றியோ, வேதாகமங்கள் ஆத்மாக்களெல்லாம் அநாதியே ஈசுரனுக்கு அடிமையென்று, பிரதிபாதிக்கின்றதை நோக்குமிடத்தில் அவ்வசுரர்கள் தாம் உனக்கடிமையாகாது ஒழிந்திருப்பதுண்டோவென்பதாகப்பிரசங்கிக்கக் கேட்டுச் சடையப்பமுதலியார் பரமாத்துமனுடைய சுகுணங்களைத் தானியராசியாகவும், பல்லாயிரகோடி அண்டங்களையும் படிமரக்கால்களாகவும், பிரமனை அளவுகாரனாகவும் பிரமனை உருவகப்படுத்தினது மிகவும் அழகாயிருக்கிறதென்று பரம சந்துஷ்டியடைந்து கம்பருக்கு அன்றுமுதல் அவருடைய ஆயுள்வரையிற் பிரதிவருஷமும் ஊசிபோன்ற நல்லசன்னசம்பாநெல் பப்பத்துக்கரிசைக்குக் குறையாமற் கொடுத்துவந்தார்.

கிட்கிந்தகாண்டத்தில் வாலிவதைப் படலத்தில், 'இராமபாணம்வந்து மார்பில்தைத்த சமயத்தில்,

அரக்கரோரழிவுசெய்து கழிவரேலதற்குமாறோர்
குரக்கரசதனைக்கொல்ல மனுநெறிகூறிற்றுண்டோ

இரக்கமெங்குகுத்தாயென்பா லெப்பிழைகண்டாயப்பா
பரக்கழிவிதுநீபூண்டாய் புகழையார்பரிக்கற்பாலார்.

என்றபாடலைக்குறித்து, வாலி ராகவனைப்பார்த்து அப்பா ரகுநாயகா, இராக்கதர்கள்வந்து உன் மனைவியை அபகரித்துக்கொண்டு உனக்குக் குற்றம்செய்துபோனால், உன் விஷயத்தில் அப்படி அபராதிகளானவர்களைச் சிட்சியாமல், அடுப்பெரியாத கோபத்தை அம்மையார்மேல் காட்டுவதுபோலக், காட்டிலேநிரபராதியாயிருக்கின்ற குரங்குகளுக்கு ராஜாவாகிய என்னைக்கொல்லும்படி நீவாசித்தறிந்த மநுநீதி ஏதாவது சொல்லியிருக்கின்றதுண்டோ, உங்கள் வம்சத்திற்கு இயற்கையாயிருக்கின்றசிவகாருணியத்தை எங்கே சிதறிவிட்டாய், என்னிடத்தில் என்ன தோஷம் கண்டாய், கௌரவத்தாழ்வாகிய பழிக்கு நீ உடன்பட்டையேயானால் இனிப்புகழென்பதைப் பரிக்கத்தக்கவர்கள் ஆரிருக்கிறார்களென்று சொல்லக்கேட்டு, ஸ்ரீராமன் அவனை முன்னிட்டு அடா வாலி, அரக்கர்செய்த குற்றத்தைக்குறித்து நானுன்னைக் கொன்றதாக நீ தவறாய்ச்சொல்லுகிறாய் உன்னைக் கொன்றது அதைப்பற்றியல்ல, மேலும் நான் இரக்கத்தைக்கைவிட்டதாய்ப் பேசினாய். நல்லது துர்ச்சனர்களுக்கு இரக்கங்காட்டலாமா, என்னிடத்திலே நீ என்னபிழை கண்டாயென்று கேட்டாய். சுக்ரீவன்மனைவியை அபகரித்ததைமறந்துபோயினையோ பழியைநான் தேடிக்கொண்டதாய்ச் சொல்லவந்தாய். துஷ்டநிக்கிரகம் செய்வது பயிர்க்குக் களையெடுக்கிறதுபோலல்லாமல் ஒருபொழுதும் பழிபாவமாகாதென்று அறியாயாவெனச் சொன்னதாகப் பிரசங்கித்தார.

சபையிலிருந்தவர்கள் கம்பரைநோக்கிச் சுவாமி, பின்புறத்திற் பதுங்கியிருந்து வாலியின்மேற் பாணப்பிரயோகம் செய்ததுவிரதர்மமாவென, கம்பர் இந்தக்கேள்வி வாலியே கேட்டிருக்கிறானென, அவர்கள் அவையெவையென, வாலிசுவாமியை எதிரிட்டு ராமா, நான் சுக்ரீவன் மனைவியை அபகரித்ததாகச்சொன்னையே, தம்பிபெண்சாதியை அண்ணன் சுதந்தரிப்பதற்குப் பாத்தியமில்லாமற்போயிற்று, அதற்காக நீ என்னைக் கொல்ல ஏற்பட்டது அநியாயந்தானேயென, சுவாமி இதென்ன முறைகேடான பாத்தியம். நீ என்னசொன்னாலும் அக்கிரமஞ்செய்த

வர்களை அரசர்கள் தண்டியாமல் விடமாட்டார்களென, வாலி மிருகங்களுக்கு முறையெனபதும முறைகேடென்பதும் உண்டோ இல்லையே ஆதலால் இது அக்கிரமம் அல்லவென, சுவாமி மிருகம் இப்படிக்கெல்லாம் நியாயங்கேட்குமா கேளாதாகையால் நீசொல்வதுசரியன்றென, வாலி அதிருக்கட்டும் நாங்கள் இருவரும் தொந்தயுத்தம் செய்கையில் நீஎன்னைக் கொல்வது தர்மமாவென, சுவாமிதன்கன்றைப் புலியடிக்க வரும்பொழுது பசு அப்புலியைப் பாயாமல் அதனிடத்திற் கன்றைக்காட்டிக்கொடுத்திருக்குமோவென, வாலி தமயன் தம்பிகளாயிருக்குமஎங்கள் இருவருசகுள் நீ ஒருவன்பட்சத்தில் நட்பும் மறறவன் பட்சத்திற்பகையும் பாராட்டலாமோவென, சுவாமி சுக்ரீவன்வந்து என்னை அபயமென்றடுத்தபடியினாலே உதவிசெய்து அவனை ரட்சித்தேன். நீ அவனுக்குத் தீங்குசெய்ததனால் உன்னைச்சிட்சித்தேனென, வாலி செங்கோலமுடிமுதலானராஜசின்னங்களையும் அதிகாரத்தையும் பரதனுக்குக் கொடுத்துவிட்ட நீ என்னைத்தண்டித்தது எவ்விதத்தாலென, சுவாமி என்னதிகார முதலானவைகளையும் பரதனுக்கு நான்கொடுத்துவிட்டாலும், அவன்சித்திரகூட பர்வதத்திற்குவந்து என்னைக்கண்டபொழுது வனத்தில் ராட்சதர்முதலிய துஷ்டாத்மாக்களைக்கண்டால் சிட்சியாமல் விடவேண்டாமென்று எனக்கு ஆக்கியாபித் திருக்கிறானென, வாலி அப்படியானால், எனக்கெதிரேவந்து போர் செய்யலாமே பின்னிருந்து அம்பெய்வதுஎன்னவென, சுவாமிதிருடனைப்பதுங்கிப் பிடித்தாலல்லவோ அவனகப்படுவானென, மற்றும் இவ்வாறு அனேகம் கேள்விகள் வாலிகேட்க, அவைகளுக்கெல்லாம் சுவாமி தக்கபடி உத்தரஞ்சொல்லி யிருக்கிறாரென்று சொல்ல, யாவரும் சந்தோஷித்தார்கள்.

சுந்தரகாண்டத்திற் காட்சிப்படலத்தில்,

ஆழநீர்க்கங்கை யம்பிகடாவிய
ஏழைவேடனுக் கெம்பியுன்றம்பிநீ
தோழனங்கை கொழுந்தியெனச்சொன்ன
ஆழிநண்பினை யுன்னியழுங்குவாள்.

என்பதைக்குறித்து, ஆஞ்சனேயர் அசோகவனத்தில்எழுந்தருளியிருக்கும் பிராட்டியை ஒரு மரத்தின்மேலேறி இவர் எப்

படிப்பட்ட ஸ்திதியிலிருக்கிறாரோ அறிவோமென்று பார்த்துக் கொண்டிருக்கையில், அவள் வேறொரு எண்ணமுமின்றிச் சர்வதா சுவாமியினிடத்திற் சிந்தைவைத்தவளாய் அவரைச் சொப்பனத்திலும் மறவாமல், உலகத்தில் யாவராயினும் ஒருவரை யொருவர் நேசிக்குங்கால், குலம் கல்வி செல்வம் ஈகை வீரம்புகழ் ஞானம் ஒழுக்கமுதலியவைகளில் மிக்குயர்ந்தவர்களையே நேசிக்கவேண்டுமென்பது முக்கிய கர்மமாயிருக்க, உத்கிருஷ்டமாகிய க்ஷத்திரியகுலமும், சாஸ்வதியும் நாணத்தக்க பூரணமானகல்வியும், குபேரசம்பத்திலும் அதிகமாய் அளவிடப்படாத சம்பத்தும், கறபகம்போன்ற மாறாத ஈகையும், எவர்களாலும் வெல்லப்படாதவீரமும், அண்டமுற்றும் அளாவியபுகழும், திவ்வியஞானமும், இடையறாத நல்லொழுக்கமு முடையவராகியசக்கரவர்த்தி திருமகனார் ஆழமாகிய நீரையுடைய கங்காநதியிற் படவோட்டுகின்றவனும், மேறசொல்லிய கல்விமுதலானவைகளில் ஏழையுமாகிய குகனென்னும்வேடனைக் கங்கைக்கரையிற்கண்டு தமது மேன்மையையும் அவனது கீழ்மையையும் பொருள்செய்யாமல் நேசித்தகாலத்தில் அவனுக்கும் தமக்கும் வேறுபாடில்லாமல் என் தம்பி உன் தம்பியென்றும், நீ என்தோழனென்றும், என்பெண்சாதி உன்மைத்துனி யென்றும்சொல்லி அன்புபாராட்டிய அநதக்கடல்போலும் பெரியநட்பைநினைத்து வருந்தத்தலைப்பட்டாளென்று பிரசங்கித்தார்.

அதுகேட்டு, அங்கிருந்தவர்களிற் சிலர் சுவாமியானவர் சகலவிபவத்தையும்கைவிட்டு வனததிற்பிரவேசித்தசமயத்தில் மிகவும்தாழ்ந்த ஸ்திதியி விருந்தபடியினாலே காலத்திற்கேற்றகோலமென்பதாக, அங்கேவந்த கிராதனைத் தாரதம்மியம் பாராமற சமானஸ்கந்தமாக நேசித்தார், அப்படியன்றி மண்டலாதி பத்தியம்பெற்று அகண்ட சாம்பிராச்சியத்தை அனுபவிக்கும் காலத்தில் அவன்வருவானானால் இவ்வண்ணமே நடப்பாரோவென்ன, கம்பர் அவர்களைநோக்கி அந்த அதிசயத்தைச் சற்றுக்கேளுங்கள் ஸ்ரீராகவன் பிதிர்வாக்கிய பரிபாலனம்பண்ணும்பொருட்டுப் பதினாலாண்டும் கழித்துத் திருவயோத்திக்குமீண்டுபோய் மருடவர்த்தனர் பட்டவர்த்தனர்முதலாகிய பலஅரசர்களும், பிரமசாரியர் கிரகஸ்வாதர் பிரஸ்னப்தர் சந்நியாசிகளாகிய பற்பலமு

ணிவர்களும், சுக்கிரீவன் அங்கதன் அநுமன் முதலானவர்களும் வானரசேனைகளும் மற்றுமுள்ள சகலமகாஜனங்களும் புடைசூழ, பிரமபுத்திரராகிய வசிஷ்டரென்னும் குலகுருவும், சுமந்திரன் முதலாகிய அனேகமந்திரிமார்களும் சேர்ந்திருக்க, உன்னதாசனத்திற் சீதாசமேதரா யெழுந்தருளியிருக்கும் பிரபலமான அந்த மகாவைபவத்தைப் பார்த்துப் பிராட்டியானவள் பிரமித்து இப்படிப்பட்ட தருணத்திற் கங்கைக்கரையிற்கண்டுசிநேகித்தவனாகிய குகன்வந்தால் சுவாமியானவர் பழையபடியே அவனிடத்தில் அந்நியோந்நியமாக கட்டுப் பாராட்டுவாரோ, அல்லது சத்தியந்தப்பிப்போவாரோ, இவர் நிலைமை எங்ஙனமாமோவென்று திருவுளத்தில் ஐயமுற்றிருக்கையில், தெய்வயத்தினமாய்க் குபேரன்பட்டணத்திலும் விறகுக்கட்டுக்காரனுண்டென்றபழமொழிப்படி, அயோத்தியில் நித்தியதரித்திரனாய்ப் பிச்சையெடுத்துச்சீவிப்பவனொருவன் ரகுநாயகனைக்குழந்தைப் பருவத்தில் வீதியிற்காணுந்தோறும் ஆசையுடனேயெடுத்து அணைத்து முத்தமிட்டுக்கொஞ்சுவான். அவ்வறியவன்இராமன்காட்டுக்குப்போன நாளமுதல் அழுதகண்ணும் சிந்தியமூக்குமாயிருந்து, அவன்வந்தசெய்தி அறிந்தமாத்திரத்தில் அதிசீக்கிரமாக ஓடிவந்து சபாரத்னமாய்ச் சிங்காதனத்தின் மேலிருக்கும் ராமச்சந்திரனைக்கண்டு வாயிற்காவலாளிகள் ஆரங்கே போகிறவனென்றுகேட்கும் கேள்விக்கும் உத்தரம்சொல்லாமல் உட்சென்று அச்சபைநடுவேபுகுந்து தன்அசுத்தமாகியகாலினால் அனைவரையும் மிதித்துத் துவைத்துக்கொண்டு சுவாமிக்கு அருகிற்கிட்டிச் சேர்ந்து அடா ராமா நீ எப்போது வந்தாயடாவென்று கட்டிக் கொண்டழுதான். சுவாமியும் அவனைக் கட்டிக்கொண் டழுது துக்கித்தார்.

இவ்வாறு அவனழத்தாமழக்கண்ட அரசர்முதலானவர்களும் இதென்னகாரணம் ஆரோ பைத்தியம்பிடித்த பிச்சைக்காரன் இடுகிடென்றுஓடிவந்துகட்டிக்கொண்டழுதாற் சுவாமியும்அவனை கட்டிக்கொண்டழுகிறாரே அவனைத்தொடர்ந்த பைத்தியம் இவரையும் தொடர்ந்ததோவென்றுபிரமிக்கும்சமயத்தில், அவன் அப்பா, என்சும்மா அழுகிறாய் இனிஅழவேண்டாம்முகம்வீங்கிப் போகிறதென்றுசொல்லித் தன்அழுக்குப்பற்றிய பீற்றற்றுணியினாற்சுவாமி கண்ணைத்துடைக்க, பிறகுஅவர்துக்கமாறி எல்லா

ரையும்பார்த்துப் பதினான்கு வருஷத்திற்குமுன்பு இறந்த எங்கள் பிதாவாகிய தசரத மகாராஜாவை இன்று கண்டேனென்றார். அதுகேட்டு யாவரும் இதென்ன ஆச்சரியம் பிச்சைக்காரனைத்தமது பிதாவென்கிறாரே இவருக்குப் பைத்தியம் பிடித்தது மெய்யென்றே நிச்சயித்தார்கள். சுவாமி அவர்களைநோக்கிக் கேளுங்கள், என்னை முனிவர்கள் பிரம்ம ஸ்வரூபமென்றும், தேவர்கள் நாதனென்றும், பந்துவர்க்கத்தார் ரகுநாதனென்றும், உலகாள்வோர் தாசரதியென்றும், எங்கள் மாமியார் விட்டார் என்பெயரைச் சொல்லக்கூடாதாகையால் சீதாபதியென்றும், சினேகர்கள் ராமபத்திரனென்றும், மற்றும் சிலர் ராமசந்திரனென்றும் சொல்வார்கள். எங்கள் பிதாமாத்திரம் அடா ராமாவென்று அழைப்பதுண்டு, அந்தப்படியே இந்த மகாராஜனும் அழைத்தபடியினாலே யெங்கள் பிதாவை இன்றுநான் கண்டேனென்பதாகச் சொன்னேனென்றார். அப்பொழுது யாவரும் இவருக்குள்ள பெருமை மற்றாருக் குண்டென்று பலகாலும் சொல்லி ஆனந்தித்தார்கள் பிராட்டியார் திருவுளத்தி லுதித்த சந்தேகமும் நிவர்த்தியாயிற்றென்று சொல்லிப் பின்னும் கம்பர் சுவாமி தமது திருநாமங்களைக்குறித்து அருளிச் செய்தபடியே முன்னோர்களால்.

"ராமாய ராமபத்திராய ராமசந்திராய வேதஸே
ரகுநாதாய நாதாய சீதாயாப் பதயேநம.

எனச் சுலோகபூர்வகமாய் அவர் ஸ்தோத்திரம் பண்ணப்பட்டிருக்கிறதென்றார். அதற்காகச் சேரசோழ பாண்டியர் முதலானவர்களும் சந்தோஷப்பட்டார்கள்.

உத்தரகாண்டத்திற் கடல்காண் படலத்தில்.

"தென்னாற்கண்ட திருமேனி யின்றுபிரிதாய் கிடைதனர்வான்
தன்னைக்கண்டு மிரங்காதே தானேகதறுந் தடங்கடல்வாய்
பின்னற்றிரைமேற்றவழ்கின்றபிள்ளைத்தென்றல்கள்ளுயிர்க்கும்
புன்னைக்குறும்பூ நறுஞ்சுண்ணம் பூசாதொருகாற் போகாதே.

என்ற பாடலைக்குறித்து, ஸ்ரீராமன் வானர சைனியங்களுடனே ராவணன் மேற்படை யெடுத்துப்போய்த் தென் சமுத்திரத்தின் வடகரையில் இறங்கி யிருக்கும்பொழுது, பிராட்டியின் பிரி

வாற்றுமையால், தனக்கு இராமுழுவதும் நித்திரைவராததுகண்டு திருப்பள்ளிஸ்தானத்தை விட்டெழுந்து கடற்கரையோரத்தில் உலாவிக்கொண்டிருக்கையில் சீதையைப் பிரிந்ததுமுதல் ஒவ்வொருநாளும் நேற்றுக்கண்ட தன்திருமேனி இன்று வேறுபட்டுக் காணுதலால் உருத்தெரியாமல் அறிந்து பழகினவர்களும் பயங்கும்படி உயிர்நிலை தளர்கின்ற அவனைக்கண்டும் இரங்காமல்தானே கூச்சலிட்டுக்கொண் டிருக்கின்ற விசாலமாகிய கடலினிடத்திற்பின்னி விழுகின்ற நீர்த்திரைகளின் மேல்தவழ்கின்ற மணம்பொருந்திய புன்னைப்புஷ்பத்தின் மகரந்தப்பொடிகளை வாரிக்கொண்டுவந்துஅவ் விராகவன்மேற் பலகாலும் பூசத்தலைப்பட்டதென்று கம்பர் பிரசங்கித்தார்.

ஒட்டக்கூத்தர் ஒலிக்கிறது கடலுக்கு என்றும் சுபாவமாகையால், நீர் அது கதறுகிறதென்றது மெய்தான் ஆயினும், இராமனைக் கண்டும் இரங்காமல் தானே கதறுகின்றதென்றீரே, கடலுக்கும் இராமனுக்கும் யென்ன சம்பந்தமென, கம்பர் சீதையானவள் அச்சமுத்திரத்திற் பிறந்தமையால் அதற்கு அவள் மகளும் அவளுக்கு அது தாயும். அவனது கணவனாகிய ராமனுக்கு மாமியாரும், அவன் அதற்கு மருமகனு மாதலால், அம்முறைபற்றி மருமகன் மாமியார் வீட்டுக்கு அழைக்கப்படாமல் வருவது தருமமன்றாயினும் அதை இராமன் நினையாமல் வலிய வந்ததைக்குறித்து இந்த மாமியார் யெவ்வளவோ சந்தோஷத்தோடு ஆசார உபசாரஞ் செய்யவேண்டுமே அதுவும் செய்யாமல், இவன் தன்மனைவியை இழந்து ஏக்கம்பிடித்து உடல்மெலிந்து சோகங்கூர்ந்து வந்ததைப் பற்றியாவது யென் செல்வ மருமகனே வந்தையா வாவென்றழைத்து, உடலும் உயிரும்போல உன்னுடன் மருவிப் பிரியாமலிருந்த உன்னைக்கண்ணாட்டி எங்கேபோனாள்? உனக்குப் பெண்டு பாக்கியமில்லாமற் போய்விட்டதாவென்று வினவித் துக்கத்தோடு ஓடிவந்து மேல்விழுந்து அலறி யழவேண்டுமே அப்படியும் செய்யாமல் தன்னருமைத் திருமகளை ராட்சதன் வஞ்சித்துக்கொண்டு போனதனால், அவளைப் பெற்றவயிறு பற்றியெறிய அக்கடலானது நீராயுருகிக் கரைந்து பிரக்கினையில்லாமல் தன்னுடன்கூட அழுவார் ஒருவருமின்றி ஒறறைக் குரலாய்த்தானே அழுதுகொ

ண்டிருப்பதுபற்றி நிலைதளர்வான் தன்னைக்கண்டு மிரங்காதே, தானே கதறுந் தடங்கட லென்றோ மென்றுசொல்லிப் பின்னும், அந்தச்சமுத்திரம் அவ்வாறு கதறிக்கொண் டிருக்கையில், அலைகளாகிய கைகளின்மேல் தவழ்ந்து விளையாடும் இளந் தென்றலாகிய அதன்பிள்ளையானது, இதென்ன அமரியாதை தற்காலத்தில் நமது தாய் தன் சொந்த மருமகன் வந்தவிடத்தில் விசாரியாம லிருக்கிறாள் நமது அக்காளுக்கும் அத்தானுக்கும் விவாகமான தருணத்தில் நாம் அருகிலிருந்து அவ்விவாகச் சிறப்பைக்கண்டு அக்காலத்தில் நடந்தவேண்டிய மரியாதையை நடத்தப் பாக்கியம்பண்ணாமற் போனோம் அப்பொழுது நடத்தாமற்போனோம் போகட்டும் இப்பொழுதாவது அதைநடத்தி அத்தானைச் சந்தோஷப்படுத்த வேண்டுமே. இத்தருணத்திலும் அப்படிச் செய்யாதிருந்தால், இதை ஆராவது கேட்பவர் “அக்காளோடே போயிற்று மைச்சான் உறவு' என்றல்லவோ சொல்லுவார்கள் ஆதலால் சும்மா யிருக்கலாகாதென்று, “இளம்பிள்ளை பயமறியா” தென்பதற்கேற்கச் சமயாசமயந் தெரியாமல், புன்னைப் பூம்பராகப்பொடியாகிய சந்தப்பொடியை அடிக்கடி வாரிக்கொண்டு வந்து தலைகால் தெரியாமல் அத்தான்மேல் வீசிப்பூசிச் சந்தப்பொடி வசந்தமாடி மைத்துனங் கொண்டாடத் தலைப்பட்டதென்றும் விரித்துரைத்தார். கேட்டவர்களெல்லாம் இது நல்ல வேடிக்கையென்று ஆச்சரியப்பட்டார்கள்.

உத்தரகாண்டத்தில் இரணியவதைப் படலத்தில் பிரகலாதனன் குறித்ததூணில் அகண்ட பரிபூரணனாகிய பக்தவச்சலன் ஆவிர்ப்பவித்து இரணியனை வதைத்த பொழுது, இந்திராதி பிரமாதி தேவர்களும் முனிவர்களும் வந்து ஸ்துதி செய்யுஞ் சமயத்தில்.

“ தன்னைப்படைப்பதுவுந் தானேயெனுந்தகைமை
பின்னைப்படைத்ததுவே காட்டும்பெரும்பெருமை
உன்னைப்படைத்தாய் நீயென்றுலுயிரபடைப்பான்
என்னைப்படைத்ததா யெனுமிதுவுமேதாமே. “

என்ற பாடலைக்குறித்து, கலைமகள் கணவனாகிய பிரமன் சுவாமியை நோக்கித் தன்மனமானது வெயிலிடு வெண்ணெய் போலுருகி நெகிழ, சர்வலோக சரணியனாகிய எம்பெருமானே

புகைக்குக் காரணம் அனலென்பதுபோலப் பிரபஞ்சத் தோற்றத்திற்குக் காரணம் ஈசரனென்பதேயல்லாமல், அவ்வீசரனுக்குக் காரணம் சொல்லக்கூடாமையால் அவனைத் தோற்றுவித்தவர் வேறில்லையென்றும், ஆதியிற் பரமாத்மன் தன்னைத்தானே படைத்துக் கொண்டானென்றும் வேதஞ் சொல்வதை இப்போது நீ இந்த ஸ்தம்பத்தினிடத்தில் அழகிய சிங்கனாக உன்னைப் படைத்துக் கொண்டதே பிரத்தியட்சமாகக் காட்டாநின்றது. இவ்வாறு மகத்தான பெருமைதங்கிய உன்னையே நீ படைக்கத்தக்க அற்புதமாகிய பரமசத்தியை யுடையவனாயிருக்கின்றாயென்றால், இந்தச் சராசரங்களாகிய உயிர்களைப் படைக்கின்ற சக்திதான் உனக்கில்லாமற் போயிற்றோ? இவைகளைப் படைப்பதற்காக என்னை நீ படைத்தாயென்று சொல்லப்படுமிது யெதற்கன் மைத்தாமென்று ஸ்தோத்திரம் செய்தானென்பதற்காகக் கம்பர் பிரசங்கிக்க கேட்டவர்கள் இக்கருத்துக் கடவுளில்லையென்று வாதிக்கும் நாஸ்திகர் நாவை யடக்குவதற்குத்தக்க கருவியாயிருக்கிறதென்று மிகவும் வியந்து பேசினார்கள்.

மேற்சொல்லிய படலத்தில், அழகிய சிங்கனைவந்து அவதரித்த சர்வேசுரன், பிராட்டி புருஷகாரத்தால் உக்கிரந்தணிந்து திருவுளங்கூர்ந்து பிரகலாதனைநோக்கி அப்பா குழந்தாய் என்னைப்பற்றி ஜன்மசத்துருக்களாகிய இரணியன் முதலானவர்களாற் படாத பாடுபட்ட உனக்கு நானென்ன செய்யப்போகிறேன். வேண்டிய வரத்தைக் கேளென்ற சமயத்தில்,

“முன்புபெறப்பெற்ற பேறொருபடியில்லை
பின்புபெறும்பேறுமுண்டோ பெறுவனேல்
என்புபெருக விழிபிறவி யெய்திடினும்
அன்புபெறுவதை யருட்பேறெனக்கென்றான்.”

என்றபாடலைக்குறித்துக் கம்பரானவர், பிரகலாதன் சுவாமிக்கு முன்பு அஞ்சலியஸ்தனாய் நின்று ஓ பக்தரட்சகா! பரமதயாளா அடியேனுக்கு வேண்டிய பேறெல்லாம் இப்பொழுது நீ அருளிச்செய்வதாகக் கேட்கச் சொன்னமையால் என்ன பேறு பெறவேண்டுமென்று கேட்டேன். ஆதியில் நான் மூலப் பிரகிருதியில் அழுந்தி ஜீவாத்ம பரமாத்ம ஸ்வரூபமும், அ

ஃவிரண்டுக்கும் உள்ள சம்பந்தமும், அச்சம்பந்தத்தைத் தடுக்கும் விரோதமும். அவ்விரோதத்தை நிவர்த்திக்கும் உபாயமும், அவ்வுபாயத்தைச் செய்தவிடத்து அடையும் பலமார்க்கமும் இன்னவென்று விளங்காமல் ராசத்தை அடைந்திருக்கையில், நீயே நுக் கிருபையினாலே சரசரணாகி அவயவங்களைத்தந்து வேதாகமங்களைக் கொண்டு மேற்சொல்லிய ஸ்வரூப முதலானவைகளையும் தெரியவிளக்கி உன் திருவடியிற் சரணாகி பண்ணுவதற்கேற்ற சேதத்துவம் தலையெடுத்து பாரதந்திரனாகி உன்கைங்கரியத்தை இப்பிறப்பில் இடைவிடாது செய்து உஜ்ஜீவிக்கும்படி நீ அனுக்கிரகிக்க, அவ்வாறு அடியேன் அன்னமே பெற்றபேறுகளுக்கோர் முடிவொன்றுமில்லை. அதையன்றி இனிப்பெறும் பேறுகளும் வேறேயுண்டோ? அப்படியேபெறவிருப்பினும், விசித்திரமாகிய பூர்வகர்ம சேஷத்தால் இன்னும்காலச் சக்கரத்தில் அகப்பட்டு இவ்விருள் தருமாஞாலத்தில் எண்ணிறந்த ஜன்மமெடுத்து உழன்றாலும் அஞ்சுவேனல்லேன். எல்லாப்பிறப்பிலும் மிகவும் தாழ்வாகிய சாக்கடைச்சேற்றிற் கிடந்து நெளியும் புழுவாம் பிறப்பைப் பெற்றாலும் உன் திருவடிக்கண்பாலாக அன்புநிசஞ்சத்தைப் பெற்றால் அப்பேறு சற்பக்தியையுண்டாக்கும், சற்பக்தி சத்கர்மத்தையுண்டாக்கும். சற்போதம் விடுவிக்கும் அதனாற்றி, இயம நியமாதிகளாகிய அஷ்டாங்கயோகமும், அணிமாதிமாமுதலாகிய அஷ்டமாசித்தியுமாற்று முன்னப்பலனைப் பேறுகளும் வேண்டுவனவல்ல. அவ்வான் பொல்லாம் பெறுவேனென்பதுக்கு அறியபெரியவேயும். அதைதே அதைநாளிச் செய்யவேண்டுமென்ப் பிரார்த்திக்கதாகப் பிரசங்கித்தார்.

நாகபடலத்தில்,

" வானுளவித்தி முழுபாபனீயின் வருகவிறத்தியமைபாய் பேணுபுனக்கோர் பொருள்வேண்டுமென்று பெறுவானருத்தியடியாய், ஊனுயுயிர்க்கு முயிராகிநிற்றி யுணர்வாதி யெல்லாநின்றவாய், ஆணுதிமற்றை யவியாதியாரிவ் வதிசோகமாயையறிவார்."

என்றபாடலைக் குறித்துக் கம்பரானவர், இந்திரஜித்துப்பிரயோகித்த நாகபாசத்தாற்கட்டுண்ட இளையபெருமான் முதலானவர்களை

நோக்கிப் பிரலாபிக்கின்ற ஸ்ரீராகவனைக்கருடன்கண்டு. வேதஸ்வரூபியாகிய ஜானகிமனோகரா! எவ்வகைப் பற்றுகளையும் கைவிட்டு உன்திருவடியே தஞ்சமென்றுபற்றிய சேதனர்கள்உன்னைப்போல நித்தியாம்படி அவர்களுக்கு அப்பிராகிருதமாகிய திவ்விய சரீரத்தையேயன்றி உனது வாழ்நாளையும் அளிக்கின்றாய். நீ அங்ஙனம் அளித்துப் பின்பு உன் திருவுருவுக்கு அழிவும் வாழ்நாட்குஅவதியுமின்றிக் காலவரையறை கடந்து நிற்கின்றாய உனக்கேபோஷணைக்காகத் தானியம், தனம், வஸ்திரம், பூஷணம், காணி, பூமி முதலிய பலவகைப்பொருள்களுள்ளும் ஒன்றையாயினும் முன்னுக்காவது பின்னுக்காவது வேண்டுமேயென்று தேடிவைத்துப்பாதுகாக்கின்றாயில்லை. அல்லது யாதேனும்ஒன்றைப் பெறுப்பொட்டு அதனிடத்தில் இச்சையும் வைக்கின்றாயில்லை. இப்படி பசைபற்றிருந்தும் பல்லாயிரங்கோடி யண்டங்களிலுமுள்ள அகிலசராசரங்களுக்குள் அந்தரியாமியுமாயிருக்கின்றாய்மெய்யினாற் பரிசத்தையுணர்தலும், நாவினாற் சுவையையுணர்தலும், கண்ணினால் உருவத்தையுணர்தலும், மூக்கினால் கந்தத்தையுணர்தலும் செவியினால் ஒலியையுணர்தலுமாகிய ஐம்புல உணர்வும், அவற்றிற்காதியாகிய மனவுணர்வும், அதற்கதிஷ்டானமாகிய உயிருணர்வும், அவ்வுயிர் இத்தன்மைத்தாயதெனவும், இவை இனைத்திற்கும் காரணமாய் அதீதப்பட்டிருக்கின்ற பிரமசாட்சாத்காரமானது. அகண்டபரிபூரண சச்சிதானந்தஸ்வரூபமாயிருக்கின்றதெனவும் குத்துவையதிபண்ணிச் சுருதி குரு சுவானுபவங்களால் ஐயந்திரிபற உணரும் மெய்யுணர்வுமாகி விளங்குகின்றாய் சர்வலோகங்களையும் சகலவுயிர்களையும் திருவுதரத்துள் அடக்கி வெளியிடுகின்றமையாற் பெண்ணுருவாகியும் புருஷோத்தமனெனப் பெயர்பூண்டமையால் ஆணுருவாகியும், அவையிரண்டுமல்லாத அலியுருவாகியும் அதிசயிக்கத்தக்க அநேக மாயைக்கொண்டு இங்ஙனம் நடிக்கின்றாய் உலகத்திலே இந்த அகடிதகடனா சாமர்த்தியத்தை அறிந்து ஆனந்திக்குமவர்கள், கர்த்தா போக்கா ஜனார்த்தனனென்று சாஸ்திரம் சொல்லுகிறபடி, உன்னையன்றி வேறில்லாமையாற் சித்திரகாரன் பலவகைச் சித்திரங்களையும் தானே எழுதித்தானே பார்த்துத் தானேகளிப்பதுபோல, நீயே இயற்றிநீயேபார்த்து நீயேசந்தோஷிக்கவேண்டியிருக்கின்றதென்

று ஸ்துதிசெய்ததாகப் பிரசங்கிக்கக்கேட்டுச் சேரமகாராஜன்முத லானவர்கள் பிரமானந்த மடைந்தார்கள்.

சானகிகனங் காண்படலத்தில், சீதையைப் புஷ்பவிமானத்தின்மேல் ஏற்றி யுத்தகளத்திற்குக் கொண்டுவந்து அவளுக்குப் பிரமஸ்திரத்தால் இறந்தஇளையபெருமாள் முதலானவர்களையும் அவர்கள் இறந்த கண்டு துக்கித்து மெய்ம்மறந்து மூர்ச்சைபோயிருக்கின்ற பெரிய பெருமாளையும் யாரென்று ராட்சதிகள் காண்பித்த பொழுது.

" மங்கையழுதாள்வாட்டும் மயில்களழுதார் மழுவிடையோன்
பங்கினுறையுங் குயிலழுதாள் பதுமமலர்மேன்மாதழுதாள்
கங்கையழுதா ளுமகளுமழுதாள் கமலத் தடங்கண்ணன்
தங்கையழுதா ளிரங்காத வரக்கிமாருந் தளர்ந்தழுதார் "

என்பதைக்குறித்து, பிராட்டியானவள் பிரமாஸ்திரத்தால் மற்றவர்களைப்போலச் சுவாமியும் பிராணவியோகமானா ரென்றெண்ணித் தன்கனிவாயைத்திறந்து அழுதமாத்திரத்தில்,சுவர்க்கத்திலுள்ள இந்திராணிமுதலான மயிலபோன்ற மாதர்களும்அழுதார்கள் இடபவாகனத்தையுடைய சிவனதுவாமபாகத்தில் வசிக்குங்குயிலையொத்தஉமாதேவியும் அழுதாள்தாமரைப்புஷபாசனத்தினிற்றிருக்கு ஸ்ரீமகாலட்சுமியும்அழுதாள் சத்தியலோகத்திலுள்ள கங்கையும்அழுதாள் பிரமன்நாவிலிருக்கும் வாணியும்அழுதாள் கமலதலம் போனும்விசாலமாகிய விழிகளையுடைய நாராயணன் தங்கையாகிய துர்க்கையும்அழுதாள்இரங்காதராட்சதிகளும் தளர்ச்சிகூர்ந்தழுதார்களென்றுகூறிப்பின்னும், சீதையானவள்தன்னமிசமாகையால்அவள்படும்பாடு தாள்படுவதாகத்தோன்றக்கண்டுஇலக்குமிதுக்கித்தது சுபாவத்திலேயேநீரரந்தன்மை யாதலாற்கங்கைதுக்கித்ததுசகஜமே இந்திராணிமுதலானவர்கள் துக்கமென்பதன்பெரையும்அறியாமற்போகத்திலேயேசுகித்திருப்பவர்களாகையாலும், உமாதேவி மலைபெற்றமகளாகையாலும், அன்றியும் சேதனகோடிகளை ரட்சிக்கும் பொருட்டு ஸ்ரீமகாவிஷ்ணுவின் கருணையே சீதையாகத்திருவருக்கொண்டு இங்ஙனம் நடிக்கின்றதென்னும்உண்மையை அவளறிந்தமையாலும், சரஸ்வதி சீதைக்கு மருமகளும், சீதை அவளுக்கு மாமியுமாகிய முறைமைபற்றி மாமியார்செத்த அருமாதம் மருமக

ளுக்குக் கண்ணிலே தண்ணீர்வந்ததென்று சொல்கிறபடி, வாணி
க்குச் சீதைவிஷயத்தில் விரோதம் சம்பவிக்கலா மாகையாலும்,
துர்க்கை சயமகளும் நீலியுமா யிருப்பவளாகையாலும் அவ்விந்தி
ராணி முதலானவர்களுடைய மனதில் இரக்கமென்பது மருந்துக்
கும் கிடைக்கமாட்டாதென்று நிச்சயிக்கப் படுதலால் அவர்களுக்
குத் துக்கம்ஜெனித்தது அதிசயமே ஆராயுமிடத்து அதுவுமோ
ரதிசயமல்ல, ராட்சதிகள் தர்மாதர்மம் பாராதவர்களும், மிகவும்
கடினசித்த முடையவர்களும், நரமாம்ஸ பட்சணிகளும் ராவணனா
கிய ராட்சதனால் ஏவப்பட்டுச் சீதையைச் சித்திரவதை செய்கிறோ
மென்று நெஞ்சுதுணிந்து எந்நேரமும் அவளைமொய்த்துச் சுற்றி
உபத்திரவப் படுத்திக்கொண் டிருப்பவர்களு மாகையால் அவர்
கள் அழுதது உள்ளபடி அதிசய மாமென்றுங் கம்பர் பிரசங்கித்
தார்.

பாண்டியராஜன் சர்வோத் தமியாகிய ஜானகியுடனே ஜக
த்காரணனாகிய சுவாமியும் இந்தனை ஈடுபாடுகள் படவந்த தெல்
லாம், மேற்படி தேவேந்திரிகளுக்கும் அவர்கள் நாயகன் மார்களு
க்கும் ராவணனாலே நேரிட்ட உபத்திரவத்தை நிவர்த்திக்கு
ம் பொருட்டே யாதலால் அவர்கள் அக்காரணத்தை நினைப்பார்க
ளாயின் அவர்களைத் துக்கிக்க வேண்டாமென்று தடுத்தாலும்
கேட்கமாட்டார்கள். இந்த அரக்கிமார்களுக்கோ அப்படிப்பட்ட
ஆபத்து சம்பவிக்கவுமில்லை. அதனிமித்தம் ராமராவது சீதை
யாவது சகாயம் செய்யவுமில்லை. இப்படி ஒரேதுவும் இல்லாதி
ருக்கவும் இவர்கள் துக்கித்தது, வைதேகிதுக்கம் சகிக்க முடியா
மையினாலேயே யாதலால் அதிலும் இது உசிதமா மென்றதை
மெய்தானென, அதுகேட்டு அச்சபையி லிருந்தவர்கள் அசேஷ
மும் எம்பெருமாட்டியாகிய ஜானகியைக் கொல்லத் துணிந்த யம
ராட்சதிகளே அவளது துக்கங்கண்டு சகிக்காமல் உள்ளுருகி
அழுதார்களானால் அவளுடைய திருமேனி யெப்படிப் பதைத்
திருக்கவேண்டும். அவளெவ்வளவு கண் கலக்கங்கொண் டிருக்
கவேண்டும். எதைநினைத் திருக்கவேண்டும், என்னென்று
புலம்பி யிருக்கவேண்டுமென்று பலவாறு யெண்ணி அப்பிரா
ட்டி விஷயத்தில் விசேஷபக்தி சிரத்தை யுடையவர்களாதலால்,

தங்கள்மனம் குழைய முகம்வாட மெய்சோரக் கண்ணீர் ஆறாய்ப் பெருக்கத் தென்றல் முற்றிப் பெருங்காற்றானதுபோல அவர்களுக்குத் துக்கம்வரவர அதிகரிக்க அலறியழுதார்கள். அதறிந்துசடையப்பமுதலியார் இதேது மதுபித்து கலகமாய் முடிந்ததென்றார். கம்பர் விரைவாகக் கற்றுச்சொல்லியை மறுத்துபடலத்தை எடுத்து வாசிக்கச்சொல்லி, அனுமன் சஞ்சீவிகொண்டு வந்தானென்றும், அந்தவாடைபட்டு இறந்தவர் களெல்லாம் உயிர்பெற்றெழுந்தார்களென்றும் பிரசங்கித்தார். பிறகு அழுதவர்கள் அவ்வியசனமாறிச் சந்தோஷித்தார்கள்.

சோழராஜன் இவ்வதிசயம் குலசேகராழ்வார் இராமாயணகாலட்சேபம் செய்தவறாயிற்றென்று சொல்லி நகைத்தான் கஜபதியென்னும் அரசன் அதெவ்வாறென்று வினவ, கம்பர் பகவத்பக்தர்களாகிய பன்னிரண்டாழ்வார்களுக்குள் சேரர்பிரானாகிய குலசேகராழ்வாரென்பவர் ஸ்ரீமத்வால்மீகராமாயண காலட்சேபஞ்செய்துவருகையில், ஆரணியகாண்டத்தில் ராவணன் தங்கையாகிய சூர்ப்பநகிமூக்கறுப்புண்டு, ஜனஸ்தானத்திலிருந்த கரதூஷணதிரிசிரரிடத்திற்போய்முறையிட்டதுண்டு, அவர்கள் மகாஉக்கிரத்துடனே எண்ணிறந்த சேனைகளைக் கூட்டிக்கொண்டு படையெடுத்து வந்தசமயத்தில் சுவாமியானவர்தமக் கொருவரும் துணையின்றித் தனியே யமகிங்கரர்களுக்கொப்பாகிய அத்தனை அரக்கர்கள் மேலும் போர்க்குச் சென்றாரென்று சொல்லக்கேட்டு, ஆழ்வார் இராமசரித்திரத்தில் அதிகபிரேமையுள்ளவராகையால், வெகுகாலத்திற்கு முன்பு நடந்த அந்தச்சரித்திரம் அன்றுதான் நடக்கிறதாக நினைத்துத் தமது திருமேனி பதைபதைக்க இதென்னகொள்ளை, இளையபெருமாளாயினும் கூடப்போகவில்லையா? அவர் இராகவனைவிட்டு எங்கேபோனாரென, பௌராணிகர் கோதாவிரி தீரத்திற்பர்ணசாலையிலெழுந்தருளியிருக்கும் பிராட்டியாருக்குக் காவலாயிருக்கும்படி பெரியபெருமாள் நியமிக்க அந்நியமனப்படி அவரவ்விடத்திலிருந்து விட்டாரென, ஆழ்வார் ஆபத்காலத்திற் சக்கரவர்த்தி திருமகனுக்கு லட்சுமணரும் உதவிசெய்கிறதற்கில்லை, அன்றியும் வேறொருஉபபலமுமில்லை ரதமுதலிய வாகனங்களுமில்லாமற் பாதசாரியாய்ப் போயிருக்கிறார். அவ்விராக்கதர்களோ கொடியதுஷ்ட

ள் இப்படிப் பலவிதத்திலும் சங்கடமாயிருப்பதனால், கிளியைர் ளர்த்துப் பூனைவாயிற்கொடுப்பதுபோல, அந்தப் பாதகர்களிடத் ல் ரகுநாயகனை எப்படி காட்டிக்கொடுத்து விட்டிருக்கிறது. இந் நரம் அவர்களங்கே "அடித்ததாட்டம் பிடித்தது பெண்டாயிரு குமே" அத்தருணத்தில் நம்மாலே ஆன உதவியொன்றும் செய் ாமற்சும்மா பார்த்துக் கொண்டிருக்கலாமா, "அண்டை வீட்டுச் ண்டை கண்ணுக்குக் குளிர்ச்சி"யென்பதாக, நாம் உபேட்சை செய்வது தர்மமல்லவேயென்று அனுதபித்து உக்கிராகாரமாய் டனே தமதுசேனைகளை அவர்கள்மேற் படையெடுத்துப் போம் படி ஆக்கியாபித்து, ரதகஜதுரக பதாதிகளாகிய சதுரங்கபலமும் ஜனர்ஸ்தானத்தைநோக்கி முன்னேபோகதாம் போர்க் கோலங் கொண்டு பின்னேபோகயத்தனித்தார். அத்தருணத்தில், சுவாமி யானவர் நிர்ப்பயமாகப் பிரபலயுத்தம் செய்து சத்துருக்கள் அத் தனை பெயரையும் ஜெயித்து ஜெயசங்கம் முழங்கத் தேவர்கள் புஷ்பமாரி பொழியப் பர்ணசாலைக்கு மீண்டுவந்தாரென்ற சந்தர் ப்பத்தை எடுத்துப் பிரசங்கிக்கக் கேட்டு, ஆழ்வார் கோபாவேசம் தணிந்து தெற்குநோக்கிப் போனஸ்சேநாமங்களைத் திரும்பிவரும் படி நியமித்தாரென்று கூற, கஜபதி சோர்பிரானுக்கு அப்பொழு து பகவத்சங்கமத்திற்குப் பிரிவு சம்பவிக்குமே யென்னும் பயம் விளக்கத்தக்க பராபக்திதலையெடுத் திருக்கவேண்டும். அது அவ ருக்கும் "அன்புபெறுகைபரும்பே றெனக்கென்றான்" என்று முன்பு சொல்லப்பட்ட பிரகலாதனுக்குமன்றி மற்றாருக்குண்டெ ன்று மனம்நெகிழப் புளகாங்கமுற்றான்.

மாயாசீதைப்படலத்தில்,

"தாதைக்குஞ் சடாயுவான தந்தைக்கும் தம்பியான<br>
சீதைக்குங் கூற்றங்காட்டித் தீர்ந்தில தொருவன்றீமை<br>
பேதைப்பெண் பிறந்துபெற்ற தாயர்க்கும் பிழைப்பிலாத<br>
காதற் றம்பியர்க்கு மூர்க்குநாட்டிற்குங் காட்டிற்றன்றே"

என்ற பாடலைக் குறித்து, இந்திரஜித்து மாயாசீதையைதது ணித்தெறிந்துவிட்டு இதோநான் அயோத்திக்குப் போய்அங்குள் ளவர்களையும் அதம்பண்ணுகிறே னென்று சொல்லிப் போக்குக் காட்டி நிகும்பலைக்குப் போய்விட்ட தருணத்தில் ஸ்ரீராமர் அவன்

மெய்யாகவே அயோத்திக்குப்போனதாய்க்கேள்விப்பட்டு ஐயோ!
நான்வனத்திற் பிரவேசித்தபொழுது, ஒப்பற்ற மகாபாவியாகியஎன்
னைப்பிடித்தசனியானது பிரதமத்திலே என்னைநாட்டிலிருந்து கா
ட்டில் ஓட்டிவிட்டது ஆயினும் அதுபெரிதல்லவென்று நினைத்தி
ருந்தேன். உடனே அடியைமிதித்தாற்போல என்னைப்பெற்ற சாட்
சாத்பிதாவாகிய தசரதமகாராஜாவுக்கு முடிவையுண்டாக்கிற்று,
பின்பு தெய்வாதீனமாய் அந்தநிர்மாநுஷ்யமான காட்டில் எங்க
ளுக்குத் துணைவந்திருந்த மெய்யன்புடையபெரியபிதாவாகியஜடா
யுவுக்கு மரணத்தைவிளைத்தது. அதன்பின்பு நான்பிறந்தும் புகுந்
ததுமாகியபெரியகடல்போன்ற குடும்பத்தை என்பொருட்டுக்கை
விட்டு, ஆசைத்துறந்தாலும் புருஷனைத் துறக்கலாகாதென் றெண்
ணிநீயேகதியென் றுநம்பி என்னுடனேகூட வந்து என்சரீரசாயை
போலப் பிரியாதிருந்த என்பிராணநாயகியாகிய சீதைக்கு மிருத்
துவைக் கொண்டு வந்துவிட்டது. அந்தப்பாழுந்தசனியானது அம்
மட்டிலேயாவது தொலைந்து போமென்று பார்த்தால் அப்படியும்
தொலையாமல், ஒருவன்செய்தவினை அவன்தலைச் சுற்றிவேரை
யறுக்குமென்ற பழமொழிப்படி பேதைமைக்குணத்தையுடைய
பெண்ணாகப்பிறந்து அருமையாகிய தவஞ்செய்து என்னைப்பெற்ற
தாய்மார்களுக்கும், எனக்குப்பின்பிறந்த குற்றமற்ற வாத்சல்யமு
டையபரதசத்துருக்கனர்களாகிய என்தம்பிமார்களுக்கும், தாய்
போல என்னிடத்தில் அன்பு பாராட்டியஅயோத்திமகாஜனங்களு
க்கும் அவ்வயோத்தியைச் சூழ்ந்திருக்கும் கோசலதேசத்தில் உள்
ளபிரஜைகளுக்கும் நாசத்தைவருவித்ததேயென்றும், என்னைப்பெ
ற்றபிதாவாகிய தசரதமகாராஜா எளிதில் இறக்கிறவரா? கல்லால்
அடித்தாலும் அவருக்குச்சாவுவாராதே அப்படியிருந்தும் அவரை
என்பிரிவாற்றாமையல்லவோ மாய்த்தது. ஜடாயுவானவர் சீதைக்
காகப் பரிந்துபோய்எதிர்த்ததுபற்றிக் கோபம் மூண்டமையால்
அவரை இராவணன் கொன்றான். ஆகலால் இவ்விரண்டும் ஒருவா
றாகவாவது ஒப்புக்கொள்ளத் தக்கவையாயிருக்கின்றன. இந்திர
ஜித்து சீதையைக்கொன்றது ஏது நிமித்தந்தாற் பெண்பிள்ளையா
கிய அவள் ஆண்பிள்ளையாகிய அவனுக்கென்ன தீங்குசெய்தாள்.
அது ஒன்றுமில்லை அப்படியில்லாதிருந்தாலும், அவளைராவணன்
அபகரித்ததைமுன்னிட்டு நாங்கள் அவன்மேற் படையெடுத்துப்

ாராதி ராட்சதர்களில் அனேகரைமாய்த்ததாவது அதற்கு ஒரு நித்தமாகவைத்துக் கொள்ளப்படும் நிரபராதிகளாயும் இதுவிஷத்தில் எவ்வளவும் சம்பந்தப்படாதவர்களாயும் கண்காணுதசீமையிருக்கின்ற பரதேசத்துருக்கனர்கள் என்னபொல்லாங்கு செய்தார்கள். அவர்களையும், கபடமில்லாத தாய்மாரையும், யாதொன்றும் அறியாத ஊராரையும், நாட்டாரையும் சண்டாளன் கருவறுக்கப்போயிருக்கிறானே இதற்கு ஏதுவென்ன, நானொருவன் பிள்ளையாய்ப்பிறந்து செய்ததீமையேசகலமானவர்களும் அவதிப்படும்படி இந்தப்பிரமாதத்தை விளைத்ததென்றும் எண்ணுதலெல்லாம் தண்ணீர்ப்பிரலாபித்தாகப் பிரசங்கிக்கக்கேட்டு, காந்தாரதேசாதிபதி இயற்கையிலேயேயிருப்பு வெறுப்பு, சுகதுக்கம், பெருமைசிறுமை முதலாகிய பற்றொன்று மில்லாதநிமலஸ்வரூபமாகிய பரப்பிரமமே இவ்வாறு துக்கித்தால் துக்கசமுத்திரத்திலேயே மூழ்கியிருக்கின்ற பிரபஞ்சத்தாரைப்பற்றி என்னசொல்லுகிறதென்று ஆறுமைப் பட்டான்.

இந்திரஜித்து வதைப்படலத்தில், நிகும்பலையிலிருந்தவஞ்சகனாகிய இந்திரஜித்து இலக்குமணனால் மாண்டபொழுது, அவன்தலையை அங்கதன் தூக்கிவந்து சுவாமிதிருவடியின் கீழிட, அநுமன் முதலானவர்களுடனே இளையபெருமாள்வந்து அவரைச்சேவித்து நிற்கையில்.

„கற்பகதமாக் களியானைக் காவற்சனகன் பெற்றெடுத்த
கொம்பின்றென்பால்தந்து குறைவொன்றுமற்றுளிர்த்தென்
வம்புசெறிந்தமலர்க்கோயின் மறையோன் படைத்தமாநிலத்தில்
தம்பியுள்ளான் படைக்கஞ்சா னென்னுமாற்றந்தந்தனையால்"

என்றபாடலைக்குறித்து, சுவாமியானவர் யமகாதகனாகிய அவ்விந்திரஜித்தைச் சுமித்திரைபுத்திரன் கொன்றதைப்பற்றி அதிகசந்தோஷமடைந்து அவனைநோக்கித் தம்பிலட்சுமணா! கொடுவிஷம்போலும் பொல்லாதவனாகிய இந்திரஜித்து உயிரோடிருக்கிறவரையில் ராவணாதி ராட்சதர்களை நான்ஜெயிக்கிறதும், சீதையைச்சிறைமீட்டுகிறதும் சொப்பனத்தும் இல்லையசாத்தியமென்றே நினைத்து ஏங்கியிருந்தேன். அந்தப்பரமதுஷ்டனைமாய்த்து நீ செய்தசகாயத்தால் இனிராவணாதியர்கள் எனக்கொருவிஷயமேயல்ல. இந்தொடி.

யிலேயே அவர்கள் குலமுழுதும்பற்றற்றுப் போம்படி நிர்மூலப்படுத்திவிடுவேன் கம்பத்திற்கட்டப்பட்ட மதம்பொருந்திய செருக்கினையுடைய பெரிய பட்டவர்த்தன யானையை ஏறிநடாத்தும் புவனசம்ராட்சகனாகிய ஜனகமகாராஜன் தவஞ்செய்துபெற்றெடுத்த பூங்கொம்பு போன்ற அழகியமேனியையுடைய சீதையும் சிறைநீங்கி இன்றையத் தினமே என்பக்கலில் வந்துசேர்ந்தாளென்பதாக மனம்குளிர்ந்தேள இப்படிப்பட்ட பேருதவி உன்னையன்றி மற்றார் செய்வார்கள் பரிமளம்பொருந்திய பத்மாலயத்தில் வாசஞ்செய்கின்ற பிரமன் படைத்த இவ்வுலகத்தில் தம்பியுள்ளான் படைக்கஞ்சானென்று நெடுநாளாய் வழங்கிவரும் பழமொழியைக் கைகண்டவனாக எனக்கு அனுபவப் படும்படி செய்தாயே யென்று சொன்னதாய்ப் பிரசங்கித்தார்.

அதுகேட்டுக் கண்ணப்பமுதலியார் தமயனுக்குத் தம்பி உதவி செய்வது அதிசயமா? சகஜந்தானே. அப்படியிருக்க, சுவாமி இளையபெருமாளைக்குறித்து அவ்வளவாக வியந்துரைத்ததென்னவென்றுகேட்க, கம்பர்,

"நேசனைக் காணாவிடத்து நெஞ்சாரவே துதித்தல்
ஆசானை யெவ்விடத்து மப்படியே — வாச
மனையாளைப் பஞ்சணையின் மைந்தர்தமை நெஞ்சில்
வினையாளை வேலைமுடிவில்."

இச்செய்யுளில், வேறுபாடின்றிக் கலந்து சிநேகித்தவரை முகத்துக்கெதிரே புகழ்ந்து பேசினால், அவர்க்கது நமது நண்பன் தம்மைத்தன்னினின்றும் வேறுபிரித்ததாகத் தோன்றுமாதலால் அவரைக்காணாவிடத்தே மனதாரப்புகழவேண்டும். ஆசாரியன்களுக்குத் தெய்வமாதலால் அவன் முன்பின்னென்றும் விள்ளையில்லாமல் எவ்விடத்திலும் தான்கொண்ட குருபக்தி வெளிப்படும்படி நெஞ்சுருக ஸ்துதிசெய்யவேண்டும்? தன்னுடன் வசிக்கின்ற மனையாளிடத்திற் கணவன் சமயாசமயம்பாராமல் இஷ்டப்பாராட்டினால், அவள்தனக் கமைந்து நடவாளாதலால், தருணமறிந்து சயனஸ்தானத்தில் அவளைச் சந்தோஷிப்பிக்கவேண்டும் புத்திரர்களிடத்திற் பிதா அவர்களறியும்படி வெளிப்படையாக அன்புசெலுத்தினால் செருக்குற்று ஒழுக்கம் தவறுவாராதலால், அவர்களது கல்வி அறிவுமுதலியவற்றைக்குறித்து அவன்தனக்குள்ளேதானே மகிழ்ச்சி கூரவேண்டும் போர்த்தொழில் புரியும் வீரனை அல்லதுமற்ற

தொழில்செய்யும் வேலைக்காரனையஜமானன் எந்நேரமும் சிலாகித்துப்பேசினால் அவ்வாறுசிலாகித்துப் பேசப்பட்டவன் தன்னைத் தலைவன்சமர்த்தனென்று கொண்டாடுவதாக எண்ணிக் கர்விப்பானாதலால், 'அவனுககிட்டவேலையை முற்றமுடித்தபின்பு நீ நன்றாய்ச் செய்தாயென்று அவனைவியந்துசன்மானிக்கவேண்டும். இங்ஙனம் புரிவதனால் மேற்கூறிய சினேகனுக்கு வர வர, நட்பும், ஆசாரியனுக்குஅருளும், மனைவிக்கு அமைந்தநடக்கையும், புத்திரர்களுக்கு ஒழுக்கமும், வீரனுக்குஅல்லது ஏவல்செய்வோனுக்கு ஊக்கமும், அதிகரிக்குமென்றுசொல்லும்வண்ணம், போர்செய்யுமிடத்துப் படைவீரர்களுக்கு உற்சாகமுண்டாகும்படி அவர்களைப்புகழ்ந்துரைப்பது தலைவனது கடமையாதலால் அக்கடமையைச் செலுத்துதற் பொருட்டும், கிஷ்கிந்தாகாண்டத்தில், சுக்கிரீவன் வாலியைத்தமையனென்றுமதியாமல் வலிதிற்போர்க்கழைத்தது கண்டு இளையபெருமாள் சகியாமற் பெரியரர் சிறியாரென்னும் தாரதம்மியப்பாராமற் சுக்கிரீவன் அதிக்கிரமிக்கிறானே இதென்ன அநியாயமென்றுசுவாமியிடத்தில் முறையிட்டபொழுது,

"அத்தாவிதுகே ளனைவாரியன் கூறுவானிப்
பித்தாயவிலங்கி னொழுக்கினைப் பேசலாமோ
எத்தாயர்வயிற்றினும் பின்பிறந்தார்க ளெல்லாம்
ஒத்தாற்பரதன்பெரி துத்தமனாவனன்றோ."

என்றசெய்யுளில், சுவாமியானவர் லட்சுமணனைநோக்கி அப்பா! இந்தப் பித்துற்ற மிருகங்களின் நடக்கையைக்குறித்து ஒரு பொருளாக மதித்துப்பேசலாமா? இதுநிற்க. முற்காலத்தில் நடந்த ஒருசெய்திகேள். சுந்தோப சுந்தரர்க ளென்ற அசுரேந்திரர் ஒரு தாய்வயிற்றிற் பிறந்தவர்களா யிருந்தும், அவர்களுக்குள் அந்நியோந்நியமென்பது எவ்வளவுமின்றிப் பகைத்துச் சரீரத்துடன்பிறந்துகொல்லுகின்றவியாதிபோல்,ஒருவரையொருவர்வியர்த்தமாக மடித்துமாண்டுபோனார்கள்,உலகத்தில்எந்தத்தாய்வயிற்றிலும்பின் பிறந்தவர்க ளெல்லாம் வரன்முறைபிசகாமல் முன்பிறந்தவர்களுடைய மனதுக்கு ஒத்துநடந்தால், நம்முடைய பரதன்தமயன்சொற்கவாது நடக்கின்ற உத்தமனெனப்பெயர் பெறுவானென்று அருளிச்செய்தபடி, இவ்விடத்திலும தமயன் நிமயன் நியமனைப்பி

நகாரம் நடப்பவர்கள் பெறும் ஏற்றத்தை வெளிப்படையாலும் ந டவாதவர்கள் அடையும்தாழ்வை அர்த்தாபத்தியாலும் வெளியிடு தற்பொருட்டுமே இவ்வாறுகூறியதென்றார் அப்பொழுது அச்ச பையிலிருந்தவர்கள் இவ்வரன்முறை கடவாமைக்குத் திருஷ்டாந் தம் மேற்படி கண்ணப்பமுதலியாரிடத்திலும் அவர் தமயனாராகிய சடையப்பமுதலியாரிடத்திலும் தம்பியாகிய சராமமுதலியாரிடத் திலும் கண்டோமென்று அவர்களுக்குள்ள சகோதர வாற்சல்யத் தைக் குறித்து அதிசயித்துச் சந்தோஷித்தார்கள்.

களங்காண் படலத்தில், அலங்கையின்மேலைக்கோட்டைவாச லில் இராவணன்வந்து இளையபெருமாளுடனே போராடி அபஜயப் பட்டகாலத்தில் இத்தனைசங்கடமும் இவனாலல்லவாநேரிட்டதென் று மனமெரிந்து விபீஷணர்மேல் ஒருசக்தியைப் பிரயோகிக்க, சுக் கிரீவமகாராஜா அதைத் தம்மார்பில் ஏற்றுக்கொள்ளும்படி அதற் கெதிரேபோய்நிற்க அதுகண்டு அங்கதன் பிதாவுக்கு அபாயம்வர ப்பார்ப்பது புத்திரனுக்கு அழகோ சத்தியத்திற்கில்லாத பிள்ளை து க்கப்பட்டமு இருக்கிறதாவென்று அதைத் தன்மார்பில்ஏற்கப்போ க அவனைவிளக்கி ஆஞ்சநேயர் அரசரைக்காட்டிக்கொடுப்பது அ மைச்சனுக்குத் தர்மமல்லவேயென்று தம்மார்பில் ஏற்கப்போக இ ந்தப்படி படைத்தலைவர்களும் ஒருவர்பின் ஒருவராக அதை ஏற்க ப்போனதை அறிந்து நீங்கள் ஆரும் இறக்கவேண்டுவதேயில்லை அ தை நான் கண்டிக்கிறேன் விலகியிருங்களென்றுஉபாயமாகச் சொ ல்லி அனைவரையும் தடுத்துக் கடைசியில் அதை இலக்குவன் தன் மார்பில் ஏற்றுக்கொண்டு இறந்து அனுமான் உதவியால் உயிர்பெற் றெழுந்து அனைவருடனும் சுவாமியிடத்தில்வந்து அவரைச்சேவித் து நிற்கையில் விபீஷணாழ்வான் சுவாமிக்கு அஞ்சலிசெய்து வை தேகிமணாளா? இராவணன் அடியேன்மேல் ஒரு சக்தியை விட்டெ றிந்தான். அதுதப்பாமல் உயிரை மாய்க்குமென்பதை அறிந்து அ த்தருணத்தில் இளையபெருமாள் அதைத் தம்மார்பில் ஏற்றுக்கொ ண்டு பிராணனைக் கொடுத்தாரென்று விண்ணப்பம் செய்தார்.

அப்பொழுது,

"புறவொன்றின்பொருட்டரல்யாக்கைபுண்ணுறவரிந்தபுத்தேள் அறவனு நின்னையைய நிகர்க்கிலனப்பாநின்ற

பிறவினி யுரைப்பதென்னே பேரருளாளரென்பார்
கறவையுங் கன்றும்போல்வார் தமர்க்கிடர்காண்பாராயின்."

என்றபாடலைக்குறித்து சுவாமியானவர் இளையபெருமாள்மேல் சந்தோஷப்பட்டு அப்பா சுமித்திரை புத்திரா? துஷ்டாத்மனாகிய ராவணனால் நம்மைச் சேர்ந்தவர்களுக்கு இப்படிப்பட்ட ஆபத்தும் ம்பவித்ததா அத்தருணத்தில் நீசெய்தது நல்லசகாயந்தான் அற்ப ஜெந்துவாகிய ஒரு புறாவினிமித்தம் தமது சரீரத்தைப் புண்படும்படி சித்திரவதையாகச் சின்னபின்னமாய் அறிந்த தெய்வத்தன்மை பொருந்திய சர்வாத்மாவாகிய நமது பாட்டனார் சிபிச்சக்கரவர்த்தியும் உனக்கு நிகராகமாட்டாரென்றால், இனிஅப்பாவிருக்கின்றமற்றவைகளைக்குறித்துச் சொல்லவேண்டியதென்ன. ஆயினும் பரமகிருபாநிதிகளாயிருக்கின்றவர்கள், தஞ்சுற்றத்தார்க்கு யாதேனும் ஆபத்சம்பவிக்கக் காண்பாராயின் நமக்கென்னவென்று உபேட்சையா யிருப்பார்களா, ஒரு துஷ்டமிருகத்தாற் தன் கன்றுக்குத் துன்பம் நேரிடக் கண்டவிடத்து அதனை ஈன்றதாய்ப் பசுவானது தன்னுயிர்க்கு அபாயம் வருமென்பதையும் பாராமல் அக்கணமே அம்மிருகத்தின் மேல்விழுந்து பாய்ந்து தன்கன்றைப் பாதுகாக்காமலிருக்குமா, அப்படிப்பட்ட பசுவுங்கன்றும்போல, அவர்கள் தாங்கள் பிராணசேதப் படுவதையும் நினையாமல் அவ்வாப்தர்களுடைய உபத்திரவத்தைஎவ்விதத்திலும் நிவர்த்திப்பார்களல்லவோ? அதை யோசிக்குமிடத்தில் நீ செய்தது சகஜந்தான், மேலும் இது நமது வம்சத்தார்க்குச் சுபாவதர்மமே யல்லது அதிசயமல்ல வென்று அருளிச் செய்ததாகக்கம்பர் பிரசங்கித்தா.

அதைக்கேட்ட அசுபதியென்னும் அரசன் சிபிச்சக்கரவர்த்தி புறவினிமித்தம் சரீரத்தைஅரிந்தசரித்திரம் சொல்லவேண்டுமென, கம்பர், பூர்வம் காட்டிலிருந்த புறவொன்று சிபிச்சக்கரவர்த்தியைச் சரணமடைந்தது அதற்கு அவர் அஞ்சேலென்று அபயப்பிரதானம் பண்ணினார். உடனே அதைஎய்தவேடன்தொடர்ந்துவந்து ஐயா? உம்மிடத்தில் அடைந்தபதுங்கியபுறாவைத்தூத்திவிடுமென்ன,அவர் இதுஎனனைச்சரணமடைந்ததுபற்றி இதைநானுன்கையிற் காட்டிக்கொடுக்கக்கூடாதென்ன அவன்நீர்உலகாள்பவராகையால்

யாவரையும் பொதுவாக வல்லவோ நோக்கவேண்டும். அதைவிட்டு ஒருவரை இடுக்கிக்கொண்டு ஒருவரை நடத்திக்கொண்டு போவது போல, புறவை ஆதாரணை பண்ணிப் பசியால்வருந்தும் என்னை மாத்திரம் அநாதரணைபண்ணுவது நீதியோவென்ன, வேந்தன்நான் உன்னை அநாதரணைபண்ணினதாக எண்ணவேண்டாம். பசிக்குச் சாகமூலாதிகளில் எதையாவது புசித்தாலும் அது தணிந்துபோகிறது பறவைமாமிசம் வேண்டுமென்பதென்னவென, வேடன்நாங்கள்சாகமூலபலாதிகளைத் தின்றால் எங்கள் சரீரத்திற்குப் பலஞ்செய்யமாட்டா. மாமிசமே எங்களுக்கு முக்கிய ஆகாரமாயிருக்கிறதாகையால் எங்கள் சாதிசுபாவப்படி நான்உணவுக்காக எய்தபுறவை என்கையிலே கொடுத்து விடவேண்டுமென்ன. சக்கரவர்த்தி அப்படியானால் என்னால் அபயப் பிரதானம் பண்ணப்பட்டு என்னிடைக் கலத்திலிருக்கின்ற இதைநீ விட்டு வேறெதையாகிலும் எய்து பிடித்துக்கொண்டுபோவென்ன வேடன் வில்லும் அம்பும் என்கையிற்காணும்பொழுதே வனத்திலிருக்கிறபசுபட்சிமிருகங்களெல்லாம் பயந்துகாததூரத்தில் தலைகாட்டாமல்ஓடி யொளிக்குமேயல்லாமல் எளிதில்அகப்படுவனவல்லவேயென்றான், அரசன் அப்படியானால் இதற்குஈடாக ஆடு கோழிகள்வேண்டுமென்றாலும், திரவியமாவதுராச்சியமாவது வேண்டுமென்றாலும் தருகிறேனென்றுசொல்லவேடன்மண்டலாதிபதியாயிருக்கிற இவர் தமது ராஜாதிகாரத்தைக்கொண்டுநம்மை அச்சுறுத்திஓட்டிவிடாமல். இவ்வளவு சாந்தத்தோடே நமக்குப்பிரியவசனஞ்சொல்லுகிறார இவர் சொற்படியே நாம்கேட்போமென்று அவருக்கு இணங்கி உத்தரம்சொல்லாமல், காட்டிலே உழல்கிறவேடச்சாதிக்கு ராச்சியமேன், திரவியமென்? நான்எய்துகாயம்பட்டிருக்கிற பறவையை எனக்குக்கொடுக்கிறதற்குவழக்கென்ன இதுதானா உமது ராசதர்மமென்றான். அரசன் அடைக்கலமாகவந்தவர்களை ஆதரியாமற்கைவிடுவதுதோஷமாகையால்இது ஒன்று தவிர வேறெதைக்கேட்டாலும் கொடுக்கத்தடையில்லையென்னவசனரன் வெந்தகறியைத் தின்று விதிவந்தால் சாகிற எங்களுக்குவேறென்ன வேண்டியதென்ன, கோமான் ஆடுகோழிமுதலானவைகளும் வேண்டாமென்கிறையே பின்னைஎன்னதான்உனக்குவேண்டியதென்றுகேட்க, கிராதன்நீர்அற்பசெந்துவாகிய ஒரு புறவியின்மேல் இவ்வளவு ஜீவகாருணியமுடையவராயிருப்பதனால்

உமது சரீரத்தில் இந்தக்கபோதத்தின் இடையளவுக்குச்சரியாகமாமிசம் அரிந்து கொடுத்தால் சம்மதிப்பேனென்ன, வேந்தன் அப்படியே அரிந்தெடுத்துக் கொள்ளென்று யுடைவாளை யுருவி அவன் கையிற் கொடுக்கவேடன் நீரே அரிந்துகொடுமென்றான்.

அப்பொழுது சக்கரவர்த்தி எவனாகிலும் தன் சரீரத்தைத்தானே அறுக்கப் பொறுக்குமா வென்றும் அருமையாகப்போற்றிப் புனைந்த உடம்பைக் கூசாமல் அறுப்பது எப்படியென்றும் யோசியாமல் வலது தொடையின் தசையை அரிந்தெடுத்துத் துலைநாட்டி ஒருதட்டிற் புறாவையும் மறுதட்டில் அத்தசையையும் அரிந்து தூக்கிப்பார்க்கக் குறைந்ததனால் மறுதொடைத்தசையையும் அரிந்துவைக்க அப்படியும் ஒவ்வாததனால், பின்பு இருதோளின் தசையையும் கொய்துவைக்க அதுவும் சரிப்படாமையால் அப்புறம கண்டமுதலாக உடல் முழுதும் புண்ணாகி உதிரம் பெருகியோடக்கூறு கூறாகச்சேதித்துவைத்தும்புறவின் தட்டு எழும்பாததுகண்டு பிறகு தாமே அத்துலை மீதேறினார் அவர் ஏறவே புறவிடை குறையத் தசையிடை அதிகப்பட்டது வேடன்வீணாசைப் படுவானேன் அதிகம் எனக்குவேண்டாமென்று மறுக்க, ராஜா துலையைவிட்டிறங்கி மறுபடி தசையை மாத்திரம் தூக்கிப் பார்க்க, அதுவும் அதிகப்பட்டிருக்க, வைத்த தசைகளையெல்லாம் எடுத்தெடுத்துச் சும்மாவைத்துவிட்டுக் கடைசியில் அரைச்சேருக்கும் குறைவான தசையைப்புறவின் இடைக்குச்சரிவர நிறுத்துக்கொடுத்து, மீந்த ஒருபெரியகூடைகொண்ட தசையைப்பார்த்து அவ்வளவுதசையும் உபயோகப்படாமற்போகிறதேயென்றும், அருமைத்திருமேனி அநியாயமாக அறுபட்டுப்போயிற்றேயென்றும் இறையளவும் நினையாமல் இத்தனையும் தெய்வச்செயலேயென்று நினைத்தார் அத்தருணத்தில் இந்திரனும் அக்கினியும் அவருக்குப் பிரசன்னமாகிச் சிவகாருணியமுடைய உனது ஈகையையாவருக்கும்வெளியிடுதற்பொருட்டு இந்திராக்கினியளாகிய நாங்களிருவரும் வேடனும்புறவுமாகிவந்து உன்னைச் சோதித்தோம் உன்னிடத்தில் அதுமாத்திரமன்று சாந்தம் நீதிதர்மசிந்தை முதலானவைகளும் நிலைபெற்றிருக்கின்றமைபற்றி எங்களுக்கு அதிகசந்தோஷமாயிற்றென்று வியந்து அனேக வரங்களை அருளிச்செய்துபோனார்களென்றார். அசுவபதி முதலானவர்கள் அதிக சந்தோஷப்பட்டார்கள்.

இராவணன் வதைப்படலத்தில் ஸ்ரீராகவனைக் கொல்லும்படி தசக்கிரீவன் விட்டெறிந்த அதிகிரமாகிய சூலத்தைக்கண்டுதேவர்கள் முனிவர்களெல்லாம் இது தசரதாத்மஜனை எவ்விதத்திலும்நாசஞ்செய்யும் இனிச் சீதாபதியைக்கண்ணிலே காணப்போகிறமேதயில்லையென்று அலறியழாநிற்க, அதைத்தடுக்கும்படிராமபத்திரன்பிரயோகித்த எவ்வகை அஸ்திர சஸ்திரங்களையும்பெதித்துக்கொண்டு அது சமீபித்தமாத்திரத்தில் அதை அவன் அதட்டி உங்காரத்தாற் பொடிப்பொடியாய்ப் போம்படி செய்தபொழுது,

> " சிவனோவல்லனான்முகனல்லன் றிருமாலாம்
> அவனோவல்லன் மெய்வரமெல்லா மடுகின்றான்
> தவனோவென்னிற் செய்துமுடிக்குந் தரமல்லன்
> இவனோதானவ் வேதமுதற்கா ரணமானான்."

என்ற பாடலைக்குறித்து, இராவணன் இதென்ன ஆச்சரியம்? இந்த ராமன், நாம் நமது பத்துத் தலைகளையும் இருபது கைகளையுங்கொய்து அக்கினியில் விறகாக இட்டெரித்துநெய்யாகச்சொரிந்து அதிகோரமான அரியதவம் செய்து பிரமருத்திராதியர்களாலே பெற்றவையாகிய அழியாத வரங்களை யெல்லாப்பொருள்செய்யாமல் எளிதில் அழிக்கின்றான் எப்படிப்பட்ட ஆயுதங்களையும் நொடிக்குள்ளே தும்சஞ்செய்கின்றான். இவ்விதத்தால் இவனைச் சங்காரகர்த்தாவாகிய சாட்சாத்பரமசிவனென்று நினைப்போமென்றால் அவனுமல்லன், சிருஷ்டிகர்த்தாவாகிய பிரமனென்று நிச்சயிப்போமென்றால் அவனுமல்லன், ரட்சகர்த்தாவாகிய ஸ்ரீமகாவிஷ்ணுவென்று மதிப்போமென்றால் அவனுமல்லன், வனத்தில் தவஞ்செய்பவனென்றெண்ணுவோமென்றால், தவசியானவன் இப்படிப்பட்ட செய்தற்கரிய செயல்களையெல்லாஞ்செய்து முடிக்கத்தக்கதரமுடையவனாகின்றான் ஆதலால் அவனுமல்லன். ஆராய்ந்து பார்க்குமிடத்தில் நமது அக்கிரமம் சகிக்காமல் சர்வத்திற்கும் முதற்காரண மென்று வேத புருஷனால் நிருணயித்துச் சொல்லப்பட்ட அந்தப் பரமபுருஷன் தான் இந்த உருவெடுத்து வந்தானென்று நிச்சயித்ததாகக் கம்பர் பிரசங்கித்தார்.

குலோத்துங்க சோழனுடைய மந்திரியானவர் இராகவனைத் திருமூர்த்திகளில் ஒருவருமல்லனென்று ராவணன் என்னகாரணத்தாற் பூர்வபட்சம்பண்ணிக் கழித்தானென்று கேட்க, கம்பர்சிவனாயிருந்தால் மான், மழு, சதுர்புஜம், காளகண்டம், திரிநேத்திரம் இருக்கவேண்டுமே அவை இல்லாமையாலும். அன்றியும் ஈசன் தான் கொடுத்த வரத்தைத் தானே அழிக்கமாட்டானாகையாலும் பிரமனானால் நான்குமுகமும் எட்டுக் கண்களும் தண்டகமண்டலங்களும் இருக்கவேண்டு மாகையாலும், மேலும் அவன்தனக்குப் பாட்டனும் புரோகிதனுமாயிருப்பதனால் விரோதஞ்செய்யானாகையாலும், விஷ்ணுவெனிற் சங்குசக்கர கட்ககோதண்டகதாயுதங்களைக்கையில் ஏந்தி வரவேண்டுமல்லவோ அவை இல்லையே ஆகையாலும் அவர்களெல்லாம் அல்லனென்று நிருணயித்தானென்றார்.

மேற்படி படலத்தில், தசக்கிரீவன் மடிந்ததுகண்டு விபீஷணர் துக்கிக்கின்ற சமயத்தில்,

" போர்மகளைக் கலைமகளைப் புகழ்மகளைத் தழுவியவர்பொருமைகூரச், சீர்மகளைத் திருமகளைத் தேவர்க்குந் தம்மோயைத்தெய்வக்கற்பின், பேர்மகளைத் தழுவவொனாவுயிர் கொடுத்துப் பழிகொண்டழித்தாயின்னைப் பார்மகளைத் தழுவினையோ திசையானைக் கோடுழுத்தபரிதிமார்பால், ,,

என்றபாடலைக்குறித்து, பகைவரோடு எதிர்த்துப், போர்செய்து வென்று முற்காலத்திற் பெற்ற வெற்றியாகிய பெண்ணையும், எண்ணிறந்த சாஸ்திரங்களைக் கற்றுப் பெற்ற கல்வியாகிய பெண்ணையும் வீரம் செல்வமுதலானவைகள் காரணமாகப் பெற்ற கீர்த்தியாகியபெண்ணையும் நெடுங்காலமாகப் புணர்ந்துசுகமனுபவித்து, அவர்கள் நமது நாயகன் இப்பொழுது காமாதுரனாகிநெறிதவறிப் பரஸ்திரீகமனம் பண்ணத் தலைப்பட்டானென்று மனதில் அஸூயைகொண்டு பிணங்கும்படி பின்பு, சிறப்புக்கெல்லாம் உற்பத்திஸ்தானமாயிருப்பவளை. ஸ்ரீமகாலட்சுமியின் அமிசமானவளை, பிரமாதிதேவர்களுக்கும் பெற்றதாயாய்விளங்குகின்றவளை. தெய்வீகமாகியகற்பானது உருக்கொண்டுவந்த மகாபதிவிரதையென்னுஞ்சீதையைத்தழுவும் பொருட்டுத்துராசைகொண்டுபெறுதற்கருமையான

உயிரைக்கொடுத்துப் பிரதிபலனாக எக்காலத்தும் நீங்காத பெரும் ழியைத் தேடிக்கொண்ட மதிமயக்கமுடையவனாகிய ராவணா! நீராம பாணத்திற்கு இலக்காகித் தலைவேறு உடல்வேறுபட்டு விழுந்து, திக்கஜங்களின் கொம்புகள் ஒடிந்து பதிந்து சூரியனைப்போலப்பிர காசிக்கின்ற உன்மார்பினாற் பூமியாகிய பெண்ணைத்தழுவிக்கொண் டு கிடக்கின்றையோவென்று பிரலாபித்ததாகப் பிரசங்கித்தார்.

அதுகேட்டுச் சடையப்பமுதலியாருடைய தம்பி சராராமுத லியார் கம்பரைநோக்கி, ராவணன் மார்பில்யானைக்கொம்புகள்பதிந் திருப்பது வாஸ்தவமே, அம்மார்பு சூரியனைப்போலப் பிரகாசிக் கின்றதென்றது என்ன விதத்தாலென. கம்பர் இராவணன் அஷ்ட திக்கஜங்களுடனே யுத்தம்செய்த காலத்தில் ஐராவத முதலாகிய அவ் வெட்டியானைகளும் அவனை முட்டிக்கொம்புகளால் மார்பிலே குத்த, அவைகள் ஊடுருவி முறிந்து மேடும் பள்ளமுமா யிருந்தது கண்டு, அதை அவன் மயனென்னும் தெய்வத்தச்சனுக்குக் காட்டி இதைப் பிடுங்கி எறிந்துவிடுகிறையாவென, மயன்பிடுங்க வேண்டு வதில்லை வாள்கொண்டு அறுத்து, அரத்தினால் அராவி, ஒப்பமாக இழைத்து மேலே விலையுயர்ந்த மாணிக்கக்கற்களை அழகாகப்பதித் தால் அது ஒரு விசித்திரமான மகாமணிப் பதக்கம் தரித்ததுபோ லிருக்குமென்று சொல்லி அப்படியே செய்தான். அது சூரியனைப் போல ஜொலிப்பதுபற்றி அங்ஙனம் சொல்லப்பட்டதென்றார்.

மீட்சிப்படலத்தில்,

" அஞ்சின னஞ்சின னையு வஞ்சினேன்
பஞ்சினின் மெல்லடிப் பதுமத் தாடன்மேல்
விஞ்சிய கோபத்தால் விளையுமீ தெலாம்
தஞ்சமோ மறைமுதற் றலைவனே யென்றான்.,,

என்றும்,

" பெய்யுமே மழைபுவி விளப்ப நன்றியோ
செய்யுமே பொறையற நெறியிற் சொல்லுமே
உய்யுமே யுலகிவளுணர்வு சீறினால்
வைகுமே மலர்மிசை யயனுமாளுமே.,,

என்றும் சொல்லப்பட்டபாடல்களைக்குறித்து, பிராட்டியான அக்கினிப் பிரவேசம் பண்ணின பொழுது அவளுடைய கற்பென,

னும் நெருப்புத்தன்னைச்சுடத்தான் வெந்து நொந்தமையால், அவ்வக்கினிவந்து ஸ்ரீராகவனைநோக்கி, வேதத்தின்முதற்றலைவனாகியராமசந்திரா! நான்பயந்தேன்பயந்தேன். செம்பஞ்சுக்குழம் பூட்டிய மிருதுவான பாதத்தாமரையையுடைய இந்தச் சீதையைத் தொடுவதற்காகமிகவும் பயந்தேன், கற்புக்கரசியாகிய இவள்மேல் உனக்கு உண்டாகியகடுங்கோபத்தினால் விளைந்த இவ்விளைவுகளெல்லாம் எளிமையானவைகளோ, இவள்மனம் நொந்து சீற்றம் செய்வாளானால் உலகமெல்லாம் நிர்மூலமாய் விடுமேயல்லாமல் மழைபெய்யுமா, பூமி பிளந்துபோமேயல்லாமல் தன்னிடத்திலுள்ள அகில சராசரங்களையும் தாங்கிநிற்குமா, பாவம் தலையெடுத்து நிற்குமேயல்லாமல் தர்மமானது நெறிதவறாமற் செல்லுமா, பெரியோர்கள் தத்தம் உயிர்நிலைகெட்டுப் போவார்களே யல்லாமற் பிழைத்திருப்பார்களா, மூலதாரையில் வசிக்கின்ற பிரமனும் தன் படைப்புத் தொழிலுடனேமாண்டுபோவனே யல்லாமல் உயிர்பெற்றிருப்பானா, சகலமும் அடியோடே நாசமாய்ப் போய்விடாதா இதென்ன விபரீதமென்றும், மற்றும் பலவாறாகவும் முறையிடுகையில்.

"தோற்றமென்பதுதா னுனக்கில்லை நின்கணே தோற்றும்
ஆற்றல்சான்முதற் பகுதியிற்றத னாமப்பால்
காற்றைமுன்னுடைப் பூதங்களனைத்துசென்று கடைக்கால்
விற்றுவிற்றுற்று விடுநீ யென்றும் விளியாய்.,,

என்ற பாடலைக்குறித்து, பிரமனுனவன் சுவாமிக்குமுன்னே வெளிப்பட்டுவந்து விஜயகோதண்டபாணியாகியராகவ! கேவலம் சஞ்சித ஆகாமிய பிராரப்த கர்மவசத்தனாய்ப் பலகாலும் பிறந்து பிறந்து உழலுகின்றமானிடசமுசாரியைப்போல உன்னைநிமித்துப் பிரமிக்கின்றனரே, உனக்கு எக்காலத்திலும் உற்பத்தியென்பதே இல்லையே. சகலமும் உன்னிடத்திலே தோன்ற தானொன்றிலும் தோன்றாத மகாமகிமையையுற்ற மூலப்பிரகிருதியானது, செம்பிற் களிம்புபோல அநாதியேயுன்னிடத்தில்தோன்றிநிற்கின்றது. பின்பு அம்மூலப் பிரகிருதியிலிருந்து மகத்தத்துவம் தோன்றுகின்றது, மகத்தத்துவத்திலிருந்து அகங்காரதத்துவம்தோன்றுகின்றது, அதிலிருந்து சூக்ஷுமபூதமாகியபஞ்சதன்மாத்திரைதோன்றுகின்றது, அதி

விருந்து ஸ்தூலபஞ்சபூதங்கள் தோன்றிப் பஞ்சீகரணப்பட்டு [illegible] பஞ்சத்தோற்றம் உண்டாகின்றது, காலமுடிவில் அனைத்தும் [illegible] றியவண்ணமே ஒடுங்கிமாய்ந்துபோகின்றன. இவை இவ்வாறு [illegible] கோசவிகாசப்பட்டு மாய்ந்துபோயும் நீ மாத்திரம் எக்காலமும்மா யாதிருக்கின்றா யென்றும்.

"உனக்கு மெண்வகை யொருவற்கு மிமையவர்க்கிறைவன்
தனக்கும்பல்பெரு முனிவர்க்கு முயிருடன் றழீஇய
அனைத்தினுக்குநீயே பரமென்பதை யறிந்தார்
வினைத்தொடக்குடை விட்டருந்தனோ நின்றுபீட்டார்."

என்பதைக்குறித்து, கர்மபந்தத்தைக்கழித்துத் தாரபுத்திரா திரஷணத்திரயமாகிய தளையினை யறுத்து நீக்கிய சான்றோர், எவைக்கும், பார் நீர், தீ, வளி, வான், சூரியன், இந்து, இயமானனென்னும் அஷ்டமூர்த்தமாய் விளங்கிய சிவனுக்கும், தேவர்களுக்கிறைவனாகிய மகபதிக்கும், ராஜரிஷிகள் தேவரிஷிகள்பிரமரிஷிகளாகிய பெருமைபொருந்திய பலவகைரிஷிகளுக்கும், உயிரோடுகூடியமற்ற எல்லாவற்றிற்கும் நீயே பரத்துவ மென்பதாகச் சுருதி ஸ்மிருதி இதிகாசபுராண முதலானவைகளும் சொல்வதை அனுபவமாக அறிந்திருக்கிறார்களே. அப்படியிருக்க, இப்படிமயங்கவேண்டியது என்னவென்றும், மற்றும் அனேகவிதமாகவும் சொல்லி ஸ்துதி செய்கையில்.

"அறக்குந்தன்மை யளல்லாற்றொல்லையெவ்வுலகும்
பிறக்கும்பொன்வயிற் றன்னையிப்பெய்வனோ பிறைக்கில்
இறக்கும்பல்லுயி ரிராமனியிவடிறந் திகழ்ச்சி
மறக்குந்தன்மைய வென்றனன் வரதற்கு வரதன்."

என்ற பாடலைக்குறித்து, மேலானவர்களுக்கெல்லாம் மேலானவனாகிய பார்வதிபாகன் வந்து சுவாமியைநோக்கி ஐயா ரகுநாயகா, உன்னை ஆரென்று நினைத்திருக்கின்றாய்! நீ ஆதிமூர்த்தியாகிய ஸ்ரீமந்நாராயணனே, இந்தச் சனகராஜ குமாரியானவளோ உன்மணிமார்பில் வீற்றிருக்கின்ற பெரியபிராட்டியாகிய ஸ்ரீமகாலட்சுமியே யாதலால் புராதனமாகிய எவ்வகைப்பட்ட உலகங்களும் கருவுற்று உற்பவிக்கின்ற அழகிய திருவயிற்றையுடைய தாயாகிய

இச்சீதையானவள் உன்னைப் பிரிந்திருக்குந் தன்மையுடையாளல்லள். புருஷகாரியாகிய இவள் உன்னைவிட்டு நீங்குவாளானுற் பலவகைச் சிவகோடிகளும் மாண்டுபோம் உனக்குஸ்ரீநிவாசனென்னும் பெயரும் மாறிப்போம். மறுவற்ற மகோத்தமியாகிய இவள் விஷயத்தில் ஓரணுவளவேனுங் குற்றமென்பதை பாராட்டாமல் மறந்துவிடவேணு மென்று வேண்டிக்கொண்டதாகக் கம்பர் பிரசங்கித்தபோது, பாண்டியன் சர்வஞ்ஞனவனுக்குப் பிராட்டியின் குணுதிசயம் தெரியாதா, ஆஞ்சநேயர் தூதுபோய்வந்து சொல்லக்கேட்டதுதான் ஞாபகமில்லையா, இப்படிச் சந்தேகிக்க வேண்டியது என்னவென்று கேட்க, கம்பர்ஸ்ரீராகவன் வனப்பிரவேசம் பண்ணினபொழுது தசரதன், கைகேசியல்லவோ இதற்குக் காரணமாயிருந்தாள் ஆதலால் அவள் என்மனைவியுமல்லள். அவள் வயிற்றிற்பிறந்த பரதன் என் புத்திரனுமல்லனென்று வெறுத்துரைத்தது பற்றி அவர் வரவேண்டு மென்றும் அவர் வாக்கினுல் அவர்கள் மனைவியும் மைந்தனுமேயென்று சொல்லும்படி வரம் பெற வேண்டுமென்றும் கருதி, "அவலை நினைத்துக்கொண்டு உரலையிடிப்பதுபோல,, இவ்வாறுநடித்ததன்றி வேறல்லவென்றார். பாண்டியன் முதலானவர்கள் எம்பெருமான் கபடநாடகசூத்திரதாரியென்பது சத்தியமே யென்று ஆனந்தித்தார்கள்.

சுவாமி பிராட்டியாருடனே இலங்கையிலிருந்து புஷ்பகமேறித்திருவயோத்தியை நோக்கிப் பிரயாசப்பட்டுத்பாரத்துவாசருடைய ஆச்சிரமத்தில் வந்திருந்து, பரதனுக்குச் செய்தி தெரிவிக்கும்படி அனுப்பிய ஆஞ்சநேயர், அக்கினிகுண்டத்தில் விழுயத்தனித்த பரதாழ்வானைக்கண்டு ஸ்ரீராமன் வந்தானென்று சொல்லிக் கணையாழியைக் கொடுத்தபொழுது,

"வேதியர் தமைத்தொழுது வேந்தரைத் தொழும்
காதியர் தமைத்தொழுந் தன்னையே தொழும்
ஏதுமொன் றறிகிலானிருக்கு நிற்குமால்
காதலென் றீதுமோர் கள்ளின் றேற்றமே.,,

என்ற பாடலைக்குறித்து, தமயன்வந்தசந்தோஷப் பெருக்கினுற்பரதன் அங்கிருந்தபிராமணேத்தமர்களைப் பார்த்து,சுவாமிகளே! உங்கள்ஆசீர்வாதபலத்தினுல்எங்கள்தமயன்க்ஷேமமாய்வந்தா

னென்று சொல்லி அவர்களுக்குத் தண்டன் சமர்ப்பிப்பான். தன்னைவணங்குவதற்குரிய அரசர்களைநோக்கி வேந்தர்களே நீங்கள் நீதிதவறாமல் நடப்பதினால் எங்கள் அண்ணன் சத்துருஜயம்பண்ணி வந்தானென்று சொல்லி அவர்களையும் வணங்குவான் தங்கள்வீட்டில் வேலைசெய்யும் பெண்களைக் கண்டு அடிகாளிகளே நீங்கள் புண்ணியஞ்செய்ததனால் என் தமயன் மீண்டு வந்தானென்று சொல்லி அவர்களையும் கும்பிடுவான். கடைசியில் தன்னைக் குறித்து அடா பரதா நீ நல்ல அதிர்ஷ்டசாலியானபடியால் உங்களண்ணன் வந்துவிட்டானென்றுசொல்லித் தன்னைத்தானே தொழுது கொள்ளுவான். தாயையும் அவனைச்சார்ந்தவர்களுக்கும் வந்ததைப்பற்றியாவது, இராகத்தியாகத்தைக் குறித்தாவது, ராச்சியத்தின் பொருட்டாவது என்னதுசெய்யவேண்டுமென்பது ஒன்றுந்தெரியாதவனாயிருப்பான். அப்புறம் இப்புறம் அடிபெயராமல் எங்கே நின்றானோ அங்கேதானே நிலைத்திருப்பான். இப்படியெல்லாம் அவன் பரவசப்படும்படி சம்பவித்ததனால், இந்தச் சகோதரவாற்சல்யத்தா லுண்டாகிய களிப்பும் கள்ளுண்டவனையாகவே இருக்கின்ற தென்றும் கம்பர் பிரசங்கிக்க, சொக்குநாத சாமியதிபாதகன் பிராமணர்களைத்தொழுது விசேஷமோ தோஷமல்ல, தன்னைப் பணியும் அரசர்களைத் தான்பணிந்தோதகாத செய்கை அதுவும் பெரிதல்ல ஒரு பரிசாரமாம் தாதிகளைத்தொழுதானென்றது தான் வரம்புகடந்ததாயிருக்கின்றதென, கம்பர் அவன் சந்தோஷமாகிய சமுத்திரத்தில் மூழ்கிக் கரைகாணாதிருந்தமையால், தன் மெய்மறந்து எதிரே கண்டவர்களையெல்லாம் இன்னாரின்னாரென்று தாரதம்மியம் பாராமல் தொழுதான். தாரதம்மியம் பாராவிடினும் தாதிமார்களுக்கு வேறாயிருப்பவர்களானமையால் அவர்களைத் தொழுததும் அச்சரியமல்ல வேறல்லாத தன்னையும் வேறாகக் கருதித்தொழுதுகொண்டதே அதிக ஆச்சரியமென்று சொல்லக்கேட்டு யாவரும்மிகவும் அதிசயித்திருந்தார்கள்.

ஸ்ரீராமர் திருவயோத்திக்கு எழுந்தருளின பொழுது பரதனும் முதல்மந்திரியாகிய சுமந்திரனும்வசிஷ்டரால் மகுடாபிஷேகத்திற்குச் சுபதினங் குறிப்பித்து, வேண்டிய உபகரணங்களைச் சேகரித்துச் சப்பன்னதேசங்களுக்கும் செய்தி தெரிவித்து, அந்தந்த அரசர்களும் முனிவர்களும் வந்து நிறைந்திருக்க, விபீஷணன் சுக்ரீவன் ஜாம்புவந்தன்முதலானவர்களும்புடைசூ

மூ வானரப்படைத்தலைவர்களும் வானரவீரர்களும் நெருங்கி நிற்க, சமுத்திரதீர்த்தத்தோடு புண்ணியநதி தீர்த்தங்களைக் கொண்டு மங்களஸ்நானம் செய்வித்து, திவ்வியமாகிய பீதாம்பரம் உடுத்தி, நவரத்ன பூஷணம்தரித்து பரிமள திரவியங்களும் புஷ்ப மாலைகளும் சாத்தி, உன்னத சிங்காதனத்தில் சுவாமியை ஜானகி சமேதனாக எழுந்தருளி யிருக்கச்செய்தசமயத்தில்.

அரியணை யனுமன்றாங்க வங்கதனுடைவாள்பற்றப்
பரதன்வெண்குடைபிடிக்க விருவர்கள்கவரிவீச [கள்
விரைசெறிகமலத்தாள்சேர் வெண்ணெய்மன்சடையன்றங்
மரபுளோர்கொடுக்கவாங்கி வசிட்டனேபுனைந்தான்மௌலி.

என்றபாடலைக்குறித்து ஆஞ்சநேயர் சிங்காதனத்தைத்தாங்க, அங்கதன்சுவாமியின் உடைவாளை ஏந்திநிற்க, பரதமகாராஜன் வெண்குடைபிடிக்க, லட்சுமணரும் சத்துருக்கனரும் சாமரைவீச, இட்சுவாகுமுதலான சூரியகுலத்து அரசர்களெல்லாம்பரம்பரையாய்ச்சிரசில் தாங்கிஅரசாண்டுவந்த மாணிக்கமயமானகுடத்தை அபிஷேகித்துப் பூஜித்து வேதப் பிராமணர்கள் தொட்டு ஆசீர்வதிக்க, மங்கலச்சங்கமுதலாகியவாத்தியங்கள்கோஷிக்க, வாசனைதங்கிய கமலாசனத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீமகாலட்சுமி வாசஞ்செய்கின்றதிருவெண்ணெய நல்லூர் கிராமாதிபதியாகிய சடையப்பமுதலியாருடைய மரபில் அக்காலத்தில் தோன்றியிருந்த உத்தமர்களாகிய வேளாளர்கள் எடுத்துக் கொடுக்க, பிரமரிஷி சிரேஷ்டராகிய வசிஷ்டர் தமதுகைகளால்வாங்கி, மந்திர வாக்கியங்களைச் சொல்லி ஸ்ரீராகவனுடைய திருமுடியில்தரித்து மந்திராட்சதைகளை இறைத்தார். அத்தருணத்தில்தேவர்கள்புஷ்பவருஷம் வருஷித்துத் தேவதுந்துமி முழக்கினார்கள். யாகாக்கினிவலஞ்சுழித்தெழுந்தது, தர்மம் தழைத்தோங்கியது.மாதம்மும்மாரிபொழிய முப்போகம்விளையப் புலியும் பசுவும்வைரமில்லாமல் ஒருதுறையில் தண்ணீர்குடிக்க, வருணாச்சிரதர்மம் வழுவாமல்தெய்வபக்தி குன்றாமல் மனுநீதிகோடாமல்முறையேசெங்கோல்செலுத்தி, வைதேகி மனோகரன் அரசாண்டிருந்தானென்று கம்பர்பிரசங்கிக்கக்கேட்டு அந்தச் சபையிலிருந்தவர்கள் யாவரும் பிரமானந்த மடைந்தார்கள்.

பிறகு சோழராஜன் சித்திரத்தொழிலில் மிகவும்நிபுணனாகிய ஒரு சிற்பனைக்கொண்டு ஸ்ரீராமர் பட்டாபிஷேக மகோற்சவத்தைவிசித்திரமாகத் தத்ரூபமாய்ப் படத்தில் எழுதுவித்துத் தன்னரண்மனைக்குச்சமீபத்திற்பட்டாபிஷேகமண்டபமென்று ஒரு உன்னதமான மண்டபம் கட்டுவித்து அதைச்சுவர்க்கம்போலச் சிங்காரித்து, அதன் நடுவில் ஒரு பதமராக பீடம் ஸ்தாபித்து அதன்மேல் அந்தப்படத்தைநாட்டிமலர்மாலைசூட்டி விதிவத்தாகஆராதித்து, கம்பராமாயண புஸ்தகத்தைப் படத்தின் அருகேவைத்துக் கந்தபுஷ்பங்கள்சாத்தி மந்திராட்சதையால் அர்ச்சித்துத் தீபதூபம்காட்டிப் பின்பு அதற்குச் சரிகை முதமற்கௌசனையிட்டு, பொன்மயமாகியசித்திரப்பல்லக்கில் வைத்துச் சோடச உபசாரத்துடனே அதை முன்னேகொண்டுசெல்ல; பின்னே கம்பர் கவிச்சக்கரவர்த்திக்கு விலையுயர்ந்த பட்டாடைகளைத் தரித்து, சங்குசக்கரக் கடுக்கனும் நவரதன கண்டியும் வஜ்ரப்பதக்கமும், முத்துமாலையும், தங்கக்காப்பும் கொலுசுமிட்டு, சந்தனபுஷ்பதாம்பூலமும்கொடுத்து, சப்தலட்சணமுடைய பட்டத்துயானைமேல் பொன்னம்பாரிவைத்து அதன்மீதுஅவரையேற்றி மேளதாளம்முழங்கத் தன்மந்திரிபிரதானிகள் சாமரம்போடச் சிறப்பாகக் கிராம பிரதட்சணம்பண்ணுவித்து, அவருக்குச் சத்திரம் சாமரம் திருச்சின்னம் முதலிய அனேகவிருதுகளும் கொடுத்து ஸ்துதிசெய்து, பிராமணர்களுக்குக் கோதானம் பூதானங்களும் மற்றக்கவீசுரர்களுக்குப் பலவித வெகுமானங்களும் செய்து, அரசர்கள் பிரபுகள் முதலானவர்களுக்குத் தக்கவாறு மரியாதைபண்ணி அவரவர் இருப்பிடம்போய்ச் சேரும்படிவிடைகொடுத்து அனுப்பிவித்தான், அவர்களுக்குள் சிலர் போம்பொழுது கம்பராமாயணத்தைப்பார்த்து ஒவ்வொரு பிரதி எழுதுவித்துக்கொண்டு போனார்கள். ராமாயண பிரசங்கம்செய்தபொழுதுதான் கம்பரைப் பாண்டியராஜன் அதிக அந்நியோந்நியமாகச் சிநேகித்தான். அதற்குமுன் அவ்வளவு நேசமில்லை அன்றுதொட்டு அவனிடத்திற்குக் கம்பர் அடிக்கடி போகவும் வரவும், அவன் சமஸ்தானத்திலேயே சிலகாலம் மருவியிருக்கவும் அவனால் வேண்டியசகாயம்பெறவும் அவருக்கு இடமுண்டாயிற்று.

கம்பர் சீவந்தராயிருந்த காலத்தில் எப்பொழுதாவதுஅவ்விடத்திற்காயினும் போகவரச் சம்பவித்தால் முன்போலத்தனி

காலங்களைப் போக்காமல், அன்று கருணாகரபாண்டியன் அபிமானித்துக் கொடுத்த கனகப்பல்லக்கின் மேலேறி, குலோத்துங்கசோழனளித்துக் கொடுத்த சுவேதசத்திரம் கவிக்க, சாமரம் வீச, திருச்சின்னமூத, மற்றும் பற்பல விருதுகள் பிடிக்க, குடகதேசாதிபதி கொடுத்த யானைகளும், மாருவாடிதேசத்தரசன்கொடுத்த ஒட்டகங்களும், சிந்துதேசத்திறைவன் கொடுத்த குதிரைகளும், ஆந்திரதேசாதிபதி கொடுத்த கண்டவாள் எருதுகளும் பெருங்கூட்டமாக ஒரு ராஜாவின் தண்டு வருவதுபோல் தம்மைச் சூழ்ந்துவரும்படி பிரயாணம் பண்ணுவதுண்டு இந்தக் கூட்டம்போகிற வருகிற மார்க்கங்களில் இவைகளுக்கு வேண்டிய ஆகாரங்களை அங்கங்குள்ள சோலைகள் தோப்புகள் கொல்லைகள் கழனிகளில் வேண்டியமட்டும் பெற்றுக்கொள்வதற்குத்தடையில்லை அந்த நஷ்டத்தை வருஷவாரியில் துரைத்தனத்தார் தங்களுக்குவரும் மேல்வாரத்தில் கம்பன்போனவழி கண்டு கழித்தது இவ்வளவென்று கழித்துக் குடிகளுக்குக் கொடுப்பது பெருவழக்கமாயிருந்தது.

அந்நாளில் கம்பனையும் அவருடைய மாணாக்கரையும் அடுத்துப் பலபெயர்கள் மேற்படி ராமாயணத்திற்குச் சம்பிரதாயமாகவும் சாதுரியமாகவும் உரைகேட்டார்கள். அப்புறம் அப்பலபெயரையும் அடுத்துப் பற்பலர் பாடம்கேட்டார்கள். இந்தப்படி அதன்பின்பும் காலக்கிரமத்தில் அனேகர் கர்ண பரம்பரையாக ராமாயணத்திற்கு உரை கேட்டுவந்தார்கள் கொஞ்சக்காலத்திற்கு முன்பு அவ்வாறு கர்ண பரம்பரையாகப் பாடங்கேட்டுக் கிரமமாய்ப் போதிக்கத்தக்க வல்லமைபெற்றிருந்தவர்கள் ஆராரென்னில், தென்தேசத்தில் வசித்திருந்த பெத்தபெருமாள் பிள்ளையென்பவரும், சீகாழி அருணாசலகவிராயரும், மயிலைச் சீநிவாசப்பிள்ளையும், சேதுபதியின்வித்வான் இராமசுவாமி கவிராயரும். தொல்காப்பிய வரதப்பமுதலியாரும், காலேஜ் திருவேங்கடாசல முதலியாரும், திருத்தணிகைச் சரவணப்பெருமாள்கவிராயரும், புதுவைக்குறள் வெங்கடாசல வுபாத்தியாயரும், காஞ்சிபுரம் அருணாசலதேசிகரின் பிதாவாகிய சண்முகக்கவிராயரும், திருநீர்மலைக் காளிங்கராயபிள்ளையும், மற்றும் சிற்சிலருமே. தற்காலத்திலும் அப்படிப்பட்ட சாமர்த்தியமுடைய சிலர்சென்னை ராஜதானிமுதலான ஸ்தானங்களில் இருக்கின்றார்கள்

சோழி அருணசலகவிராயர் ஒருவர் சின்னைய முதலியார் வீட்டிற் கம்பராமாயண பிரசங்கம் செய்துகொண்டிருந்தபொழுது, ஒருநாள் அம்முதலியார் கவிராயரைநோக்கி இன்றைக்குத் தமிழிலும் சமஸ்கிருதத்திலும் பூரணபாண்டித்தியமுள்ள பூபாலைக்குழந்தை முதலியார் இவ்விடத்திற்கு வருகிறபடியினாலே பிரசங்கத்தை சிறந்திருக்கவைத்தால் யுக்தமாயிருக்குமென்ன, கவிராயர் அப்படிப்பட்ட மகாவித்வானுக்கு முன்பாகத்தான் ஆவசியமாய்ப் பிரசங்கிக்கவேண்டுமென்று அன்றையத்தினம் சுந்தரகாண்டத்தில் பொழிலிறுத்த படலத்தில் அசோகவிருட்சம் இவ்விதமாகவுற்பத்தியாயிற்றென்றும், அது நெருங்கிய பசுமையாகிய இலைகளை யுடைத்தாயிருப்பதென்றும், அதனால்மிகவும் குளிர்ச்சியைக் கொடுக்கின்றதென்றும், காலைமாலை முதலியஎந்தவேளையிலும் தன்னிழல் தன்னைக்காத்து நிற்கின்றதென்றும், அந்நிழலின் கண் வந்தவர்களுடையசோகத்தைத் தீர்ப்பதென்றும், அக்காரணத்தால் அசோகமென்று பேர்பெற்றதென்றும், ஸ்திரிகள்பாததாடனம் செய்யப்புஷ்பிப்பதென்றும், அம்மலர் மன்மதபாணத்தில் ஒன்றென்றும் அதுமன்மதனும் காமங் கொண்டவர்களுடைய கண்ணிற் பிரயோகிக்கப்படுவதென்றும். அது போய் அவர்களுக்கு வெப்பத்தை விளைப்பதென்றும், அதன் நிறம் அக்கினிபோலவதென்றும், அதன்தளிர் காய்கனிகளின் குணம் இன்ன இன்னதென்றும், அவ்விருட்சம் இக்காலத்தில் இல்லையென்றும், காணக்கிடையாத இவ்வசோகமென்று வேறொரு மரத்தை வழங்குகிறார்களென்றும், அசோகமரத்தின் கன்றுகளை ராவணன்ஒருதீவிலிருந்து எடுப்பித்துவந்து நாட்டி வனமாக வளர்ப்பித்தானென்றும், அவ்வனத்தில் தான்சீதை சிறையிருந்தாளென்றும் பலவிதத்திலும் நன்றாய்ப்பூரித்துப் பிரசங்கத்தார். குழந்தைமுதலியார் அப்பிரசங்கத்தைக் கேட்டு நானிதுவரையில் இப்படிப் பிரசங்கித்தவர்களைக் கண்டதும் கேட்டதுமில்லையென்று வியந்துரைத்ததாகச் சொல்வார்.

## கம்பர்இராமாயணம்பாடி அரங்கேற்றிய சரித்திரம்.

முற்றிற்று.

# ஏகம்பவாணன் சரித்திரம்.

—(*)*(*)—

நிலவளம் நீர்வளம் பொருந்திய தென்தேசத்தில் வசித்திருந்த வேளாள குலதிலகனாகிய வாணனென்பவன் ஆயிரம் ஏர்வைத்து விவசாயஞ் செய்து வெகுதிரவியம் சம்பாதித்துச் சீமானாய் வாழ்ந்திருக்கும் நாளில் அந்தப் பிரபுவுக்கு ஒரு ஆண்பிள்ளை பிறந்தது. அக்குழந்தைக்குச்சாதகம் கணிக்கவேண்டுமென்று ஜோதிஷர் களுக்குச் சொல்ல, அவர்கள் தற்காலகிரகநிலையைப்பார்க்குமளவில். ஐந்திற் சூரியனிருக்க, அவனைச் சனிபார்ப்பதனாற் பிதிருகண்டமும், நாலிற் சந்திரனிருக்க அவனைச் சுக்கிரன்பார்ப்பதனால் மாதிருகண்டமுமாயிருப்பதை அறிந்து, அவர்கள் இதையெப்படி முதலியாருக்கு அறிவிப்பதென்று மயங்கிவியசனமுற்றிருந்து பிறகு சாஸ்திரத்துக்குத் தோஷம் சம்பவியாமலிருக்கும்பொருட்டு அதனை ஒருவாறுகுறிப்பித்தார்கள். விவேககோசரமுடைய அந்தமுதலியார் உள்ளத்தைநீங்கள்மறைப்பானேன் எதுவும் ஊழின்படி நடக்கிறது. மாதிரு பிதிருகளின்நிரியாண காலத்தை மாத்திரம் திட்டமாய் அறிவிக்கவேண்டுமென்ன, அவர்கள் உள்ளவண்ணம் தெரிவித்த சமயத்தில், அவர்உலகத்திற்சாதகம் விதித்தபடியே நடக்கின்றதா? இதைநம்புவது எப்படியென்ன, சோதிஷர்கள் வாததுர்ப்பலமே யொழியச்சமய துர்ப்பலமில்லையென்பார்களே அதுபோலச் சோதிஷர்கள்செவ்வையாய் ஆ[illegible]மையால் ஒருவேளை தவறிப்போனாலும் போகலாம் சாஸ்திரம் தவறமாட்டாது இதற்குத்திருஷ்டாந்தம் ஒன்றுண்டென்ன, அவரதெப்படியெனச் சோதிஷர்கள்சொல்லத்தொடங்கினார்கள்.

பூர்வம் ஒரு வேந்தனுடைய சமஸ்தானத்திற் சோதிஷத்திற்பிரபல பாண்டியத்தியமுடையவர் ஒருவரிருந்தார். அவருக்குச் சமானமாகப் பிரகஸ்பதியைத்தான் சொல்லவேண்டும், சிருஷ்டிகாலந்தொடங்கிக் கிழக்கு மேற்காக உதயமாகி அஸ்தமிக்கும் சந்திர சூரியர் தெற்குவடக்காகமாறி உதித்தொடுங்கினாலும் அவரோ

ழுதும்சாதகம்ஒருபொழுதும்மாறுபடுகிறதேயில்லை. அப்படிப்ப ட்டவருக்கு அருமையாக ஒரு பெண்குழந்தை பிறந்தது, அதற்கு அவர்சாதககம்கணித்துப் பலாபலத்தைப் பார்க்கும்பொழுது விவாகமாகி ருதுசாந்தி செய்யப்பட்ட தக்ஷணமே அந்தப்பெண் வைதவியத்தை அடையுமென் றிருந்ததனால், அச்சோதிஷர் நம துகுழந்தைக்கு இந்தக்கதியானால் நாமெப்படிச் சகித்திருப்பதே ன்று துக்கசாகரத்திலமிழ்ந்தி, பிறகு அப்பெண்ணை நாளொருமே னியும் பொழுதொரு வடிவுமாக வளர்க்க வளர்ந்துகொண் டிரு க்கையில், மேற்படி செய்தியெங்கும் பிரசித்தமானதால் அவள் பிரவிடையாகுமளவும்அவளை விவாகம் செய்வாரில்லாதது கண் டு சோதிஷர் ஐயோ : பிராமணசாதியிற் பெண்களுக்குச்சிறுவய திலேதானே விவாகம் நடக்கிறது சம்பிரதாயமாயிருக்க, நம்மு டைய பெண் பருவமுடைய வளாகியும் பாணிக்கிரகண மாகா ம லிருப்பது நாம்ஜென்மாந்தரத்திற் செய்ததவக்குறையோ? செல வெல்லாம் நாமே இறுத்துக் கன்னிகாதானமாகக் கொடுத்தாலு ம் கொள்ளமாட்டோ மென்கிறார்களே. பெண்ணைப்பெற்றுக் க லியாணஞ்செய்விக்காமற் சும்மாவைத்திருப்பது தர்மமல்லவே எ ன்னசெய்யலாமென்று அல்லும்பகலும் இதுவே சிந்தையா யிரு ந்தார். ஒருதினமும் உத்தரதேசத்துப் பிரமசாரிப் பிராமணன் ஒ ருவன் இவர்கிரகத்திற்குப் பவதிபிக்ஷாந் தேகியென்று உபாதா னத்திற்கு வர, இவர் அவனைப்பார்த்து இங்கே ஒரு பெண்ணி ருக்கிறாள் அவளைப் பதினாயிரம் வராகன் ஸ்திதிவைத்து, பதினா யிரம் வராகன் விலைமதிக்கத்தக்க பூஷணமிட்டு ஒருபெரியவீடுங் கட்டிக்கொடுத்து உனக்குவிவாகம் செய்விக்கிறேன்சம்மதிதானா வென்ன, அவனுக்குச் செய்திதெரியாததனாலும் எளியவனானதா லும் "பணமென்றாற் பிணமும்வாயை திறக்கும்,மென்றபழமொ ழிப்படி அவன் பணத்திற்குஆசைப் பட்டு உடன் பட்டான். தம் பெண்ணை அவனுக்குத் தத்தம்பண்ணிச் சம்பிரமமாக ஏழுநாள் வரைக்கும் கலியாணசடங்குசெய்வித்து எட்டாம்நாள்ருதுசாந்தி நடப்பித்தார்.

அந்தப் பிராமணன் சயனகிருகத்தில் அன்றிரவு அப்பெண் ணுடன்கூடிச்சுகம் அனுபவித்தான். பின்பு உடனே அவனுக்குவ யிற்றைக்கலக்கினமையால்அவன் மலைபாதைக்குப் போய்வருகி றேனென்று தன்மனைவியுடன்சொல்ல, அவள்மேற்படி சங்கதி

தெரிக்கவொரகையால் தூரத்திற்போகவிடலாகாதென்று தங்கள்
கொல்லையில்தானே சீக்கிரமாய்ப்போய்வரச்சொன்னாள் அவன்
அப்படியேபோய் மலவிசர்ச்சனம் பண்ணி அக்கொல்லைக்கு அ
ப்புறத்திலுள்ளமடுவிற்போய்ச்சௌசம் முடித்துக்கொண்டு இரு
ம்புகையில், அதிலிருந்தவொரு முதலை அவன்காலைக் கவ்விப்பிடித்த
து. அப்பொழுதுபிராமணன் நீயென்னைவிட்டுவிடென்ன, முத
லையெனக்குப்பசியாயிருக்கிறதனால் விடமாட்டேனென்ன, அவ
ன் அப்படியானால் நல்லதுதான். ஆயினும் புதிதாகமணம் செய்ய
ப்பட்டஎன் பெண்சாதிக்குஒருசொற்சொல்ல வேண்டியிருக்கிற
து அதைக்குறித்துநான்போய்ஐந்து நிமிஷத்திற்குள்ளே வருகி
றேனென்றான் அதுநீபோனால்மறுபடிவரமாட்டாயென, வேதி
யன் நீயென்னபிரமாணிக்கம் பண்ணச்சொன்னாலும் பண்ணுகிறே
னென, முதலையானது நீசொன்னசொல் தவறினால் தீபம் அணைந்
துபோன சமயத்திற்போஜனம்செய்தவன்போகின்றகதியிற் போ
கிறேனென்று பிரமாணிக்கம்பண்ணினால் விடுவேனென, இவன்
அந்தப்படிசத்தியம்செய்துகொடுத்துத் தன்மனைவியிடத்திற்குவ
ந்துஅச்செய்தியைச் சொல்ல, அவள்பலவிதத்திலுந்தடுத்தும்கே
ளாமல்திரும்பிவந்துமுதலையை அழைத்துஎன்னை விழுங்கி உன்
பசியைத்தீர்த்துக்கொள்ளென்றான். அதுஅதிக ஆசையுடன் அவ
னை விழுங்குகிறதருணத்தில் அவன்பெண்சாதி விளக்கையேற்றி ஒ
ருபாத்திரத்தில் மறைத்துப் புருஷன்பின்னே தெரியாமற் கொ
ண்டுபோய், முதலைக்கு வெளிச்சம் தெரியும்படிகாட்டிஅந்த க்ஷ
ணமேபொட்டென்று அணைத்துவிட்டாள். அதுகண்டு முதலை
ஹரிஹரி இதென்னபாவமென்று பிராமணன்காலைவிட்டுவிட்டது
இவன்நீஎன்னையேன்விழுங்காமல் விட்டுவிட்டாயென, அதுசத்
தியமென்பது உனக்குமாத்திரந்தானா! எனக்கில்லையா? நானினியு
ன்னைத் தீண்டமாட்டேன்சுகமாய்ப்போவென்றது. மறுபடி இவ
னென்னசொல்லியுங்கேளாமல் அதுவும்இவனும் வாதாடிக் கொ
ண்டிருக்கையில், பிராமணத்திகணவன் கையைப்பிடித்துஇழுத்
துக்கொண்டு வீட்டுக்குப்போய்விட்டாள்.

பொழுதுவிடிவதற்கு முன்னே பந்துக்கள் சோதிஷர்மாப்பிள்
ளை இறந்துபோயிருப்பான் பிரேதத்தை ஸ்மசானத்திற்குக்கொண்
டுபோய்ச்சேர்ப்பிக்கவேண்டுமென்று அவருடைய வீட்டுத்தெரு

வாசலில் வந்து கூட்டம்கூடியிருந்தார்கள். சோதிஷரோபெண்
ணையும் பிள்ளையையும் ராத்திரி சயனகிருகத்தில் விடுத்த மாத்தி
ரத்திற் சுடுகாட்டிற் காஷ்டம் அடுக்குவித்துப் பிணத்திற்கு உடு
க்கக் கோடிவஸ்திரம் பாடை முதலானவைகளும்சாக்கிறதைசெ
ய்வித்திருந்து, காலையில் எழுந்து தவைத்தட்டி மகளைக்கூவிஅ
ம்மா உனதுயகனுடைய க்ஷேமம் என்னவென, அவள் கதவைத்
திறந்தாள். மருமகன் சிறிதும் வாட்டமின்றி உயிரோடிருக்கப்பா
ர்த்து நடந்தசெய்தியை விசாரித்தறிந்து ஆச்சரியப்பட்டு, ஓ?ஜோ
சாஸ்திரம் பொய்த்துப்போய் விட்டது. ஆகையால்இனிச்சோ
திஷசாஸ்திரத்தை நம்புதற்கோ இடமில்லை. என் மாப்பிள்ளைக்
கு அடுக்கிய காஷ்டத்தில் இப்புஸ்தகங்களை யெல்லாம் வைத்து
நெருப்பிட்டுக் கொளுத்திப் போடுகிறேனென்று நிச்சயித்து, அ
வைகளையெல்லாம் மேற்படி பாடைமேற் சுடலைக்கு எடுப்பித்து
க் கொண்டுபோய்க் கட்டைமேல்வைத்துக் கொளுத்தப் போகிற
சமயத்திற் பிரகஸ்பதிபகவான் ஒரு பிராமணப்பிள்ளையாகவடிவு
கொண்டு எதிரேவந்து, கட்டைமேல் வைக்கப்பட்டிருக்கிறதே
இதென்னவென்று கேட்க, சாஸ்திரி சோதிஷ புஸ்தக மென்று
சொல்ல, இதைக்கொளுத்தவேண்டிய நிமித்த மென்னவென, எ
ன்புத்திரியின் சாதகம் பொய்த்துப்போனதால் இதிற்பயனில்லை
யென்று கொளுத்த யத்தனித்தேனென. பிரகஸ்பதி சாஸ்திர
ம் எக்காலத்தும் பொய்யாது. அது இருக்கட்டும் இப்பொழுது
பிரகஸ்பதி எங்கிருக்கிறார் சொல்லும் பார்ப்போமென, சோதிஷ
ர் தற்காலலக்னத்தைச் சோதித்துப் பார்க்குமிடத்தில் மற்றெங்கு
மில்லையென்றும், தம்முடனே பேசுகிறவரே அப்பிரகஸ்பதியெ
ன்றும் அறிந்து ஐயமுற்றிருக்க. பிராமணவடிவாகிவந்த பிரகஸ்
பதி பின்னும் அவரைநோக்கி உமது புத்திரி உற்பத்தியானகால
த்திற் பிரகஸ்பதி இருந்த சமய மென்ன வென, அவர் கண்ணைமூ
டிக்கொண்டிருந்தாரென. தேவகுருவானவர் கண்ணைமூடினது
மெய்யேஆயினும் சிசு உற்பத்தி அப்பொழுதல்ல, மூடித்திறந்த
மாத்திரத்திலானதையால் உமது குமாரத்திற்கு வைதவியம்வருவ
தற்குக காரணமில்லையென்று தெளிய உரைத்துத் தமது நிஜஸ்
வரூபத்தையும் காட்டிப்பின்பு அந்தர்த்தானமாய் விட்டாரென்
று சொன்னார்கள். அதுகேட்டு வர்ணமுதலியார் அப்படியானா
ல் நெற்றியிலெழுதினவன் இனிஅழித்தெழுதப் போகிறதில்லையேவருகிற
து வரட்டுமென்றுநினைத்திருந்தார்.

சிலநாளில் அவர்கள் தெரிவித்தபடியே சாதகனுடைய தாய் காலஞ்சென்றுபோனாள். அதையறிந்தவுடனே வாணமுதலியார் தமக்கு மரணம் சமீபித்திருப்பதையும், பிற்காலம்குழந்தைக்கு ஆதரவில்லாததையும் நிச்சயித்துணர்ந்து, தம்மிடத்திலநேகனாய்ப் பண்ணையாளாக விருந்து அகமும் புறமும் ஒத்து நடந்த உண்மையுள்ள உத்தமனாகிய ஏகன் சம்பானிடத்தில் அந்தக் குழந்தையையும், சொத்துக்களையும்ஒப்பித்து, அவன்முகத்தைப்பார்த்துக் கொல்லையிற் பூமிக்குள் அளவிறந்த திரவியம்புதைத்து வைத்திருக்கிறேன், அதையும் நீயே கைக்கொண்டுஇப்பிள்ளையையும் உன்பிள்ளையாக வளர்த்துக்கொள்ளென்று சொல்லி விட்டுத்தேகவியோகமானார்.

அப்பண்ணைக்காரன் தனதாண்டை சொற்படியே, அவருக்குச்செய்யவேண்டிய உத்தரகிரியை முதலிய கிரியைகளையெல்லாம் அக் குழந்தையைக்கொண்டு குறைவில்லாமல் நடப்பித்து, வேளாளர்குலத்தில நல்ல சம்பிரதாயஸ்தராகிய ஒருவரைக்கொண்டு அப்பிள்ளைக்கு வேண்டிய உணவு முதலியவைகளை ஊட்டி வளர்ப்பித்து, ஐந்துவயதிற் பிரபல வித்துவானாகிய கம்பரிடத்தில்விடுத்துக் கல்வி பயிற்றுவித்து, அவன் பூரண பாண்டித்தியமுடையவனான காலத்தில், அப்பிள்ளையின் மார்பில் தகுதியான பெண்ணைத்தேடி விவாகமுஞ் செய்வித்து, தன்னெசமானனுடையசொத்துக்களில் அணைக்காசளவும் தான் இச்சியாமல் முழுமையும் யசமானன் பிள்ளைக்கு ஒப்பித்துப் புதையி லிருக்கும் இடத்தையுங் காண்பித்து, இதையும் நீயே யனுபவித்துக்கொள் எனக்கு ஒன்றும் வேண்டுவதில்லையென்றான்.

அப்பிள்ளை பண்ணையால் காட்டியஇடத்திலுள்ளநிக்ஷேபதனத்தை வெட்டி யெடுக்கப்போனசமயத்தில்அதைப்பூதங்காத்ததினால் வெட்டினவன மூக்கிலும், வாயிலும் உதிரம் பெருக அவன் கீழே விழுந்து மூர்ச்சை யடைந்தான். மேலும், கருங்குளவி செங்குளவிகள் புறப்பட்டு அருகிலே ஒருவனையும்அணுகவொட்டாமல்துரத்தத்தலைப்பட்டன. அதனால்இதற்கென்ன

செய்வதென்று மனமுருகியிருக்கையில், அன்றிராத்திரி பிள்ளையின் சொப்பனத்தில் அப்பூதம்வந்து நான் அநேககாலமாகக் கண்ணை இமைகாப்பதுபோல இடைவிடாது பாதுகாத்திருந்த ஏழுகோடி திரவியத்தை எளிதாகநீ கைப்பற்றிக்கொள்வதெப்படி, எனக்குத் திர்ப்தியுண்டாகத் தயை, உண்மை, பக்திமுதலிய நற்குணங்களையுடைய ஒரு புருஷனைப் பலிகொடுத்தால் இந்தத்திரவியத்தைக் கொடுப்பதுமன்றி, நானும்உனக்குக்கைவசமாசி உன்தொண்டுபோல எப்பொழுதும் நீ காலாலிட்டவேலையைக் கையாற்செய்து வருகிறேனென்றது. அவன்விழித்துக்கொண்டு ஏகன் சாம்பானையழைத்துத் தான்கண்டகனவை அவனுக்குஅறிவிக்க, சாம்பான் அந்தப்பூதத்திற்கு ஒருநரகபலிகொடுத்தால் ஏழுகோடி திரவியம் அகப்படுமென்பதற்குச் சந்தேகமில்லை. அதைக்குறித்து அவசியம்முயற்சிசெய்யத்தான்வேண்டுமெனச் அது கேட்டுப் பிள்ளையாண்டான் ஆரைப்பலிகொடுக்கிறதென்று யோசிக்குமிடத்திற் பண்ணையாள் யோசனையென்னதடையில்லாமல் என்னைப்பலி கொடுக்கிறதுதானே யென்றான். அப்பிள்ளை கிருஸ்ணா! கிருஷ்ணா! பெற்றதகப்பனைப் பார்க்கிலும் என்னிடத்தில் அதிக பிரீதியுள்ளவனாகி என்னை வளர்த்து, எனக்குச் சலயோக்கியதையுமுண்டாகும்படி மிகவும்பாடுபட்ட உன்னையாபலிகொடுக்கிறது, இதுநன்றாயிருக்கிறது. எனக்கிப்பொழுதுஉள்ள திரவியமேபோதும், நானந்தச்சோலிககே போகிறதில்லையென்றான். ஏகன் இதென்ன. எத்தனைநாளிருந்தாலும் ஒருநாளிறக்கத்தானேவேண்டும்: எப்படிப்பட்டவர்களும்சாகாதிருக்கமாட்டார்களே? மண்ணிலேமுளைத்தபூண்டு மண்ணுக்கே இரையாமல்லவா? நானிருந்து ஆரை ரக்ஷிக்கப்போகிறேன், இறந்தேனானால் யசமானுக்கு ஏழுகோடி நிதிகிடைக்கிறதேயென்று நினைத்து, அன்றிராத்திரி ஒருவருக்குந்தெரியாமற் புதையலிருக்கிற இடத்திற்போய்க் கழுத்தை அறுத்துக்கொண்டு பூதத்திற்குப்பலியானான்.

அந்தக்ஷணமே பூதம் வாணமுதலியார் பிள்ளையின்சொப்பனத்திற்போய் உங்கள் பண்ணைக்காரன் எனக்குஇப்பொழுது பலியாய்விட்டான். இனிநீவந்து உங்கள் பிதாபுதைத்துவைத்தஏழுகோடி திரவியத்தையும் கைப்பற்றிக்கொள். நானுமுனக்குச்

சொன்னசொல்தவருல் இன்றுமுதல் தொண்டுசெய்கிறேனென்று. அவன்விழித்திருந்து அவ்விரவில் திரவியம்புதைக்கப்பட்ட இடத்திற்போய், ஏகன்சாமபான் கழுத்தறுபட்டுக்கிடக்கிற அலங்கோலத்தைக் கண்ணினுற்பார்த்து மனம்பதைக்க, அவனுக்காகக் கண்ணீர்விட்டழுது மெய்சோர்ந்துபின்பு, அவனைச் சிறப்பாக எடுத்துத் தகனம்பண்ணிச்சஞ்சயனம் அந்தியகர்மமுதலானகவைகளும் தன்கையினுலேயே செய்துமுடித்து, அவன செய்தநன்றியை மறவாதிருப்பதற்காக அவன்பெயரைமுதலிலும், கம்பர் தனக்காசிரியராகையால் அவர்பெயரை இடையிலும வாணன தன்னைப் பெற்றவனுதலால அவன்பெயரைக்கடையிலும்சேர்த்து அமமூன்றும ஒருமிக்கத்தனக்கொரு பெயராகவழங்கவேண்டுமென்று ஏக கம்பாணனெனத்தான பெயரிட்டுக்கொண்டு "பின்பு அப்பெயர் ஏகம்பவாணனெனமருவிற்று" அந்தப்புதையலைவெட்டியெடுத்து தன்வீட்டிற்சேர்ப்பித்துத் தன தந்தையினும் அதிகதனிகனும் சகலராஜாக்களும மதிக்கத்தக்க மகாப்பிரபுவாயும கீர்த்திபெற்றிருக்கும் காலத்தில், சேரசோழ பாண்டியர் மூவரும் ஒருதினம ஏகம்பவாணமுதலியாரைக்காண வேண்டுமென்று அவர்வீட்டுக்குவந்து முதலியார் எங்கேயென்று உள்ளேஆளனுப்பி விசாரிக்க, அவர்மனைவி கழனிக்குப்போயிருக்கிருரென்று உத்தரம்சொல்ல, இவர்கள் அதுகேட்டு முதலியார் முடி நடப்போயிருக்கிருரோவென்று அவர் குலத்தொழிலைக்குறிப்பித்து ஏளனம பண்ணினதுகண்டு, அவர் மனைவிக்கு அதுசகியாமையால், அவள்நமது முதலியார்முடிநடுவதுமெய்தான் ஆயினும் அவர் இந்தச் சொற்பமாகியநாற்றுமுடியாநடுவார் சேர சோழபாண்டியர்களாகிய மூவேந்தருடைய முடிகளைப்பறித்தெடுத்து, அவர்கள்சேனைகளைக்கண்ட துண்டமாக்கி, யுத்தகளமாகிய கழனியிலதழை யெருவாகஇட்டு, அதுநிறையச்சிவந்த ரத்தமாகிய நீரைத்தேக்கி, தாமஏறும் பட்டவர்த்தனயானையாகிய பகட்டைவிடுத்துஅதன்காலால்மிதிபப்பித்துக் குழைசேராக்கி, அச்சேற்றில்வரிசையாக நட்டு, வெற்றியாகிய வேளாண்மைசெய்து வருகிருரென்ற கருத்துக்கேற்க,

"சேனை தழையாக்கிச் செங்குருதி நீர்தேக்கி
ஆனை மிதித்த அடிச்சேற்றில்—மானபிரான்

மாவேந்த னேகம்பவாணன் பரித்துநட்டான்
மூவேந்தர் தங்கண்முடி

என்றொருபாடலை எழுதிப்போக்கினன். அப்பாடலை அவர்கள்படித்துப்பார்த்து, அடா இவன் இப்படிப்பட்டசூரனென்று நாமறியாமற்போனோமே நல்லதாகட்டுமென்று இருமாப்புடனே போய்விட்டார்கள்.

அவர்கள்போனமாத்திரத்தில் முதலியார் வீட்டுக்கு வந்து மேற்படிசெய்தியைக்கேள்விப்பட்டு இவர்கள் கர்வத்தை அடக்கவேண்டுமென்று தம்மிடத்திலுள்ள பூதத்தை அழைப்பி முன்னே சேரனைத்தூக்கிவரவென்றார். அதுசேரன்படுத்து நித்திரைபண்ணும்பொழுது கட்டிலோடே தூக்கிவந்து எதிரேவிட்டது. அவனைச்சிலநாள்வரையிற்சிறைக்கூடத்தில் அடைத்துவைக்க, அவன் நம்முடைய வாய்க்கொழுப்பல்லவா இப்படிவந்து விடிந்ததென்று மனஸ்தாபப்பட்டு, முதலியாருக்குவருஷந்தோறும்இவ்வளவுதிரவியம் பகுதிகட்டுகிறேனென்று ஒருதொகைகுறித்துஉடம்படிக்கைசெய்து, இதமாக அவரிடத்திற் செலவுபெற்றுக்கொண்டு தன்தேசத்திற்போய்ச்சேர்ந்தான். அவன்போன பிறகுசோழனிடத்திற்குப் பூதத்தையேவிப் பிடித்துவரச்செய்து அவனையும் அவ்வாறுஉடன்படிக்கை பண்ணச்சொல்லிச்சிறை நிவர்த்தியாக்கி அனுப்பிவிட்டு, கடைசியிற்பாண்டியனைக் கொண்டுவாவென்றுபூதத்திற்குஉத்தரவுபண்ணினார். பாண்டியன் பேய்க்குவிரோதமாகிய வேப்பமாலைதரித்திருப்பவனாதலால் அவனிடத்தில்அது போகப்பயந்துபின்னிவ்வதைக்கண்டு, கம்பர்வீட்டுக்குப்போய்இச்செய்தியைஅவரிடத்திற்சொல்லி இதற்கென்ன உபாயம்செய்யலாமென்னகம்பர்சிடியாயானையைக்கொண்டுகளிற்றியானையைவசப்படுத்துவதுபோல. ஸ்திரீகளைக்கொண்டு அவனைமயக்கி அந்த வேப்பமாலையைக் கிரகித்துவரும்படிசெய்தால் அப்பால் உமது எண்ணம் சித்திக்குமென்று, தமதுவீட்டில்வேலைசெய்கின்றவெள்ளாட்டிகளில் நாலுபெயரை அழைத்துநீங்கள்முதலியார் சொன்னவண்ணம் செய்யுங்களென்றேவினார். ஏகம்பவாணமுதலியார் அந்நால்வர்க்குமவிலையுயர்ந்த வஸ்திரம் ஆபரணம்புஷ்பம்பரிமளதிரவியமுதலியவைகளைக் கொண்டு நன்றாக அலங்காரம் பண்ணிவித்து, நீங்கள்பாண்டியனிடத்திற்சென்று அவனுக்குஉங்கள்

சாமர்த்தியத்தைக்காட்டி, நான்கொண்டகருத்துமுற்றும்படிஎவ்விதத்திலாவதுஎன்முக்கைமுன்னுக்குக் கொண்டுவரவேண்டுமென்று அனுப்பினார், அவர்கள்நாலுபெயருமரம்பை, மேனகை,ஊர்வசி, திலோர்த்தமையென்னுநால்வரைப்போலப்பாண்டியன்சமுகத்திற்குப்போய்மயிலாடுவதுபோல நடமாடியும், குயில் கூவதுபோல இசைபாடியும் அவனைப்பிரமிக்கப்பண்ணினார்கள்

மீனத்துவசனாகிய பாண்டியன் ஆனந்தபரவசமாய்அவர்களுக்குமுத்துமாலை, மோகனமாலை முதலாகியஅனேக பூஷணங்கள் வெகுமானம்செய்தான். அவர்கள் அரசனை நோக்கி! மகாப்பிரபு நீரெங்களுக்குப் பரிசுகொடுக்கும்பொழுதுஎங்களைக்கேட்டுஎங்கள்அபீஷ்டப்படியல்லவோ செய்யவேண்டும் அப்படிச்செய்யவில்லையேயென்றார்கள். பாண்டியன் அவர்கள்கருத்தைஅறிமையால் நீங்கள்சொல்லுவதுசரிதான் உங்களிஷ்டப்படியே செய்கிறேன் செல்லுங்களென்றான், இவர்களில்ஒருத்தி மகாராஜனேஎன்பெண்ணீர்கொடுத்து முத்துமாலை மோகனமாலைமேல்ஆசைகொண்டவளல்ல, உமதுதோளிலணிகின்றவேப்பமாலைமேல் ஆசை கொண்டிருக்கிறாள் ஆகையால் அதைஅவளுக்குக் கொடுக்கவேண்டுமென்றுகுறிப்பித்து

மாப்பைந்தார்க்கல்லமுத்துவன்னத்தார்க்கல்லவன்பெண்
வேப்பந்தார்க்காசைகொண்டுவிட்டாளே—பூப்பந்தார்
சேர்ந்திருக்குநெல்வேலிச் சிவிலிமாறுதமிழை
ஆய்ந்திருக்கும்வீரமாறு.

எனஒருகவிபாடினாள். அவன் அதுகேட்டு வேப்பமாலையை எப்படி கொடுத்துவிடுகிறதென்று நினைத்து ஒன்றும்அவட்குஉத்தரம்செல்லாமலிருந்தான். மற்றொருத்தி அந்தக்கருத்தைசகொண்டே

தென்னவாமீனவாசிவிலமாறுமதுரை
மன்னவாபாண்டி வளநாடா—முன்னம்
கரும்புக்குத்தாரளித்ததுப்பதமிழ்நாடா
கரும்புக்குவேம்பிலேசண்.

என்றொரு பாடலைப்பாடினாள். அதற்கும்மறுமொழிசொல்லவில்லை. பின்னொருத்தி அந்தநோக்கத்தினாலேயே

வேம்பாகிலு மினிய சொல்லுக்குநீமிலைந்த
வேம்பாகிலு மீகவேண்டாவோ—மீன்பாயும்
வேலையிலே வேலைவைத்த மீனவா நின்புயத்து
மாலையிலே மாலைவைத்தாளே மான.

என்றொரு பாட்டைச்சொன்னாள். அதற்கும் வாய்திறவாமல் மௌனமாயிருந்தான். அதன்பிறகொருத்தி அப்பெண்கள் மூவரையும் பார்த்துக் கேளுங்கள் சகோதரிகளே பாண்டியமகாராஜா இந்தச் சொற்பமாகிய வேப்பமாலையைக் கொடுக்கமாட்டாரென்று நினைக்கவேண்டாம் இவராலே வஞ்சனையில்லை ஆற்றூரில் அரசுசெலுத்துகின்ற ஏகம்பவாண முதலியாரிடத்தி லுள்ள பூதம்வந்து தம்மைப்பிடிக்குமென்னும்அச்சத்தினாலே தான்கொடாமலிருக்கின்றார், இதை அறியாமல நீங்கள் ஏன்வீணாயிவரை அலட்டுகிறீர்கள் இவர்மேல்தோஷம் சொல்லுகிறதுசரியல்லவென்று அவன மனதிற்குத்தக்கதாக,

இலகு புகழாளா யேகம்பவாணனை
அலகைவரும் வருமென்றஞ்சி—உலகறிய
வானவர்கோன் சென்னிமேல் வண்கை வளையெறிந்த
மீனவர்கோ னல்கிடான் வேம்பு.

என்றபாடலைச்சொன்னார்.

அதுகேட்டு அவன் நம்மை இவள்கேலி செய்கிறாளேயென்று வெட்கப்பட்டு இனி எப்படிச்சம்பவித்தாலும் சம்பவிக்கட்டும் மானம்போனபிறகு பிராணனிருந்து பிரயோசன மென்ன உலோபியென்று மாத்திரம் பெயரெடுக்க லாகாது. கர்ணராஜன் அவன் தேடிய புண்ணியத்தையு மல்லவோ தானம் பண்ணினானென்று நினைத்து அந்த கொடியில் தான் தரித் திருந்த வேப்பமாலையக கழற்றிக கொடுத்து விட்டான். அவர்கள் அவனுயிரைக் கொண்டு போவது போல வாங்கிப் போய்முதலியார் இடத்தில் கொடுத்தார்கள் அவர் அதைப் பெட்டியிற்

பதனப்படுத்தி வைத்துக்கொண்டு அந்தப்பெண்களுக்குஉசிதமான்வெகுமதிசெய்தனுப்பிவிட்டு, பூதத்தை அழைத்துவேப்பமாலையைத்தொட்டல்லவா பாண்டியனுத் தீண்டக்கூடாதென்றிருந்தாய் இப்போது அவன் சிகை என்கையிற் சிக்கிக்கொண்டது, இனிபயமில்லாமற்போய் அவனைப்பிடித்தபிடியிற் கொண்டுவாவென்றார் இவர் சொன்னது சொல்லாததற்குமுன்னே அது சங்கையின்றிச் சென்றுதூக்கி வந்துவிட்டது. ஏகம்பவாணமுதலியார் காலுக்குமகைக்கும் விலங்கிட்டுப் பாண்டியராஜனை அருஞ்சிறையில் வைத்தார். அவன்முதலியாருக்கு ஏதேதோபிரியவசனங்களைச் சொல்லியும் பிரமாணிக்கங்கள் பண்ணியும் அவர் தன்னைவிடாமையால் அவன் தன்மனையாளுக்குச்செய்தி அனுப்பிஅந்தச் சிறைவிடுவிக்கும்படி ஏகம்பவாணமுதலியாரை நீயாவது இரந்து கேட்கவேண்டுமென்ன, அவள்ஏகம்பவாணனுடைய ஔதாரியத்தைச் சிறப்பிக்கத்தொடங்கி அதன்வழியாய் அவன்பராக்கிரமத்தைக குறிப்பித்து.

"என்கவிகை யென்சிவிகை யெனகவச மென்றுவசம்
என்கரியீ தென்பரியீ தென்பரே—மன்கவன
மாவேந்த னேகம்ப வாணன் பரிசுபெறும்
பாவேந்த ரைவேந்தர் பார்த்து.

எனவொரு பாட்டுப்பாடி யனுப்பினாள் அதை யவர்படித்துப்பார்த்து! அதில் மிக்கவேகத்தையுடைய பரிமாவை நடாத்துகின்ற நகுலராஜனையொத்த ஏகம்பவாண முதலியாரைப்பாடி அவரிடத்தியானை. குதிரை, குடை, கொடிமுதலாகிய பலவகைப்பட்ட பரிசுபெற்றுவருகின்ற கவிஜனர்களை, அதற்குமுனபு அம்முதலியாருடனே யெதிர்த்துத் தோற்றுத் தத்தம்விருதுமுதலானவைகளை இழந்த அரசர்கள்பார்த்து, இந்தப்புலவர் பிடித்துக்கொண்டு போகிறகுடைநான பிடித்திருந்தது, இவரேறிய தண்டிகை நானேறியது, இவர்தரித்தகவசம் நான்தரித்து, இவரேந்திய துஜம்நான்கைக்கொண்டிருந்தது, இவர் ஊர்ந்துவரும் யானை எனனுடையயானை, இவர் ஆரோகணித்தபுரவி என்னுடையபுரவியென்று சொல்ல அனுதாபிப்பார்களென்னும்பொருள் தோன்றக்கண்டு, அதிசயித்துக்சிற்றமாறிச் சந்தோஷத்து

டனே பாண்டியனை உடன்படிக்கைசெய்யச்சொல்லி சிறைவிடுவித்து, அன்றுதொட்டு அவ்வுடன்படிக்கையின்படி அவனும் மற்றை அரசர்களுந்தமக்குப்பிரதிவருஷமுந்தவறாமற்பகுதிகட்டிவரவும், ஒருபுலவன் கவிபாடிப்பரிசுபெற்றுவருகையில், அவனையிசைப்புலவனொருவன்கண்டு அரசனென்று ஐயுற்று, தேர், யானை, புரவி, முதலிய சதுரங்கக்கூட்டங்களைத் திறைப்பொருளாகப்பெற்றுவருகின்ற வேந்தர்சிகாமணியே உனதுதேசம், யாது, உனதுநாமம்யாது தெரியச்சொல்ல வேண்டுமென்று வினவ புலவன்இவனை நோக்கி வீணையைக் கையிற் கொண்டு வாசிக்கின்ற பாணரே வாரும்வாரும் இந்தச் செய்தியைக்கேளும்நானரசனல்லேன் மற்றென்னில், நீரும்நானும்கல்வியால் ஒத்தகுலத்தினரோமகதநாட்டிற்குத் தலைவனும், தென்னாற்றூரைப் பரிபாலிப்பவனுமாகிய ஏகம்பவாணபூபதி மனமகிழ்ச்சி கூர்ந்து கொடுத்த அனேக வரிசைகள் பெற்றுவருகின்ற புலவன்தான். நீரும்இப்படிப்பட்ட பரிசுபெற்றுவரலாம் அவரிடத்திற் சீக்கிரமாகப்போம், அப்பிரபு வசிக்கும் சந்திரகாந்தக் கற்படுத்த முற்றங்களிலும் முத்துப்பதித்த சிகரங்களையுடைய மாடமாளிகை கூட கோபுரங்களினிடத்திலும் ஆத்திமரமிருக்கின்றது உயர்ந்தவேப்பமரமிருக்கின்றது வளர்ந்தபனைமர மிருக்கின்றது அதனருகில் அரசமர மிருக்கின்றது அரசமரத்தைச் சுமந்தசிலஅத்திமரமிருக்கின்றன இவைதாம் அந்தஸ்தானத்தை அறியத்தக்கஅடையாளங்கள்(ஆத்தி—ஆத்திமாலை புனைந்தசோழன், வேம்பு —வேப்பமாலையணிந்தபாண்டியன், பனை—பனைமாலைபூண்ட சேரன், அரசுமற்றராஜர்கள் அரசைச்சுமந்த அத்திராஜர்களைத்தாங்கிய யானைகள்)எனப்புலவராற்றுப்படையாகப் பொருளமைத்து.

தேருளைபுரவிவாரணத்தொகுதி
　　திறைகொணர்ந்துவருமன்னநின்
தேசமேதுநமதுநாமமேதுபுகல்
　　செங்கையாழ்தடவுபாணரே
வாருமொத்தகுடிநீருநானுமக
　　தேசனாறைநகர்காவலன்
வாணபூபதிமகிழ்ந்தளித்தவெகு
　　வரிசைபெற்றுவருபுலவன்யான்
நீருமிப்பரிசுபெற்றுமீண்டுவர
　　லாகுமேகுமவன்முன்றில்வாய்

நித்திலச்சிகரமாடமாளிகை
நெருகுகோபுரமருங்கெலாம்
ஒருநிறகுமுயர்வேம்புநிற்குமவளர்
பனையுநிற்குமதனருகிலே
அரசுநிற்கும்ரசைச்சுயந்தநில
வத்திநிற்குமடையாளமே.

என்பதுமுதலாகப் பற்பலபுலவர்கள் உசிதமான பாடல்கள் பாடிப்பாமாலைசூட்டவும் அவரதிகபிரபலமாகவாழ்ந்திருந்தார்.

ஏகம்பவாணன்சரித்திரம்முற்றிற்று.

—*—

# ஒட்டக்கூத்தர் சோழனுக்குப்

## பெண்பேசிய சரித்திரம்.

—(*)(*)(*)—

பலவளங்களும் நிறைந்த சொர்க்கம்போன்ற உறையூரில் நீதிதவறுமற் செங்கோல் செலுத்தி வாழ்ந் திருந்த குலோத்துங்க சோழராஜனுடைய பிதா நிரியாணத்தையிற் புத்திரனுக்குப்பட்டாபிஷேகம்செய்விக்க யத்தனித்து புண்ணிய நதி தீர்த்தங்களைக்கொண்டு மங்களஸ்நானம்செய்வித்து விலையுயர்ந்தபீதாம்பரமுடுத்து மகரகுண்டல முதலாகிய சர்வாபரணங்களும்பரிமளபுஷ்பமாலைகளும் தரித்துசிங்காசனத்தில் ஏற்றுவித்துச் சந்திரவட்டக்குடைகவிக்க கவரிவீச மங்கலச்சங்க முதலிய பற்பலவாத்தியம் முழங்க வேதப்பிராமணர் ஆசிகூற மகாசம்பிரமத்துடனே நவரதனமகுடம் சூட்டி ராஜமுத்திராமோதிரத்தை அவன்விரலில் அணிந்து செங்கோலைக் கையிற கொடுத்து அரசர் அமைச்சர்முதலானவர்களுக்கும் இவனிட்ட கட்டளைப்படி அனைவரும் நடக்கவேண்டுமென்று ஆக்கியாபித்தான் அவர்களெல்லாம்பட்டத்தரசனுகிய குலோத்துங்கசோழனுக்குப் பாதகாணிக்கைவைத்து உபசரித்தார்கள் வித்வஜனர்கள் பாமாலைசூட்டினார்கள் அவர்கள் யா

வருக்கும் முன்னே ஒட்டக்கூத்தர் அவனுக்கு க்ஷேமமுண்டாக ஒருகவிபாடவேண்டுமென்று.

ஆடுங்கடைமணி நாவசையாம லகிலமெங்கு
நீடுங்குடையைத் தரித்தபிரான்.

எனக்கொஞ்சம் குறையஇரண்டடிவரையிற்பாடினது அறிந்து அவ்வரசன்தனக்குஅவர் கல்விகற்பித்த ஆசிரியராகையால் தன்னைத்துதிசெய்வது தகாதென்று நினைத்து அதற்குமேல் "இந்த நீணிலத்தில்,,

"பாடும்புலவர்புகழொட்டக்கூத்தன்பதாம்புயத்தைச் [சோ
சூடுங்குலோத்துங்கசோழனென்றேயென்னைச்சொல்லுவர்
எனமற்றிரண்டடியும் தானேபாடி அப்பாடலைப் பூர்த்திப்படுத்திவிட்டு, பிராமணர்களுக்கு அன்னதானமுதலிய சோடசமகாதானமும் மன்னர் மந்திரிமார் முதலானவர்களுக்கு நாடுநகரம் யானைகுதிரை முதலியவரிசைகளும், கவிபாடிய புலவர்களுக்குச் சொர்ணம் வஸ்திரம் பூஷணமுதலிய பரிசும் தன்கையிற் கொடுத்து அவர்களைஉபசரித்தான்.

பிறகு அவன்தந்தை அவனைஅந்தப்புரத்திற்கு அழைத்துப்போய்அரசாடத்தவேண்டியமுறைமையைக்குறித்துச்சொல்லவேண்டியபாரதூரமானபுத்திமதிகளைச்சாஸ்திரீயமாகவும் லோகாசாரமாகவும் சொல்லி, அனந்தரம் தன்சமஸ்தானவித்வானாகிய ஒட்டக்கூத்தனையும் பக்கத்தில்வைத்துக்கொண்டு, புதல்வனைப் பார்த்து, அப்பாகுலோத்துங்கா! இப்பொழுது உனக்கு மகுடாபிஷேகம் செய்வித்ததுபோல் விவாகமும்செய்வித்து, அவ்விவாக மகோற்சவத்தைக் கண்களிக்கப் பார்க்கிறதற்கு நான்தவம்செய்யாமற்போனேன். ஆயினும், உனக்கொன்று சொல்லுகிறேன்கேள், எனக்குப்பிற்காலம் நீவேறெந்தவழியிலும் பிரவேசிக்கவேண்டாம். நமதுசூரியகுலத்திற்கும் சந்திரகுலத்திற்குமே தொன்றுதொட்டுச் சமபந்தம்நடந்துவருகிறது. அந்தமுறைமையைக் கைவிடாதே. பழங்கால் தூர்த்துப்புதுக்கால் வெட்டவேண்டாம். பாண்டியன்மகளையே மணஞ்செய்துகொள்ளென்றுவற்புறுத்தி, ஒட்டக்கூத்தனைநோக்கி,என்மனோரதத்தைநிறைவேற்றுவது உம்முதலைமேல்வீழ்ந்த பாரமென்று சொல்லித்தன்மகனை அவர்கையில் ஒப்பித்துப்பிறகு, "அதவாபுத்திரசந்ததௌ,

என்றபடி, தன்புத்திரன் தொடைமேல் தலையை வைத்துச் சயனித்த வண்ணமாய்ப் பிராணவியோகமானான்.

உடன்கூத்தர் அவ்வரசனுக்குச்செய்யவேண்டிய தகனசஞ்சயனாதி உரிமைக்கருமம் அனைத்தும் குலோத்துங்க சோழனைக்கொண்டு லோபமில்லாமற் கிரமமாக நடத்திச்சிலநாள் கழிந்தபின்பு அவனுக்குப் பெண்பேசப்போக யத்தனித்து, "நாள்செய்வது நல்லோர்செய்யாரென்பதனால்,, தாம்நோக்கிப்போகும் திசைக்குச்சூலம், யோகினிமுதலிய தோஷமில்லாததாக ஒருநன்னாட்குறித்து, அந்நாளில் நினைத்துப்போகும் காரியம்அனுகூலிப்பதற்கு முற்குறியாகநல்ல சகுனமாகும்படி அனுக்கிரகம் செய்யவேண்டுமென்று தமது இஷ்டதெய்வத்தைப் பிரார்த்தித்து, சோழநாட்டிலிருந்து பாண்டியதேசத்திற்குப் பிரயாணமாகமுதல்முதல் அடியெடுத்துவைத்தார். வைத்தவுடனே வாயசம் வலமாயிற்று அவர், "வாயசம்வலமானால் ஆயுசுவிர்த்தியாகும்,, என்றெண்ணி அப்புறம்நடக்கையில், வலியன் இடமாயிற்று. அதைப்பார்த்து,

"வால்நீண்ட கரிக்குருவி வலமிருந்தே யிடஞ்சென்றால்
கால்நடையாய்ப் போனவர்கள் கனகதண்டி யேறுவரே.,,

என்பதைநினைத்து உத்தமக்குறியென்று அதற்கப்பாற் சிலதூரம்சென்றார். அங்கேகரடைகட்டிற்று. அதைக்குறித்து "கரடைகட்டினாற்படைகட்டும்,, என்பதையோசித்துப் பிரமைகொண்டிருக்கையில், உடனேகட்டுக்காடை இடமாயிற்று, அதுநோக்கி "கட்டுக்காடை யிடமானாற் குட்டிச்சுவரும் பொன்னாகுமல்லவா,, என்றுமகிழ்ச்சிகூர்ந்து பத்தடிநடந்தார், அப்பொழுது செம்போத்துவலமாயிற்று. அவர் "செம்போத்துவலமானாற் சம்பத்துண்டாகும்,, என்றுமனம்பூரித்து அதைத்தாண்டிப்போகையில், கருடன்கட்டியதுகண்டு, இதென்னவென்று சற்றுநேரம் அவ்விடத்திலேயேநின்று பூண்டுமிதித்ததுபோலத் திகைத்துநின்று "கட்டோடேபோனாற் கந்தோடேவரலாம்,, என்பது ஞாபகத்திற்கு வந்தமையால்மனதைத் தைரியப்படுத்திக்கொண்டு கொஞ்சதூரம் போகையில், முன்புகட்டினகருடன் இடமாயிற்று. அவர் "கட்டி இடமானால் வெட்டியரசாளலாம்,, என்றும், "வெண்டலைக்கருடன் சென்றிடமானால், எவர்கையிற்பொருளும் தன்கையிற்சேரும்,, யென்றும்பெரியோர்கள் சொல்லுகிறு

ர்களே, அதனாற்குறைவுவராதென்று கருதி விரைந்துசெல்லு கையில், விச்சுளி வலமாயிற்று அதைப்பற்றி "விச்சுளிவலமா னல் நிச்சயமவாழ்வுண்டாம். மென்றுநினைத்து. பிரதமத்தில்நாம் பிரார்த்தித்தவண்ணம் வலியன் விச்சுளி செம்போத்து மூன்றும் சௌவியம் (வலம்) ஆகவும், கருடன் கட்டுக்காடை இரண்டும் அபசௌவியம் (இடம்) ஆகவும்செல்லக்காணும்படி நமக்கு இந்தப்பஞ்சசகுனமும் ஆனமையால், நினைத்தகாரியம் இனித்தடையின்றிமுடியுமென்பதற்கு யாதொருசந்தேகமுமில்லை யென்று, இடைவழியிலுள்ள காடுமலைநாடுநகர் ஆறுகுளம் ஏரிவடு வெல்லாம்கடந்து, குடைகொடியானைசேனைகளுடனே நானமாடக்கூடலென்னும்மதுரைக்குச் சமீபமாய்ப்போகும் பொழுது, பாண்டியன் ஆரோபகையரசன் மதுரைமேற் படையெடுத்து வருகிறனென்றும் தக்ஷணம் போர்க்கோலங்கொண்டுபோய்எதிர்த்துயிர் மூலமாக்கும்படி, தனது சதுரங்கபலமும் பிரயாண சன்னத்தமாகப்பேரிகை அறைவித்தான். அங்ஙனே அடியிலேவில்கட்கம்சூலம்பாசம்முசலம்சக்கரம் தோமரமுதலிய ஆயுதபாணிகளாய், முடிகளோடுமுடிகள்கழல்களோடு கழல்கள்நெருங்க, தேர்கள்யானைகள் குதிரைகளின்மேலும், பாதசாரிகளாயும், நால்வகைப்படை வீரரும்பெருவெள்ளம்போல எங்கெங்கும்வந்து நிறைந்து, எக்காளே பேய்க்காளே கொம்புபம்பை தவுண்டைதுந்துமி முதலியவாத்தியமுழக்காமத்தத்திற்கு ஆரம்பித்தார்கள். அதற்குள்ளே வேவுகாரபோய்விசாரித்து, போர்க்குரியசின்னங்கள் இல்லாமைகண்டு ஒட்டக்கூத்தர் வருகிறாரென்றுதெரிந்துவந்துசெய்தி அறிவிக்க ராஜா சந்தோஷப்பட்டு, மந்திரியை அனுப்பி அழைத்துவந்து, அவருக்கு விடுதிவிட்டுப்போஜனதாம்பூலாதிகளும் கிருத் கிர்த்தியமாய்நடப்பிக்கச்சொன்னான்.

அப்படியே அவர் அவ்விடத்திற்சேர்ந்து இரண் டொருநாள்சுகித்திருந்து, சமயமறிந்து, பாண்டியன்கழத்தை அணுகி, மரியாதையோடு ராஜதரிசனம் செய்தார். அரசனவித்த சிரேஷ்டராகியஒட்டக்கூத்தருக்கு ஆசனம்கொடுக்கச்சொல்லி உபசரித்து வந்தகாரியமென்னவென, இவர் கன்னித்துறை[illegible]கேட்கும்கேள்விக்கு "கம்புக்குக் களைவெட்டினதாய் தம்பி[illegible]ண் கொண்டதுமாக, ஓ! ராஜசேகரா! எங்கள்ராஜா இரா[illegible] குலோத்துங்கசோழமகாராஜாவின் பிதாவானவர் தமது தேகாவசானத்திலும் முடலைசுபச்செய்தியென்று சொல்லியிருந்தார். அதைத் தங்க

ருக்கு அறிவிக்கவும், தங்களைத்தரிசிக்கவும் வந்தோமென்றுசொல்லிப், பின்பு அக்கருத்தை வெளியிட்டார்.

பாண்டியன் அதிசயித்துக் குறுநகைசெய்து, ஓ! புலவா பெருமானே, உங்கள் அரசனாகியசோழன்பாண்டியகுலத்துப்பெண்ணைக்கொள்ளத்தக்கபாத்திரனா? எங்களிலும் அவனுக்குள்ளஏற்றமென்னசொல்லுமென, ஒட்டக்கூத்தர்சோழராஜர்கள் ஏறும் மல்லகதிமுதலிய ஐங்கதிகளையுடைய கோரமென்று பெயர்பெற்ற மந்தகல்யாணியாகிய பட்டவர்த்தனப் புரவிக்குப்பாண்டியர் ஏறும் கனவட்டமென்ற அசுவமசமானமாகுமா? மாரிகாலத்திலன்றி, கோகாத்திலும் கடல்போலஎங்கும் பரவிப் பெருகிப் பாய்ந்து பொன்கொழிந்து அலையெறிகின்ற அகண்ட காவிரியாற்றுக்குவையையாற்றையோ நிகராகச் சொல்லுவது? சிவனதுதிருவுளத்துக்குஉவப்பாகச் சோழர்கள் அணியும் ஆத்திமாலைக்குவேப்பமாலைநிகராகுமோ? உலகத்தைச் சூழ்ந்துகவிந்துசகலத்மாக்களுடைய கட்புலனையுமறைக்கின்ற அந்தகாரத்தைப் போக்கும் சூரியனுக்கு, அச்சூரியன்முன்ஒளிமழுங்கிப்போகின்ற சந்திரன் ஒப்பாகுமா, அதுபோல, மகாபிரசித்தமான சூரியகுலத்திற்குச் சந்திரகுலம ஒப்பாகுமா? அதுபோல, மகாபிரசித்தமானசூரியகுலத்திற்குச் சந்திரகுலமொப்பாமா? நிகரற்ற வீரமுடையவர்களுக்குள் அதிவீரனானவன்சோழனே? பாண்டியனே, வெற்றிபெற்றசோழனது புலிக்கொடிக்குப்பாண்டியனதுமீனக்கொடியோ இணையாவது, பொன்மாரிபெய்த மகிமை தங்கிய உறையூருக்குக்கொற்றசைப்பதியோஉவமையாவது, பதின்மர்பாடப்பெற்ற திருவரங்கமுதலாகியபற்பல விஷ்ணு ஸ்தலங்களையுமசம்புகேசுர முதலிய அனேகசிவஸ்தலங்களையும்தன்னகத்திற்கொண்டுஎக்காலத்தும்க்ஷாமமென்பது அணுக இடங்கொடாமற் சிவாதாரமாகிய நெல்முதலியவிளைவிகுன்றாத வளப்பமிகுந்த சோழநாட்டுக்குப்பாண்டிநாடு சரியாமோ என்னும்பொருளை உள்ளவைத்து, அவ்வழியாற் சோழனுடையபெருமைதோன்றும்படி.

"கோரத்துக்கொப்போகனவட்டமம்மானே
கூறுவதுங்காவிரிக்குவையையோவம்மானே
ஆருக்குவேம்புநிகராகுமோவம்மானே
ஆதித்தனுக்குநிகரம்புலியோவம்மானே
வீரர்க்குள்வீரனொருமீனவனோவம்மானே
வெற்றிப்புலிக்கொடிக்குமீனமோவம்மானே

ஊருக்குறந்தைநிகர்கொற்றவையோவம்மானே
ஒக்குமோயோரூட்டுக்கும்பாண்டிநாடம்மானே.
என்றொருபாடலைச்சொன்னான்

அதுகேட்டு அங்கிருந்த பாண்டியன் சமஸ்தானவித்வானாகிய புகழேந்தியென்பவர் ஒட்டக்கூத்தரை நோக்கி முனிசிரேஷ்டராகிய அகஸ்தியர் திராவிடபாஷையைப் பிரசங்கஞ்செய்தது தென்னாட்டிலுள்ள பொதியமலையிலிருந்தோ சோழநாட்டிலுள்ள நேரியமலையிலிருந்தோ சோமசுந்தரக்கடவுள் ஒப்புச்சொல்லுதற்கரிய அறுபத்துநாலு திருவிளையாடலைச் செய்தது மதுரையிலேயோ உறையூரிலேயோ ஸ்ரீமகாலட்சுமிசமேதனாகிய நெடுமால் மீனாக அவதரித்தனரிப் புலியாக அவதரிக்கவில்லையே ஆகலால் மீனக்கொடிதானே சிறந்தது புலிக்கொடிக்கென்ன சிறப்பிருக்கின்றது தேவர்கள் முனிவர்கள் சென்னிமேலேறும் பொன்னடியையுடைய சிவபெருமானது ஜடாமகுடத்தின் மேல் ஏறியிருக்கப்பெற்றது சூரியனோ சந்திரனதானே அதனால்மேற்பட்டது சந்திரகுலமோ சூரியகுலமோ சமணரை வெல்லும்பொருட்டுத்திருஞானசம்பந்த மூர்த்தியானவர் பதிகமெழுதியிட்ட ஏடானது எதிரேறிக் கரை சேர்ந்தது காவிரியிலேயோ வையையிலேயோ அது பற்றி வையையா நல்லவோ மாட்சிமைப் பட்டது. பேபயனுகாமல் அதற்குப்பெரும்படையாய்த்தோன்றி, அதைவிலக்குவது சோழனது ஆத்திமாலையோ? பாண்டியன் அணியும்வேப்பமாலைதானே. மதுரையே அழிக்கப் பொங்கிவந்தசமுத்திரம் அஞ்சிவந்துபணிந்தது சோழன்காலையோ? பாண்டியன்காலைத்தானே என்னுமகருத்தை அடக்கி

"ஒருமுனிவ னேரியிலோ வுரைத்தெளிந்ததம்மானே
ஒப்பரிய திருவிளையாட் டுறந்தையிலோ வம்மானே
இருநெடுமா லவதாரஞ்சினைபுலியோ வம்மானே
சிவன்முடிமேலேறுவதுஞ் செங்கதிரோ வம்மானே
கரையெதிரல் காவிரியோ வையையோ வம்மானே
கடிப்பகைக்குத் தாதகியோ கண்ணியோ வம்மானே
பரவைபணிந் ததுஞ்சோழன் பதந்தனையோ வம்மானே
பாண்டியனூர் பராக்கிரமம் பகர்வரிதே யம்மானே.

என்ற பாடலைச்சொல்லி, அவர்சொன்னதைக் கண்டிக்க, ஒட்டக்கூத்தர் இவனூர் கொன்றைமாலைபோலக்குறுக்கேவந்துவீழு

க[redacted]பேசினதற்கெல்லாம் பிரதிகூலமாய்ப் பேசத் தலைப் பட்டா[redacted]ப்படி விளையுமென்பதற்குத் தானே வருகிறவழியிலேகரு[redacted]காணடையும் கட்டின வென்று சிந்தித்துச் சித்தம் கலங்கியி[redacted].

[redacted]வாறப்படியிருக்க பாண்டியராஜன் தன்தந்தைவழிதாய்வழி[redacted]சம்பந்துவர்க்கத்திற் பெரியோர் சிறியோர் களைவரையும் வர[redacted]ழைத்து ஒட்டகூத்தர் சோழராஜனுக்குப் பெண் பேசவந்த செய்தியை அவர்களுக்குத் தெரிவித்து இந்த விஷயம்சுற்றத்தாருக்கு அசம்மதமாகச் செய்யத்தக்க தல்லவே ஆகையால் அவனுக்குக் கொடுக்கலாமா கொடுக்கலாகாதா உங்கள் அபிப்பிராயமென்னவிது ஆயிரங்காலத்துப் பயிராகையாலும் பெண்ணைப் பெற்றுப்பத்துவயதுக்குமேல் வைத்திருப்பதுபாவ மென்பதனாலும் செவ்வையாய்த் தீர்க்காலோசனைபண்ணித்தனித்தனி அவரவர் அபீஷ்டதனைத் ஒளியாமல் வெளியிடவேண்டு மென்று உசாவினான் அவ்வண்ணமே தங்களுக்குள் கலந்துபேசி அவர்களிற் சிலர் அரசர்க் குரிய கல்வி செல்வ முதலியவைகளுள் சோழனைக் குறித்து என்ன குறை சொல்லுகிறது யோசிக்குமிடத்தில் அவன் கல்வியிற் சாமானியனா செல்வத்திலே தான் குபேரனுக்குக்குறைந்தவனாவென்றார்கள். சிலர்ஐம்பத்தாறுதேசத்தரசர்களுடைய படங்களுக்குள் சோழனுடைய படத்தைஎடுத்து, அதில்எழுதப்பட்டிருக்கின்ற அவனது உருவத்தை ஒருவர்க்கொருவர்காட்டி, சோழன்அழகிலேதானென்ன மன்மதனுக்குத் தாழ்ந்தவனோ.? பாருங்கள். அவன்வட்டமாய் ஒளிபெற்றபூரணசந்திரனுபோலப் பரந்தமுகமும். தாமரைத்தளம் போலும் அழகாகக் கருணைசுரந்தகண்களும், மதனகோதண்டம் போல வளைந்துகறுத்த புருவமும், பவளம்போலச்சிவந்தவாயும் விசயலட்சுமியின் அரங்கமணிமண்டபம்போல விசாலமாய் எடுத்தமார்பும், நெடியமேருமலைபோலப் பருத்துயர்ந்ததோள்களும், அன்னசிரங்கம்போலப் பௌமிதமான நடையுமுடையவனல்லவோ வென்றார்கள். அதைக்கேட்டசிலர் "கைந்நிறைந்த பொன்னில்லாவிட்டாலும், கண்ணிறைந்த கணவனிருக்கவேண்டும்; என்பதனால், நீங்கள் அழகைச்சொல்லவந்ததுசரிதான். ஆயினும், இரண்டுகண்ணுமில்லாத பிறவிக்குருடனாகிய திருதராஷ்டிரமகாராஜனுக்குப் பெண்கொடுத்தானே காந்தாரதேசாதிபதி, அவன் அழகைப் பொருள்செய்யாமற் போன தென்னவென்று

வைகளுள்கொண்டுவந்து கொடுப்பார்கள். அவைகளிற்புகழேந்தியானவர் தாமசமைத்துண்டு மீந்தவைகளைச் சிறைச்சாலைக்காவற்சேவகருக்குக்கொடுப்பார், அதனால் அச்சேவகர்கள் அவர்மேல் அதிகப்பட்சம்வைத்து அவரைமரியாதையாய்நடத்திவந்தார்கள்.

இப்படியிருக்கையில், சோழன்கலியாணம் நிறைவேறினமாத்திரத்தில் தன்மனைவியையழைத்துக்கொண்டு உறையூரில்வந்துசேர்ந்து சுகமாய்வாழுநாளில், அடுத்ததைப்பொங்கலுக்குமுன்னாட்சாயங்காலம் அவன்மிக்கஆடம்பரத்துடனே வீதியில்யானைமேற்பவனிவந்தான், சிறைச்சாலைத் தளத்தின்மேல்நின்று புகழேந்தி அவ்வேடிக்கைபார்த்தபொழுது, சோழன் அவரைத் தன்னருகிலிருந்த ஒட்டக்கூத்தனுக்குக் காட்டி, இதோமேன்மாடத்தில் நிற்கின்றாரே புகழேந்தியென்பவர் இவர்தமிழில்மகாசமர்த்தரல்லவாவென்றான். அதற்கு ஒட்டக்கூத்தன் வேங்கைப்புலிசகுமுன் மான்நிற்குமா? எரிகின்ற கடுநெருப்புமுன் சாரமற்று உலர்ந்தவெட்டுக்காடுநிற்குமா? கடற்சுறாவுக்குமுன் மற்றசிறுமீன்கள்நிற்குமா? சூரியோதயத்திற்பனிநிற்குமா? அந்தப்படிக்கல்வியில் எனக்குமுன் இவன் நிற்கமாட்டுவானோவென்னும் கருத்துத்தோன்ற அவரையிகழ்ந்து.

“மானிற்கு மோவந்த வாளரிவேங்கைமுன் வற்றிச்செத்த
கானிற்கு மோவவ் வெரியுந் தழன்முன் கனைகடலின்
மீனிற்கு மோவந்த வெங்கட் சுறவமுன் வீசுபனி
வானிற்கு மோவக் கதிரோ னுதயத்திற் றார்மன்னனே.”

என்று ஒருபாடலைச்சொல்ல, அதுகேட்டுப் புகழேந்தி இவன் அவ்வளவு சமர்த்தனோவென்று சிரித்து ராஜாவைப்பார்த்து, இந்தப்பாடலைவெட்டிப் பாடவோ அல்லது ஒட்டிப்பாடவோவென்றுகேட்க, அவன் வெட்டிப்பாடவேண்டாம் ஒட்டியேபாடுமென்ன, அவர் அந்தமான் முதலானவைகள் அவனைப்புலி முதலானவைகள் நானேயெனப்பொருள்படும்படி.

“மானவ னுனக்க வாளரிவேங்கையும் வற்றிச்செத்த

அதற்குச் சிலகாலத்திற்குமுன்னொருவித்வான்சோழன் மேல்
பாட்டுப்பாடிவர, அரசன் அப்பாடலைவியந்து, அவனுக்குஉசிதமா
ன வெகுமதிசெய்து, கொடிகுடை எக்காளமுதலியவிருதுகளும்
கொடுக்கக்கண்டு, ஒட்டக்கூத்தன்பொறாமைகொண்டுசோழனைப்
பார்த்து, கிழக்குதெற்குமேற்குவடக்கென்னும்நான்கும் இவற்றிற்
குஇடையிலுள்ளகோணம்நான்கும், மேல்கீழிரண்டுமாகிய தசதி
சைகளும்பதறிப்பயந்துநடுங்கிப்போக, நட்சத்திரங்களெல்லாம்ப
லபலவென்றுஉதிர்ந்து சிதற, பகிரண்டத்தின்முகடுவரைக்கும்நீ
ண்டமந்தரகிரியாகியமத்தைக்கொண்டு திருப்பாற்கடலைக்கடை
ந்து, தேவர்களுக்குஅமிர்தங்கொடுத்த ஸ்ரீமகாவிஷ்ணுவின் அம்ச
மாயவதரித்துப் பூமண்டலமுழுதும் அரசாளப்பெற்றமானாபர
ணனாகிய ராஜசேகரா! பரமசிவன் பரிவுகூர்ந்து கொடுத்தருளி
ய முத்துப்பந்தலில்வசிக்கின்ற திருஞானசம்பந்தப் பிள்ளையார்
பாடிய பாடலுக்கும், சூரபத்மன் முதலான அசுரர்களைக்கடிந்த
சக்திவேலைதாங்கிய முருகக்கடவுள் பாடியபாடலுக்கும், பொதி
யமலையில் எழுந்தருளியிருக்கும் முனிசிரேஷ்டராகிய அகஸ்தி
யர் பாடிய பாடலுக்கும், கொத்துக்கொத்தா யிருக்கின்ற சடை
யினையுடைய சிவபெருமான் பாடிய பாடலுக்கும், பத்மபீடத்தி
ல் வீற்றிருக்கும் பிரமதேவன் பாடிய பாடலுக்குமே குடைகொ
டி காளமுதலிய பலவிருதுகளும் கொடுக்கலாமே யல்லது, இந்
த அற்பமாகிய தமிழ்ப்பாடலுக்கெல்லாமா ஏன் கொடுக்கவேண்
டிய தென்னும் பொருள் தோன்ற.

"பத்துக்கொண்டன திக்குப் பரவிப்போயுலையப் பைம்பொற்
றாரகைசிந்தப் பகிரண்டத்திடைநீள், மத்துக்கொண்டு மதிக்கு
திரையாழி நெடுமால் வடிவாகிப் புவிகைக்கொண் டருணாப
பரணா, முத்துப் பந்தரிற்குருளைக்குஞ் சினவேல் முரு

கற்கும் பெரியக்கோமுனிவர்க்குஞ்சடிலக், கொத்தற்கும் பதுமக்கொத்தனுக்குமலயதிகக்கூழைத்தண்டமிழுக்கென் கொடியுங்களாமுமே.

என்றுறொருபாடலைச் சொல்லித் தடுத்து, அன்று முதலாகக் பாடிவருபவர்களையெல்லாம் பிடித்துச்சிறைச்சாலையில் அடைப்பித்து தேவிகொலுவிருக்கின்றநவராத்திரிகாலத்தில் ... துவெளிப்படுத்தி அவர்களைஇருவர் இருவராக ... ரகசிறு

த்தி, பிடாரிக்குச்சேர்மகடாவெட்டுவது போலச்சற்றும் இரக்கமில்லாமல்அவர்கள் தலைகளைப்பதைக்கப் பதைக்கவெட்டிவழக்கமாய்ப்பலிசெலுத்திவருவதுண்டு. அதுபற்றிஅந்த ஒட்டக்கூத்தனையும், ஒருவன்பாடும்பாட்டில் ஏதாவதுகுற்றங்கண்டவுடன் அவன்தலையில்நக்கென்றுகுட்டுவதுபற்றிப் பிள்ளைப் பாண்டியனையும், வாதுசெய்யும்பொழுதுஎதிரிதோற்றால் அவன்காதில் மாட்டியதுறட்டைப் பிடித்திழுத்துக்காதைஒட்ட அறுப்பதுபற்றிவில்லிபுத்தூராழ்வானையுங்குறித்து.

குட்டுதற்குப்பிள்ளைப் பாண்டியனேவில்லைகுறும் பியளவாக்காதைக் குடைந்து தோண்டி, எட்டினமட்டறுப்பதற்கோ வில்லியில்லை யிரண்டொன்று முடிந்துதலை யிறங்கப்போட்டு, வெட்டுதற்கோ கவியொட்டக் கூத்தனில்லை விளையாட்டாய்க் கவிதைதனை விரைந்துபாடித், தெட்டுதற்கே வழியில்லாத் துரைகளுண்டு தேசமெங்கும் புலவரெனத் திரியலாமே,

என்று முற்காலத்தார்பாடியுமிருக்கின்றனர். அதுநிற்கமேற்சொல்லியவழக்கப்படி அவன் தற்காலத்திலும்செய்யஎத்தனித்துப்புலவர்களில் அனேகரைப்பிடித்துச்சிறைச்சாலையில் அடைத்துவைத்தான் அச்செய்திசிறைச்சாலையிலிருக்கும்புகழேந்திப்புலவர் அறிந்து, ஆ ஐயோ சண்டாளன்பாவமென்பதும்பழியென்பதும் பாராமல்தன்னைப்போன்ற புலவர்களைவெட்ட மனம் துணிந்தானே இதையென்னவென்றுசொல்லுகிறதென்று வியசனப்பட்டுப் பிறகு அவர்களையெல்லாம்கொலைக்குத்தப்புவிக்கவேண்டுமென்று ... நல்லபுத்திமா ... னொருவன், அம்பட்டனொருவன், கருமானொருவன், வேலாளனொருவன், வண்ணானொரு

வன் ஆக ஐந்துபெயரைத் தெரிந்தெடுத்து அவர்களுக்குச் சிறையிருப்பிலேதானே சம்பிரதாயத்துடனே இலக்கிய இலக்கணங்கள் பயிற்றுவித்து அதிக சமார்த்தர்களாம்படி செய்தார்.

அவர்களைவரும் அவரிடத்தில் முறையாகக் கல்விகற்றுமிக் கதிறமுடையவர்களாயிருக்கையில் நவராத்திரி சமீபித்தது. சோழராஜன் ஆகாசத்தை முட்டப் பச்சைப்பந்தல் போட்டுக்கமுகு வாழை முதலியவைகளைக்கொண்டு அலங்கரித்துத் திருவிளக்கேற்றித் தேவியைக் கலசத்தில் ஆவாகனம் பண்ணி ஒன்பதுநாள் கொலுவிருத்திப் பூஜித்துவந்து பத்தாம்நாளாகிய விஜய தசமியின்று உத்வாசனம்பண்ணுவதற்குப்பலிகொடுக்க யத்தனித்தான். அத்தருணத்தில் அந்தத்தேவி சந்நிதிக்குமுன்னே இருபக்கத்திலும் இரண்டுகாற்காலி கொண்டுவந்து போடப்பட்டன. அவற்றுள் ஒன்றின்மேல் அரசனும் மற்றதன்மேல் ஒட்டக்கூத்தனும் கத்தியையுருவிக் கைபிற்பிடித்தவண்ணமாய் எதிரெதிராக உட்கார்ந்தார்கள். ஒட்டக்கூத்தன் சிறைச்சாலைக் காவலதிகாரியைநோக்கி அங்குள்ள படித்த கடாக்களைப் பிடித்துக்கொண்டுவாவென்று சொல்ல அவன் விசனப்பட்டுக்கொண்டே சிறைச்சாலைக்குப் போய்க் கதவைத்திறந்து அதற்குள் அடைக்கப்பட்டவர்களை வெளியே வாருங்களென்றான். கொஞ்சம் குறைய நூறு பெயர்வரையில் இன்றைக்கு நமக்கு முடிவுசம்பவித்தது இதற்கென்னஉபாயம் செய்கிறதென்று கர்ப்பம் கலங்கிக் கண்ணீர் விட்டுக்கொண்டே வெளிப்பட்டார்கள். புகழேந்தியாரவர்களிற் பெரும்பான்மையோர் சொற்பக்கல்வியுடையவர்களாயிருப்பதனால் அந்தக்காலாந்தகன்கேட்கும் கடினமான கேள்விக்கு உத்தரம்சொல்லத் தெரியாமலிருப்பார்களே அதுகண்டு அவன் அநியாயமாய்ப் பதைக்கத் துடிக்க வெட்டிவிடுவானே யென்றுநினைத்து அப்படிப்பட்டவர்களைப் பின்னேநிறுத்தித் தம்மிடத்திற் சந்தேகவிபரீதமறக் கல்விபயின்ற ஐவர்களையும் ஒருவர்பின்ஒருவராய் ஒட்டக்கூத்தனுக்கு முன்னேபோகும்படி திட்டப்படுத்தி அனுப்பினர்.

அவராலனுப்பப்பட்டவர்களிலொருவன் பிரதமத்திற் போய்நின்றான் அப்பொழுது ஒட்டக்கூத்தன் தன்னைப் பெரியமதயானையாகவும் அவனை ஒருசிறிய முயற்குட்டியாகவும்பாவித்துக்கொண்டு அவன் முகத்தைப்பார்த்து மோனை எதுகை முதலிய தொ

றான். அதற்கு அம்பட்டன் இவனம்மை என்ன செய்தாலும் செய்யட்டும் தலைக்குமிஞ்சின ஆக்கினையும் கேவணத்துக்குமிஞ்சின தரித்திரமுமில்லை என்று தைரியங்கொண்டு எனக்குக் கண்ணும் பொட்டை நான்சாதியிலும் அம்பட்டன் ஆனாலும் பாவணர்களுக்கு முன்னே சிறிதும் சங்கையின்றிச் செம்பாகமான பற்பல சந்தங்களையுடைய தமிழ்ப்பாடல்களை யாவருந்திடுக்கிடச்செய்கின்ற நீயும் திடுக்கிடும்படி பாடுவேனென்பதற்கு

கண்பொட்டை யாயினு மம்பட்டனுங்கவி வாணர்முன்னே
பண்பட்ட செந்தமிழ் நீயுந்திடுக்கிடப் பாடுவனே

என்றான். அதுகேட்டு ஒட்டக்கூத்தன் இவன் அம்பட்ட கிருதைக்காரன் பித்தனென்று நினைத்து அவனைமறுபக்கத்தில் நிறுத்திவேறொருவனை அழைக்கச்சொன்னான் சிறைக்கூடத்திலுள்ள புகழேந்தி சொற்படி சேவகர்கள் குருடனைக்கொண்டுவந்து நிறுத்தினார்கள்.

ஒட்டக்கூத்தன் அவனை முன்பு குயவனையும் அம்பட்டனையும் கேட்டதுபோலக் கவிசொல்லிக் கேள்விகேளாமல் வாய்மொழியாகத்தானே நீயார்மகன் உன்பெயரென்ன நீபெற்றமகிமையெப்படிப்பட்டது உன்குலமெது சொல்லென்றும் தப்புப் பாட்டுப் பாடலாமாவென்றும் கேட்டான் அதற்குஅவன்நான்செல்லப்பாசாரிகுமாரன் என்பெயர் திருவேங்கடாசாரிநான்செகத்குருவாயிருக்கிறவன். என்குலம்மனுமயன்சிற்பி துவஷ்டவிஸ்வவென்னும் ஐந்திற்கருமார்குலம் நான் குற்றமறப் பாடுகிறபாட்டைக் குறித்து மாங்காய்புளித்ததே॥ என்பதாக வாய்க்கெளிதாகநீகுற்றங்கூறவந்தாய் இப்படி என்கவியைச்சுட்டி வீண்குற்றங்கூறுகிறவர்களை நான் சும்மா விடமாட்டேன் குறட்டைக்கொண்டுபதினாறுபல்லையும் பிடுங்கிப் பருந்தாட்டமாட்டிப் பகையாளிகள் பார்த்துச்சிரிக்கும்படி அவர்கள் கண்களுக்கெதிரே இரவும்பகலும் ஓய்வில்லாமற கவியாகிய இருப்பாணிகளைக் கொண்டு வாயிற்கடாவுவேனென்றகருத்துத்தோன்ற

கடவன் ... ண்டு
ன்னி.

என்றபாடலைச்சொன்னான் அதுகேட்டுஒட்டக்கூத்தன் தன்னைப் புகழாதகம்மாள னில்லையென்பார்களே அதற்கேற்றபடி இவன் தன்னைப் புகழ்ந்துபேசுகிறானென் றெண்ணி அவனை அப்படியில்லென்று நிறுத்தி பின்னொருவனைக் கொணடுவாவென்றான் என்றமாத்திரத்தில் வேளாளன்வந்துநின்றான்

அவனைநோக்கி ஒட்டக்கூத்தன் பிரபல கவிஞர்களாகியஎங்களுக்கு முன்னைபுன்கவிஞர்களாகிய நீங்களும் வித்வான்களென்று வெளிப்பட்டு ஞானியரொடுந் திருக்கூத்தோடே நானுமாடுகிறேன் என்பதாகக் கவிபாடுகிறீர்களே இதென்னவெட்கக்கேடென்றான் அதற்கு வேளாளன் இக்கூப் பஞ்சாசதகோடி பூமண்டலத்தையும் ஒருகுடைநிழலில் அடக்கி ஏகாபத்தியமாய் அரசாளுகின்ற சக்கிரேசுரனைக்கண்டு மற்ற ஐம்பத்தாறு தேசத்தரசர்கள் நாமெவ்வளவு பூமிக்குடையவர்கள் இவனுக்கெதிர்த் தட்டாக்கடாறுடுக்கல் புல் தின்னுகிறதுபோல ஆளுகைசெய்தது தகுதியல்லவேயென்று தந்தம் தேசங்களைக் கைவிட்டுக் கடலிலேபோய் விழுந்து மாண்டுபோனார்களா.

பூவிற்குத் தாமரை பொன்னுக்குச் சாம்புநதம்
ஆவிற்கருமுனியா யானைக்கரும்பல
தேவிற்றிருமா லெனச்சிறந்த தென்பவே
பாவிற்கு வள்ளுவர் வெண்பா

என்றபடி ஒருதடாகத்திலுள்ள புஷ்பங்களுக்குள் மிகச்சிறந்ததாயும் ஸ்ரீ மகாலட்சுமிக்கு வாசஸ்தானமாயுமிருக்கின்ற தாமரைபுஷ்பிக்கக்கண்டு அதனருக்கிலிருக்கும் அற்பமாகிய கொட்டியும்புஷ்பிக்காமலிருக்கின்றதா அந்தப்படி எழுவகைத் தீவுகளையும் பரிபாலனம்பண்ணுகின்ற சோழமகாராஜாவேகசிரேஷ்டராகிய ஒட்டக்கூத்தரே நீங்கள் சொற்றிட்பமும் பொருணுட்பமும் உடையதாகப் பாடுகின்ற பாடலைக்கண்டு எம்போலும் சொற்பமாகிய கவிகளைப் பாடுகின்ற புலவர்களெல்லாம் பயந்து பாடாமல் ஓடியொளித்துப் போவார்களா சொல்லுமென்னுங் கருத்தமையவைத்து.

கோக்கண்டு மன்னர் குரைகடற் புக்கிலர் கோகனகப்
பூக்கண்டு கொட்டியும் பூவாதொழிந்தில பூதலமேல்
காக்கின்ற மன்னா கவிபாட்டக் கூத்தனுங் கட்டுரையாம்
பாக்கண் டொளிப்பர்களோ தமிழ்ப்பாடிய பாவலரே

என்ற பாடலைச்சொல்லிப் பின்னும் தனக்குள் சோழனுக்கு இவன் வித்தியாகுருவா யிருப்பதுபற்றி இவனைமிகவும்பெருமைப்படுத்தி அவன்தன் சிங்காசனத்திற்கு மேலாக உயர்ந்தஆசனத்தில்வைத்து இவனுடைய பாதத்தைத் தலைமேலே தாங்கிக்கொண்டிருக்கிற காரணத்தால் குப்பையில்முளைத்த கொடி கூரைமேலேறினதுபோல் இவன் தன்னை அதிக சிலாக்கியப் பட்டவனாக நினைத்துக்கொண்டு கர்வித்து அதிகாரிவீட்டுக் கோழிமுட்டைகுடியானவன் வீட்டு அம்மியையும் உடைக்கும் என்பதாகம்மையெல்லாம் பொருள் செய்யாமற் கிரமந்தாழ்வாகநடத்துகிறானென்றெண்ணி ஒட்டக்கூத்தனை நோக்கி உலகத்தில் எப்படிப்பட்டவர்களுக்கும் தங்குற்றந் தெரிகிறதேயில்லை அதைக்குறித்துச்சாஸ்திரமும் அரசனானவன் முன்பு தன்னிடத்திலுள்ள குற்றத்தைக்கண்டு அதனைப் பற்றறக்களைந்து பின்பு பிறரிடத்திலுள்ள குற்றத்தைக்கண்டு களையவேண்டும் அப்படிச்செய்தால் அவனைச் சிறிதேனும் குற்றமென்பது அணுகாது அவன் எப்பொழுதும் நீதிமானாயிருப்பானென்று சொல்லுகின்றதே அதை நீங்கள் ஆராய்ந்தறியவில்லையோவென்றான் அப்பொழுது அவன் கடுங்கோபங்கொண்டு பின்விளைவதைஉணராமல்அடாஎங்களுக்குச்சட்டக்கல்வி ஓதவந்தையோ நீசொல்லுகிறதை யோசிக்குமிடத்தில் முண்டையைப் பிடித்த கண்டமாலை முருங்கையையும் கூடப் பிடித்தது என்பதுபோல நாங்களுந் தப்புப்பாட்டுப்பாடியிருக்கிறதாகவல்லவோ காணப்படுகின்றது நல்லது எங்கள்பாட்டில்நீகண்ட வழுவென்ன சொல்லென்று உறுக்கிக்கேட்டான் வேளாளன் அட [illegible] என்பதிலை இவன்குற்றத்தை இவனுக்கு எடுத்துக்காட்டி [illegible] அடங்கும் இல்லாவிட்டால் அடங்கமாட்டானென்று நினைத்துஐயா நீர்முன்பு சோழமகாராஜாவின் மேற் பாடியஅண்டத்துப் பரணியென்னும்பிரபந்தத்தில் இந்தப் பிரம்மாண்டத்தையே நகரமும் பூமியைச்சுற்றியிருக்கின்றசக்கரவாளகிரியையே மதிலாகவு

ம் அதற்கப்புறத்தி லிருக்கின்ற சப்த சமுத்திரங்களையே அகழாகவும் பூமிமத்தியிலுள்ள மகாமேருவையே கோட்டைக்கொடிக்கம்பமாகவும் ரூபகப்படுத்தி வருணித்திருக்கிறீரே அகழானது புறத்திலிருந்தாலல்லவோ கோட்டைக்கு நடுவகத்திலிருக்கிறதாகச் சொல்லப்பட்டிருக்கின்றதே அதனால் என்னபயன் இதுசரியாறு சொல்லவேண்டுமானால் அண்டத்திற்குப்புறத்திலுள்ள பெரும்புறக்கடலைச் சொல்லாமலே கம்பர் இராமாயணத்தில் நகரவருணனையில்.

நேமிமால் வரைமதி லாக நீள்புறப்
பாமமா கடல்கிடங் காகப் பன்மணி
வாமமா ளிகைமலை யாக மன்னற்குப்
பூமியு மயோத்திமா நகரம் போலுமே.

என்றசெய்யுளிற் பெரும்புறக்கடலை அகழாகச்சொன்னதை யாவது பார்க்கவில்லையா அல்லது கேட்கவுமில்லையா வென்றான்.

அங்கமட்டில் அக்கினிதேவனுக்கு-அபிஷேகம் பண்ணினதுபோல ஒட்டக்கூத்தன் முகங்கருகி அவனைப்பிடித்திருந்த அகங்காரமாகிய துஷ்டப்பேய்விட்டுத் தொலைந்தது அப்புறம் அவன் மற்றவர்களை அழைத்துக்கேட்டால் அவர்கள் ஏதேதுசொல்வார்களோவென்ற அச்சத்தினால் நாவெழாமல் வாய்ப்பூட்டிடப்பட்டதுபோல ஒன்றும் பேசாமற் சிறிது நேரம் சும்மாவிருந்து பிறகு இவர்களை நாம் சிறைப்படுத்தினது சனியனை விலைக்கு வாங்கினதுபோலிருக்கிறதென்றும் நமது பெயரைக் கேட்டவர்களெல்லாம் இடியோசைகேட்ட சர்ப்பம்போல நடுங்குவார்களே அப்படியிருக்க இவர்களுக்கு இந்தத் தைரியமும் இவ்வளவுவல்லமையும் ஆராலே உண்டாயின அந்தப்புகழேந்தி யென்பவனாலே தான் அவன் இப்படிப்பட்ட அற்பமனிதர்களைக்கொண்டு நம்மை அவமானப்படுத்தினானல்லவா ஆகையாலவனை அவன் உயிர்விடுமளவும் சிறைவிடச் செய்யவொண்ணாது இவர்களையெல்லாம் வீணாகச்சிறைபடுத்தி வைப்பதனால் நமக்குப் பிரயோசனம் ஒன்றும் இல்லையென்று தனக்குள்ளே நிச்சயித்து அவர்களைப் பார்த்துநீங்களெல்லோரும் இனித் தடையில்லாமல் சுகமாய் உங்கள் தேசத்துக்குப் போகலாம் என்று புகழேந்தி ஒருவ

தவிர, இதரமானவர்களை யெல்லாம் அனுப்பி விட்டான். அவர்களனைவரும் இதுவரையில் நம்மைப் பிடித்திருந்த டாழுஞ்சனியானது புண்ணியாத்மாவாகியபுகழேந்திப் புலவராலே இன்றோடே நிவாரணமாயிற்று. நமக்காகச் சகாயப்பட்ட அவருக்குவந் தவிபத்து பகவானுடைய அனுக்கிரகத்தால் சூரியனைக்கண்ட பனிபோலச் சீக்கிரம் நிவர்த்தியாக வேண்டுமென்று கடவுளை ஸ்துதிபண்ணிக் கொண்டு போனார்கள்.

புகழேந்திப் புலவர் பகாட்பிரகாரம் கிரகசாரம் போதாமையாற் சிறையிருப்பிலேயே இருந்தார். வெகுநாள் சென்றும் அவரை விடுதலை செய்யவேண்டுமென்று அரசனுக்கும் புத்தி பிறக்கவில்லை. இப்படி யிருக்கையில் அதை யரசனுடைய தேவியறிந்து நம்முடைய பிதாவின் சமஸ்தான வித்வானை ஒட்டக்கூத்தன் சிறைப்படுத்தி யிருக்கின்றான். அவனுடைய அபிமதப்படி நமது மகாராஜாவும் நெடுநாளாகியும் அவரைச் சிறையிருப்பிலிருந்து விடுதலை செய்யாமலிருக்கின்றார். இதென்னகோரம் கேள்விமுறை யில்லையாவென்று மனவருத்தப் பட்டுக்கொண்டிருந்து ஒருநாள், சயனகிருகத்திற்கு ராஜாவரும் குறிப் பறிந்து கதவைச்சாத்தினால் நியாயம் பிறக்குமென்று அந்த வீட்டுவாசற் கதவைச்சாத்தித் தாள்பூட்டி அரசனை உள்ளே பிரவேசிக்கவொட்டாமல் தடைசெய்தாள். அதுகண்டு குலோத்துங்கன்.

"களபவண்டலிடு கனகக்கொங்கைமிசை கிளைவெழுந்துகனல் சொரியுமென், றளகபந்தியின்மிசை யளிகள் பந்தரிடு மரிவைமீர்கடை திறமினோ,,

என்றும்,

"குதளவளவெனு மிளமுலை நுடியள வளவெனு நுண்ணிடை
காதளவளவெனு மதர்விழிக்கடலமு தனையவர் திறமினோ,,

என்றும் கலிங்கத்துப்பரணியிற்சொல்லியவண்ணம், கடை திறக்கவேண்டுமென்று பற்பலவிதத்திலும் இதம்சொல்லியும் திறவாததனால், தொன்றுதொட்டு அரசர்களுக்குள் ராஜஸ்திரீகளுக்கு ஊடல் நிகழும்பொழுதெல்லாம் அவர்கள் புலவர்களைக்கொண்

க்கூத்தன் பாட்டுக்கு இரத்டைத் தாழ்ப்பாளென்பதாகப் பின்னுமொரு தாழ்ப் பாள்போடச் சம்பவித்ததென்று சொல்ல, குலோத்துங்கன் நம்முடைய மனைவிக்கு ஊடல்நிகழ்ந்ததற்குக்காரணம்பாதொன்றும் தெரியவில்லையே அவளுக்கு நாமென்னகுறைசெய்தோம். அவளிஷ்டப்படிக்கெல்லாம் நடத்திதானேவருகிறோம் நமக்காகதவர்கள் ஆரேனும் அவளுக்குத் துர்ப்போதனை செய்தார்களென்று நினைப்போமானால், அப்படிப்பட்டவாஇங்கொருவருமில்லையே. அல்லது ஜென்மாந்தரகதின் கர்மானுபவத்தால் தான் அவள் குணம் பேதித்ததோ, இதென்னதவக்குறை, அபூர்வமாக ஒருவேளை நம்மிடத்தில் அவளுக்கு ஊடல்நிகழ்வது சகஜமே. அவர்மேல் சீற்றம் உதிப்பதற்கு ஏதென்னவென்று தனக்குள்ளே பலவிதத்திலும் தீர்க்காலோசனை பண்ணிப்பார்க்கும்பொழுது புகழேந்திப்புலவரை ஒட்டக்கூத்தர் சிறைப்படுத்தினமையால் அவர்மேல் அருமையும், நாம் அவர்களுக்கு இணங்கி நின்று சிறைமீட்காமையால் நம்மேல் வெறுப்பும் விளைந்தனவென்று தெளிந்து, அந்தக்ஷணமே புகழேந்திப் புலவரைச் சிறைநீக்கி ராக்ஞிகோபத்தை ஆற்றி அவரோச்சமாதானமென்று ஏவினான்.

அவர் அந்தப் புரத்துக்குப் போய்த் தமது வரவை அரசிக்கு அறிவிக்க, அவள் அவருக்குத் தன் உயிர்த்தோழியைக் கொண்டு ஆசனங் கொடுக்கச் சொல்லி மரியாதை செய்வித்தாள். அவர் அப்பொழுது ராஜமகிஷிக்குச் சீற்றமாறி மனமகிழ்ந்தணியும்பொருட்டு மிகக்குளிர்ச்சியும் மிருதுவும் மதுரமும் நயமுமாய்த் தோன்றும்படி இருபிளவாகப் பகிர்ந்த மெல்லியநூலின் ஒருபிளவுபோன்ற நுண்ணியதாகிய சிறுநிலையையும், பொற்குழைகளை ஏந்திய செவியைத்தொடுகின்ற இணைவிழிகளையுமுடை

ய தெய்வப்பெண்போல்வாய்; வானத்தினின்று பெய்யும் மழை
யிராது வண்மை ஒருகூறும். இவளுக்கு தண்மையோ அதற்
கிருகூறுமென்று யாவரும் அதிசயிக்கத்தக்க மிக்க வள்ளற்றன்
மையையும், அபிமானமாகிய ஆபரணத்தையுமுடைய சோழம
காராஜா உன்னுடைய வாசலைத் தேடிவந்தால அவர்மேலென்
ன குற்ற மிருந்தாலு மவைகளையெல்லாம் பாராட்டுவது பெருமை
யா? அவரை வாசலுக்குள் பிரவேசிக்கவொட்டாமல்தடுப்பதும்
தர்மமா? உன்னைப்போலும் உயர் குடியிற் பிறந்த கற்புக்கணிகல
மாகிய உத்தமஸ்திரீகள் தம்முயிர்போல சிறந்தகணவர்கள் செய்
த ஒருபிழை இருபிழைகளை சகிக்காமல் வன்மம் சாதிப்பார்க
ளோ? தண்ணீருமல்லவோ மூன்றுபிழை பொறுக்கின்றது. நீ இ
வ்வொருபிழை பொறுக்கலாகாதா, ,குற்றம் பார்க்கிற் சுற்றமில்லை
என்று சொல்லப்படுகின்றதே, ஆகலால்இதைக்குறித்துச் சீற்றஞ்
செய்யலாமா, தீராக்கோபம்போராய்முடியாதா இதென்ன உனக்கு
த்தெரியாததோ தாகட்டுக்கொதித்தால் விளாவநீரெங்கேஉன்சித்தமி
ரங்கி நீகொண்ட கோபத்தைநீயேதணித்துக்கொள்ளவேண்டுமெ
ன்னுங்கருத்தை உள்ளமைவது

இறையொன்றிரண்டுவகிர்செய்கருண்ணிடை யேந்தியபொற்
குழையொன்றிரண்டுவிழியணங்கேசிகொண்ட கோபந்தணி
மழையொன்றிரண்டுகைமானாபரணனின் வாசல்வந்தாற்
பிழையொன்றிரண்டு பொறாரோ குடியிற் பிறந்தவரே

என்றொரு பாடலைச் சொன்னமாத்திரத்தில் படம்விரித் தா
டுகின்ற பாம்பின்மேல் மாந்திரிகன் திருநீற்றை மந்திரித்துப்போ
ட்டவுடனே அது படமொடுங்கி உக்கிரமாறினது போலராஜஸ்திரீ
யின் கோபமானது தணிந்து சாந்தமாயிற்று. சோழமகாராஜன்
அதுவறிந்து ,,படமுகத்திலு மறிமுகம்வேண்டும்'' என்பதற்கி
செயப்புகழேந்திப்புலவர் தன்சமஸ்தானத்து வித்வானென்
றதாட்சிணியத்தாலல்லவோ ராக்கினிக்குநீங்காதவூடல்நீங்கிய

* தண்ணீர் மூன்றுபிழை பொறுத்தல்,குளத்தில் கிணற்
றில்விழுந்து அமிழ்ந்தவனை அந்நீர் மூன்றுமுறை மேலெழும்ப
ச் செய்தல்.

தென்று அப்புலவர்மேல் மிகவும் சந்தோஷப்பட்டு அன்றுமுத ல்ஒருகுறைவுமில்லாமல் அவரைப்பரிபாலித்து வந்தான்.

ஒட்டக்கூத்தர் பெண்பேசிய சரித்திரம் முற்றிற்று.

—*—

# புகழேந்திப்புலவர்.



## நளவெண்பாப்பாடியது

புகழேந்திப்புலவரைச் சிறைநீக்கிப் பரிபாலித்து வருமளவி ல் குலோத்துங்க சோழராஜனும் மற்றும் சில பிரபுகளும் அவர் மகாசாதுரியமுள்ள வித்வசிரோமணியா யிருப்பதனால் அவரைக் கொண்டு சமஸ்கிருத பாஷையிலுள்ள நளசரித்திரத்தைத்தமிழி ற்சுருக்கிச் செய்விக்க வேண்டுமென் றெண்ணி ஒருநாள் அவருக் கு அச்செய்தியை அறிவிக்க அவர்நல்லது அப்படியேசெய்கிறே மென்று ஒப்புக்கொண்டு சொற்பொலிவு பொருட்பொலிவு தோ ன்றி நவரசாலங்காரமுடையதாக யாவருங்கற்பனைக்களஞ்சியமெ ன்று சொல்லும்படி அச்சரித்திரத்தை நானூறுவெண்பாக்களா ற் பாடிமுடித்துச் சோழராஜன் சபையில் அரங்கேற்றும்பொழு து அதில் அந்திக்காலநதை வருணிக்கத் தொடங்கி வெண்மை யான குடமல்லிகை யரும்பிலவண்டு மொய்த்துச்சங்கநாதம் செ ய்ய நெடிய கருப்புவில்லை ஏந்தியமன்மதனைவன் தன்னுருத்தெ ரியாமல் மறைந்திருந்து ஸ்திரீபுருஷர்கள்மேற் புஷ்பபாணத்தை ப் பிரயோகித்து அவர்களுக்குக் காமத்தைவிளைக்க மலரும்பருவ் பருவத்தையுடைய முல்லைமாலையைத் தோளில் அணிந்து சிறிது நேரம் நிகழ்வதாகிய மாலைப்பொழுதைமுன்னடத்திக்கொண்டு அ ந்திப்பொழுதானது மெல்லெனநடந்துவந்ததென்னும்பொருளை அடக்கிய.

மல்லிகை வெண்சங்கம் வண்டூத வான்கருப்பு
வில்லிகணைதெரிந்து பெய்வரப்ப—முல்லைமலர்

மென்மாலை தோளணித்து மெல்ல நடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது.

என்னும்பாடலைச் சொல்ல ஒட்டக்கூத்தன் புகழேந்தியைக் குறித்துத் தனக்குள் அடிநாளே தோன்றி நாளுக்கு நாள் வளர்ந்து முதிர்ந்த பகையினால் அச்செய்யுளின் கற்பனைக்குச்சந்தோஷப்படாமல் காக்கையானதுசோலைகளிலிருக்கின்றமதுரமாகியகனிகளை விரும்பிப் புசியாமற் கடுங்கசப்பாகிய வேப்பம்பழத்தை விரும்புவது போலக் குற்றம் கூறவேண்டுமென்னும் விருப்பத்தையே பெரிதாகக்கொண்டு அவன் இந்தப்பாட்டில் மல்லிகையரும்பைச் சங்காகவும் வண்டைக சங்கநாதம் செய்வோனாகவுமகற்பித்தது உசிதமே ஆயினும் சங்கவாத்தியம் செய்வோர் அதன்பின்புறத்தை யல்லவோ வாயில் வைத்தூதுவார்கள் அதற்கிசையசங்குகூத்தும் ஆண்டிவாயும் எனப்பழமொழியு மிருக்கின்றதே அந்தப்படி புஷ்பத்தின் அடிப்புரத்தில் வண்டுமொய்த்து ஊதுகிறதாயிருந்தால் தோஷம் சொல்லக்கூடாது அவ்வழக்கம் வண்டுகளுக்கில்லையே அதை நினையாமற் கற்பித்ததனால் இந்த க்கற்பனை குற்றத்திற் கிடமாயிருக்கிறதென்றான் அத்தருணத்தில் அந்தச்சபையிலிருந்த கம்பர் கட்டின வீட்டுக்குக் கருத்துச் சொல்லுகிறவர்களுக்கென்ன வாய்க்குச்சுளுவுதானே அப்படிச் சொல்லுகிறவர்கள் தாங்கள் கட்டிப் பார்த்தாலல்லவோ அந்த வருத்தம்அப்பொழுது தெரியவரும் அதைநினையாமல்இந்த ஒட்டக்கூத்தன் புகழேந்திப்புலவர் விஷயத்தில் தனக்குள்ள விரோதத்தை முன்னிட்டு அவலைநினைத்து உரலையிடிப்பதுபோல நிர்த்தோஷமாயிருக்கிற கற்பனையின்மேல்தோஷாரோபணம் பண்ணவேண்டுமென்று கங்கணம் கட்டிக்கொண்டு தூராட்சேபம்பண்ணுகிறானென்றெண்ணி இப்படிப்பட்டவன் வாயைப் பொட்டென்று மூடும்படி நீர் விநயமாக உத்தரம் சொல்ல வேண்டுமென்றுபுகழேந்திப்புலவர்க்குக் கண்சைகைகாட்ட அதறிந்து அவர் ஒட்டக்கூத்தனைப் பார்த்துச் சங்குக்கூத்தும் ஆண்டிவாயுமென்றுசொல்லவந்தீரே அதுசகஜந்தான் ஆனாலும் கள்ளுக்குடியனுக்குவாயென்றும் கூத்தென்றும் தெரியுமா நீர்தான் சொல்லுமென்றுசமாதானம்சொல்பவர்போல் அவனைப் பரிகாசம்செய்ய அதுகேட்டு அங்குள்ளவர்களெல்லாம் நகைத்துச் சரிசரியென்று மிகவும் சந்தோஷப்பட்டார்கள்.

தமயந்தி விரகதாபப்படுகையிற் சந்திரன் சாய்வது அவளுக்குச்சகிக்கக்கூடாமையால் அவள்தன் தோழிமாரைநோக்கிபொற்செப்புப்போன்ற இளமையாகியஸ்தனபாரத்தையுடையபெண்களே ஒரு செய்தி கேளுங்கள் சந்திரனுடையஅதியுஷ்ணமாகிற சுவாலை பட்டல்லவோ ஆகாயத்தின் உடல்முழுதும் கொப்பளித்திருக்கின்றது இவ்விதத்தாற் கொப்பளித்த ஆகாயத்தைநீங்கள் கண்ணினாற் கண்டறிந்தும் உங்களுடைய தேன்போன்றஇனிய சொற்களினாங்கவாயினால்நட்சத்திரங்கள் அடர்ந்திருக்கின்றவானமென்று கூசாமற் பிரத்தியட்சவிரோதம்சொல்லுகின்றீர்களே இது என்ன காரணமோவென்னும் கருத்தை யுள்ளமைத்துப்பாடிய

செப்பிளங் கொங்கைமீர் திங்கட்சுடர்பட்டுக்
கொப்புளங் கொண்டகுளிர்வானை—எப்பொழுதும்
மீன்பொதிந்துநின்ற விசும்பென்ப தென்கொலோ
தேன்பொதிந்த வாயாற் றெரிந்து

என்றபாடலைச் சொல்லக்கேட்டு ஒட்டக்கூத்தன் நீர்நட்சத்திரங்கள் அடர்ந்திருக்கின்றஆகாயத்தைத்திங்கட்சுடர்பட்டுக்கொப்புளங்கொண்ட குளிர்வா னென்றது அதிசயிக்கத் தக்கதுதான் கொப்பளித்தால் அக்கொப்பளித்த இடத்திலிருந்து சீழாவது சிலைநீராவது வடியாதோவென்று குஜோத்தியமாய்கேட்கபுகழேந்தியானவர் ஏற்றப்பாட்டுக் கெதிர்பாட்டாக சீவடியவில்லைசிலைநீர்வடிகின்றது இது இராவில்வானத்திலிருந்துபெய்யும்பனிதானென்றார் பின்னும் அவன் சிற்சில சந்தர்ப்பங்களில்வீண்குற்றம்சொல்லி ஆட்சேபித்துவர இவர் அப்போதப்போது அதற்குப்போந்த சமாதானம்சொல்லி அவன் நாவை அடக்கிவருகையில் இவர்க்கே இவனென்ன நமக்குப்பொல்லாதசனியனாயேற்பட்டு நம்மையெப்பொழுதும் கைவழித்த மண்போல எளிதா எண்ணி நம்முடைய பா லையும் அலட்சியம் பண்ணுகிறானென்று அவன் மேல் அதிக வெறுப்புப் பிறந்ததனால் இவன்செய்தாலும்சள்ளையற்றிருக்கலாமென்றும்பாபீசதாயுஸ் என்பதனால் இந்தமாபாவிக்கும் மரணம்வருமா வராதே யென்றும் தன்னைக் கொல்ல வந்தபகைவையும் தான்கொல்வது தர்மமென்பதனால் இவனை நாமேமுடித்துவிட்டாலும் தோஷமில்லை யென்றும் மனத்துள்ளேயோசித்துக்

மென்றான் அவள்சாதம் சாப்பிடாமற்போனாற் போகிறதுகொஞ்சம் பாலும்சர்க்கரையுமாவதுகொண்டுவருகிறேன்சாப்பிடுங்களென்றாள் அதற்கவன் போடி பைத்தியகாரி நீபாலல்லபழமல்லதேனல்ல சீனியல்ல அந்தப்புகழேந்தி பாடிய நளவெண்பாவின்

கொங்கையிள நீராற் குளிர்ந்தவிளஞ் சொற்கரும்பாற்
பொங்கு சுழியாம் புனற்றடத்தில்—மங்கைதன
கொய்தாம் வாசக் குழனிழற்கீ ழாறேனோ
வெய் தாமக்காம விடாய் எனவும்

இற்றது நெஞ்ச மெழுந்த திருங்காதல்
அற்றது மான மழிந்ததுநாண்—மற்றினியுன்
வாயுடை தென்னுடைய வாழ்வென்றான் வெங்காமத்
தீயுடைய நெஞ்சுடைநள் றோர்ந்து எனவும்

காதலியைக் காரிருளிற் கானத்திற் கைவிட்ட
பாதகனைப் பார்க்கப் படாதென்றோ—நாதம்
அளிக்கின்ற வாரிவா யாங்கலவ னோடி
ஒளிக்கின்ற தென்னோ வுரை எனவும்

மற்றும் பலவகையாகவும்சொல்லப்படும்கவிகளில்நாலைந்தைப்பிழிந்தான் வார்த்தாலும்நான்சாப்பிடமாட்டேனென்றான். இருவைக்கடலாகிய தாம் சிவகாருண்யத்தையும் கைவிட்டுக்கொலைசெய்வதற்குத் துணிந்துகாலம்பார்த்திருந்து ஒருநாள்ராத்திரி ஒட்டக்கூத்தனுடைய படுக்கைவீட்டில் ஒருவர்க்கும் தெரியாமல்வந்து ஒளித்திருந்தார் அப்பொழுது ஒட்டக்கூத்தன் நாம்ஆயுசுவரையில் தலைகீழாகத்தவம்செயதாலும்நமக்குப்புகழேந்திபோலப் பாடும் சக்தி வரமாட்டாது நம்முடைய வல்லமைஇவ்வளவிலிருக்கும் சும்மா அவரை வாய்மிரட்டு மிரட்டிவருகிறோம் இனிமேல் நமக்கென்ன மகிமை உண்டாகப்போகிறதென்று சலிப்புற்று அந்தவிசனத்தினால் ஊக்கமிழந்து உறக்கம்பிடித்துப் போஜனம்பண்ணாமற் கட்டிலின்மேற் படுத்துக்கொண்டிருந்தான் அத்தருணத்தில் அவன்மனைவி அவனைச் சாப்பிட எழுந்திருக்கச்சொல்லி எழுப்பினாள் அவன் எனக்கிப்பொழுது சாப்பாடு வேண்டா

அந்தச் சொல்லைப் புகழேந்திகேட்டு இதென்ன புதுமை, இவன் சுபாவமோ "உண்ணவாவென்றுற் குத்தவருகிறது" இவனுக்குநமக்கும் எப்பொழுதும் ஏழெட்டுப்பொருத்தம் நம்முடைய பாடலே இவன்செவிக்கு காராசமபோலிருக்கிறது "வண்ணானுக்கும் குயவனுக்கும் சென்மப்பகை,, என்றதுபோல நாளதுவரையில் நமக்கின்மேல் நிர்த்தாட்சிணியமாய்ப் பலபெயரும் அகத்தில் அதைவியந்து சிறப்பிக்கின்றனே. இதுயதார்த்தமாயிருக்குமா? நாமிவ்விடத்தில்வந்து ஒளித்திருக்கிற அரவம்தெரிந்து நம்மைப்பரிகாசந்தான் பண்ணுகிறனே? என்று சந்தேகித்துக்கொண்டிருக்குமளவில், ஒட்டக்கூத்தன்பெண்சாதி மறுபடி வந்து அனனேஇராப்பட்டினியிருப்பானேன் உடம்பு குடுகொண்டுபோகாதா! நாளைக்கும் விரதுனமாயிருக்கிறதே அதிகமாகவேண்டியதில்லை. ஏதாவது உங்களுக்கு இஷ்டமாயிருக்கிற சிற்றுண்டியில் ஒரு கொட்டப்பாக்களவாகிலும் பட்சிக்கலாகாதா! எழுந்திருங்களென்றாள். அதற்குமவன் முன்சொன்னபடியேபொல்லி 'புகமுடியுமளவும் பழைபெய்தாலும் ஓட்டாங்கிளிஞ்சில் கரையுமா,, அடி நீயென்னசொன்னாலும் எனக்குச்சமாதானமாயிருக்கவில்லை என்னைனைத் தொந்தரவு செய்கிறாயென்றான். அதைப் புகழேந்திப்புலவர் செவிகுளிரக்கேட்டு இவன்சொல்லுகிறது அபத்தமல்ல மெய்தான். நம்முடைய பாடலை வாயினாலேமாத்திரம் அவமதிப்பாய்ப் பேசினதேயொழிய மனதிலே அப்படி நினைக்கவில்லை. சிறப்பாகவேமதித்துக்கொண்டிருக்கிறான் இதுதெரியாமல் நாம் அநியாயமாய் இவன் தலைவேலேகல்லைப்போட்டுக்கொல்ல நினைத்துப்பழிக்குபாத்திரரும் ஆளாகயத்தனித்தோமே அப்படியேசம்பவித்தால் அரிகரிதுந்தத்தீவினையைஎந்தகாலத்தில் தொலைக்க போகிறோம் அந்தமட்டில் இவனுடையமனைவி சர்வோத்தமியாகையால் இவனும்மரணத்திற்குத்தப்பினான் அவளும்வைதவியத்திற்குத் தப்பினாள் அந்த மகாராசி இவனைப்போஜனம்பண்ணச் சொல்லிஎழுப்பினதனால் நாமும்கொலைபாதகத்தோடுராஜகண்டனைக்குத் தப்பினோம். பகைசாதிக்கவேண்டுமென்னும் எண்ணமிவனுக்குள் இருந்தாலும்பெரிதல்ல, சம்பிரதாய வழுவின்றிச் செவ்வையாய்க்கற்றுணர்க வனுசையாற் புறத்திலே வியக்காவிடினும்அகத்திலேஉள்ளூற

நமதுகல்வியின் அருமைபெருமைகளைத் தெரிந்து வியந்துகொண்டிருக்கிறான். மனத்துக்கண் மாசிலனாதலனைத்தறனாகுல நீரபிற, என்றபடி இவன்மனதுதர்ம நிலைத்திருக்கிறதென்று மகிழ்ச்சிகூர்ந்து ஓடிவந்து ஒட்டக்கூத்தனை மார்பிறுகக் கட்டியணைத்துப் புயகாங்கமானார்.

அவன் புகழேந்திப்புலவரைப்பார்த்து ஆச்சரியப்பட்டு இந்நேரத்தில் இவ்விடத்திற்கு நீர்வந்தகாரியமென்னவென, இவர் உமதுதலைமேற் கல்லைப்போட்டு உம்மைக்கொல்லவந்தேனென்றுசொல்லி அந்தக்கல்லையும் எடுத்துவந்து அவனுக்குமுன்பாகவைத்தார் அதுகண்டு அவன்எதுக்கு என்னைக்கொல்லவேண்டியதென்ன, இவர்நீர்எப்போதும் என்கவியைக் குறித்துக்குற்றம் சொல்லிக்கொண்டிருப்பதுபற்றி எனக்குக்கோபம் ஜெனித்ததையால் உம்மைக்கொல்லத் துணிந்தேனென்ன. ஒட்டக்கூத்தன் அப்படியானாற்கொல்லாமல் ஓடிவந்துதழுவிக்கொண்டு சிரித்துச் சந்தோஷிப்பது என்னநிமித்தத்தாலென, புகழேந்தியானவர் முன்பு என்னிடத்திற்சற்றும் தயைதாட்சிணியமில்லாமல் என்னை அருஞ்சிறையில் வைத்ததையும் நான்யோசிக்கவில்லை. நீர் சொல்லும் சொற்கள் என்மனதைக்கொள்ளிகொண்டு சுடுவதுபோலச் சுட்டதனால் என்க்குச்சகிக்கக்கூடாமல் அதிகவெறுப்புபொழுது உமதுகருத்தை நோக்குமிடத்தில் அது அப்படிம்பட்டதல்லவென்று அடியிற்கண்டபொருள்போல நன்றாய் விளங்கினதனால் உம்மைக்கொல்லக் கையெழவில்லை. மனதுமதுணியவில்லையென்றார், அவன்தான் தன்மனைவியுடனே சொன்னதைமறந்து, இவரைஎன்கருத்து உமக்குஎப்படித் தெரியவந்ததென, இவர் அவன்மனைவி அவனைப் போஜத்திற்கு எழுப்பினதையும், அவன் அதற்குச் சொன்ன உத்தரத்தையும், அதுகேட்டுதமக்குஇரக்கம்பிறந்ததையும்தாம்கொல்லாது விட்டதையும் ஆதியந்தமாகச் சொல்லிவிட்டுச் செலவுபெற்றுக்கொண்டு தமதிருப்பிடம்போய்ச்சேர்ந்தார்.

மற்றநாள் இந்தச்செய்தியைக்குலோத்துங்கசோழராஜன் அறிந்துஒட்டக்கூத்தனையும்புகழேந்தியையும் அழைத்துநீங்கள்சாமானியர்களல்லவே தமிழில்அகத்தியர், தொல்காப்பியர், அவிநயா

முதலானவர்களாலும், சங்கப்புலவர்களாலும்உண்டாக்கப்பட்டுத் தொன்று தொட்டு வழங்கிவரும் அரிய பெரிய நூல்களாகிய இலக்கணங்களையும், பாரகாவியமாகிய பாரதராமாயணமுதலிய இலக்கியங்களையும் வழுவறக்கற்றும் கேட்டும் ஆராய்ந்து மிருக்கின்ற வித்வசிரேஷ்டர்களாகையால் நீங்கள் அறியாத தொன்றுண்டோ? அதனால் உங்களுக்கு நான் சொல்லத்தக்கது என்னவிருக்கின்றது. ஆயினும், குற்றமற்ற புராதனமாகிய நூறகேள்வியையுங்கூறிய அறிவினையுமுடைய புலவர் சிரோமணிகள் பலர்கூடி, ஒருவர்க்கொருவர் விரோதமின்றித் தாம்தாம் பயின்ற சாஸ்திரங்களில் நுட்பமாகிய விஷயங்களை எடுத்து உத்தேசலட்சணபரிட்சைகளால் வாதித்து அவற்றின் சாரத்தைக் கண்டுணர்ந்து பந்தோஷிக்கின்ற இன்பத்தைப் பார்க்கிலும் வானத்திலாகண தேவர்கள் வாசம்செய்யும்சுவர்க்கத்திற்சென்று அங்கனுபவிக்கும் இன்பமானது என்னவிசேஷம். அப்படி விசேஷப்பட்டதாயிருந்தகுமானால் அதை நாம் சுருதியுக்தி அனுபவங்களாற் காண்போமென்னும் கருத்தை அனுபவங்களாற் காண்போமென்னும் கருத்தை அமைத்து,நாலடி நானூற்றில் மூனிவர்களருளிச்செய்த,

"தவலருந்தொல்கேள் வித்தன்மையுடையார்
இகலிலரெஃகுடையார் தம்முட்குழீஇ
நகலினினிதாயிற் காண்பாமகல்வான
தூன்பருறைவார்பதி,

என்ற செய்யுளின் தாற்பரியமென்ன நீங்களறியாததோ! அவ்வண்ணம் ஒருவரையொருவர் நேசித்துவிதயாவிஷயத்தைக்குறித்துச் சம்மாஷித்து ஆனந்திப்பதைவிட்டு வியர்த்தமாய்ப்பகைக்கலாமா!

"பகையென்னும் பண்பிலதனை யொருவன்
நகையேயும் வேண்டற்பாற் றன்று,,

என்றுஞ் சொல்லப்படுகின்றதே.மேலும் உங்களைப்போன்றவர்கள் கோபத்தைப்பாராட்டலாமா, கோபஞ்சண்டாம் மல்லவா? கோபம்வந்து கிணற்றிலே விழுந்தாற் சந்தோஷம்வந்து எ

ழுந்திருக்கலாகுமா! கூடாதே. ஆதலால் இதுவரையில் நடந்ததெல்லாம் போகட்டும். இன்றுமுதல் என்மேல் தயைசெய்து நீங்கள் ஒருவர்க்கொருவர் விரோதமில்லாமல் ஒரு தாய்வயிற்றிற்பிறந்த சகோதரரைப்போல அந்நியோந்நியமாய் நேசித்துமனமொத்திருப்பதே அழகாமென்று சொல்லி இருவரையும்சமாதானம்படுத்திப் பின்பு அவர்களைநோக்கி, நீங்கள் முந்நாட்டிலுள்ள திருவையாற்றை அடுத்ததிருநெய்த்தானமென்னும் ஸ்தலத்தில் எழுந்தருளியிருக்கும் நெய்பாடியீசரைக்குறித்து,, நெய்த்தானத்தானைச் சேவித்தே,, என்பது மகுடமாய் வரும்படி சந்தவிருத்தமாக ஆளுக்கொவ்வொருபாட்டுப் பாடுங்களென்றான்.

ஓட்டக்கூத்தன் கல்லுதென்று, விக்கல்கண்டு அஞ்சி நடுங்கி உடலைவிட்டு உயிரானது அப்புறப்பட்டுப் போய்விட்டால், அதற்கு முன்பு நகமும் சதையும்போலப் பிரிவில்லாமற் பரிவுற்றிருந்தாய் தந்தை பெண்டுபிள்ளை முதலிய சுற்றத்தாரெல்லாம் அருமையாகச் சீராட்டிப் பாராட்டிப் போற்றிவளர்த்த உடம்பைச் சுடலைக்குக் கொண்டுபோய்க் காஷ்டத்திலேற்றி சாம்பராக்கிவிட்டு அவ்வொருவருந் தங்காமல் அந்தக்ஷணமே திரும்பித் தாமிருந்த வீடுகளுக்குள்வந்து சேர்ந்து,, செத்தவன் வாயிலே சோறு,, என்பதற்குச் சரியாய் உண்டுத்துச் சுகித்திருக்கின்றார்கள். இப்படிப்பட்ட ஈனஸ்திதியிலிருக்கின்ற இக்காயத்தின்கண் இச்சைவைத்து இதைப்போஷிக்கும் நிமித்தம் பொருளைத் தேடிவைத்து அறஞ்செய்யாமல் வீட்டிற்புதைத்துவைக்கின்றவர்களே! சைவசித்தாந்தப்படி ஆத்மாக்களின் இளைப்பொழித்தற்பொருட்டுச் சங்காரகிர்த்தியம் செய்து சகல சராசரங்களும் மாய்ந்தொடுங்கியமசானத்தின்கண் அஸ்திமாலை அசைந்தாடவும், பேய்கள் கூடியாடவும் ஜடாமகுடத்திலிருக்கும் கங்கை அலையெறிந்தாடவும், வலது கையிலேந்திய மழுவானது சுவாலித்தாடவும், காதிலணிந்த சர்ப்பக்குழைகள் நெகிழ்ந்தாடவும் ஆடுகின்றதிருநெய்த்தானத் தலத்துப் பரமசிவனைத் தரிசித்து வணங்கி, நெறிவழாது நிற்கக்கடவீர்களென்ற கருத்தை அமைத்து,

விக்காவுக்காவித்தாவிப்போய்விட்டானட்டார்கட்டேர்புக்கார்
இக்காயத்தாசைப்பாடிற் றேடிப்போல் வப்பீர் நிற்பீர்

றுயிருக்கிறதேயென்று அவனைப்பரிகாசம்பண்ணினார்கள். அது அவனுக்குப்பொறாப்பில்லாத்தழுதத்தில் உருவினதுபோல வருத்தத்தைவிளைத்ததனால், அன்றிரவு அவ்வைஷ்ணவன் வரும் தருணத்தில் நெருக்கதவைச்சாத்தி உள்ளே வரவேண்டாமென்றுதடுக்க அவன்வாசலுக்கு வெளியே நின்றபடி என்ன நிமித்தத்தால் இன்றைக்கு என்னைத் தடைசெய்கிறாயென், மோகனாங்கி நீ விஷ்ணு அடியாள்நான் சிவனடியானாகையால்உன்சம்பந்தம் எனக்குத் தகாதென, அவன், அந்தோ மனையன்னமேநின்னையானன்றாற்றானே" என்றபடி உன்னைநான் ஒருபொழுதாயினும் விட்டுப் பிரிந்து சகிப்பேனோ! சகிக்கமாட்டேன் ஆதலால்உன்வாசலிலேயே நான்றுகொண்டு என்பிராணனைவிட்டுவிடுகிறேனென்றான். இவள் இதேதுபழிவந்து சம்பவிக்கிறதாயிருக்கிறதா யிருக்கிறதேயென்றுநினைத்து, நல்லது நான் வேண்டுமென்பதுஉனக்கு ஆவசியமாயிருந்தால்நீதீட்சைபண்ணிக்கொண்டு சைவனானால் உன்னிஷ்டப்படி நடக்கிறேனென்றுசொல்ல. அவன்காமப்பேய் கொண்டவனாகையால்" பெண்கள்பால் வைத்தநேயம் பிழைப்பரோயிழியோர்பெற்றால்" என்றவிதமாய் அவளுறவைக் கைவிட மாட்டாமல்-நீசொன்னவண்ணம் சைவசமயத்தை அனுசரிக்கிறேனென்று ஸ்ரீரங்கத்தைவிட்டுச் சம்புகேசுரத்திற்கு வந்துசிவதீட்சை பண்ணிக்கொண்டு அகிலாண்டவல்லி கோயிற் பரிசாரகனாகி, தனக்கு அவ்விடத்தில்வரும்படிகளில் அவளுக்குக் கொடுத்துமிந்ததைத்தன் சீவனத்திற்கு வைத்து அனுபவித்துக்கொண்டு வந்தான்.

அந்நாளிற்சம்புகேசுரத்திலொருசிவப்பிராமணன் தனக்கு வித்தையிற்பூரணபாண்டித்தியமுண்டாகவேண்டுமென்றுநியமத்துடனே திரிபுரைசக்கரம் ஸ்தாபித்து அதில் அத்தேவதைக்குரியமந்திர பீஜாட்சரமதைப்பிரணவ நமகச்சிதமாய் வரைந்து உருச்செபித்துநெடுநாளாகஉபாசித்துக் கொண்டிருந்தான் ஒருநாள் இரிடுச்சாமத்தில் அகிலாண்டநாயகி அழகானஒருசிறுபெண்போலவந்தெடுத்துவெள்ளைவஸ்திரமுடுத்துவாயநிறைய தாம்பூலம் தரித்துக்கொண்டு உபாசகன் கண்ணுக்கெதிரே சென்று உன்வாயைத் திறவென்று அந்தத்தாம்பூலத்தை அவன்வாயிலேஉமிழப்போகையில், அவன் நிர்ப்பாக்கியனாகையால் அவனை மகா

தௌத்தியமபண்ணிமுதல்முதல் திருவானைக்கா உலாவென ஒருபிரபந்தம்பாடியபின்பு, அச்சோழநாடு, பாண்டிநாடு, சேரநாடுமுதலானபலநாடுகளுக்குப்போய் அங்கங்குள்ள பிரதானமாகிய தெய்வஸ்தலங்களைத் தரிசித்து ஆங்காங்குமூர்த்திகள்மேல் ஸ்துதியாகவும், நிந்தாஸ்துதியாகவும், மற்றும் அநேகவிதமாகவும் பற்பலபாடல்கள்பாடி வரும்பொழுது, சுதை, கல், மரம், உலோகமுதலானவைகள் சிற்பிகளால் உருப்படுத்தப்பட்டபின் அவ்வவற்றிற்குரிய இயற்பெயர்மாறி வெவ்வேறுசிறப்புப்பெயர் உண்டானாற்போல அகிலாண்டேச்சரி வரப்பிரசாதத்தால் முன்புள்ள பரிசாரகனென்னும் பெயர்மாறி, யாவரும் காளமேகப்புலவர் புலவர்சொல்லும்படி மேன்மையாகிய பெயர் எத்திசையிலும்வழங்கத்தலைப் பட்டது. அக்காலத்தில் அவர் தரிசித்தஸ்தலங்களிற் பாடியபாடல்களிற் சிலவருமாறு.

திருச்செங்காட்டில் உத்திராபதீசரைத் தரிசித்து, எப்பொழுதும்ஒழுக்கத்துடனே நாட்டின்நடுவில் வாழ்ந்திருக்கும் நாதனே நீரிப்பொழுது இந்தச் செங்காட்டில்வந்து ஒளித்துக்கொண்டிருந்ததால் முன்பு யமனையும், மன்மதனையும், சிறுத்தொண்டர்பிள்ளையையும் கொலைசெய்த பழியானது உம்மைவிட்டுநீங்கிப்போய்விடுமோ வென்னுங் கருத்தை அமைத்து நிந்தாஸ்துதியாகப் பாடிய,

"காலனையுங்காமனையுங்காட்டுசிறுத்தொண்டர்தரும்
பாலனையுங்கொன்றபழிபோமோ—சீலமுடன்
நாட்டிலேவாழ்ந்திருக்குநாதரேநீர்திருச்செங்
காட்டிலே வந்திருந்தக்கால்.,,

என்பதும்,

வைகாசிமாதத்திற் காஞ்சிபுரத்தில் வரதராஜர்கருடோச்சவம்கண்டு சேவிக்குமளவில்சுவர்ணகசிதமாகிய கருடனுடையதேஜஸையும், அந்த வாகனத்தின்மேல் எழுந்தருளும் பெருமானது திவ்வியமங்கள விக்கிரகலட்சணத்தையும், அவுச்ச வைபவத்தையும் வியந்து நிந்தாஸ்துதியாகப்பாடிய,

"பெருமாளுநல்ல பெருமாளவர்தம்
திருநாளுநல்ல திருநாள்—பெருமாள்
இருந்திடத்திற் சும்மா விராமையினாலேயோ
பருந்தெடுத்துப் போகிறதே பார்.,,

என்பதும்,

மற்றும் இப்பெருமாள் குதிரை நம்பிரான்மேல் எழுந்தருளும் பரிவேட்டையுச்சவம் சேவிக்கும் பொழுது பரமாத்மசீவாத்மாக்களுக்குள்ள நவவித சம்பந்தங்களில் ஒன்றாகிய பர்த்தரு பாரியாசம்பந்தத்தை உலகத்தாருக்கு வெளியிடவேண்டி பர்த்தரு சுருதிப்புலவர் பெருமாளானவர் தம்மை ஒரு பெண்ணாகப் பாவித்து, அப்பெண் சான்றோர் வணக்குகின்ற தேவர்களுக்கெல்லாம் முதன்மையாகிய மேகவர்ணம் அத்திகிரியென்னும் ஊரிகெயிடையவனுமாகிய வரதப்பெருமான், தனைக்கி அரையிலுடுத்காலைசோர்ந்து காமேன் கண் விழுந்ததென்று இரங்குவதாகப் பொல அமைத்துப்பாடிய,

,,எட்டொருமாவெண்காணி கமீகேயிருந்தற்
பட்டொருமா நான்மாவிற் பாய்ந்ததே —பிட்டர்தொழும்
தேவாதிதேவன் திருவத்தி யூரிடையான்
மாவேறிவீதிவரக்கண்டு'

என்பதும்,

ஏகாம்பரநாதரைத் தரிசிக்கையில் அங்குள்ள சிவப்பிராமணர்கள் அவரை அட்சிமாச எண்ணி இவன்கவிபாடுகிறத்தை அறிவோமென்று இந்தஸ்தலத்தில் ஆறு அற்புதமிருக்கிறன அவைகளை ஒருவெண்பாவிற் பொருந்தி முடித்துக்கா வேண்டுமென, அவர் அவையெவையென, அவர்கள் குமரகோட்டக்கிளை, செவ்விலிமேட்டுப் பாகம்பாய், பருத்தகுளநீர் வெப்புவாசற் காற்று, கம்பத்தடியிற்றவம், கருமாறிப்பாய்ச்சலென்னும் இவைகளேயென்று சொல்ல, அவர், முன்னே அப்பாவென்பதும், பின்னே யார்க்குமினிதென்பதுஞ்சேர்த்து, நீங்கள், இப்பொழுது சொன்னபடி சொல்லுங்களை வெண்பாவாய் முடிந்திருக்கிறதென

பட்டும். உமக்கு இந்த ஆடம்பரமெல்லாம் ஏன் பிச்சைக்காரனு க்சேது கொட்டுமுறக்கென்ற பழமொழியும் கேட்ட தில்லையோ வென்னும் கருத்தையமைத்துப்பாடிய

நச்சரவம் பூண்டதில்லை நாதரே தேவரீர்
பிச்சையெடுத் துண்ணப் புறப்பட்டு—உச்சிதமாம்
காளமேன் குஞ்சரமேன் கார்க்கடல்போலே முழங்கும்
மேளமேன் ராசாங்கமேன்.

என்பதும்.

மற்றும் தென்புலியூரில் வசிக்கின்ற ஐயனே நீ யிப்படி ஏ ழையாயிருந்தால் ஏழையைக் கண்டால் மோழையும்பாயும் என் றபழமொழிப்படி உன் இளக்காரத்தைக்கண்டு கொண்ட பெண் டாட்டியானவள் வலாத்காரமாய்த் தாண்டித் தலைமேலேறினாளொ ருவன்செருப்பாற் புடைக்கானொருவன் வாயிலே வந்தபடியேசா னொருவன் வில்முறிய மண்டைமேல் மாட்டானு (தலைமேறினா வள்-கங்கை, செருப்பாற் புடைத்தவர்- கண்ணப்பநாயனார், ஏசி னவர்- சுந்தரமூர்த்தி, வில்முறிய மாட்டினவன்- அருச்சுனன்) என் னும் கருத்தையமைத்துப் பாடிய.

தாண்டி யொருத்தி தலைமீதிலே யேறினாள்
பூண்டசெருப்பா லொருவன் போட்டானே—மீண்டொருவன்
வையானே வில்முறிய மாட்டானே தென்புலியூர்
ஐயா நீ யேழையானால்.

என்பதும்

பின்னும் மேகமண்டலத்தை அளாவிய சோலைசூழ்ந்ததிரு ப்புலியூரில் எழுந்தருளியிருக்கின்ற அம்பலவாணனே கல்லாலெ றிந்த சாக்கியநாயனாரும் வில்லால் மண்டை பிளக்கசாடிய விஜ யனும் செருப்பாற் கனக்கப்புடைத்த கண்ணப்பநாயனாருமாகிய இம் மூவரும் பெரும்பாவம் புரிந்திருந்தும் எல்லாம் நீ பொறுத்து இவர்களெ ல்லாரும் நல்லவர்களென்று திருவுளமிரங்கி இவர்களுக்குக் கிரு பைபாலித்ததும் உண்மை சிந்தையென்றும் சொல்லாமல் புஷ்ப ங்களைக்கொண்டு அர்ச்சித்த மன்மதனைக் கொலைசெய்ததும் என் னநிமித்தத்தாற் சொல்லவேண்டுமென்னும் கருத்தை அடக்கிப் பாடிய.

செல்லாரும் பொழிற்சூழும்புலியூரம்பலவாணதேவனோ, கல்லாலும் வில்லாலும் செருப்பாலும் பிரம்பாலும் கடிந்துசாடும், எல்லாரு நல்லனென் றிரங்கியருளிந்ததென்ன விகழ்ச்சியொன்றும், சொல்லாமல் மலைக்கொண்டெறிந்தவனைக்கொன்றதென்னசொல்லுவீரே,

என்பதும்,

நடேசனைத் தரிசிக்கையில் திருவோடு கையிலேந்துகின்ற அம்பலவாணரானவர் தில்லைக்கோவிந்தனென்னும் ஆயர் தலைவனிருக்க மற்றும்பல ஆயர்கள் இரவும் பகலும் மாறாமற்காத்திருக்கத் தில்லைவனத்திற் புகுந்து ஆட்டைக்களவெடுத்தது என்ன வுபாயமெனவும் தில்லைக் கோவிந்தராஜப்பெருமான் சயனத்திருக்கோலங் கொண்டிருக்கவும் மற்றும் பலதேவர்கள் இரவும்பகலும் அகலாது நடனதரிசனத்திற்குக் காத்திருக்கவும் திருச்சிற்றம்பலவாணரானவர் தில்லையம்பலத்திற் பிரவேசித்து நடனசெய்வதற்குத் திருவடியைத் தூக்கியது என்னவுபாயமெனவும் சிலேடையாகப் பொருளமைத்துப்பாடிய.

கொங்குலவுந் தென்றில்லைக் கோவிந்தக் கோனிருக்கக்
கங்குல்பக லண்டர்பலர் காத்திருக்கச்—செங்கையிலே
ஓடெடுத்த வம்பலவ ரோங்குதில்லை புட்புகுந்தே
ஆடெடுத்த தென்ன வுபாயம்

என்பதும்

அன்றியுந்தில்லைப்பதியில் வாழும் சிவபிரானே யூர்களிலுள்ள ஆட்டுக்குச் சாதாரணமாக நாலுகாலிருக்கின்றன உன்னுடைய ஆட்டுக்குமாத்திரம் இரண்டேகாலிருக்கின்றன இரண்டு காலிருந்தாலும் இவ்வாட்டின்மேல் வெகுகாலமாகக் கண் வைத்திருக்கின்ற அந்தப்புலியானது இந்தஆட்டைவிட்டுப் போமோ சொல் (புலி-வியாக்கிரபாதர். ஆட்டு-நடனம்) என்னுங்கருத்தை யமைத்துப்பாடிய.

நாட்டுக்கு ளாட்டுக்கு நாலுகாலையாவுன்
ஆட்டுக் கிரண்டுகா லானாலும்—நாட்டமுள்ள
சீர்மேவு தில்லைச் சிவனேயிவ் வாட்டைவிட்டுப்
போமோ சொல்லையப் புலி.

என்பதும்.

தில்லைமூவாயிரவரிற் சிலர் நடேசர் கையிலேந்திய மானனது அவர் திருமுகத்திற்கு நேராகத் தனமுகத்தையும், முன்னங் கால்களையும் மேலேதூக்கி நிற்பதற்குக் காரணங்கற்பித்து ஒரு வெண்பாப் பாடவேண்டுமென்ன, அவர் அன்னப்பறவைகள் வயல்களிற்சஞ்சரித்துத் தாமரைமலர்களில் தங்குகின்ற தில்லைப்பதியில் எழுந்தருளிய நடேசனது கைக்கமலத்திலிருக்கும் மான் கன்றானது, அவ்விறைவனது பொன்போலும் சிவந்தகிரத்தையுடைய அழகியஜடாமகுடத்தில் அணிந்தஅறுகம்புல்லை மேய்ந்து, அங்குள்ளகங்காஜலத்தைக் குடிக்கும்படி தன்மனதில் இச்சையானது அதிகரிக்க அங்ஙனம் தாவிப்பாய்கின்றதென்னும் கருத்தையமைத்துப் பாடிய,

"பொன்னஞ் சடைபருகம் புல்லுக்கும் பூம்புனற்கும்
தன்னெஞ் சுவகையுறத் தாவுமே—அன்னங்கள்
செய்க்கமலத் துற்றுலவுந் தில்லை நடராஜன்
கைக்கமலத் துற்றமான் கன்று.

என்பதும்.

மற்றுமவர்கள் அத்தலத்திலுள்ள ஞானசபை கனகசபை, நர்த்தசபை, ஆனந்தக்கூபம், திருமூலட்டானம் பேரம்பலம், பஞ்சாவரணம், நாற்கோபுரம், பொற்கம்பம் மண்டபம், சிவகங்கை இவைகளை ஒருவெண்பாவாக அமைக்கவேண்டுமென்ன, புலவர்சிரோமணியானவர் நான்வேறே அமைக்கவும் வேண்டுமோ, இப்பொழுது சொன்னவைகளைச் சொன்னமுறைப்படி நீங்களே சீர்தளை வழுத்தா இசைத்துப்பார்த்தால் வெண்பாவாய் முடிந்திருக்கலாமென்ன, அவர்கள் அவர்சொற்படி செய்து அவ்வாறே அமைந்திருக்கக்கண்ட.

"ஞானசபை கனகசபை நர்த்தசபை
ஆனந்தக் கூபந் திருமூலட்—டானம்பே
ரம்பலம் பஞ்சா வரண நாற்கோபுரம்பொற்
கம்பமண்ட பஞ்சிவகங் கை.

என்பதும்,

சிவகாமிவல்லியைத் தரிசித்தபொழுது, மாட்டுக்கோன் தங்கையானவள் வடமதுரையைவிட்டுத் தில்லைவனத்திற்குவந்து ஆட்டுக்கோனொருவனுக்குப் பெண்டாகி வாழ்க்கைப்பட்டு, வெளிப்படாநின்ற குட்டிகளைப் பட்டிக்குள் மறித்துக்கொண்டிருந்துவிடுவதற்கு ஒருபிள்ளையையும் பெற்றுச்சிற்றிடைச்சியாய் விட்டாள். என்செவியே? நீஇந்தச்செய்தியைக்கேள்விப்படவில்லையோ? என்கண்ணே? நீயாயினும்இதைப் பார்ப்பாயாக, (மாட்டுக்கோன் கண்ணபிரான், ஆட்டுக்கோன்-நடேசன், குட்டிமறித்தல் விநாயகனைவணங்கும் அடியார்கள்தத்தம் தலையில் முன்புநேராகக்குட்டிப் பின்புகையைமறித்துக் குட்டிக்கொள்வது, ஒரு கோட்டானை ஒற்றைக்கொம்புள்ள யானைமுகக்கடவுள், கட்டுமணிச்சிற்றிடைச்சி-மணிமேகலைகட்டிய சிறிய மருங்குடையாள்) என்னும்கருத்தையமைத்துப்பாடிய,

"மாட்டுக்கோன் தங்கைமதுரைவிட்டுத்தில்லைவனத்
தாட்டுக்கோனுக்குப்பெண்டாயினாள்—கேட்டிலையோ
குட்டிமறிக்கவொரு கோட்டானையும்பெற்றாள்
கட்டுமணிச்சிற்றிடைச்சிகாண்."

என்பதும்,

திருக்கழுக் குன்றத்தில் வேதகிரீசனைக் தரிசித்து மனைவில் பெருமைநீங்கிய திருக்கழுக்குன்றத்தில்வசிக்கும் சிவனாரே! நீர் ஆதிதொடங்கி வெகுகாலமாக அவலமான அல்லற்பிழைத்து விட்டீர். பகைவராகிய முப்புரத்தாரை நேரிலே கண்டவிடத்தில்வில்லைக் கையிற்பிடித்து அம்பினால் எய்து வீழ்த்தமாட்டாமல், உம்முடைய வீரம் கூத்தாடிச்சிலம்பம்போல வியர்த்தமாம்படி பல்லையிளித்துக்கொண்டீரே இவ்வளவுதானோ? உமதுபடைத்திறமென்னும்பொருளை அமைத்துப்பாடிய,

"சொல்லிற்பெரியகழுக்குன்றரே தொல்லைநாண்முதலா
அல்லற்பிழைப்பேபிழைத்துவிட்டீர்முப்புரத்தவரை
வில்லைப்பிடித்தெய்ய மாட்டாமனிரந்தவேளையிலே
பல்லைத்திறந்துவிட்டீரிதுகாணும்படைத்திறமே,,"

என்பதும்,

ஸ்ரீமுஷ்டமென்னும் திவ்யதேசத்திற் பூவராகசுவாமியைச்சேவிக்கும்பொழுது, வயல்வாளைகள் எழும்பிவரப்பிலுள்ளநின்ற கமுகமரங்களில் மோதி, அவைகளிலுள்ள பூம்பாளைகள்தெருமுழுதும் சிதறும்படி தாவிப்பாய்கின்றவளப்பமுடைய திருமுட்டமென்ற ஊரிற் பன்றிக்கு மார்பிலே கொம்புமுளைத்திருப்பதாக ஓராதிசயத்தை நான்கண்டேன். (பன்றிக்கு மார்பிலே கொம்பு முளைத்திருப்பதென்பது ஸ்ரீமகாவிஷ்ணுவாகிய பூவராகமூர்த்தியாகிய நாய்கொம்புபோன்ற பூமிப்பிராட்டியை யெடுத்துமார்போடணைத்து வைத்துக்கொண்டிருப்பது) என்னுங்கருத்தையமைத்துப் பாடிய

,,வெருமுட்டப்பாளை சிதரவர்பூக்க்
தருமுட்டச் செய்வாளை தாவும—திருமுட்டத்
தூரிலேகண்டே னொருபுதுமைபன்றிக்கு
மாரிலேகொம்பான வாறு.,,

என்பதும்,

மற்றும், திருமுட்டமென்ற திருப்பதியிலெழுந் தருளிய பூவராகமூர்த்தியே, இடதுகரத்திற் பாஞ்சசன்னியத்தை யேந்திய பெருமானே. உனது தாமரைபோன்ற திருவடியை நாங்கள் மார்க்கடநியாயமாக ஆசிரயிக்கத் திறமையின்றி அறுதியிட்டு துயரியங்கும் அந்தநாளத்தில் அமிழ்ந்து கிடந்தோம் ஆதலாலெமக்கு வரக்கடவதாகிய கிலேசமெல்லாம் உனது நிரோதக்கிருபையினால் மார்ச்சாலநியாயமாக ஒழிக்கும்படிக்கு நீயெம்மெதிரே வருவாயாக வென்னும் பொருளை யடக்கிப்பாடிய.

,,முட்டத்துப்பன்றி முளைத்திருப்பதத்தைக்
கிட்டத்துப்பன்றிக் கிடந்தோமே—தொட்ட
மருங்கிலேசங்கெடுத்த மாலேயெமக்கு
வருங்கிலேசங்கெடுக்மலா.,,

என்பதும்

திருவாலங்குடியில் தட்சிணாமூர்த்தியைத் தரிசிக்கையில், வடவிருட்சத்தின் அடியிலிருப்பவனை அமிர்தமர்த்தனம்செய்த

காலத்திற் சுராசுரர்கள் அஞ்சியோடும்படி பாற்கடலிற் றோன்றிய ஆலாலமென்னும் விஷத்தை அவர்கள் உச்சீவிக்கும்பொருட்டு அமுதுசெய்தருளினவரை ஆர் தாம் விஷபானம் பண்ணமாட்டாரென்று வாய்கூசாமற் சொல்லுவார் அந்தக் கொடுவிஷத்தை அவர் பானம்பண்ணாமல் நமக்கென்னவென்றுபேட்சித்திருப்பாராகில், உலகத்தவரெல்லாமொருமிக்கமண்ணின்மேல் மாண்டுபோகமாட்டார்களா. அவர்கள்செத்தவிடமெல்லாம்புல்லுமுளைத்துப்போகாதா? என்னும் கருத்தை யமைத்துப்பாடிய,

,,ஆலங்குடியானையாலாலமுண்டானை
ஆலங்குடியானென்றார்சொல்வார்—ஆலம்
குடியானேயாயிற்குவலயத்தோரெல்லாம்
மடியாரோ மண்மீதிலே,,

என்பதும்,

மாயூரத்திற் சுவாமி தரிசனஞ்செய்கையில், தம தன்பர்கள் விரும்பினவைகளை யெல்லாம் வரையாது கொடுக்கும் உதாரகுணமுடையவரென்று சொல்லப்படும் மாயூரநாதருக்கு, எத்தனை காலம் கைகொண்டமட்டும் வாரிவாரி இறைத்தாலும் மாளாதஇருப்பாக மலையளவான வெள்ளியும், மலையளவான பொன்னுமிருக்கவும், மேலுஞ்செறிந்த அறிவினையுடைய உமாதேவியானவள் எப்பொழுதும் பக்கத்திலிருந்து உமக்கொரு குறைவுமில்லை பயப்படவேண்டாம் பயப்படவேண்டாமென்று கையமைத்து அபயதானம்பண்ணிக்கொண்டிருக்கவும் அவர் ஏனவிஷத்தை யுண்டார். நமக்கு எவ்வளவுபொருளிருந்தாலும் ,,இன்று நின்றாற்கென் அமாரு,, வென்பது பற்றியோ, அல்லது நமது சொத்தெல்லாம் நம்மட்டிலன்றி வல்லார் கொள்ளையாய்ப்போய்விடுகிறதே யென்பது பற்றியோவென்று நினைப்போமென்றால் அப்படியெல்லாமல்ல தம்மைநோக்கி முறையிட்ட தேவர்களை ரட்சிக்கும்பொருட்டே விஷபானம் பண்ணினாரென்னுங்கருத்தை அமைத்துப்பாடிய.

,,வள்ளலெனும்பெரிய மாயூரநாதருக்கு
வெள்ளிமலை பொன்மலையு மேயிருக்க—தெள்ளுமையாள்

அஞ்சலஞ்சலென்றுதினமண்டையிலேதாளிருக்க
நஞ்சுதனையேனருந்தினார்.,,

என்பதும்,

வைத்தீசுரன் கோயிலிற்சுவாமி தரிசனஞ் செய்கையில், இந்தப் புள்ளிருக்கும் வேளூரில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானே, முன்னாளில் மன்மதனை எரித்த அக்கினி உன் கண்ணிலிருக்கின்றது. தாருகாவனத்து ருஷிகள் உன்னைக் கொல்லவிடுத்த அக்கினி உன் கையிலிருக்கின்றது திரிபுரத்தைத் தகித்த அக்கினியுன் புன்சிரிப்பிலிருக்கின்றது உனக்கு அழலாடியென வழங்கும் காரணப்பெயருக்கேற்றபடி உன் திருமேனிமுற்றும் அக்கினி சூழ்ந்திருக்கின்றது இவ்வாறு அக்கினிமயமாயிருக்கின்ற உன்னை இந்தத் தையற்கேயுந்த பெண்ணானவள் அச்சமின்றிச்சேர்ந்து எப்படி தன்கலையுடன் தானும்வேகாமலிருக்கின்றாள். இவளுக்கு அக்கினிஸ்தம்பனவித்தை ஏதாவது தெரிந்திருக்கிறதோ அதனால் அவ்வக்கினியை உஷ்ணிக்கவொட்டாமல் அடக்கிவைத்திருக்கின்றாளோ எனக்குத் தெரியச் சொல்வாயாகவென்னுங் கருத்தை அமைத்துப்பாடிய,

,,தீத்தானுன்கண்ணிலே தீத்தானுன்கையிலே
தீத்தானுமுன்புன் சிரிப்பிலே—தீத்தானுன்
மெய்யெல்லாம்புள்ளிருக்கும் வேளூராவுன்னையெந்தத்
*தையலா ளெப்படிச்சேர்ந்தான்.,,

என்பதும்,

திருவாரூரில் ஒரு விசேஷகாலத்திற் கோயிலுக்குப் போனபொழுது, அத்தருணத்திற் குருக்கள்மார் தியாகருக்கு வச்சிர பதக்கஞ் சமர்ப்பித்துச் சாத்துப்படி பண்ணிக்கொண்டிருந்ததனாற் சுவாமியைத் தரிசிப்பதற்குச் சற்றுச் சாவகாசப் பட்டதுகண்டு, அவர் அன்னப்பறவைகள் வசிக்கும் வயல்கள் சூழ்ந்ததிருவாரூரில் வாழும் தியாகேசருக்கு முற்காலத்தில் ஒப்பற்றிருந்த தொண்டர் புத்திரனைக் கொன்றும், மனுநீதிகண்ட சோழனுடைய பிள்ளையைக்கொன்றும் பராக்கிரமமுடைய மன்மதனைக் கொன்

*தையலாள்-தையல்நாயகி.

என்பதும்,

பின்னும், வீதியில் தியாகராஜர் எழுந்தருளி நடனஞ் செய்யக்கண்டு தரிசிக்கையில், திருமேனி முழுதும் புஷ்பமணமும் புழுகுமணமும் வீசுகின்ற தியாகேசருக்குக் கையிலே பணமிருந்தால் அதுஅவரைச் சும்மா இருக்கவொட்டுமா, "பணமென்னசெய்யும் பத்துவகைசெய்யும்," என்படி அந்தப்பணக்கொழுப்புமூலையிலிருந்தவரைமுற்றத்திலிழுத்துவிட்டு ஆட்டிப்புடைத்தால் அவரென்ன செய்வாரகாரணமின்றித் திருவாரூர் வீதியிலேபகிரங்கமாகவந்து நின்று தம்முடைய இஷ்டர்களெல்லாம் பார்த்து நகைக்கத்தலைவிரிகோலமாகக்குதித்துக் கூத்தாடமாட்டாரா(பணம்-சர்ப்பகணம்) என்னுங்கருத்தை யமைத்துப்பாடிய,

"ஆடரோ பின்னையவ ரன்பரெலாம் பார்த்திருக்க
நீடாரூர் வீதியிலே நின்றுதாம்—கோடாரும்
மெய்க்கே பரிமளங்கள் வீசுந் தியாகேசர்
கைக்கே பணமிருந்தக் கால"

என்பதும்,

மேலும் சுவாமி யுமக்கு உண்கிற சோறு வெல்லமாய்விட்டதனால், ஊரூர் மூலைக்குமடியப் பிச்சைச் சோற்றுக்கா எங்கெங்கும்ஓடி உன்று திரிந்தீர். உம்மைப்பற்றிவிசாரித்துப்பார்க்குமிடத்தில் நீர்நிலையாயிருப்பதற்குச் சுவாதீன பட்டதாரரொருவாயினுமில்லை. இப்பொழுதிருக்கின்ற ஊர் நம் ஒற்றியா யிருக்கின்றது. அன்றியும்உமது இயற்கையன ஊரும்பேரும்உருவமும்இப்படிப்பட்டவைகளென்றுயாவராலும் அறியப்படாதவைகளாயிருக்கின்றன. அங்ஙனமாயினும்தரித்திரப்பட்டிமகன்தனபாலசெட்டியென்னும்பெயர்பெற்றதுபோலத் தியாகராஜனென்றபெரியபெயரொன்றுமாத்திரம் பெற்றுவிட்டீர். இனி நீர் ஆரூரிலிருப்பீர்? அங்குமிங்குஞ்சும்மா அலையாமல்பொதுஸ்தானத்திற்போய்விடும்,(ஒற்றி திருவொற்றியூர் ஆரூர் திருவாரூர்) என்னும் கருத்தை யமைத்துப் பாடிய

"பாரூரறியப் பலிக்குழன்றீர் பற்றிப்பார்க்கிலுமக்
கோரூருமில்லை யிருக்வென்று முள்ள வூருமொற்றி

பேரூரதியா இயாகமொன்றே பெரும் பேரும்பெற்றீர்
ஆரூரிலேயிருப்பீ ரினிப்போய்விடு மம்பலத்தே.,,
என்பதும்,

திருவண்ணாமலையில் அருணாசலேசுரரைத் தரிசிக்கையில்கறி சமைத்தசட்டியிற்பாதியுறப்பிருக்க, அச்சட்டியிலிட்டு அள்ளிய அகப்பையிற் பாதியுறப்பிருக்க, எதிரேபோட்ட இலையிற் பரிமாறின படி பாதியுறப்பிருக்கப் பிராமணவேடங் கொண்டுவந்து நடித்த சோணேசரனவர் அங்காளிம்சிராளாவென்று அழைத்தபொழுது அப்பிள்ளை கலகலவென்றுசிரித்தவண்ணமாகஎழுந்தோடிவந்ததென்ன அற்புதம்!என்மனமே! நீ சொல்லென்னுங்கருத்தை அமைத்துப்பாடிய,

,,சட்டியிலே பாதியங்கச் சட்டுவத்தி லேபாதி
இட்டவிலே யிற்பாதி யிட்டிருக்கத்—திட்டமுடன்
ஆடிவந்த சோணேச ரன்றழைத்த போதுபிள்ளை
ஓடிவந்த தென்னே வுரை.,,

என்பதும்.

மற்றும், உண்ணாமுலை நாயகிகோயில் ஸ்தாநிகனாகியசம்பந்தாண்டான் என்பவன் மயிர்வினைஞனிடத்தில்தன் தலைமழுங்கமுண்டிதமாகச்சௌளம்பண்ணிக்கொள்ளுஞ்சமயத்திற் காளமேகப்புலவரைக்கண்டுமரியாதையில்லாமலவித்தியாகர்வத்தினால்இந்தஸ்தலத்தின்பெயரும்,என்பெயரும்,நான்செய்வித்துக்கொள்ளுஞ்சௌளகர்மமும்ஒரு வெண்பாவில்வரும்படி,மன்னென்றெடுத்துமலுக்கென்றுமுடிக்கவேண்டுமென்றுசொன்னான்.சொன்னமாத்திரத்தில், அவர் இவன்தன்னைஒருபொருளாகமதித்துப்பாடச்சொன்னமையால்இவனைப் பரிகசிப்பதே தகுதியென்று நினைத்து அவன் சௌளம்பண்ணிக்கொள்வதற்கு நிமித்தமும் கற்பித்துப்பாடிய,

"மன்னு மருணகிரி வாழ்சம்பந் தாண்டாற்குப்
பன்னுதலைச் சௌளம் பண்ணுவதேன்—மின்னின்
இளைத்த விடைமாத ரிவன்குடுமி பற்றி
வளைத்திழுத்துக்குட்டாம லுக்கு.,,

என்பதும்,

ஒருகாலத்தில் ஸ்ரீரங்கத்தார்க்குஞ்சம்புகேசுரத்தார்க்குஞ்சமயத்வேஷமுண்டாகி இருதிறத்தாருங்கலக்கப்பட்டுக்கொண்டிருக்கையில், அவர்களைச்சமாதானப்படுத்தும் பொருட்டுக்காளமேகப்புலவர்சீரங்கத்தாருந்திருவானைக்காவாரும்எங்கள்மதம்உயர்ந்தது. உங்கள்மதந்தாழ்ந்தது எங்கள்தெய்வம்பெரியது. உங்கள்தெய்வஞ்சிறியதென்றுஓயாமல், யானைசேனைகளைக்கொண்டு ஆயுதச்சண்டைசெய்வார்போல, வியர்த்தமாய்வாக்குச்சண்டைசெய்வானேன்சைவவைஷ்ணவமென்பது இவ்விருசமயக்கொள்கையும் ஏகமேவாபரப்பிரமம்என்னும்அத்வைதம்போலன்றி ஆத்மாபரமாத்மா இரண்டுமுண்டென்றும், அவ்விரண்டும்ஒன்றற்கொன்றுசமத்துவமுடையனவல்லவென்றும், அவ்விரண்டனுள் பரமாத்மா ஆண்டானென்றும் ஜீவாத்மா அதற்கு அடிமையென்றும் சொல்லப்படும் விசிஷ்டாத்வைதமாய்க்கரதலாமலகம்போலவிளங்கிநிற்கையால்இதென்ன ஆச்சரியம் இந்தவிவந்தெரியாதா? இதுபற்றிஇனிஒருவர்க்கொருவர்ஓரவாரம்பேசவேண்டாமென்னுங்கருத்தமைத்துப்பாடிய.

சீரங்கத் தாருந் திருவானைக் காவாரும்
போரங்ஙன மாகப் பொருவதென் — ஓரங்கம்
வேண்டாமி தென்ன விவரந் தெரியாதா
ஆண்டானுந் தாதனு மானால்.

(ஆண்டானுந்தாதனுமானாலென்பதைஆண்டியுந்தாதனுமானாலெனச்) சிலர் சொல்வர் அது சரியன்று.

மதுரையிற் சுவாமி தரிசனஞ்செய்கையில், அங்குள்ளசிவப்பிராமணர்கள் அவரைப்பார்த்துச்சோமசுந்தரக்கடவுள்சந்நிதிக்கெதிரேகட்டியகூட்டிலிருந்துகின்னரிவாசிக்கிறதுபோலக்கூவுகின்றகிளியைச் சுட்டிக்காட்டிகின்னரிவாசிக்குங்கிளிஎன்பதைஈற்றடியாகவைத்து அதற்கேற்க ஈற்றயலடியைத்திரித்து இந்தச்சொக்கநாதர்விஷயத்திலொருவெண்பாப்பாடவேண்டுமென்னபுலவர் அக்காலத்தில்திருஞானசம்பந்தர், அப்பர் சுந்தரமூர்த்தியென்னும்இம் மூவரும்

பாடிய தேவாரப்பாடல்களைத் திருவுளமுவந்தருளினனென்று சொல்லும் பான்மையையுடைய பரசிவன்' நான்மாடக்கூடலில் அறுபத்து நான்கு திருவிளையாடலைச் செய்தானென்றும், தனது பரமசாமர்த்தியத்தை விளக்கிக்காட்டிய நரியாகிய பரிக்கு மல்லகதி, மயூரகதி, வியாக்கிரகதி, வானரகதி, விடபகதியாகிய ஐவகை நடையினைக் கற்பித்தானென்றும் கிளியானது இன்னரிவாசியா நின்றதென்றும் கருத்தை யமைத்துப்பாடிய.

"ஆடல்புரிந்தானென்று மங்காளிரேழவர்
பாடலுவந் தானென்ற பான்மையான்—கூடலிலே
நன்னரிவாசிக்கு நடைபயிற்றி னானென்றும்
இன்னரி வாசிக்குங் கிளி."

என்பதும்,

மற்றும், பெண்களே! நீங்க ளிவ்விஷயத்தைப் பார்த்தீர்களா இந்தமதுரையிலெழுந்தருளியகடம்பவனநாதரானவர் எப்போதும்பெண்ணைத்தலைமேலே சுமந்துதிரிகின்றபைத்தியம்பிடித்தவர் அன்றியும்எட்டுத்திக்குக்குமிலக்கியமாயிருக்கின்றதங்கைக்குமேலே நெருப்பைவாரியிட்டார். அக்காளைநிறுத்தி அவள்மேலேறினார் ஆதலாற்பித்தர்க்குந்தங்குணம் நாலினும் செம்மையென்பதுமெய்ப்பட்டிருக்கின்றது (பெண்ணைச்சுமந்தது-கங்கையைத்தாங்கினது அக்காளையேறியது அந்தஇடபத்தின் மேலேறினது) என்னுங்கருத்தையமைத்துப்பாடிய,

"கண்டீரோ பெண்காள் கடம்பவனத் தீசனார்
பெண்டர் தமைச்சுமக்க பித்தனார்—எண்டிசைக்கும்
மிக்கான தங்கைக்கு மேலே நெருப்பையிட்டார்
அக்காளை யேறினா ராம்."

என்பது.

அங்கயற் கண்ணம்மையைத் தரிசிக்கும்பொழுது இந்தஉலகத்தில் நான்நல்லபுதுமையொன்றுகண்டேன் அதைச்சொல்லவா சொல்லவா சொல்லவ சொன்னாற் பெண்பாவமாகிறதே ! ஆணுக்

கவக்கேடுசெய்தாலும்பெண்ணுக்குப்பிழைச்சொல்லாகாதே ஆதலால் அடக்கவேண்டிக்கல்லவோ எப்படிச்சொல்லுவீரென்றால், மலிந்தாற் கடைக்குவரு, மென்பதனாலும், அல்லாதுமுறையாது இல்லாதுபிறவாது,என்பதனாலும்அடக்குவதற்பயனில்லைசொல்லத்தான்வேண்டும்அதென்னவெனில்செல்வம்நிறைந்த மதுரைப்பதியிலுள்ள மீனாட்சியானவள், அரைக்காசுக்குப்போனமானம் ஆயிரங்கொடுத்தாலும வராதென்பதையறியமன்றும் பேதமை குணத்தால், பாண்டியனிடத்திற் குதிரைவிற்கவந்தவனைச்சேர்ந்துவிக்கினேசுரனென்ற யானைக்கன்றைப் பெற்றாளென்பதுதான் குதிரைவிற்கவந்தவன்-சொக்கநாதன் என்னும கருத்தையமைத்துப்பாடிய,

"நல்லதொருபுதுமை நானிலத்தில் நான்கண்டேன்
சொல்லவா சொல்லவா சொல்லவா—செல்வ
மதுரைவிக்கினேசுரனை மாதுமையாள் பெற்றாள்
குதிரைவிற்க வந்தவனைக் கொண்டு,,

என்பதும்,

ஒருகாலத்தில்,தமக்குவியாதிகண்டு அதுமணிமந்திரஔஷதங்களால் நிவர்த்தியாகாமையால்வைத்தீசுரன்கோயில்மணலையெடுத்து இதுவினைதீர்த்தான்மருந்தென்றுஉட்கொண்டவுடனேபரிகாரமாகுமென்பதை உணர்ந்து அத்தலத்திற்குவந்து அவ்வாறுசெய்துசொஸ்தமடைந்தபொழுது காளமேகப்புலவர்,தொண்டர்களுக்குப்பகுத்திட்டு அவர்களுடன் தாமுமொருவராயிருந்துவிருந்துண்டருளிய, புள்ளிருக்கும் வேளூரில் வசிக்கும் எமது நண்பரானவர் உலகத்திற்பிரபலவைத்தியராயேற்பட்டிருந்து, எவர்களுக்குங்கண்டவியாதிகளையெல்லாம் நாள்தோறும் தப்பாமல் தீர்த்து வருகின்றார். பார்த்தீர்களா! அதற்காக அவர்கொடுக்கும் மருந்தை ஆராய்ந்துபார்த்தால் அதென்ன கட்டுச்சரக்கா, காட்டுச்சரக்கா, கடைச்சரக்கா, அதுவொன்றுமல்ல. சுத்தமண்தான், ஆனாலும்அவருக்குக் கைவாசியுண்டுபோலக்காண்கிறது தொண்டர்களுக்குப்பகுத்துண்டலாவது, ஐயாறதனிற் சைவனாகியு மென்படி திருவையாற்றில் மகோற்சவத்தின் ஐந்தாம்நாள்சுவாமிதமது சந்நிதியில் நிவேதிக்கப்படும் திருப்பாவாடைமுதை மற்றசைவர்களுட

ன் காழமொரு சைவனாயிருந்து பகுத்துண்பது என்னும் கருத்
தையமைத்துப்பாடிய,

‘‘மண்டலத்தி லுளநம் வயித்தியராய்த் தாமிருந்து
கண்டவினை நீக்கின்றார் கண்டீரோ—தொண்டர்
விருந்தைப்பார்த் துண்டருளும் வேளூரெந்நாதர்
மருந்தைப்பார்த்தாற் சுத்தபண்,,
என்பதூம்,

திருநாகை யென்னும் ஸ்தலத்திற்சிவதரிசனம்செய்யப்போனவிடத்தில், திறமான சங்கீதப்பயிற்சியும்சரீரவளமுமில்லாதவொரு தேவடியாள் தம்புருமீட்டிக்குரலெடுத்துப்பாட க்கேட்டபொழுது அது கர்ணகடூரமாய்ச் சகிக்கக்கூடாமலிருந்ததினிமித்தம் தமக்கு வெறுப்புண்டாகி, யாவரும்வாழ்த்தாநின்றநாகைப்பதியிலிருக்கும்அழகுள்ள தேவடியாளவள் தனபாழ்க்குரலையெடுத்துப்பாடினள் பாடக்கேட்டவுடன்நேற்றுக்கழுதையைக்காணாமல்ஊரெங்குந்தேடியலைந்துகொண்டிருந்த வண்ணானொருவன்என்கழுதையைக்கண்டேன் கண்டேனென்றுசந்தோஷத்தோடே கட்டியிழுத்துப்போம்படி வைக்கோற்பழுதையைக் கையிலெடுத்துக் கொண்டுசீக்கிரமாக ஓடிவந்தான்பார். நாகை-நாகப்பட்டணம் என்னுங்கருத்தையமைத்துப்பாடிய;

‘‘வாழ்த்து திருநாகை வாகான தேவடியாள்
பாழ்த்த குரலெடுத்துப் பாடினள்—நேற்றுக்
கழுதைகெட்ட வண்ணான் கண்டேன் கண்டேனென்று
பழுதையெடுத் தோடிவந்தான்பார்,,

என்பதூம்.

திருவிடைமருதூரென்ற ஸ்தலத்திற்சிவதரிசனம் செய்யுமளவில் குளிர்ச்சிதங்கிய தேன்பொருந்திய சோலைசூழ்ந்த மருதூரிலெழுந்தருளியிருப்பவரே அந்நாளிற் கண்ணப்பநாயனார் தமதுவாயில்வைத்துத்தின்று சுவைபார்த்தூட்டிய மானிறைச்சிமுதலியகறியும்சிறுதொண்டநாயனார் அன்பினால் பாகமாகச் சமைத்திட்ட பிள்ளைக்கறியும் உமக்குப் போதாதோ? உமது பிறன்மனை

சாணோ சமுத்திரமோ? நீர்பன்றிக்குட்டியையும் எதுக்கு நெருப்பி லிட்டுத் தீத்திரசொல்லுவீராக. பன்றிக்குட்டியைத் தீத்ததுவரா கவுருவெடுத்த திருமாலின் மகனாகிய மன்மதனை நெற்றிக்கண்ணினா ல் எரித்தது என்னுங் கருத்தை யமைத்துப்பாடிய.

'கண்ணனிடங் கறியுங் காட்டுசிறுத் தொண்டரன்பிற்
பண்ணனிசிறு வனைகறியும் பற்றுதோ — தண்ணிய
மட்டியையுஞ் சோலைமருதீசரோ பன்றிக்
குட்டியையேன் றீத்தீர் குறித்து,

என்பதும்,

திருத்துருத்தி யென்னுந் ஸ்தலத்திற் சுவாமியைத் தரிசிக்கை யில் அவ்விடத்திலுள்ள குருக்கள்மார் எங்கள்பரமசிவனுடைய ஆ பரணத்தை விசேஷித்து ஒருவெண்பாப் பாடவேண்டுமென்னஇ வர்மலர்க்காவி லிடங்களிலும் வயலிடங்களிலும் முத்துகளார்ந்த திருத்துருத்தி யென்கின்ற பெரியநகரத்தில் வசிக்கும் பொய்மை யில்லாத சத்தியஸ்வரூபராகியசிவபிரானவர் தமது திருமேனியி ல் அணியும்பூஷணமோ பிரசண்டமாருதத்தையும்பட்சணம்பண் ணும். பாற்கடலைக்கடையக் கயிறுமாகும் திருமாலுண்ட பூமியை யும் தன் தலையிலேத்தி வாழாநிற்கு மென்னும் கருத்தையமைத்து ப்பாடிய,

'காலையிலும்வேலைகடையக்கயிறாகும்
மாலையிலும் பூமுடித்து வாழுமே — சோலையில்
செய்யிலா ரம்பையிலுஞ் செந்துருத்து மாநகர்வாழ்
பொய்யிலா மெய்யரியம் பூண்,

என்பதும்,

மற்றும் புக்கவிகொம்பங்கிக் கொன்பதுபுளியங்கொம்பங்கிக் கொன்பது வெட்டிநறுக்கியவெள்வேலங்கொம்பங்கிக்கொன்பது என்னும் இவைகளை ஒருவெண்பாவில் அடக்கப்பாடவேண்டுமென் னஇவர் எங்கள்மடத்துக்கெரிகரும்புகொள்வதுஎன்பதைமுதலில் எழுவாயாகச்சேர்த்துநீங்கள்சொன்னவாறே சொல்லிப்பாருங்கள்

வெண்பாவாய் முடிக்கிருக்கின்றதென்ன அவர்கள் அந்தப்படி சொல்லிக் கண்ட,

"எங்கண் மடந்துக் கெரிகரும்பு கொள்வதுபுங்
கங்கொம்பங் கின்கொன்பதுபு—யங்கொம்பங்
கிங்கொன்பதுவெட்டிடுமுக்கியவெள்ளே
வங்கொம்பங் கிங்கொன்பது,,"

என்பதும்.

சதுர்த்தி புண்ணியகாலத்தில் விக்கினேசுரர் மூஷிகவாகனரூடராய் வீதியிலெழுந்தருளிவரக்கண்டு தரிசிக்கையில் கர்ணமகமுக மெய மும்மதங்களையுமுடைய வலிமைமிருந்த பெரியமலைபோலும்யா னையுடையம்பரெஜந்துவாகியொருளவியானைதாமேறிக்கொண்டுபே கிரண்டிதேறுமோ இதைக்கேட்கக்கேள்விமுறை யில்லையோ? சிவனுடையமழுவும், விஷ்ணுவினுடைசக்கரமும், பிரமனதுகண்டமும் எங்கேபோயின. அவைகளை ஆர்பறித்துக்கொண்டு போனார்களென்னும் கருத்தையமைத்துப்பாடிய,

'மூப்பான்மழுவு முராரிதிருச் சக்கரமும்
பார்ப்பான் கலைதபும்பறித்தோரார்—வாய்ப்பார்
வலிமிகுத்த மும்மதத்துவாரணத்தை யையோ
எலிபூட்டிப்போமென்றதே,

என்பதும்,

ஷஷ்டியிற் சுப்பிரமணியரானவர் தமது வலப்பக்கத்திற்சிவ பெருமானும் அவர்பக்கத்தில் உமாதேவியும் இடதுபக்கத்தில்திரு மாலும், அவர்பக்கத்தில்விநாயகமூர்த்தியும்வரிசையாய்வரும்படி மகா சம்பிரத்துடனே வீதியில் எழுந்தருளக்கண்டுதரிசித்தபொ ழுதி தாயுடன்பிறந்த மாமன் உறிபெட்டி வெண்ணெய் திருடி, சப் பைக்காலையுடைய அண்ணன் பெருவயிறன் இச்செய்தியறைசாற்றி யதுபோலலோகப்பிரசித்தமாயிருக்க, இங்க ஆறுமுகக்கடவுளுக்கு இவ்விடத்தில் இதென்ன பெருமையென்னும் பொருளையமைத் துப்பாடிய,

"அப்ப னிரந் துண்ணி யாத்தாள் மலைநீலி
ஒப்பரிய மாம னுறிதிருடி — சப்பைக்கால்
அண்ணான் பெருவயிற னாறுமுகத் தானுக்கிங்
கென்ன பெருமை யிது."

என்பதும்,

ஒருசிவஸ்தலத்திற் சுவாமி வீதிப்புறப்பாடாகிவரக்கண்டு தரிசிக்கும்பொழுது, அவ்விடத்திற் சிலர் இந்தப்புறப்பாட்டைக் குறித்து ஒன்பது சாதிப்பெயர் வருவதாக ஒருகலித்துறை பாடவேண்டுமென்ன, இவர் சரஸ்வதிநாயகன்வாழ்த்துதல்செய்ய, இடபஞ்சுமக்க, வைரவமூர்த்தியும் சுப்பிரமணியக்கடவுளும் இந்திராதிகளையுள்ளோர்போற்றுதல் செய்ய, பாற்கடலில் பள்ளிகொள்ளும் திருமால்யாவருக்குமுன்னேசெல்ல, தித்திப்பாகிய வினைக்கருப்புவில்லையுடைய காமதேவன் தாழ்ந்துவணங்க, பெருமைதங்கிய பாம்பேதுகிலையுடுத்து. ஜடாமகுடதாரியாகிய எவருங் கிட்டாத சிவபெருமான் வீதிப்புறப்பாடா யெழுந்தருளியது அதிக விநோதமாயிருக்கிறதென்னுங்கருத்தை அமைத்து, மேற்படியார் சொன்னவண்ணம் ஒன்பதுசாதிப்பெயரும் வரும்படி சிலேடையாகப் பாடிய,

"வாணியன் வாழ்த்திட வண்ணான் சுமக்க வடுகன்செட்டி
சேணியன் போற்றத் திரைப்பள்ளி முன்செல்லத் தீக்குறும்பின்
*கோணியன் றாழக் குருமான் றுகிலைக் கொண்டிருந்து
வேணியனாகிய தட்டான்புறப்படல் வேடிக்கையே."

என்பதும்,

ஒருநாட் சர்க்கார் உத்தியோகஸ்தருளொருவனாகிய ராமையனென்னும் மாத்துவபிராமண னொருவன் அப்பொழுதே விழித்து சாகிரதாய் மிகவும் மெலிந்து திக்குத் திக்கென்று நொந்து ஓயாயங்கள் வளர்த்தகுதிரைபோலிருக்கின்ற ஒருநாட்டுக்குதிரையைப் பிடித்து அதன்முதுகிற் சமுக்காளச் சேணம்வைத்து, "வழியிலே கண்ட குதிரைக்கு வைக்கோற்புரி கடிவாள," மென்ற பழமொழிப்படி, கயிற்றுக் கடிவாளம் போட்டு அக் கடிவாளத்தை இடது கையிற் பிடித்து,

* கோணியன் - சணர்பையான்.

வலதுகையிற்புளியமளார்கொண்டு அடித்து, இரண்டுகால்களினாலும் வயிற்றிலடித்து நடந்த நடவாததுகண்டு, தனதுஅதிகாரத்தின்கீழிருக்கின்றவர்களைப் பார்த்து: இதை நடத்திக்கொண்டு போங்களென்று உத்தரவு செய்ய, அவர்களிற் சிலர் முன் புறத்தில் வந்து கடிவாளத்தைத் தொட்டிழுக்க, சிலர் பின்புறத்திலிருந்து கெட்டித் தள்ள அப்படியும் அதுவிசையாய் நடவாமல் மெள்ள மெள்ள அடிமேலடி வைத்து நடப்பதைக்காளமேகப்புலவர்பார்த்து, எப்போதும்வாயோயாமல் வேதாத்தியயனம் பண்ணுகின்ற விகடராமையனென்பவனை ஏறிச் செலுத்துங் குதிரையானது, கடிவாளத்தைத்தொட்டு முன்பக்கத்தில் மூன்றுபெயர் பிடித்திழுக்கொண்டுபோக, பின்பக்கத்திலிருந்து இரண்டுபெயர் வெகுவாய் கெட்டித்தள்ள அக்கட்டிலொருமாதத்திற்குக் காதவழிக்குக் குறையாமல் விரைந்துபோகின்றதெனப் பரிகாசமாகப் பொருமைத்துப் பாடிய,

"முன்னேகடிவாள மூன்றுபேர் போட்டிழுக்கப்
பின்னே யிருந்திரண்டு பேர்தள்ள - மன்னோரம்
வேதம்போம் வாயான் விகடராமன்குதிரை
மாதம்போங் காதவழி."

என்பதும்,

சித்திரை மாதத்தில் ஒருதரம் பிரயாணம் பண்ணிப்போகையில் வழிநடுவில் உள்ள திருச்செங்காட்டுச் சத்திரத்தில் ஒருநாளிராத்திரி தங்கியிருக்கும்பொழுது, காற்றுவீசாமல் தமக்கு அதிகவெப்பமாயிருந்ததுகண்டு காளமேகப்புலவர், பக்தசிரோமணியாகியசிறுத்தொண்டரே: நீ நமக்காக அறிந்து கறி சமைத்தபிள்ளையைநம்முடனேகூட உண்ணுதற்கு அழைத்து வாருமென்று சொல்லி, அப்பிள்ளையின்வரவை எதிர்பார்த்திருந்த சிவபெருமானுடைய திருச்செங்காடென்ற இந்த ஸ்தலத்தில் இதென்ன ஆச்சரியம்: காசிக்கங்கையைக்கமண்டலத்தில் முகந்து கையிலேந்திய அகஸ்திய முனிவனுடையபொதியமலையிலிருந்து உண்டாகும்தென்றற்காற்றை, ஒற்றைக்கொம்பினையேந்திய விநாயகமூர்த்தியின் பிதாவாகிய பரமசிவன் பூஷணமாகப் பூண்ட சர்ப்பந்தான் இப்பொழுது உணவாக உட்கொண்டு விட்டதோ, எப்பொழுதும் இயங்குகின்ற காரணத்தாற் சதாகதியென்று

பெயர்பெற்ற காற்று இயங்காத தென்னமாயம்? என்னும் கருத்தை யமைத்துப் பாடிய,

"அம்பேர்த்து கையா னவன்பதியி * ஜம்மாவைக்
கொம்பேர்த்தி தங்கையரைக் கொண்டதோ — அம்பா
அறிந்த மகனை யறையென்று சொல்லி
இருந்தவன்றன் செங்காட்டி லே.,,

என்பதும்,

இந்தப்படி காளமேகப்புலவர் நகை நயமாகக் கருத்தமைத்துக்கவி பாடி ஸ்தலயாத்திரை செய்துவருகையில், திருமலைராயன் பட்டணத் தில் கல்வியில் மிகச் சிறந்தவர்களென்று அவ்வரசனியாத்து கொடுத்த தண்டிகைப் பரிசுபெற்றபுலவர்கள் அறுபத்துநால்வரும், அவர்களுக் குத் தலைவனாகிய அதிமதுரகவி யென்பவனும் பயபிரியில் தங்களுக்குச் சமானம் ஒருவருமில்லை யென்று அகங்கரித்து, உலகத்திலுள்ள மற்ற புலவர்களையெல்லாம் மதியாமற் பலவாறாக நிந்தித்து அவமானப்படு த்தி வருகிறார்களென்றும், அதற்குத் திருமலைராயனும் உடன் பட்டி ருக்கிறானென்றும் செய்திகேட்டு, வித்வான்களாயிருப்பவர்கள் ஆரா யினுமென்ன, அப்படிப்பட்டவர்களை அவமதிக்கலாமா? அவர்களை இகழ்ந்தது நம்மை இகழ்ந்ததல்லவா, பூர்வம் ஒட்டக்கூத்த னென்ப வன், ,,காற்றது கையளவு கல்லாதுலகளவு,, வென்றெண்ணாமல், தானே வித்தையில் அதிகவல்லவனென்று மமதைக்கொண்டு மற்றுஞ்சிரக்கமி ன்றிப் புலவர்களைச் சிரச்சேதம் பண்ணிவந்தான் அதுகண்டு அக்கால த்திற்புகழேந்திப் புலவரானவர் அவனுக்குத் தக்கபடி கர்வபிராய சித்தம் செய்வித்து அனேகரைக் கொலைக்குத் தப்புவித்துரட்சித்துப் புண்ணியம் தேடிக்கொண்டார் அதுபோல இந்தக்காலத்தில் திருமலை ராயன் சமஸ்தானத்திலிருக்கும் வித்வான்கள் நானநானென்று இறு மாப்புற்று ,,நக்குகிறநாய்க்குச் செக்கென்றும் சிவலிங்கமென்றும் அறியாத துபோல,, நல்லார்பொல்லாரென்று அறியாமலும் ,, அரைக்கிற அரு மையுடைக்கிற நாய்க்குத்தெரியாததுபோல,, பாடிய அருமைதெரியா மலும் பிரசண்டகவிகளையெல்லாம் பழித்துக்கொண்டிருக்கிறார்களே இவர்களுடைய அகந்தையை நாம்போய் அவசியம் அழிக்கவேண்டு

* ஜம்மா-கால், இது இவ்விடத்திற்காற்றிலையுணர்த்திநின்றது.

மென்ற பிரதிக்கினையுடனே ஒருநாள் அவளிடத்திற்குப்போக யத்தனப்படுகிற சமயத்தில் அவளை மோகனாங்கி யென்னும் தாசி கண்டு, திருமலைராயன் பட்டணத்துத் துறைமுகத்தில் விசேஷமான முத்துக் குளிக்கிறதாகவும், அம்முத்து மற்றத் துறைகளில் குளிக்கப்படுகிற முத்துகளிலும் மிகச்சிறந்ததாகவும், திருமலைராயனே அந்த வியாபாரஞ் செய்வதாகவும் சொல்லுகிறார்கள், ஆகையால் அங்கேபோய்த்திரும்பி வரும்பொழுது மறவாமல் எனக்கு மார்பிலணியுங் கச்சுக்கு முத்து வாங்கிவரவேண்டு மென்றாள், அதைக்கேட்டு நல்லது அப்படியே ஆகட்டு மென்று சொல்லி அவளிடத்திற் செலவுபெற்றுக்கொண்டு புறப்பட்டு அப்பட்டணத்துக் கடைவீதியில்வந்தார்.

இவருக்கெதிரே மேற்சொல்லிய அதிமதுரகவியென்பவன் தனக்குப்பின்னும் முன்னும் இருபக்கங்களிலும் அறுபத்துநாலு தண்டிகைப்புலவர்களும் வரிசை வரிசையாகநெருங்கிச்சூழ்ந்துவர, அவன் கடிவில்லைமலையொன்று உரல்போலப் பருத்தகால்களும், பனைபோலநீண்ட துதிக்கையும், ஆலவட்டம்போலப் பரந்த செவிகளும், பிறைபோல வளைந்த கொம்புகளும், மலைச்சிகரம்போல் உன்னதமாகிய மஸ்தகமும், சாய்மனைபோல அசைகின்ற வாலும் முளைத்து எழுந்து நடப்பதுபோல நடக்கின்ற மதயானைமேல் நவரத்தினமயமாகிய தவிசிட்டு ஏறி, துஜம்-சத்திரம்-சாமரம்-முதலியவிருதுகள்பிடிக்க, கட்டியங் கூற அதிக ஆடம்பரத்துடனே ராஜசமூகத்தைநாடிவருவது கண்டு, தாம் அப்பால் விலகிப்போகாமல் அப்புலவர்கள் ஏறி வரும் தண்டிகைக்களின் மத்தியில் வந்து நிற்க, அதுகண்டு கட்டியக்காரன் தண்டிகைக்களைச் சூழ்ப்பட்டவர்கள் எப்படிப்பட்டவர்களாயினும், அவர்கள் தங்கள் வாயினால் அதிமதுரகவி யென்பவனுக்குரிய விருதைச் சொல்வது தொன்றுதொட்ட வழக்கமாயிருப்பதாய் அவ்வழக்கப்படி, இவர் மார்பிலே தன் கையிலிருந்த பொன்தோற் பட்டையால் தட்டி அதிமதுர கவிராய சிங்கம் பராக் கென்று சொல் லென்றனன். இவர் இறவுக்கு வந்தவர்களை யெல்லாம் தாலி யறுக்கச் சொன்னால் அறுப்பார்களா, அது போலத் தெருவிலே போகிறவர்கள் வருகிறவர்களை யெல்லாம் இவன் பெருமையைச் சொல்லச் சொன்னால் சொல்வார்களோ, ஆயினும் இவன் பெற்ற பெருமைதா னென்ன?

,,தூதைந்து நாழிகையிலாறுநாழிகைதனிற்சொற்சந்தமாலைசொல்லத், துகளிலாவந்தாதி யேழுநாழிகைதனிற்றொகைபடவிரித்துரைக்கப், பாதஞ்செய் மடல்கோவைபத்துநாழிகைதனிற் பரணியொருநாண் முழுதுமே, பாரகாவியமெலா மோரிருதினத்திலே பகரக்கொடிக்கட்டினேன், சீதஞ்செய்திங்கள் மரபினான்நீடுபுகழ் செய்யதிருமலைராயன்முன், சீறுமாறென்றுமே தாறுமாறுகள்சொல் திருட்டுக்கவிப்புலவரைக், காதங்கறுத்துச் செருப்பிட்டுத்தைத்துக் கதுப்பிற்புடைத்துவெற்றிக், கல்லணையினொடுகொடியகடிவாளமிட்டேறு கவிகாளமேகநானே.,,

எனத்தாம் ஆசுகவிபாடுந்திறத்தைச் சிறப்பித்தும், தமதுபெயரை வெளிப்படையாகச் செப்பியும், திருமலைராயன் சமஸ்தானத்துவித்துவான்கள் செய்யும் அக்கிரமத்தைக் குறிப்பித்து அவர்களை இகழ்ந்தும் ஒருசீட்டுக்கவி எழுதி அதைச் சுருட்டிச் செருகிக்கப் போட்டு இதைக்கொண்டுபோய்க் கொடுவென்று கொடுத்தனுப்பினார்

அதிமதுரகவிராயன் முதலானவர்கள் அதைவாங்கி வாசித்து, இதை எழுதினவன் காளமேகமென்பவனு, பாம்புக்குப் பல்லிலும், தேளுக்கு வாலிலும் ஏகதேசமாக விஷமிருக்குமென்பார்கள். இவனுக்கு உடல்முழுதும் விஷமயமாயிருக்கிறது ஆதலால் இவன் பொல்லாத துஷ்டனென்றும், அகங்காரமே கால்கைமுளைத்திய உருப்புகளாய் உருவெடுத்து வந்தவனென்றும், கண்டவர்கள் மேலெல்லாம் வம்பும் தும்புமாக வசைபாடுகிறவனென்றும் இவனுடைய சமாசாரம் முன்னமே நமக்குக் கேள்விதானே, அப்படியிருக்க இப்பொழுது நம்மையும் அவர்களைப்போல இலேசாக நினைத்துக்கொண்டுகொஞ்சமாவது மதிப்பில்லாமல் வாய்க்குவந்தபடியெல்லாம் தூஷித்துச்சீட்டுக்கவி எழுதினனபார்த்தையா : இப்படிப்பட்டவனைச் சும்மாவிடப்போமா. கொட்டினால் தேள் கொட்டாவிட்டாற் பிள்ளைப்பூச்சி யல்லவா, ஆதலால் இவனைச் சிலிர்க்கச்சிலிர்க்க வகித்து மானபங்கப்படுத்தித் தக்க சிக்ஷைசெய்வித்தாலொழிய இவன் அடங்கமாட்டானென்று தங்கள் அரசனுடனும் ஆலோசித்து, நாலுபெயர் சேவர்களைவிடுத்து அந்தக் காளமேகமென்பவன் எங்கேயாவது ஓடியொளித்துப் போகப்போகிறான், இந்த நொடிக்குள்ளே கைப்பிடியாகப்பிடித்துவந்து ஒப்பிக்க

வேண்டுமென்ன, அந்நால்வரும்போய்ப் பெரும் புலிகள்போல் அவரைச்சுற்றிக்கொண்டு நீசும்மா வருகிறையா, உன்னைப்பிடித்துக்கட்டிக்கொண்டு போகவேண்டுமோ வென்றார்கள், புலவர் நீங்களார் என்னை எங்கே அழைக்கிறீர்களென்ன, அவர்கள் நாங்கள் திருமலைராயன்சேவர்கள் அவனிடத்திலிருந்துதான் உன்னை அழைக்கிறோமென்ன, இவர் அங்கு எதுக்காக வரச்சொல்லுகிறீர்களென்னசேவகர் நீ எங்கள்ராஜசமஸ்தானத்துவித்வான்களைத் தூஷித்ததையே அதற்காகத்தானென்ன இவர் பின்னையென்றும் செய்யவில்லையோ. இதற்குத்தானா பிடிக்கிறதும்கட்டுகிறதும் என்னைத்தொடவேண்டாம் தூரநில்லுங்கள், நானே வருகிறேனென்று கடையில் எலுமிச்சம்பழமொன்று வாங்கி கையில் வைத்துக்கொண்டு ராஜசமுகத்தை நோக்கி வருகிறார்,

இதற்குள் அவ்விடத்தில் அதிமதுரகவியென்பவன் அறுபத்துநாலு தண்டிகைக்காரரையும் பார்த்துக் காளமேகமென்பவன் இவ்விடத்திற்கு வந்தால் அவன் அரசனருகிற் கிட்டிச்செல்லாதபடி நீங்களெல்லாரும் நெருங்கி உட்கார்ந்து உங்களாசனத்தை விட்டெழுந்திராமலிருங்களென்று திட்டப்படுத்தி, பின்பு ராஜாவைநோக்கி அந்த வம்பனைத் தாங்கள் வாவென்றழையாமலும், அவனுக்கு ஆசனங்கொடாமலும், சம்மானஞ்செய்யாமலுமிருக்கவேண்டுமென்று சொல்லி எச்சரிக்கையாயிருந்தான், அப்படியிருக்கையிற் புலவர்பெருமான் வந்துபார்த்து நாம்உட்பிரவேசிக்கக்கூடாமல் இங்கேயேதோ யந்திரமோதம் நடந்திருக்கிறதென்று நினைத்துக்கொண்டு. தாமசஞ்செய்யாமல் ஆஸ்தானவாசலண்டையிலிருந்தபடியே இதற்கேற்ற உபாயமொன்று செய்யவேண்டுமென்று, ஒருசுலோகஞ்சொல்லி அரசனை ஆசிர்வதித்து அந்தஎலுமிச்சம்பழத்தை அவனுக்கெதிரேநீட்டினார்; பிராமணர்கள் ஆசிர்வசனம் பண்ணி அட்சதையாவது புஷ்பமாவது மற்றேதாவது கொடுக்கவந்தால் வாங்காமலிருப்பது விதியல்லவே அதுபற்றி அவன் தன்கையைநீட்டினான், நீட்டியகையில் இந்தஎலுமிச்சம்பழம்போய்ச் சேரவேண்டுமே அதனால்யாவரும்விலகி வழிவிட்டார்கள், காளமேகப்புலவர் தாராளமாக அச்சபைநடுவே சென்று அதைவேந்தன்கையிற் கொடுக்க, அவன் வேண்டாமென்று சொல்லாமல் வாங்கிக்கொண்டதன்றி, அவருக்கு ஆசனம்கொடுக்கவும், உட்காருமென்றுசொல்லவு

யில்லை. அதுதெரிந்து ஜாம்புகேசுரத்தின் நிலைமையை நோக்கி மானசிகமாக ஸ்ரீ அகிலாண்டவல்லி விமானத்தைத் தரிசித்து, சாரதையைத் தியானித்து,

"வெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பணிபூண்டு
வெள்ளைக் கமலத்து வீற்றிருப்பாள்— வெள்ளை
அரியாசனத்தி லரசரோ டென்னைச்
சரியாசனத்து வைத்த தாய்,,

என்பதை உள்ளிட்ட முப்பது வெண்பாவிற் சரஸ்வதி மாலையென ஒரு பிரபந்தம்பாடினார், பாடினமாத்திரத்தில் வாணி கடாக்ஷத்தால் திருமலைராயனிருந்த ஆசனம் ஒருபுறத்தில் வளர்ந்து இடங்கொடுக்க, அதில் அவர் அவனுடன்சமானஸ்தராக வீற்றிருந்தார்.

இப்பிரகாரமாக ராஜசிங்காசனம் வளர்ந்து இடங்கொடுக்க அவர் அதன்மேலேறி உட்கார்ந்த தருணத்தில் அவர்களெல்லாம் இதென்ன மந்திரமோ, மாயமோ, அல்லது கண்கட்டு வித்தையோ வென்றுபிரமிப்புடனே பார்க்கையில், புலவர்பெருமான் அந்தப்புலவர்களை என்னைவந்தகண்வாங்காமல் உறுத்துப் பார்க்கிறீர்களே நீங்களார் தெரியச்சொல்ல வேண்டுமென்று கேட்க, அவர்கள் நாங்கள் இந்தச்சமஸ்தானத்தி லிருக்கும் கவிராஜர்களென்று உத்தரஞ்சொல்ல, இவர்கவிராஜ ரென்பதற்குக் குரங்கரசரென இடக்கராகப் பொருள்கொண்டு, குலுக்கென் றுநகைத்து அவர்களை உல்லங்கனம்பண்ணும்படி, ஓ: ஓ: புவியரசர்களாற்புகழப்படும்புலவர்களே : நீங்களாரென்று உங்களைக்கேட்டாற் கவிராசர்களென்கிறீர்களே கவிராஜர்களாயிருந்தால் உங்கள் ஜாதிசுபாவப்படி வாலிருக்கவேண்டுமே, அதெங்கே ? வாலில்லாமையால் நீங்கள் வாலில்லாத குரங்குகளென்றல்லவோ சொல்லப்படுவீர்கள், அப்படித்தானென்று ஒப்புக்கொண்டாலும், நீண்டுவளர்ந்து வலிபெற்ற நகமிருக்கவேண்டுமே அதெங்கே ? அல்லாமலும்நாலுகாலிருக்கவேண்டுமே அவையெங்கே ? காலாசங் கையையாவது கொள்ளலாமென்றாலும், பிளைசார்ந்தகண்ணிருக்கவேண்டுமே அதெங்கே? சொல்லுங்களென்றும் கருத்தினை உள்ளடைத்து,

வாலெங்கேநீண்டெழுந்த வல்லுகிரெங்கேநா
காலெங்கேயுள்வெளுத்த கண்ணெங்கே—சாலப்
புவிராயர்போற்றும் புலவீர்காளீங்கள்
கவிராயரென்றிருந்தக்கால்

என்றொருவெண்பாப்பாடினார். இதிற்குரங்குகளென்று இழித்துரைத்தாலும் அவர்களைப்போலத் தாமும்புலவராகையால் அந்தச்சுயாபிமானம்போகாமற்புவிராயர்போற்றப்புலவீர்காளென்று சிறப்பித்தார்

அதையவர்கள் அம்பிதமாக நினையாமல் இவன் எட்டிக்குருவியைப்பிடித்து இறங்கிக் காலைப்பிடிக்கிறவன்போல இந்தப்பாட்டிலே நம்மையெல்லாம் குரங்குகளென்று பிரத்தியட்சத்திலேயேயிகழ்ந்து அதனோடுகூடக்கொஞ்சம்முகஸ்துதியாகப்புவிராயர்போற்றும்புலவீர்காளென்றான் பின்பு சிட்டுக்கவியிலும் தூஷித்திருக்கிறான் இவனுடைய நெஞ்சுத்துணிவுதான் என்னவென்று சிந்தித்துப் பிறகு அவனை நோக்கி இந்தச் சமஸ்தானத்தில் வெகு காலமாகப் பெயர்பெற்றிருக்கின்ற எங்களை இன்றுவந்து முனைக்குநீ ஆரென்று கேட்கிறாயே நீ யார்சொல்லென்று கேட்டார்கள் இவர்நாம் காளமேகமென அறியீர்களாவென்ன அவர்கள் நீகாளமேகமா அல்லது காளமேகமென்பது கருத்தமேகமாதலாற்பொழியவேண்டுமேயென்ன இவர்பொழியத்தான் வந்தேனென்ன அவர்கள் எப்படிப்பொழிவாரென்னப்புலவர்சிரோமணி கழியினிடத்திற்செல்லும் கடலநீரானது உப்புமயமாயிருப்பதென்று அதையொழித்து சாஸ்திரமாகிய கடலில் அருந்தாரமாகிய நீரைமுகந்து அருவியாறுவழிந்தோடுகின்ற தமிழ்பிறந்த பொதியமலையிற்காலூன்றி கடினமாகிய கவிகளைப்பாடுகின்ற புலவர்கள் மனதின் கன்மேனை பயந்தெரிக்க இடித்து அவர்கள் காதுகள் செவிடுபடக் குமுறிகண்கூச மின்னி கவியாகியமழை பொழியும்படி காளமேகமானது புறப்பட்டதென்னும் கருத்தை அமைத்து,

கழியுந்தியகட லுப்பென்றுநன்னூற்கடலின்மொண்டு
வழியும்பொதிய வரையினிற்காலூன்றி வன்கவிதை

மொழியும் புலவர் மனத்தேயடித்து முழங்கிமின்னப்
பொழியும்படிக்குக் கவிகாளமேகம் புறப்பட்டதே

என்றொருபாடல் பாடக்கேட்டு அதிமதுர கவியென்பவன் அதிக மாச்சரியங்கொண்டு அவரை முன்னிட்டு வெள்ளைக்கவிபாடித்திரிகின்ற காளமேகமே மூச்சுவிடுவதற்கு முன்னே முன்னூறு அல்லது நானூறு பாடல் பாடப்போகாது மூச்சுவிட்டாச்சுதென்றால் ஐந்நூறுபாடல்வரையிலும் ஆகாதா இதற்கித்தனைபேச்சென்னசும்மா ஆடம்பரமாக உன்னுடைய கள்ளக் கவிக்கடையைப்பரப்பவேண்டாம் அப்பட்டியிலே அதைக் கட்டென்றும் கருத்துத்தோன்ற.

மூச்சுவிடுமுன்னமே முன்னூறு நானூறும்
ஆச்சென்றாலைந்நூறு மாகாதோ—பேச்சென்ன
வெள்ளைக்கவிகாளமேகமே யுன்னுடைய
கள்ளக்கவிக்கடையைக் கட்டு

(ஆயிற்றென்பது-எதுகைநோக்கி ஆச்சென மரூஉவாக அமைக்கப்பட்டது வெள்ளைக் கவி-வெண்பா) என்றொருபாடலைச்சொல்லி அவன் தன்பெருமையை வெளியிட்டுக் கவிசிரேஷ்டராகிய இவரை இழிவு செய்தபொழுது இவர் நீமூச்சுவிடுவதற்கு முன்னே முந்நூறு நானூறுபாடல்வரையிலும் ஆச்சென்றாலைந்நூறுபாடல்வரையிலும் பாடுகிறதாகச் சொன்னையே இதோராச்சரியமா நான்சொல்வதைக் கேள், வாயைத் திறவாததற்குமுன் எழுநூறெண்ணூறு பாட்டளவிலும் ஆகாதா பாடுகிறதற்கு ஒரு நிமித்தமுமில்லாதகாலத்திற் சும்மாவிருந்தா லிருப்பேன், ஆவசியமுண்டாய்ப்பாட ஏற்பட்டேனானால் யானைத் துதிக்கை போலப்பெரியதாரைகளாக வருஷிக்கும் மேகம்நானென்றறிநீ பிள்ளாயென்றும் கருத்தையமைத்து

இம்மென்னுமுன்னே யெழுநூறு மெண்ணூறும்
அம்மென்றா லாயிரம்பாட் டாகாதா—சும்மா

இருசுதா விருப்பே னெழுந்தேனே யாயிற்
பெருந்தலை பேசும் பேனாய்,,

(இப்பேனல் வாய்திற வாமையையும், அம்பெனல் - வாய்திறந்துழுங்கையையும் உணர்த்தியகுறிப்புச் சொற்கள்) என்பதாக ஒருகவிபாடித்தமது வல்லமையைக் குறிப்பித்தார்.

அதைத் அதிமதுரகவி கேட்டு, துக்கிநிறுத்தடா பிணைக்காடாய் வெட்டுகிறதென்பனைப்போல வெகு சாமார்த்திய மாகப்பேசுகிறுனே-இவர் சொல்வது பொய்யாயிருக்குமா, அதேது, ஆராய்ந்தாள் செத்தாளுடைய பொழுது விடிந்தால் தெரியுமென்பதுபோல, இன்னும் சற்றுநேரத்திற்குள்ளே பொய் மெய்யெல்லாம்பட்டப்பகலாய்த்தெரியவருகிறதென்றுநினைத்துககாலமேகப்புலவரை நோக்கி, "கூரம்பாயினும் வீரம்பேசேலென்பதை,, அறியாமல், நீ இவ்வளவுவீரம்பேசுகின்றையே-அரிகண்டம்பாடுபார்ப்போமென்றுன், இவர் அரிகண்டமாவதுஎன்னவென, அவன்கழுத்திற்கத்தி கட்டிக்கொண்டு எதிரிகொடுக்கும் சமிசைக்கு இணங்கப்பாடுவதுதான், அப்படிப்பாடுமிடத்தில் எதாவதுதவறிஞல் அந்தக் கத்தியினுலேயே வெட்டுண்ணவேண்டிவருமென்ன, அதற்கு இவர்கைகொட்டிச் சிரித்து இதுதான அரிகண்டமென்பது, இத்தனைசுலபமானதை ஒருவிஷயமாகத்தேடிச் சொல்லவந்தையே இதிலென்ன அருமையிருக்கிறது, இதுநிற்க, யமகண்டம் பாடுகிறதல்லவோ மகாபிரயாசம், அதைக்குறித்துப் பேசுவதுதான் கௌரவமென்றுசொல்ல, அவன்யமகண்டமென்றும்ஒன்றிருக்கிறதா அதுஎப்படிப்பட்டதென்ன, இவர்பூமியிற் பதினுறடிநீளம், பதினுறடி அகலம், பதினுறடி ஆழமாகச் சதுரத்திற்குச்சதுரம் ஒருபெரிய குழிவெட்டி, அதன் நான்குமூலையிலும் பதினுறடி இருப்புக்கம் பங்கள் நாட்டி, கம்பத்தின்மேல் நாலுபக்கத்திலும் இரும்பிஞல் நாலுசட்டமும், நடுவே யொருசட்டமும் போட்டு நடுச்சட்டத்தில்உறிகட்டி, குழிக்குள்பருத்தபுளியங்கட்டைகளை நெருங்கஅடுக்கி, கட்டைக்குள்நெருப்புமூட்டி, அதுகனன்றெழுந்து சுவாலித்துஎரிந்துகொண்டிருக்க, அந்நெருப்பில்ஒருஆளுயரமான இருப்புக்கொப்பரை வைத்து, கொப்

பரையினையும் எண்ணெயைவிட்டு அதில் அரக்கு, மெழுகு குங்கிலியம், கந்தகம், சாம்பிராணியென்ற நரம்பு, இவை நன்றாய்க்காய்ந்து உருகிக் கொதித்துக்கொண்டிருக்க, நான்கு யானைகளைப் பாகர்கள் மதமேற்றிக் கொண்டுவந்து, கம்பத்திற்குநேரொன்றாக மலைகளைப்போலநிறுத்தி வைத்திருக்க, பின்புறத்தில் ஒவ்வொன்றையுந் துவளையத்திற் சங்கிலி கோத்து நயத்த எழுமிகும் காலாகச் சமைத்துப்பளபளவென்று மின்னும்படி சாணைபிடித்த எட்டுக்கத்திகளைக் கழுத்தில் நாலும் அரையில் நாலுமாகக் கட்டிக்கொண்டு, கத்திகளின் புறத்திலுள்ள சங்கிலிகளைமேற்படியானைகளின் துதிக்கையிற் கொடுத்துவைத்து, தான்கொப்பரிக்கு மேலாகத் தொங்குகின்ற உறியிலே ஏறியிருந்து, எவரெவர் என்னென்ன சமிசை கொடுத்தாலும் அவைகளை அரைநொடியிலேதானே தமையின் நிக்குறித்த கருத்தின்படி இசைத்துப் பாடவேண்டியது, அவ்வாறு பாடும்பொழுது எவ்வளவாறு வழுவுமானுற் சமிசை கொடுத்தவர்கள் யானைமேலிருக்கும் பாகர்களுக்கு கண்ணசைகை காட்ட, அவர்கள் யானைகளை மஸ்தகத்தில் அங்குசத்தாற்குத்தி அதட்ட அவைகள் தமது துதிக்கையிற்கொடுக்கப்பட்டிருக்குஞ்சங்கிலிகளை விசையாயிழுக்க, இழுத்தவுடனேபுலவன்கழுத்தும் அரையும் கத்திகளாற் கண்டிக்கப்பட்டு, தலையொருதுண்டமும், அரைமுதற்காலளவுமொருதுண்டமுமாகி, அக்கெண்ணெய்க்கொப்பரியில் விழுந்துமாண்டுபோகிறது, இப்படிப்பட்டதுதான்யமகண்டமென்றார்,

காளமேகப்புலவர் இவ்வண்ணஞ்சொல்லக்கேட்டமாத்திரத்தில் அதிமதுரகவி மனம் திடுக்குற்று ஆ ஆ அப்பா? யமகண்டமென்பது இப்படிப்பட்டகோரமானதா, இது உள்ளபடி யமகண்டத்திற்கு ஒப்பாயிருப்பதனாலேதான் இதற்கு இப்பெயர்கொடுக்கப்பட்டதாகக் காணுகின்றது, இவ்வாறு செய்ய ஆராலேயாகும்? அசாத்தியமென்று தனக்குள்ளே எண்ணி அதிசயித்து, பின்புபுலவர்பெருமானைப்பார்த்து நீசொன்னயமகண்டந்தகுதியானதுதான், ஆயினுஞ்சும்மாவாயினாலே டம்பகாகச்சொல்வதனாலென்னபிரயோசனம், "மாடுதிருப்பினவனல்லவோ அர்ச்சுனன்" அதுபோல, சொன்னபடிசெய்வதல்லவோகௌரவம். ஆகையால்செய்பார்ப்போமென்றான் இவர்சபாசுஆட்டுவிட்டுநா

டகம் பார்க்கிறது போல என்னைச்செய்யச்சொல்லிப்பார்க்கிறதென்ன, நீ முதல்முதல் இந்தவிஷயத்தை எடுத்துப் பேசினதனாலும். வெகுநாளாக யாவருமறிய நடுத்தெருவிலே அதிமதுர கவிராயசிங்கம் பராக்கென்றுவிருதுகூறிக்கொண்டுவருகிறபடியினாலும்செய்யவேண்டியகடமையுன்னுடையதே, அப்படியிருக்கக்குரங்குகுட்டிக்கையைத்தோய்க்கிறதுபோலஎன்மேலேசார்த்திஎன்னைத்தூண்டிவிட்டு நீதப்பித்துக்கொள்ளப்பார்க்கிறது சரியோ இதுவிருதுகூறினவர் செடியில்நுழைகிறது போலாகுமல்லவோ வென்றார்.

அத்தருணத்தில் அதிமதுரகவியும் அறுபத்துநாலு தண்டிகைப்புலவரும் திருமலைராயன் முன்னிலையில் ஒருசேரக்கூடி, இவனெதிரிகளை மதியாத துன்மார்க்கனாயிருக்கிறபடியினாலே தந்திரமாக இவனையே அந்தயமகண்டத்தில்மாட்டி இவனுடையகொழுப்பை அடக்கவேண்டுமென்று தங்களுக்குள் ஆலோசித்துக்கொண்டு, அப்படிச்செய்யவேண்டுமென்று எங்களுக்கு ஆவசியகமில்லை, நீயே உன்னை அதிகசமர்த்தனென்று பெருமைப்படுத்தியும் எங்களை யிழித்தும் பிட்டுக் கவிபாடி யனுப்பினதனாலும், நாங்கள் சுளுவாக அரிகண்டம் பாடச்சொன்னால், கிணற்றுக்குத்தப்பித் தீயிலே பாய்ந்ததுபோல, அதைவிலக்கி உன்வாயினாலேயேயமகண்டம் பாடுகிறதைக்குறித்துப் பேசினதனாலும் நீதான் அந்தப்படிச்செய்யவேண்டுமென்றார்கள்.

அவர்கள் அப்படிச்சொல்லக்கேட்டுப் புலவர்சிகாமணியானவர் கல்வித்திறமும் கவிசாதுரியமுமில்லாத இவர்களை யமகண்டம் பாடச்சொல்லுகிறது, வீரமில்லாத பேடியைப்போருக்கழைக்கிறது போலல்லாமல் வேறல்ல. ஆதலால் அதை நாமேசெய்துகாட்டி இவர்கள் இறுமாப்பை அடக்கவேண்டுமென்று நிச்சயித்துக்கொண்டு நீங்கள் வருத்தப்படவேண்டாம், தலைகீழாகக்கரணம் போட்டாலும் இது உங்களால் ஆகத்தக்கதல்ல, நானே செய்கிறேன்பாருங்களென்று உடன்பட்டார். அவர் உடன்பட்ட மாத்திரத்தில் அவர்கள் இனித்தாமதிக்கலாகாதென்று யமகண்டத்தைக்குறித்து அவர்சொன்னபடி வேலையாட்களைக்கொண்டு ராஜாவின்சபாமண்டபத்திற்கு நேரிலேகுழிவெட்டித்தழல்மூட்டி எண்ணெய்க்கொப்பரைவைத்துக்குழிக்குநாற்றிசையிலும்

இருப்புக்கம்பம் நாட்டிக்கம்பத்தின்மேற் சட்டம் போட்டு நடுச்சட்டத்திற் கொப்பரிக்குமேலே உறிகட்டிப் பாகர்களால் யானைகளை மதமேற்றிக்கொண்டுவந்து கம்பத்திற் கொம்பொன்றாகநிறுத்தும்படி செய்தார்கள், புலவர்பெருமான் கழுத்திற்கும் அரைக்கும்கத்திகட்டிக்கொண்டுகத்திகளின் பின்னுள்ளவளையங்களிற் கோத்திருக்கும் சங்கிலிகளையானைகளின் கையிற்கொடுத்து விட்டுந் தாம் உறியின்மேலேறி முகமலர்ச்சியுடனே மண்டலித் திருந்து, திருமலைராயனுடைய அனுமதியெற்றுக்கொண்டு அதிமதுரகவி முதலானவர்களை நோக்கி, இனி நீங்கள் காலதாமசம் செய்யாமல் உங்களிஷ்டப்படிக்குக் கொடுக்கவேண்டிய சமிசைகளைத் தடையின்றித் தாராளமாகக் கொடுக்கலாமென்ன, அவர்கள் இவருடைய தைரியத்தையும் முகவிகாசத்தையும் உறியேறிப்பயமின்றிக் காம்பீரமாகவீற்றிருப்பதையுங்கண்டு அம்மம்மா? இவனுடையதைரியந் தான் எப்படிப்பட்டதென்று ஆச்சரியப்பட்டு நாமிதை முற்ற முடியப்பார்க்கவேண்டுமென்றுயாவரும் சமீபத்தில் வந்திருந்து, அவரவர் வெவ்வேறே மிகவும் அருமையாக ஆராய்ந்து தேடி யெடுத்துத் தங்களிஷ்டப் படிக்கெல்லாம்நானாவிதமானசமிசைகள்கொடுக்க, அவைகளெல்லாவற்றையும் அகிலாண்டநாயகிஅனுக்கிரகத்தார் பொருள்செய்யாமலும், எவ்வளவேனும் இடற்படாமலும் சுநாயாசமாகஅவர்கள்கொண்டகருத்துக்கிணங்கும்படி சித்திரவிசித்திரமாய் நல்லநயந்தோன்ற அதற்குத்தக்க அலங்காரங்களும் அமைத்து விரைவாகப்பாடினார்

---

### அதிமதுரகவியும், அறுபத்துநாலு தண்டிகைப்புலவர்,
### களும் தனித்தனிகொடுத்தசமிசைகளும்,
### காளமேகப்புலவர்பாடியபாடல்களும்.

---

பிரதமத்தில் அதிமதுரகவி, திருமாலவதாரம் பத்துமொரு வெண்பாவில அடக்கிப்பாடவேண்டுமென்ன, புலவர் பெருமான்

இதற்குஒருவெண்பாவும்வேண்டுமோநான்பாதிவெண்பாவிற்பாடுவே னென்று பாடியசெய்யுள்.

"மெச்சுதிரு வேங்கடவா வெண்பாவிற் பாதியிலென்
இச்சையிலுன் சன்ம மியம்பவா— மச்சாகூர்
மாகோலா சிங்கவா மானாமா ராமாரா
மாகோபா லாமாவா வாய்,,

இதன்பொருள், தேவரும் முனிவரும் யாவரும் மெச்சுகின்ற திருவேங்கடத்தில் வீற்றிராநின்ற பெருமாளே! அடியேன் அபீஷ்டப்படி பாதிவெண்பாவில் உனது திருவவதாரம் பத்தும்இசைத்துக் கூறும்பொருட்டு நீயென்முன்னெழுந்தருளக் கடவாயென்று முற்பாதியில் திருவேங்கட முடையானைப் பிரார்த்தித்து, தாம்பிரார்த்தித்த வண்ணம பெருமாள் கடாட்சவிசேஷத்தால் அட்பத்தவதார மூர்த்திகளும தமக்கும் பிரசன்னமாகக்கண்டுபிற்பாதியில் மச்சா, கூர்மா, வராகா. நரசிங்கா, வாமனு, பரசுராமா, ரகுராமா, பலராமா, கிருஷ்ணு, கற்கியென்று அவ்வவர்திரு நாமங்களைத் தனித்தனியே குறித்து அழைத்தாரென்பதாம், இச்செய்யுளுக்கு, மெச்சுகின்ற திருவேங்கடத்தானே! பாதிவெண்பாவில் என்னிஷ்டப்படி, மச்சா, கூர்மா, வராகா, நரசிங்கா, வாமனு, பரசுராமா, தசரதராமா, பலராமா, கிருஷ்ணு, கற்கியென்று உன் திருவவதாரத்தைச் சொல்லும்படி வாமென்று பொருள்கூறுவாருமுண்டு. (என்றென்பது-சொல்லெச்சம்.)

அறுபத்துநாலு புலவர்களில் ஒருவர் இராசிகளின்பெயரும் முறையும் தொகையும் அடைமொழியில்லாமல் ஒருவெண்பாவில் அமைத்துப்பாட வேண்டுமென்ன, முதலிற் பகருங்காலெனவும், இறுதியில் வசையறுமி ராசிவளமெனவும் சேர்த்துக்கொண்டு அவ்வாறே பாடிய செய்யுள்.

பகருங்கான் மேடமிடப் பம்மிதுனங் கர்க்க
டகஞ்சிங்கங் கன்னிதுலாம்விர்ச்—சிகந்த
னுசுமகரங் கும்பமீ னம்பன்னிரண்டும்
வசையறுமி ராசி வளம்,,

என்பதாம், (இடபம் மிதுன மென்பதில், மகர வொற்றுயிரித்தல் விகாரம்.)

ஒருவர், மும்மூர்த்திகள்பெயர், அவர்கள் தின்னும்கறி, உண்ணுமுணவு, ஏந்தும் ஆயுதம், பூணும் பூஷணம், ஏறும் வாகனம், வசிக்குமிடங்களை ஒருவெண்பாவில் அடக்கிப்பாடவேண்டுமென்ன, அப்படியே பாடிய செய்யுள்,

"சிறுவனைபயறு சொற்சொற்கடுரு
மறிஞெகிழி தண்டு மணிநூல் — பொறிரவம்
ஏற்றேறு புள்ளன்னம் வேதனரன் மாலுக்குக்
கற்றூழும் பூவே கறி,,

இ-ள். பிரமன் சிவன் விஷ்ணு வென்னும் மூவர்க்கும், பிள்ளை வெண்ணெய் பயறு கறி, செந்நெல்-விஷம்-பூம்-உணவு, மான் சக்கரம்-தண்டம்-ஆயுதம், கௌஸ்துவம்-உபவீதம்,சர்ப்பம்-பூஷணம்-ரிஷபம்-கருடன்-அன்னம் வாகனம், கைலை-பாற்கடல்-தாமரைவசிக்குமிடமென்பதாம்,

ஒருவர், ஈயேறி மலை குலுங்கினதாக ஒருவெண்பாப் பாடவேண்டுமென்ன, மலைமாத்திரமா உலகமுழுதும் குலுங்கியதாகப் பாடுகிறேனென்று பாடியசெய்யுள்.

"வாரணங்களெட்டு மகமேரு வெங்கடனும்
தாரணியு நின்று சலித்தனவால் — நாரணனைப்
பண்வாயிடைச்சி பருமத்தி னாலடித்த
புண்வாயி லீமொய்த்தபோது.,,

இ-ள். ஸ்ரீமந்நாராயணன் கண்ண பிரானாக அவதரித்திருக்கையில், திருவாய்ப்பாடியில் வெண்ணெய் திருடினனென்று அவனை இராகம்போன்ற சொல்லினை யுடைய அசோதை பிராட்டிபருத்த மத்துக்கொண்டு அடித்தபுண்ணில் ஈயானது மொய்த்தபொழுது அறுவருப்புண்டாகி அனைருமைத் திருமேனி அசைய, சதாகாலமும் திருவுதரத்திற்குள் அசையாதுவைத்து அவனும்பாதுகாக்கப்

படும் உலகமும், அதிலுள்ள அஷ்டதிக்கியானைகளும், மகாமேருவும் சப்த சாகரங்களும் அசைந்தனவென்பதாம்.

ஒருவர், "குடத்திலே கங்கையடங்கும்,, என்பதாகப் பாடவேண்டுமென்ன, அவ்வாறே பாடியசெய்யுள்.

"விண்ணனுங் கடங்காமல் வெற்புக் கடங்காமல்
மண்ணனுங் கடங்காமல் வந்தாலும் — பெண்ணை
இடத்திலே வைத்த இறைவர் சடாம
குடத்திலே கங்கையடங்கும்,,

(இ-ள். கங்காநதியானது அகன்ற வானத்திலுள்ளும் அடங்காமல், மகாமேரு முதலாகிய மலைகளுக்குள்ளும் அடங்காமல், பூமிகளுள்ளும் அடங்காமல் எங்கும் சம்பூரணமாகப் பொங்கிப் பெருகி வந்தாலும், உமாதேவியை இடதுபாகத்தில் வைத்தருளிய பரமசிவனுடைய ஜடா மகுடத்தில் அடங்கிநிற்கு மென்பதாம் மகுடத்திலேகங்கை யடங்குமென்பதன் முதலெழுத்தாகிய மகரத்தைப் பிரித்துமுன்னும் அடியின் இறுதியிற்சேர்த்து, குடத்திலேகங்கையடங்குமென்பதைச் சமிசைக்கேற்க நான்காமடியிற் பொருத்தி முடித்தார்,)

ஒருவர் ஒன்றுமுதற் பதினெட்டெண்களை முறையே அடைசொல்லில்லாமல் ஒருவெண்பாவில் அடக்கிப் பாடவேண்டுமென்ன, அப்படியே அடக்கிப் பாடியசெய்யுள்.

"ஒன்றிரண்டு மூன்றுநான் கைந்தாறு ஏழெட்டு
ஒன்பது பத்துப் பதினொன்று — பன்னை
இரண்டுபதின் மூன்றுபதி னான்குபதினைந்துபதி
னாறுபதி னேழுபதி னெட்டு,,

என்பதாம்,

ஒருவர், முதற்சங்கத்தின் தொகையும், இடைச்சங்கத்தின்தொகையும், கடைச் சங்கத்தின் தொகையும் ஒரு வெண்பாவில் அடக்கி, அம் மூன்று சங்கத்தார்க்கும், அறுபத்துநாலுதிருவிளையாடலுக்கும்

"கர்த்தன் மதுரையிற்சொக்கன்,, என்பது பயநிலையா ஈற்றடியில்வரும்படி முடிக்கவேண்டுமென்ன, அவ்வண்ணமே முடித்தசெய்யுள்,

"நாலாநா லாயிரநா னூற்றுநாற் பத்தொன்பான்
பாலாநா னூற்றுநாற் பத்தொன்பான் – மேலாநாற்
பத்தொன்பான் சங்கமற்று பத்துநா லாடலுக்கும்
கர்த்தன் மதுரையிற்சொக்கன்,,

என்பதாம்,

ஒருவர் "கடல்நடுவிற் செந்து ளொழுப்பினதாகப், பாடவேண்டுமென்ன, அப்படியே கருத்துக கற்பித்துப் பாடியசெய்யுள்,

"சுத்தபாறகடலி னடுவினிற்றுளி தோன்றிய வதிசய மதுகேள்,
மத்தகக்கறியை யுரித்தவன்மீது மதனபொரு தழிந்திடுமாற்றம, வித்தகக்கமலை செவியறகேட்டால் விழுந்துமொர தயர்ந்தழுதோங்கி, கைத்தல மலரான் மார்புறப்புடைத்தா ளொழுந்தது கலவையின் செந்தூள்,,

(இ-ள்.) மலினமில்லாத திருப்பாற்கடலின் நடுவிற் செந்தூளெழும்பிய அதிசயத்தைச் சொல்லுகிறேன்கேள், தாருகவனத்து முனிவர்கள் விடுத்த மஸ்தகத்தையுடைய யானையின் தோலையுரித்துஏகாசமாகப்போர்த்த சிவசூரன்மேல் படையெடுத்துப்போர்செய்து மன்மதனுகியபிள்ளை இறந்தசெய்தி, அவனுடைய தாயாகியசாதுரியமுடையஸ்ரீமகாலட்சுமி செவியில்வந்து புகும்படி கேட்டு, அவள்கீழேவிழுந்து மனம்நொந்து அழுது மலர்போன்ற தன்னிருகைகளையும் உயரஎடுத்து மார்பில்தாக்கும்படி அடித்துக்கொண்டால் அதனல்அம்மார்பில் அப்பியிருந்த குங்குமககலவைச் செந்தாளானதுஎழுந்துபரந்ததென்பதாம், சுத்தப்பாற்கடலென்பது - சுத்தபாற்கடலெனச் செய்யுள் விகாரமாயிற்று.)

பிறவாநெறி காட்டியார் என்னும் பெயருடையவர், "பெருங்காற்று மழைக்காட்டும்பெருநட்புப் பகைகாட்டும்,, என்றொருவெண்பாப்பாடவேண்டு மென்ன, அங்ஙனமே அவரைக்கடிந்து பாடியசெய்யுள்.

"நீரேபிறவா நெறிகாட்டி யாரேமக்கு
நீரே யிசைநிலையிட்டீர்—நீரேயிவ்
விண்ணளமேன் செய்தீர் விடுங்கடுகைகாற் றும்மையுரைகாட்
டுங்காட் டுப்பகை காட்டுமே.,,

(இ-ள்.) பிறவா நெறிகாட்டியாரென்று யாவராலும் சிறப்பித்துச் சொல்லுகின்றவரையான பெயர்பெற்றவர் நீர்தாமோ, எடக்கு இப்படிப்பட்ட வரிசைகொடுக்கத் தலைப்பட்டவர் நீர்தாமோ, ஏதுக ளகநீங்க விகடமசெய்ய ஏற்பட்டவர் அப்படியிருப்போதும் விட்டுவிடும், கடுங்காற்று மையுங்காட்டும் கடுங்காட்டுப்பகைகாட்டுமென்பதாம்.

ஒருவர், ஆமணக்கும் யானைக்கும் உவமைதோன்ற ஒருபாடல் பாடவேண்டுமென்ன, அங்ஙனே சிலேடித்துப் பாடியவெண்பா.

,,முத்திருக்குங் கொம்பசைக்கு மூரித்தண் டேர்திவரும்
கொத்திருக்கும் நேரர் குலைசாய்க்கும — எத்திசைக்கும்
தேமணக்குஞ் சோலைத் திருமலைரா யன்வரையில்
ஆமணக்குமால்யானை யாம்.,,

(இ-ள்.) எந்தத்திசைகளிலும் இனிமையாகப் பரிமளிக்கின்ற மலர்ச்சோலை சூழ்ந்த திருமலைராயனுடைய வெற்பகத்தில், ஆமணக்குமுத்துடைத்தா யிருக்கும். கொம்பசையாநிற்கும் நெரிகின்ற தண்டேந்திவரும். காய்கள்கொத்துக்கொத்தா இருக்கும். நேர்மையாகிய குலைகள் சாய்ந்திருக்கும் ஆதலாலும், யானை தன்னகத்தில்முத்திருக்கும் கொம்பினை அசைக்கும், வலிபெற்ற இரும்புலக்கையைத் துதிக்கையில் ஏந்திவரும், வஸ்தகத்திற் பாகன் அங்குசத் தாற்குத்தும் குத்துடைந்தாயிருக்கும், பகைவர் கூட்டத்தை இரித்தோட்டும் ஆதலாலும் இவ்விரண்டும் ஒன்றனையொன்று ஒக்குமென்பதாம்.

ஒருவர், வைக்கோலுக்கும் யானைக்கும ஒப்புமை தோன்றப் பாடவேண்டுமென்ன, அவ்வாறே சிலேசித்துப் பாடிய வெண்பா.

"வாரிக்களத்தடிக்கும் வந்துபின்பு கோட்டைபுகும்
போரிற் சிறந்து பொலிவாகும்—சீருற்ற

செக்கோல மேனித் திருமலைரா யன்வரையில்
வைக்கோலு மால்யானை யாம்.,,

. (இ-ள்.) சிறப்புப்பொருந்திய அழகிய சிவந்த மேனியையுடைய திருமலைராயனது வெற்பகத்தில், வைககோல் உழவர்களாற் கறறைக் கற்றையாக வாரியெடுத்துக் களத்தில் அடிக்கப்படும். பிறகு அங்கிருந்துகொண்டுவந்து கோட்டையாகக் கட்டிச் சேர்க்கப்படும். அன்றியும், போர் போட்டப்பட்டுச் சிறந்து பொலிந்திருக்கும், ஆதலாலும்; யானை பகைஞர்களை வாரி யுத்தகளத்தில் அடிக்கும், யுத்தத்தில் வெற்றி சிறந்து பொலிவு பெற்றிருக்கும் பின்பு திரும்பிவந்து கோட்டைக்குட் பிரவேசிக்கும் ஆதலாலும் இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று ஒப்பாகு மென்பதாம். (செங்கோல மென்பது செககோலமென வலித்தலாயிற்று.

ஒருவர், பாம்புக்கும் எள்ளுக்கும் ஒப்பிட்டுப் பாடவேண்டு மென்ன, இவ்வித்துப் பாடிய செய்யுள்.

"ஆடிக் குடத்தடையு மாடும்போ தேயிரையும்
மூடித் திறக்கின் முகங்காட்டும் - ஓடிமண்டை
பற்றிப் பரபரெனும் பாரிற்பிண் ணாக்குமுண்டாம்
உற்றிடுபாம் பெள்ளெனவே யோது.,,

(இ-ள்.) பாம்பு படமெடுத்தாடிக் குடத்திற்குள் அடைந்திருக்கும், ஆடும்பொழுதே சீத்காரபூத்காரம் பண்ணும், பெட்டிக்குள், அல்லது மேற்படி குடத்திற்குள் இட்டுமூடித்திறந்தால்தலையைநீட்டிக் காட்டும். கடித்தவுடனே அதன் விஷமானது மண்டையில் ஓடிப்பற்றிப் பரபரவென்று நமை யுண்டாகும். அதற்குப் பிளவாகிய நாக்குமிருக்கும். ஆதலாலும், எள் செக்காடி அதன்சாரமாகிய தைலம் குடத்திற் சேர்க்கப்படும் செக்காடும்பொழுதே இரைச்சலிடும். குடத்திற்பெய்து மூடிவைத்து நாரையடங்கின பின்பு திறந்துபார்த்தால், அத்தைலம் பார்த்தவர்களுடைய முகச்சாயையைத் தனக் குள்ளே காட்டும், அது உச்சியில் வார்க்கப்படுமானாற் பரவியோடி மண்டையிற் பற்றிப் பரபரென ஊர லெடுக்கும். பிண்ணாக்கு முண்டாயிருக்கும் ஆதலாலும் இவ்விரண்டும் ஒன்றினை யொன்று

கும் அப்படியேயிடத்தில் ஏதாவது அரவங்கண்டாற்கண்டவுடன் பின்புறத்தில் குத்துவதுபோல நீந்திக்கொண்டேபோகும் பெருமையுடைத்தாம் ஆதலாலும், பேன் சரிலிருந்து மிருதியாகப் பிறக்கும். உரம்பெற்றதலையினிடத்திலேயும், பின்புடலைக்கடித்துக்கொண்டு பெண்டுகளால் ஈசவென்று குத்தப்படும் ஆதலாலும் இவ்விரண்டும் சரியொத்ததென்பதாம். [ஈசவென்பது-ஒலிக்குறிப்பு.]

ஒருவர், ஆட்டக்குதிரைக்கும் காவிரியாற்றுக்கும் ஒப்புமை கற்பித்துச் சிலேடையாகப் பாடவேண்டுமெனப் பாடிய செய்யுள்.

"ஓடுஞ் சுழிசுத்த முண்டாகுந் துன்னலரைச்
சாடும் பரிவாய்த் தலைசாய்க்கும் — நாடறியத்
தேடுபுகழாளன் திருமலைரா யன்வரையில்
ஆடுபரி காவிரியாறும்

இ-ள்,) தேசமெல்லாம் அறியத் தேடியபுகழினையுடைய திருமலைராயனது வெற்பகத்தில் ஆட்டக்குதிரை விசைகொண்டு ஓடாநிற்கும், சுத்தமானசுழியுள்ளதாயிருக்கும், விரோதிகளைமுறியவடிக்கும், காண்பவருக்கு விருப்பமுண்டாகத் தலைவளைந்து நடக்கும் ஆதலாலும், காவிரியாறு நீர் பெருகியோடும்பொழுது அந்நீர்சுழித்தலையுடைத்தாயிருக்கும், தன்னிலேதோய்தவர்களைப் பாவனமாக்கும்பரிசுத்தமுள்ளதாம் நெருங்கியமலர்களை அலைத்துச்சாடும், குதிரைவடிவுவாய்ந்த அலைகளைமடக்கியெறியும் ஆதலாலும்இவ்விரண்டும்தம்மில் ஒப்பாமென்பதாம்.

ஒருவர், கீரைப்பாத்திக்கும் ஏறுகுதிரைக்கும் ஒப்புமைத்துச்சிலேடையாகப் பாடவேண்டுமெனப் பாடிய செய்யுள்.

"கட்டியடிக்கையாற் கான்மாறிப் பாய்கையால்
வெட்டிமறிக்கின்ற மேன்மையால் — முட்டப்போய்
மாறத் திரும்புகையால் வண்கீரைப் பாத்தியுடன்
ஏறப் பரியாகுமே,,

(இ-ள்.) கரைப்பாத்தி நிலங்கொத்திக் கட்டிகளை மண்வெட்டியால் அடித்துடைத்தலானும், ஒருவாய்க்காலிலிருந்துமறுவாய்க்காலினூல் நீர் மாறிப் பாய்தலானும், சதுரச்சதுரமாகவெட்டித்தடுத்தலானும், நேரேபோய்க்கடைமடையில்முட்ட, அதுகண்டு அங்கிருந்து பக்கமடையில் திருப்பிமாறத் திருமடுதலானும், ஏறுகுதிரை கட்டிக் கொட்டடிக்கப் படுதலானும், கால் மாறிமாறி எழும்பிப்பாய்தலானும், தன்மேலேறிய வீரன் சத்துருக்களை வெட்டி மறிக்கத்தக்கமேன்மையுடைத்தாமாதலானும், போகவேண்டிய இடமுழுதும் போய்மீளத் திரும்புதலானும் இவ்விரண்டும் ஒன்றையொன்று ஒப்பா மென்பதாம், [கொட்டடித்தல்-குதிரையைத்திருப்பும்பொழுது அதுவுடனே திரும்பப்பழகுதற்குக் கழுத்தில் கயிறுகட்டிச் சாட்டைகொண்டுசுற்றிச்சுற்றி அடித்தல்.]

ஒருவர், ஆட்டுக்கும் குதிரைக்குஞ்சிலேடையாகப் பாடவேண்டுமென்னப் பாடிய செய்யுள்.

"கொம்பிலேயே தீனிதின்றுங்கொண்டு தன்மேல்வெட்டுதலால்
அம்புவியி னன்னடைய தாதலால்—உம்பர்களும்
தேடுநற்சோலைத் திருமலைரா யன்வரையில்
ஆடுங் குதிரையு நேராம்,,

(இ-ள்.) தேவர்களும் தேடிவருகின்ற ரம்மியமான சோலைசூழ்ந்த திருமலைராயன் வெற்பகத்தில் ஆடுகொம்புகளிலிருக்கின்ற தழைகளை இரையாகத்தின்றுதலானும், மனைத்துக்குக்கொண்டு அதன்பின்பு வெட்டப்படுதலானும், பூமியில் ஆயர்களுக்கு நல்லசெல்வமாயிருத்தலானும், குதிரை கொம்பில்லாதிருப்பதனாலும், தீனிதின்றுதலானும், போர்செய்யும் வீரன் அதன்மேலேறியிருந்துபகைவரைவெட்டுதலானும், சரகதி; மயூரகதியாகிய நல்லநடையினையுடைய தாதலானும், இவ்விரண்டும் ஒன்றையொன்று ஒக்குமென்பதாம்.

ஒருவர், துப்பாக்கிக்கும் ஓலைச்சுருளுக்கும் சமத்துவங்கற்பித்துப்பாடவேண்டுமென்னப் பாடியசெய்யுள்,

ஆணிவரையுறலா லானகுறிப் பேதரலால்
தோணக் கருமருந்து தோய்ந்திடலால்—நீணிலத்தில்

ஒக்குமென்று சொல்லுக வென்பதாம். (இதில் திலமும் அதன் தைலமும் ஒற்றுமைபற்றி அபேதமாகச் சொல்லப்பட்டன.)

ஒருவர், பாம்புக்குமெலுமிச்சம்பழத்துக்கும் உவமைகற்பித்துப் பாடவேண்டுமென்ன, சிலேடித்துப் பாடியசெய்யுள்.

"பெரியவிடமே சேரும் பித்தர்முடி யேறும்
அரியுண்ணா முப்புமே லாடும் — எரிகுணமாம்
தேம்பொழியுஞ் சோலைத் திருமலைராயன் வரையில்
பாம்பு மெலுமிச்சம் பழம்."

(இ-ள்.) தேனைச் சொரிகின்ற சோலை சூழ்ந்த திருமலைராயனுடைய வெற்பகத்தில், பாம்பானது விஷம் பொருந்தி யிருக்கும். பரமசிவனுடைய திருமுடிமேலேறிக் குடை கவித்தாற்போலப் படம்விரித் திருக்கும். காற்றை உட்கொள்ளும், ஆதலால் உடலுப்பும். மேலெழும்பா தாடாநிற்கும். கோபித்துச் சீறுங்குணமுடையதாம் ஆதலாலும், எலுமிச்சம்பழம் ராஜசமூக முதலாகிய பெரிய இடங்களில் உபசாரார்த்தமாய்ப்போய்ச்சேரும். பித்தங்கொண்டவர்களுக்கு அப்பித்தம் இறங்க அவர்கள் தலையிற் சாறுபிழிந்து வூற்றப்படும், ஊறுகாய்க்காகக் கருவியால் அறியப்படும். மேலே உப்பிட்டுக் குலுக்கப்படும். இரணத்தில் அதன்சாரம் பட்டால் எரிகின்ற குணமுடையதாம் ஆதலாலும் இவ்விரண்டும் தமக்குள் ஒன்றோடொன்று ஒப்பாகு மென்பதாம்.

ஒருவர், மலைக்கும் சந்திரனுக்கும் உபமானமாகச் சிலேடித்துப் பாடவேண்டுமென்னப் பாடிய செய்யுள்.

"நிலவாய் விளங்குதலா னீள்வான் படிந்து
சிலபோ துலாவுதலாற் சென்று — தலைமேல்
உதித்துவரலா லுயர்மாமலையை
மதிக்குநிக ராக வழுத்து."

(இ-ள்.) மலை பூமியின்கண் விளங்குதலாலும், மேகங்கள்சிலகாலம் தன்னிடத்தில் வந்து படிந்து உலாவப்படுதலாலும், சிகரங்கள் மேலே தோன்றிவருவதாலும், சந்திரன் நிலவினை யுடைத்தாய்ப் பிர

காசிப்பதனாலும், நீண்டவானத்தின்கட்படிந்து இப்பொழுது உலாவுத லாலும், அஸ்தமித்துமறுபடி தலைமேல்உதித்துவருதலாலும்ஒன்றை யொன்று ஒத்ததாக சொல்வாயென்பதாம்.

ஒருவர், தேங்காய்க்கும் நாய்க்குஞ்சமத்துவங்கற்பித்துச்சிலேடி த்துப் பாடவேண்டுமென்னப் பாடியசெய்யுள்.

"ஓடு மிருக்குமத னுள்வாய்வெளுத்திருக்கும்
நாடுங்குலைதனக்கு நாணாது — சேடியே
தீங்காய தில்லாத் திருமலைராயன்வரையில்
தேங்காயு நாயுந்தெரி,,

(இ-ள்) தீமையென்பது நாடுதலில்லாத திருமலைராயனுடைய வெற்பகத்தில், தேங்காயானது நாரேயன்றி ஓட்டுடைத்தாயிருக்கும் உடைத்துப்பார்த்தால் அதனுட்புறம் வெளுத்திருக்கும்ஒருகுலைக்குப் பத்துப் பதினைந்துக்கு மேற்பட்டிருக்குமன்றி அதுதாங்குமோ தாங் காதோவென்று அருநிக்குறைகிறது ஆதலாலும், நாய் சிலநேரம் இங்கும்அங்கும் ஓடித்திரியும். சிலநேரம்இருந்தவிடத்திலேயே இருக் கும் அதனுள்வாயோ வெளுத்திருக்கும் ஆரேனும்புதியவர்வரக்கண் டால் அவரை உற்றுப்பார்க்கும். பார்த்துப் பின்பு குலைக்க ஆரம்பிக் கும் அப்படிக் குலைப்பதில் வெட்கப்படமாட்டாது ஆதலாலும் இவ் விரண்டும் ஒக்குமென்று அறிவாயாகவென்பதாம். [சேடி - மகடூஉ முன்னிலை.]

ஒருவர், மீனுக்கும் பேனுக்கும்உவமையாகச்சிலேடித்துப்பாட வேண்டுமென்னப் பாடியசெய்யுள்.

"மன்னீரி லேபிறக்கு மற்றலையிலேமேயும்
பின்னீச்சிற் குத்தும் பெருமையால் — சொன்னேன்கேள்
தேனுந்துசோலைத்திருமலைரா யன்வரையில்
மீனும்பேனுஞ்சரியாமே,,

(இ-ள்.) மீன் பெருமை தங்கிய நீரிடத்தில் உற்பத்தியாகும் உற்பத்தியான பின்பு அந்நீர்த்தரையிலேயே மேய்ந்துகொண்டிருக்

செப்பார்க்குதவாத் திருமலைராயன் வரையில்

துப்பாக்கியோலைச் சுருள். „

(இ-ள்.) நெடிய பூமியில் தன்பேரைச் சொல்லி ஸ்துதிசெய்யாதபகைஞருக்கு உதவிசெய்யாத திருமலைராயனுடைய வெப்பகத்தில் துப்பாக்கி தன்னிடத்திற் சலாகையைக்கொண்டிருப்பதனாலும், சுடுவோன்குறித்த குறிதவறாததினாலும், குறையாமல் கறுத்த மருந்திடப்படுதலாலும், ஓலைச்சுருள் எழுத்தாணிகொண்டு எழுதப்படுதலாலும், தன்கண்ணெழுதியவிஷயக்குறிப்பைப்பிறருக்குத்தெரிவித்தலாலும், மைபூசப்படுதலாலும் இவ்விரண்டும் சமானமாகுமென்பதாம், (தோன்றமென்பது தோணமெனமருவியது.)

ஒருவர், வானவில்லுக்கும், விஷ்ணுவுக்கும், வெற்றிலைக்கும், முப்பொருட்சிலேடையாக ஒருவெண்பாப் பாடவேண்டுமென்ன பாடிய செய்யுள்.

“நீரி லுளதா னிறம்பச்சை யாற்றிருவால்

பாரிற் பகைதீர்க்கும் பான்மையால்-சாருமனுப்

பல்வினையை மாற்றுதலாற் பாரீர் பெருவான

வில்விண்டு நேர்வெற் றிலை. „

(இ-ள்.) வானயில் நீர்கொண்டமேகத்தில் தோன்றியிருப்பதனாலும், பச்சைநிறம் உண்டாதலாலும், அழகுடைத்தாதலாலும், மழைக்குறிகளிலொன்றாய்ப் பூமியிற் கோடையென்னும்பகையைத் தீர்ப்பதனாலும், மனிதர்களுடைய பலவகைப்பட்ட தொழில்களையும் மாற்றுதலினாலும், விஷ்ணு, மகாபிரளயத்தின்மத்தியில்தங்குவதனாலும், சாமளவர்ணமாயிருப்பதனாலும் இலக்குமியையுடையதனாலும், உலகத்தில் தேவர்கள் முனிவர்களுடைய பகையை ஒழிக்கும் பான்மையினாலும்; தன்னை ஆசிரயித்தமநுஷர்களின் சஞ்சித, ஆகாமிய, பிராரப்தகருமங்களை நிவர்த்திப்பதனாலும்; வெற்றிலை நீர்க்கால்களிலிருப்பதனாலும், பச்சென்றநிறமுடையதனாலும், மங்களகரமாதலாலும், ஒருவரை ஒருவர்பகைத்திருந்தால் அப்பகையை நிவர்த்திக்கின்ற தன்மையினாலும், மக்களது தந்தரோகத்தைத் தீர்ப்பதனாலும், இம்மூன்றும் ஒப்புமையுடையனவென்பதாம்.

ஒருவர், பூசனிக்காய்க்கும், ஈசனுக்கும் ஒப்பமைத்துப்பாடவேண்டுமெனப் பாடியசெய்யுள்.

"அடிநந்தி சேர்தலா லாகம் வெளுத்துக்
கொடியு மொருபக்கங் கொண்டு வடிவுடைய
மாசுணத்தைப் பூண்டு வளைத்தழும்பு பெற்றதனால்
பூசனிக்கா யீசனெனப் போற்று."

(இ-ள்.) பூசனிக்காய் அடியிற் காம்பு சேர்ந்திருப்பதனாலும், உடல்வெளுத்து ஒருபக்கத்திற் கொடியையுங்கொண்டு அழகினையுடையவெண்சுண்ணத்தைமேற்புறத்திற்பூண்டு, வளைவாகியதழும்பு பெற்றிருப்பதனாலும், ஈசன் அடியில்ரிஷபம்சேர்ந்திருப்பதனாலும், விபூதி தூளணத்தால திருமேனிவிளர்த்து, பார்வதியையும் ஒருபக்கத்தில் வைத்துக்கொண்டு அழகுடையசர்ப்பாபரணத்தைப்பூண்டு,உமையவளுடையவளைத்தழும்பு பெற்றிருப்பதனாலும் ஒப்பென்று சொல்லுக வென்பதாம்.

ஒருவர், ஐந்து - டுகரம்வரக் கும்பேசர் விஷயமாகப் பாடவேண்டுமென, நிறைநிறையணியாகப் பாடியசெய்யுள்.

"ஓகாமா வீதோ டுடுடுடுடு நேரொக்க
நாகார் குடந்தை நகர்க்கிறைவர்-வாகாய்
எடுப்பர் நடம்புரிவ ரேறுவ ரன்பர்க்குக்
கொடுப்ப ரணிவர் குழைக்கு."

இ-ள்.) இளமரங்கள் அடர்ந்தசோலை சூழ்ந்த திருக்குடந்தைக்கிறைவராகிய கும்பேசர், ஓ, கா, மா, வீ, தோஎன்னும் இவ்வைந்தெழுத்துடனே, டு, டு, டு, டு, டு, என்னும் இவ்வைந்தெழுத்தும் தனித்தனி பொருந்த அவை ஓடு, காடு, மாடு, வீடு, தோடு, என்றாதலால், அவற்றுள்முறையே ஒன்றை அழகாகக்கையில்எடுப்பர் ஒன்றில்நடனஞ்செய்வர் ஒன்றில்மேல்ஏறுவர் ஒன்றைத்தம்மன்பர்க்குக் கொடுப்பார் ஒன்றைச்செவியில் அணிவரென்பதாம (தோடு-காதாபரணம்)

ஒருவர், பச்சைவடம், பாகு, சேலை, சோமனென்னும் இன்னான்கு வஸ்திரபேதமும் வரும்படி ஒருவெண்பாப்பாடவேண்டுமெனப்பாடியசெய்யுள்

“மாயன் றுயின்றதுவு மாமலராள் சொல்லதுவும்
ஆயர்குருந்திற்கொளித் தேறியதும்-தூய
இடப்பாகன் சென்னியின்மே லேறியதும் பச்சை
வடம்பாகு சேலைசோமன்”

(இ-ள்.) நெடுமால் மகாபிரளயத்தில் திருக்கண் வளர்ந்தருளியதும் (பச்சைவடம்), தாமரையாசனத்தையுடைய இலக்குமியின் சொல்லும் (பாகு), கண்ணபிரான் கோபிகைகளை நாணச்செய்யும்பொருட்டுக் கவர்ந்து கொண்டுபோய்க் குருந்தமரத்திலேறி ஒளித்துவைத்திருந்ததும் (சேலை), மலைகளை இடப்பாகத்திலுடையசிவபெருமானது திருமுடியில்ஏறியிருப்பதும் (சோமன்), முறையேபச்சைவடம் பாகுசேலை சோமன் என்பதாம் [பச்சைவடம் ஆலிலை. சோமன் சந்திரன்.]

ஒருவர், பொன்னுவரையிலை காய்பூவென்று பாடவேண்டுமெனப் பாடியசெய்யுள்

“உடுத்ததுவு மேய்த்ததுவு மும்பர்கோன் றன்னால்
எடுத்ததுவும் பள்ளிக் கிசையப் படுத்ததுவும்
அந்நா ளறிந்ததுவு மன்பி னிரந்ததுவும்
பொன்னு வரையிலைகாய் பூ”

(இ-ள்.) ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் ஆடையாக உடுத்ததும்(பொன்), கிருஷ்ணாவதாரத்தில் மேய்த்ததும் (ஆ), இந்திரன்கல்மழைபொழிவித்தகினிமித்தம்குடையாகஎடுத்ததும் (வரை, சயனத்திற்கிசையப்படுத்ததும்இலை), அக்காலத்திற்கன்றுகொண்டறிந்ததும்(காய்), அன்பினால்பலிச்சக்கிரவர்த்தியினிடத்தில் இரந்ததும் (பூ) முறையே பொன்னுவரையிலை காய்பூவென்பதாம் (வரை-மலை, பூ-பூமி)

கச்சிக்காவலனென்னும் ஒருவர், செகமுழுநீர்க் கிழங்கென்றுபாடவேண்டுமெனப் பாடியசெய்யுள்.

"வாதமணையேறியது மாயன் றுயின்றதுவும்
ஆதிதடுத் தாட்கொண் டவ்வுருவும்-சீதரனூர்
தாள்கொண் டளர்ந்ததுவுந் தணச்சிக் காவலா
கேள்சங் கழுநீர்க் கிழங்கு,,

(இ-ள்.) சார்ந்தகுணத்தையுடைய கச்சிக்காவலனே கேட்கக்கட வாய்? சம்பந்தமூர்த்திகளுடனே வாதுசெய்த சமணர்களேறியதும், செங்கழு, நாராயணன் பள்ளிகொண்டதும (நீர்), பரமசிவன் சுந்தரமூர்த்திகளைத் தடுத்தாட்கொள்ளும் பொருட்டு எடுத்தஉருவும் (கிழம், விஷ்ணுவானவர் திருவடியால் அளந்ததுவும் (கு), முறையே செங்கழுநீர்க் கிழங்கெனபதாம கு-பூமி)

ஒருவர், நா, நீ, நூ, நே, என்று பாடவேண்டுமெனப் பாடியசெய்யுள்.

"அரையின்முடியி லணிமார்பி னெஞ்சில்
தெரிவை யிடத்தமர்ந்தான் சேவை-புரையறவே
மானூர்விழியீர் மலரணைவொற்றீருகும்
ஆனலாம் நாநீநூநே,,

(இ-ள்.) ம், ல், [illegible] ண் என்னும் இந்நான்கு ஒற்றும், நா, நீ, நூ, நே என்னும இந்நான்கிற்கும் தலை தடுமாற்றமாய் இறுதியாக, நாண், நீர், நூல், நேம் எனவருமாயின், உமாதேவி, யிடப்பாகத்திலெழுந்தருளிய சிவபிரானது, அரையிலும், முடியிலும், மார்பிலும், கழுத்திலும முறையே சேர்க்கப்படுவனவாகும் என்பதாம் (நேம்விஷம, மானூர்விழியீர் என்பது மகடூஉமுன்னிலை).

ஒருவர், கணபதிக்கும், முருகனுக்கும், சிவனுக்கும் சிலேடையாகவொருவெண்பாப்பாடவேண்டுமெனப் பாடியசெய்யுள்

"சென்னிமுக மாறுளதாற் சேர்தருமுன் னாலுகையால்
இந்நிலத்திற் கோடொன் றிருக்கையால்-மன்னுகுளக்
கண்ணுறுத லாலுங் கணபதியுஞ் செவ்வேளும்
எண்ணரனு நேராவரே,,

(இ-ள்.) விநாயகன் முகமாறுபட்டிருப்பதனாலும், முன்னே தொங்குகின்ற துதிக்கையினாலும்; ஒருகொம்பினையுடைத்தாயிருப்பதனாலும், வெல்லத்தின்கண் ஆவிர்ப்பவித்தலினாலும்; முருகன் ஆறுமுகத்துடனிருப்பதனாலும், நெருங்கியபன்னிரண்டுகைகளினாலும், இந்தப் பூமியில் ஒப்பற்ற திருச்செங்கோட்டிலிருப்பதனாலும், நீலபெற்ற சரவணப்பொய்கையில் அவதரித்தலினாலும்; சிவன் திருமுடியிற் கங்கையிருப்பதனாலும், முன்னேசேர்ந்திருக்கின்ற நான்குகைகளினாலும், இவ்வுலகத்தனைகைலைமலையிலிருப்பதனாலும், நெற்றிக்கண்ணைப் பொருந்துதலாலும் இம்மூவருந் தம்முள் ஒருவரை ஒருவர் ஒப்பாவாரென்பதாம், (செவ்விமுக வென்பது இருபெயரொட்டு.)

ஒருவர், தை மாசி பங்குனிமாதம் என்று பாடவேண்டுமெனப் பாடியசெய்யுள்.

“ பாணற்கு ர் சொல்லுவதும் பைம்புனலை மூடுவதும்
தாணுவுரித் ததுவுஞ் சக்கரத்தோன் - ஊணதுவும்
எம்மானை யெய்துவது மீசனிடத் துஞ்சிரத்தும்
தைம்மாசி பங்குனி மாதம். ,,

(இ-ள்.) தையற்காரனுக்குச் செய்யென்று சொல்வதும் (தை) சலத்தை மறைத்துக்கொண்டிருப்பதும் (மாசு), சிவன் அடர்த்து உரித்ததும் (இபம்), விஷ்ணுவுக்கு உணவாயிருப்பதும்(கு)எங்கள்பெண்ணைச் சேர்வதும் (நீ), பரமசிவன் இடப்பாகத்தில்வைத்தும் (மாது), முடியில்தரித்தும் (அம்) முறையே தைமாசி பங்குனிமாதமென்பதாம் (இபம்-யானை, அம்-சங்கை,) நீஎன்பது-நினைக்குறுக்கலாயிற்று.

ஒருவர், ஒருபாடல் செருப்பென்றெடுத்து விளக்குமாறென்று முடிக்கவேண்டுமெனப் பாடிய செய்யுள்.

“ செருப்புக்கு வீரர்களைச் சென்றுழக்கும் வேலன்
பொருப்புக்கு நாயகனைப் புல்ல-மருட்புக்குத்
தண்டேன் பொழிந்ததிருத்தாமரைபோல்விற்றிருக்கும்
வண்டே விளக்கு மாறே. ,,

(இ-ள்) யுத்தகளத்திற் போய்ப்புகுந்து வீர கூட்டத்தைக் கலக்கச் சிதறடிக்கின்ற வேலாயுதத்தை யேந்திய குறிஞ்சித்தலைவனுகிய முருகக்கடவுளை யான் ஆலிங்கனஞ்செய்ய, வாசனைபொருந்திக் குளிர்ச்சி தங்கிய தேனைச் சொரிகின்ற அழகியதாமரைமலரின்மேல் வீற்றிருக்கின்ற வண்டுதான், வழிகாட்டாநிற்கு மென்பதாம் (இக்கருத்து ஒருபெண்முருகவேளைத் தழுவைக்கருதி வண்டைத் தூதுவிடக் குறித்ததாக அமைக்கப்பட்டது.

ஒருவர், பாம்புக்கும் வாழைப்பழத்துக்கும் சமானம் தோன்றப் பாடவேண்டுமெனப் பாடிய செய்யுள்.

"நஞ்சிருக்குந் தோலுரிக்குநாதர்முடி மேலிருக்கும்
வெஞ்சினத்திற் பற்பட்டான் மீளாதே-விஞ்சுமலர்த்
தேம்பாயுஞ் சோலைத் திருமலைராயன் வரையில்
பாம்பாகும் வாழைப் பழம்

(இ-ள்.) மிகுதியாகப் பூந்தேன் பாய்கின்ற சோலைசூழ்ந்ததிருமலைராயனுடைய வெற்பகத்தில். பாம்பு விஷமுடைத்தா யிருக்கும் காயசித்திபெற்றோர் சட்டைகழற்றுவதுபோலப் பருவமறிந்துதோலுரிக்கும் கடவுள் முடியின்மேலிருக்கும் கொடியகோபத்தினாலேஅதன்பற்பட்டால் இறந்தவுயிர் திரும்பமாட்டாது ஆதலாலும், வாழைம்பழம் நைந்திருக்கும் தோலுரிக்கப்படும் கடவுள் திருமுடிமேல் பஞ்சாமிர்தத்தோடுகூட்டி அபிஷேகிக்கப்படும் கறியாகவாவது மற்றெவ்வகையாகவாவது புசிப்பவர்களுடைய பல்லினிடத்திற் பட்டாற்பின்பு திரும்பமாட்டாது ஆதலாலும் இவ்விரண்டும் ஒப்பாமென்பதாம்

ஒவர், கண்ணாடிக்கும் அரசனுக்கும் ஒப்பமைத்துப்பாடவேண்டுமெனப் பாடியசெய்யுள்

"யாவருக்கும் ரஞ்சனைசெய் தியாவருக்கு மவ்வவராய்ப்
பாவனையாய்த் தீதகலப் பார்த்தலால் மேவும்
எதிரியைத்தன் னுள்ளாக்கி யேற்ற ரசத்தால்
சதிருறலா லாடி யரசாம்

(இ-ள்.) கண்ணாடி எல்லார்க்கும் விருப்பத்தையுண்டாக்கி, எல்லார்க்கும் அவரவரைப்போலப் பாவனையாய் முகத்தழுக்கு நீங்கத்திருத்தமாகப் பார்க்கப்படுதலாலும், எதிர்ப்பட்டவனது சாயையைத் தனக்குள்ளே கொள்ளத்தக்கதாக ரசம் பூசப்பட்டுச் சதிர்பெற்றிருப்பதனாலும், அரசன் தன்கோலின்கீழ் வாழ்வார் யாவருக்கும் சந்தோஷமாகிய செய்கையைச்செய்து, யாவருக்கும் அவரவர் நிலைமைக்கேற்கத் தன்னைப் பாவித்துத்தீமையகலப் பார்ப்பதனாலும், தன்மேற்போருக்குவருகின்ற பகைஞரைச் சாமோபாயத்தால் தன்வசப்படுத்திச் சிங்காரமுதலிய நவரசத்தைக்கொண்டு மகிமைபெற்றிருப்பதனாலும் ஒப்பாமென்பதாம்.

ஒருவர், சிவனைக்குறித்து நீறுவாய் நெருப்பாவாய் கூறுவாய் கொளுந்துவாய் நட்டமாவாய் நஞ்சாவாய் என்று ஒரு வெண்பாப் பாடவேண்டுமெனப் பாடிய செய்யுள்.

"நீறுவாய் நெற்றி நெருப்பாவா யங்கமிரு
கூறுவாய் மேனி கொளுந்துவாய் - மாறுக
நட்டமா வாய்சோறு நஞ்சாவாய் நாயேனை
இட்டமாய்க் காப்பாயினி.,,

(இ-ள்.) நெற்றியின்கண் திருநீறுடைத்தா யிருப்பாய், அங்கம் அக்கினிமயமா யிருப்பாய். திருமேனி-இரண்டு கூறாயிருப்பாய், அன்றியும்எரிந்துகொண்டிருப்பாய், எக்காலமு மொழியாதுதிருநட்டமுடைத்தாயிருப்பாய் நஞ்சை உணவாகக் கொள்ளுவாய்உனது குறைதிசயம் பகிர்முகத்தில்-இப்படியிருப்பினும் அந்தமுகத்திலுள்ள கிருபையினால்நாய்போன்றஅடியேனை இஷ்டமாகரட்சித்தல்வேண்டும்என்பதாம்.

ஒருவர் அடிப்பது மத்தாலேயழ என்பதை ஈற்றடியாகக்கொண்டு அயலடியும்அதுபோலத் திரித்து ஒருவெண்பாப் பாடவேண்டுமெனப் பாடிய செய்யுள்.

வண்ணங் கரியனென்றும் வாய்வேத நாறியென்றும்
கண்ணனிவனென்றுங் கருதாமல் - மண்ணை

அடிப்பது மத்தாலே யானந்தானையாய்ச்சு
அடிப்பதுமத் தாலே யடி.

(இ-ள்.) உலகமுழுவதும் திருவடித் தாமரையினு லளந்தபரம விராட்டுவை இவன் கார்போலுங் கரியநிறத்தையுடையவனென்றும். சகலவேதங்களும் பரிபாலிக்கின்ற திருவாயினையுடையவனென்றும் யாவர்கண்ணிலுமிட்டதிலு மிருப்பவனென்றுமறியாமல அசோதைப்பிராட்டியானவள் மத்தினுலேயாஅழும்படி அடிக்கிறது அவன் முகவுல்லாசமாம்படி பூவும் புனலும் பெய்து பூசிக்க வேண்டுமல்லவோ. என்பதாம்.

ஒருவர் திருமலைராயனுடைய வாளைக்குறித்துப் பாடவேண்டுமெனப் பாடிய செய்யுள்.

செற்றலரை வென்ற திருமலைராயன் கரத்தில்
வெற்றிபுரி யும்வாளே வீரவாள் - மற்றையவாள்
போவாள் வருவாள் புகுவாள் புறப்படுவாள்
ஆவா ளிவாளவா ளாம்.

என்பதாம் இது பொருள் விளங்கிக் கிடக்கின்றது.

ஒருவர், சிவனுக்கும் சுப்பிரமணியனுக்கும் விநாயகனுக்கும் விஷ்ணுவுக்கும், சிவனடி யாருக்கும் தனித்தனி ஆறுதலை யுண்டென்று ஒருவெண்பாப் பாடவேண்டுமெனப் பாடியசெய்யுள்,

"சங்கரற்கு மாறுதலை சண்முகற்கு மாறுதலை
ஐங்கரற்கு மாறுதலை யானவே - சங்கைப்
பிடித்தோற்கு மாறுதலை பித்தனார் பாதம்
படித்தோர்க்கு மாறுதலை பார். ,,

(இ-ள்.) பரமசிவனுக்குத் திருமுடியிற் கங்கையும், சுப்பிரமணியனுக்கு ஆறுசிரசும், விநாயகனுக்கு மாறுசிரசும் விஷ்ணுவுக்குப் பிரளயமாகிய உறைவிடமும், சிவனுடையதிருமுடியைத் துதிசெய்பவர்களுக்குமனவருத்தந்தணிதலுமுண்டென்றுங்காண்பாயாகஎன்பதாம்.

ஒருவர், சிவனை முக்கண்ணனென்பதற்கு வேறு காரணந்தோன்ற ஒருவெண்பாப் பாடவேண்டுமெனப் பாடியசெய்யுள்.

"முக்கண்ணனென்றரனை முன்னோர்மொழிந்திடுவார்
அக்கண்ணாற்குள்ள தரைக்கண்ணே - தொக்க
உமையாள் கண்ணொன்றரைமற் றூன்வேடன்கண்ணொன்
றமையுமிதனாலென் றறி.,,

(இ-ள்.) சான்றோர் சிவபிரானை மூன்று கண்ணுடையோனென்று பிரசித்தமாகச் சொல்வார்கள் அப்படிச்சொல்வது யாதினாலெனில். அச்சிவனுக்கு இயற்கையாயுள்ளது அரைககண்மாத்திரமே. அதனொடு வாமபாகத்தில் அர்த்தநாரியாய் எழுந்தருளிய உமாதேவியின் கண்ணொன்றரையும், அக்காலத்தில ஊன் படைத்த கண்ணப்ப நாயனரென்னும் வேடன் தன்முகத்தில் நின்றும்களைந்து சாத்தியகண்ணொன்றும் சேர்ந்துமூன்றாயிருக்கின்ற இவ்விதகாரணத்தினலே தானென்று அறிகவென்பதாம்.

ஒருவர், கஞ்சிகுடியென்று சிலேஷையாக ஏகாம்பரநாதர்மேல்ஒருவெண்பாப் பாடவேண்டுமென அதற்குமேலும்விசேஷமாகப் பாடுவோமென்று பாடியசெய்யுள்.

"நேற்றிராவந்தொருவ னித்திரையிற்கைபிடித்தான்
வேற்றூரானென்று விடாயென்றேன் - ஆற்றியே
கஞ்சி குடி யென்றான் களித்தின்றுபோவென்றேன்
வஞ்சியரே சென்றான் மறைந்து.,,

(இ-ள்.) கொடிபோலும் இடையினையுடைய சேடிகளே? நேற்றிராத்திரி நித்திரைசெய்யும் சமயத்தில் ஒருவன்வந்து என்கையைப்பிடித்தான் நான் அவன்ஆரோ அயலூரானென்று ஐயமுற்றுப்பிடித்தகையை விடென்பதற்கு விடாயென்றேன். அவன்என்னைத்தணியச்செய்து அதற்கு உத்தரமாக நீவிடாய்கொண்டிருப்பதனல் அதுதணியக் கஞ்சிகுடி யென்பதுபோலக் கஞ்சி குடியென்றான். என்றவுடன் காஞ்சிப்பதியில் வசிக்கும் ஏகாம்பரநாதனென்று நான்தெளிந்து இப்பொழுது என்னைச்சேர்ந்து சுகித்துப்போ

வென்பது குறிப்பாகத் தோன்றும்படிக் களித்தின்றுபோவென்றேன். அதுகேட்டு அவன்நான் கருங்குடியென்ற தற்குப் பரிகாசமாகத்தன்னை நான் களித்தின்று போவென்றுசொன்னேனென்றே, அல்லதுமற்றியாது காரணத்தினாலோ உடனே மாயமாய் மறைந்து போய்விட்டான். இதென்ன ஆச்சரியம் என்பதாம்.

மேலும், ஒருவர்கத்திக்கும் பாலுக்கும் சிலேடித்துப்பாடவேண்டுமென்ன, இந்தக்கேள்விக்கும் ஒருபாடல் பாடவேண்டுமாவென்று வாய்மொழியாகச்சொன்ன உத்தரம் "காய்த்துத்தோய்த்துக்கடை, இ-ள் கத்தியை உலையிற்காய்ச்சித் துவையல் செய்து கடைச்சற் பிடியென்றும், பாலை அடுப்பிற்காய்ச்சிப் பிரைகுத்தித் தோய்த்து மத்தினாற்கடை யென்றுமாமென்பதாம்.

ஒருவர், சிட்டுக்குருவிக்கும் சிவனுக்கும் சிலேடித்துப்பாடவேண்டுமென்ன, இதற்கும் ஒருபாடலாவென்று வாய்மொழியாகச்சொன்ன, உத்தரம். "பிறப்பிறப்பிலே,, இ-ள் சிட்டுக்குறிவிக்குப் பிறப்பு இறப்பிலே என்றும், சிவனுக்கும் பிறப்புயிறப்புயில்லையென்று ஆமென்பதாம்.

இன்னும் அவர்களில் மற்றவர்கள் கொடுத்தசமிசைகளுங்காளமேகப்புலவர் பாடியபாடல்களும் பலவுண்டு அவைகள் இடக்கர்களாயும் வசைமுதலியவைகளாயும் இருப்பதுபற்றி அச்சிடாதுவிடப்பட்டன.

இவ்வாறுகாளமேகப்புலவர் அவர்கள் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் யமகண்டத்தின் உறிமேலிருந்தபடி அகிலாண்ட நாயகி அனுக்கிரகத்தாற் பெரும்பாலும் பாடல்களாகவும் சிறுபான்மை வாய்மொழியாகவும் உத்தரம் சொன்னதேயன்றிச் சிறிதாவது தவறியதென்று நினைக்கவும், அதுபற்றி அவர்கள் உபத்திரவப்படுத்த எத்தனிக்கவும் இடங்கொடாமற் சாதித்துப் பின்புஉறியை விட்டிறங்கினார். அவ்விசயத்தைப் பிரத்தியட்சமாகக்கண்டும், திருமலைராயனாவது, அதிமதுரகவியாவது, அறுபத்துநாலுதண்டிகைப் புலவர்களாவது இவர் சாரதா விக்கிரகமாக அவதரித்த மகாத்துமாவென்

பரமார்த்தனென்னும்

# அவிவேக பூரண குருகதை.

## முதலாவது ஆற்றைக்கடந்தது.

அவிவேக பூரணகுருவென்று ஒரு ஆசாரியரிருந்தார், அவர் ஏவிய ஊழியஞ்செய்யும்படி மட்டி, மடையன், பேதை, மிலேச்சன், மூடன் என்று பெயர்பெற்ற சிஷர்கள் ஐந்துபேர் அவர்மடத்திலிருந்தார்கள். இந்தச்சிஷரும், குருவும் ஆகிய ஆறுபேரும் ஒருநாள் மற்ற சிஷர்களை விசாரிக்கும்படி. காலையிலெழுந்து சுற்றுக்கிராமங்களுக்குக் கால் நடையாய் நடந்துபோனார்கள் போய்த்திரும்பு மளவில், வழிநடுவிலிருக்கிற ஓராற்றங்கரையில் மூன்றுஞ் சாமத்துக்கு வந்து சேர்ந்து, நதியைப்பார்த்து, அதிலிறங்கப்பயந்து, இதுமிகவும் பொல்லாத மோசமுடையது, ஆகையால்இது விழித்திருக்கும் வேளையில் இதைக்கடந்துபோகக் கூடாதென்று குருவானவர், "ஆறுநித்திரை செய்கிறதோ விழித்திருக்கிறதோ, சோதித்துப்பார், என்று மிலேச்சனை ஏவினார். அவன் குருவார்த்தையைச் சிரசின் மேற்கொண்டு, அப்போது புகைச் சுருட்டுப் பற்றவைக்கும்படி தன்கையில் எடுத்த கொள்ளிக் கட்டையைக் கொண்டுபோய், தான் ஆற்றில் இறங்காமல் தூரநின்று எட்டித்தண்ணீரிலே தோய்த்தவுடனே தண்ணீர் சுரீரென்று புகைந்ததுகண்டு, மிலேச்சன் பதறிக்கதறிக் கீழேவிழுந்து பதைத்து உதைத்துக்கொண்டு, மெல்லென எழுந்து நடுங்கிப்பயந்து அலறி உளறி அழுதுகொண்டு ஓடிவந்து, "ஐயா, ஐயா நதியைக் கடக்கிறதற்கு இதுதருணமல்ல அது விழித்திருக்கிறது. நான் தொட்டவுடனே நஞ்சுள்ள நாகம்போலச் சீறிக்கொதித்துக் கோபித்து இரைந்து புகைந்து எழுந்துபாய்ந்து என்னைக்கொல்லவந்தது. அதன் உக்கிரத்துக்கு இலக்காகாமல்தங்கள் பரமகிருபையினாலும்; என்னைப்பெற்றவள் செய்ததவத்தினாலும் தப்பிநான் உயிர்பிழைத்து மீண்டுவந்தது மிகவும் அதிசயம்,, என்றான் அ

தைக்கேட்டுக் குருவானவர் திடுக்குற்று மூர்ச்சித்துப் பின்புதெளிந்து, அப்பா தெய்வசங்கற்பத்தை ஆரறியக்கூடும அதுகண்ணுறங்குகிறவரைக்கும் சற்றுநேரங்காத்திருப்போம்,, என்று அவரும்சிஷரும நதியின்பக்கத்தில ஊருந்தெரியாமல் இருள்சூழ்ந்த ஒருபூஞ்சோலையில் தங்கியிருந்தார்கள். அங்கேபொழுதுபோகும்படி அந்த ஆற்றின் விசேஷங்கள் பலவற்றையுங்குறித்துத் தனித்தனியே அவனவன் சொல்லிவருமளவில், மட்டியென்னும் சிஷன்சொன்னதாவது,

“சுவாமீ, இந்தநதியின் தந்திரத்தையும், மோசத்தையும், குரூரத்தையும் குறித்து என்பாட்டனார் பலமுறையும சொல்ல நான நன்றாய்க்கேட்டிருக்கிறேன். என்பாட்டனார் பெரியவியாபாரியாயிருந்தவர். அவர் ஒருநாள் உப்புப்பொதி ஏற்றின இரண்டுகழுதைகளைத்தாமும், தமது கூட்டாளியுமாக ஓட்டிக்கொண்டு நடு ஆற்றில் இறங்கிவருகையில், கோடைகால மாயிருந்ததினால், வெப்பந்தணிய அரையளவாய் ஓடுகிற குளிர்ந்ததண்ணீரிலே, தாங்களுங்குளித்துக் கழுதைகளையும் நிறுத்திக்குளிப்பாட்டினார்கள்.

“பிறகு அக்கரைக்குப்போய்ப் பார்த்தபொழுது, ஊசியினால் உறுதியாய்ச் சந்தில்லாமல தைத்திருந்த கோணிப்பையின் வாய் சற்றுந்திறவாமலிருக்க, அதற்குள் இருந்த உப்பையெல்லாம்ஆறானது தோலிருக்கக் சுளைவிழுங்கிபோல உபாயமாய்த்திருடித்தின்றுவிட்டதைக் கண்டார்கள். ஆ? ஆ? இந்த ஆறு உப்பைக்கொள்ளையடித்துதின்ற மதக்கத்தினாலல்லவா, எங்களைவிழுங்காமல் விட்டுவிட்டது உப்புப்போனாற்போகிறது அந்தமட்டில் நல்லசகாயஞ் செய்ததே, இதுவேபெரிய நன்மையென்று நினைத்து அவர்கள் சந்தோஷப்பட்டார்கள்,, என்பதே,

இப்படிப் பேசிக்கொண்டிருக்கையில், அங்கேஒருவன் குதிரையேறி வருவதைக்கண்டார்கள். ஆற்றில் ஒருசாணளவு உயரந்தண்ணீர் ஓடிவருவதைக்குறித்துச்சற்றும் அஞ்சாமலும் அவன்குதிரைமேலிருந்தபடி கூசாமலும் சரசரவென்று கடுகிவந்தான் அதைக்கண்டு இவர்கள் அடடா? எங்கள் குருக்களுக்கும் குதிரையிருந்தால். அவரும் அவரைச்சார்ந்த நாங்களும், அச்சமில்லாமல்

ஆற்றிலிறங்கலாமே. அது யில்லாததினாலல்லவா இப்படித்தியங்கியிருக்கவேண்டிவாறது இனி எப்படியாகிலும் ஒரு குதிரைவாங்கவேண்டுமென்று தங்களுக்குள் நிச்சயித்துக்கொண்டு குருவினிடத்தில் அதைக்குறித்து விண்ணப்பம் செய்தார்கள் அவர் இந்தச்செய்தியைப் பற்றிப்பின்பு பேசுவோமென்று சொல்லி "இப்பொழுது பொழுதுசாய்ந்து அஸ்தமானகாலம்சமீபித்ததினால்மடத்திற்குப்போகவேண்டுமே ஆதலால், ஆற்றின் நித்திரையைச் சோதியுங்கள்,, என்று சீஷர்களுக்குச்சொன்னார்.

அப்படியே கொள்ளிக்கட்டையை மடையன் கொண்டுபோய்த் தண்ணீருக்குள்ளே தோய்த்துச் சோதிக்குமிடத்தில் அந்தக்கொள்ளியிற் பற்றியநெருப்பு முன்னமே அவிந்துபோனதினால் ஆற்றில்சிறிதும்புகைகிளம்பாததுகண்டு, அவன்மிகவும்களிகூர்ந்து ஓடிவந்து "இதுதான் நல்லசமயம், நல்லசமயம் இப்படிப்பட்ட சமயம் இனிக்கிட்டாது. வாயைத்திறவாமல் சத்தியாமல் நாமதியாமல் சுருக்காய் எழுந்துவாருங்கள். வாருங்கள் ஆற்றுக்கு நல்ல நித்திரைவேளையா யிருக்கிறது இப்பொழுது என்னளவும் பயப்படவும் பின்னிடவும் வேண்டியதில்லை,, என்றான் இந்த நற்செய்தியை மடையன் சொல்லிக் கூப்பிட, எல்லாரும் திடீரென்றுஎழுந்து கிமாவென்னாமல் பத்திரமாக ஒருவரை யொருவர் சேர்த்துக்கட்டிக்கொண்டு ஆற்றில இறங்கி, அலைகள்முதலாய்ச் சத்தியாதபடி மெதுவாய்க்காலைத்தூக்கி ஒவ்வொருயடியாகத் தண்ணீர்க்குள்வைத்து ஊன்றிப்பின்பு பெயர்த்திட்டு நெஞ்சுதுணுக்கென்று பதைபதைக்க இலகுவாகத்தாண்டித்தாண்டிநதியைக்கடந்துபோய்க் கரையேறினார்கள்,

அவர்கள் கரையேறினவுடனே முன்புபட்ட சங்கடத்துக்குத்தக்கதாக அதிகமகிழ்ச்சிகொண்டு தலைகால்தெரியாமல் துள்ளியாடிக்கொண் டிருக்கும்பொழுது, மூடனானவன் நாமெல்லாரும் அபாயமில்லாமல் வந்துசேர்ந்தோமா, எண்ணிப்பார்ப்போமென்று தன்னைமாத்திரம் கூட்டாமல் மற்றவர்களை எண்ணினான். எண்ணினவிடத்தில் ஐவரிருக்கக்கண்டு, அப்பப்பா, ஐயையோ இதென்ன பேரிழவு. ஒருவன் ஆற்றோடேபோய் விட்டான் ஐந்துபேர்மாத்

திரந்தா னிருக்கிறானே என்று குருவைப்பார்த்துத் தேம்பித் தேம்பி அழுதான் அவனை அழவேண்டா மென்று சமயமாத்தி, எல்லாரையுமவரிசையாய் நிறுத்தி, ஒருகால் இருகால் மூன்றுகாலும் அவரவரைத் தனித்தனியே தமது விரலைவிட்டுத் தொட்டுத் தொட்டுத் தாமே கணக்குப் பார்த்தார். அப்படி எண்ணும்பொழுதெல்லாம் அவர் தம்மைநீக்கிக் கணக்கேற்றி, ஆமப்பா நீ சொன்னபடி மெய்யாகவே ஐந்துபேர் மாத்திரந்தான் இருக்கிறீர்களென்று சொல்லிக் குருமூர்த்தியும் விசனப்பட்டார். அவ்வாறே அவனவன் தன்னைவிட்டு மற்றவர்களைமாத்திரம் எண்ணி எண்ணி ஆறும்பேரைக் காணாமையால், ஆறுபேரில் ஒருவனைச் சந்தேகமில்லாமல் ஆறு விழுங்கிவிட்டதென்று அவர்களுக்குள்ளே நிச்சயமாயிற்று. பிறகு குருவும் அவர்களும் அலறியழுது, கூகூவென்று கூச்சலிட்டு நதியைப் பார்த்துக் கண்ணீர்சோரும்படி, ஓயாவியாறே, துரோகியாறே, பரமசண்டாளநதியே, கொடும்புலிபோலும் கலிங்கொலையாளா, மண்ணிலும் விண்ணிலும் வாழும் சராசரங்களெல்லாம் வாழ்த்தி வணங்கும்படி, தவமனைத்தும் திரண்டு ஒருவடிவந்தாங்கைந்துபவமொழிக்கருளும் பரமார்த்த குருநாதருடைய உத்தமசீஷனை ஒருநொடிப்பொழுதில் குத்திர குணத்தால் கொள்ளை கொண்டாயே, எள்ளளவாயினும் இரக்கமில்லாமல் கிழங்குபோலவிழுங்கிவிட்டாயே அந்தகனென்பது கொஞ்சமுமின்றி வாழைப்பழம்போல் விழுங்கிவிட்டாயே. உன்மனம் இரும்போ, உருகாதகல்லோ, நீ பெண்ணுடன் ஆணுடன் பிறக்கவுமில்லையோ, நன்றிகெட்ட நாசகாலா, நீயும் உலகத்தில் நிலைத்திருப்பாயா. அண்டத்தளவும் அலையெறிவாயா, கடல்போல் முழங்கிக் கரைபுரள்வாயா. குளிர்வெண் முத்தங் கொழித்திடுவாயா, இனி நீ உன்னீர்வற்றி ஊற்றுக்கண் அடைபட்டு, பள்ளந்தூர்ந்து, வெள்ளமாறி, உள்ளம் வெதும்பி, உருவு தோன்றாமல், பாழாய்ப்போவாயென்று ஆற்றைச்சபித்துப் பின்னும் பித்துப்பிடித்தாற் போலத் தாறுமாறாக வைதுகொண்டிருந்தார்கள். அந்நேரமட்டும் ஆறுகொண்டு போனவனைத் தங்களுக்குள் இன்னானென்று தங்கள் மவுட்டியத்தினால் ஒருவனும் அறியவில்லை. அவன் எவனென்று விசாரிக்கவுமில்லை அந்தசமயத்தில் புத்திமானாகிய வழிப்போக்கன் ஒருவன் அவ்விடத்தில் வந்து இவர்கள் பரிதபிக்கிறதைப்பார்த்து, ஏனையா துக்கப்படுகிறீர்கள், உங்களுக்கு என்ன குறை சம்பவித்தது சொல்லுங்களென்று கேட்க, அவர்கள்

று நினையாமலும் சம்மானம் பண்ணாமலும் பொருமையை மேற்கொண்டு அவரை உபேட்சித்ததனால், புலவர் சிரோமணியாகிய அவருக்கு மனமெறிந்து சகிக்கக்கூடாமல் மண்மாரிபொழிந் திருமலைராயன் பட்டணம் அழியும்படி வசைபாடினார். அப்பாடலாவது,

"செய்யாதசெய்த திருமலைராயன் வரையில்
அய்யாவரனேயரனென்றோடியவர் - பெய்யுதமிழ்
கண்மாரியான்மதனைக் கட்டழித்தாற்போற்றியோர்
மண்மாரியாலழிய வாட்டு,,

என்பதாம்,

வசைபாடின புலவர் பெருமானவர் "மத்தியாதார் வாசலை மிதியாதிருப்பது கோடி,, என்பதை நினைந்து, இனித்திருமலைராயன் பட்டணத்தைத் திரும்பியும் பார்க்கலாகாதென்ற வைராக்கியத்தினால், முத்துவாங்கிவரும்படி மோகனாங்கி சொன்னசொல்லையும் பொருள் செய்யாமல், அந்தக்ஷணமே அவ்விடத்தில் நின்று நீங்கி முன்போலவே ஸ்தலயாத்திரை பண்ணிக்கொண்டுபோய்த் திருவாரூரிற்சில நாள் வசித்திருக்கையில், ஒருநாள் தியாகரைத் தரிசிக்கும்படி கோயிலுக்குப்போன வேளையில் ஒரு வித்வான் சுவாமிமேல் சிலேடையாக ஒருபாடல் பாடவேண்டுமென்று நினைந்து "நாணென்றானஞ்சிருக்கு நற்சாபங்கற்சாபம்,, என முதலடிமாத்திரம் தொடங்கி அப்புறம் அமைக்க அவருக்குக் கருத்துத்தோன்றாமையால் அதை அந்தக்கோயில் மதிற்புறத்தில் எழுதிப்போய் மறுநாள்வந்து பார்க்குமளவில் அதன்கீழ்,

"பாணந்தான்மண்டின்ற பாணமே - தாணுவே
சீராரூர்மேவுஞ் சிவனேநீயெப்படியோ
நேரார்புரமெரித்த நேர்,,

என்றுமற்ற மூன்றடியும் முடித்தெழுதி யிருக்கக்கண்டு விசாரித்து காளமேகப்புலவரால் அது முற்றுப்பெற்றதென்று கேள்விப்பட்டு, அவர்கவிபாடும் திறத்தைக்குறித்து அவ்வித்வான் அதிசயித்து அதிகசந்தோஷப்பட்டார் இப்பாடலின்பொருள்.

அக்கினிஸ்தம்பமாய்விளங்கி யிருப்பவனே சிறப்புப்பொருந்திய திருவாரூரில் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானே? திரிபுரதகனஞ்செய்தகாலத்தில்உன்கையிலேந்திய வில்நாணியோ நஞ்சிருந்தது அவ்வில்லோவளைக்கப்படாத கல்லாயிருந்தது அம்போமண்தின்னப்பட்டிருந்தது இப்படி உனக்குக்கிடைத்த யுத்தாயுதமெல்லாம் ஒன்றுக்கும் உதவாமற்கேவலம் அவலமானவைகளாயிருக்க, சத்துருக்களுடைய நகரத்தை நீ எரித்ததென்பதுயெப்படியோ யோசிக்குமிடத்திற் சிரிப்பாயிருக்கின்றதென்பதாம். (நாண் நஞ்சிருக்குமென்றது-விஷம்பொருந்திய பாம்பென்றும், கற்சாபம் மேருவில்லென்றும், மண்தின்றபாணம் பூமியையுண்ட விஷ்ணுவென்றுமாம்.)

அதன்பின்பு வெகுநாள்கழித்துக் காளமேகப்புலவர் பிராணவியோகமாய் அவர்சரீரம் மசானத்திற் காஷ்டத்தின்மேல்வைக்கப்பட்டு எரிந்துகொண்டிருக்கையில், மேற்படிவித்வான் அச்செய்திகேட்டு அம்மயானத்திற் சென்று பிரேதாக்கினி கொழுந்துவிட்டெழுந்து ஆகாயமளாவி எரிவதுகண்டு மனங்கலங்கி

"ஆசு கவிமாரி யகிலவுலகமெலாம்
வீசு கவிகாள மேகமே - பூசுரர்
விண்கொண்ட செந்தழலாய் வேகின்றதேயையோ
மண்டின்றபாணமென்றவாய்"

என ஒரு வெண்பாப்பாடி வியசனப்பட்டார் இந்தப்பாடலும், நாணென்றானஞ்சிருக்கு நற்சாபங்கற்சாபமென்றதும், இரட்டைப்புலவர்களாற் பாடப்பட்டன வென்றுசிலர்சொல்வார்கள். அப்படிச்சொல்வது யுக்திக்கும் அநுபவத்திற்கும் விரோதமாயிருக்கின்றது.

காளமேகப்புலவர் சரித்திரம் முற்றிற்று.

நடந்த சமாசாரத்தைச் சவிஸ்தாரமாகச் சொல்ல, அவன் இவர்கள் மூடத்தன்மை அறிந்துகொண்டு, அடா அப்பா இது மகாபிரயாசமான காரியம் என்னாலன்றிமற்றொருவராலே முடியாது.

நான் மந்திரவித்தையிலே வெகு சமர்த்தனுக்கும், அதர்வண வேதம் நான்பார்த்துப் பிச்சையிட்டவர்களுக்குண்டு, எனக்கு எட்சணி மோகணி, குட்டிச்சாத்தான் முதலானதுகளும்வசியப்பட்டிருக்கின்றதுகள். அதுகள்நான், சொன்னபடி ஆடுகிறதுகள் எனக்கு நீங்கள் நல்ல வெகுமதிசெய்தால், ஆற்றோடேபோனவனை அரைக்கணத்தில அழைப்பிக்கிறேன் அப்பொழுது என் பிராணியைப் பாருக்கவென்றான், அதற்குக்குருவானவர் அதிகசந்தோஷப்பட்டு அப்பா நாங்களிதிக்குக்கெட்டுத் தடுமாறும் வேளையிலே மகாராஜன் எங்கள்குலதெய்வம்போல எங்கிருந்துவந்தையோ தெரியாது ஆனாலும் நீ இப்பொழுதுசெய்ய ஏற்பட்ட பெரிய உதவிக்கு எளியவர்களாகிய நாங்கள் ஈடாக உனக்கு என்னசெய்யப்போகிறோம், உன் குருவுக்குப் புண்ணியமாய்ப் போகிறது, எப்படியாவது மனதுபெரிதுபண்ணிக் காணாமற் போனவனை அழைப்பித்துக் கொடுத்தால்செய்யாமற்செய்த உதவியாயிருக்கும், எங்களுக்கு வழிச்செலவுக்கு நாற்பத்தஞ்சுபணம் முந்தானையில் முடிந்து வைத்துக் கொண்டிருக்கிறோம், அதை உன்கையில் வேண்டுமானால் கொடுத்துவிடுகிறோம்தயவுசெய்ய வேணுமென்றார்.

அவன் அப்படியே ஆகட்டுமென்று தன்கையிலேந்தியவச்சிரவுலக்கைபோலப் பருத்து நீண்ட இரும்புப்பூண் கட்டப்பட்டதடியை அவர்களுக்குக் காட்டி, நான்சொன்னமந்திரவித்தை இதிலேதானிருக்கிறது நீங்கள் வரிசையாய் நின்று முகத்தைச்சுளிக்காமல் சந்தோஷமாக ஒருபொருக்கனை செலுத்துதல்போலகும்பிட்டுக் குனிந்து இந்தத்தடியால் முதுகில் ஆளுக்கு ஒரு அடி பட்டுக்கொண்டு உடனே அவனவன் தன் தன் பேரைச்சொல்லி எண்ணிக்கொண்டுவந்தால், ஆறுபேரும் இவ்விடத்தில் இப்பொழுதே பிரத்தியட்சமாக வந்திருக்கச் செய்வேனென்றான், அவர்கள் நல்லதென்று சம்மதித்தார்கள்.

மந்திரவித்தைக்காரன அவர்களை வரிசையாகநிறுத்தி அந்தத்தடியால் ஓங்கித் தன்கைகூசாமல் முதல்முதல் குருவினதுமுதுகைப்பார்த்து மிகவும் உரமாக ஒரு அடிபோட்டான, அவர் அப்பாடா போதும் போதும் நான்தான் பரமார்த்தகுருவென்றார் இவன் ஒன்றென்றான், இந்தப்படியே எல்லாரையும் ஒவ்வொரு அடியடிக்க, அவர்களில் ஒருவன்நான்மடையனென்றும், ஒருவன்நான் மட்டியென்றும், ஒருவன்நான் மூடனென்றும் ஒருவன்நான்மிலேச்சனென்றும், ஒருவன்நான்மூர்க்கனென்றும்வெவ்வேறாகத் தங்கள் பெயர்களைச் சொல்லவும், இவன் கணக்கேற்றவும் அப்பொழுது ஆறுபெயரில் ஒருவனுக்குறையாமலிருக்கக்கண்டு சரிசரியென்று ஒத்துக்கொண்டார்கள், பின்பு அவ்வறுவரும் ஆச்சரியப்பட்டு மாயவித்தைக் காரனாகிய வழிப்போக்கனை மெச்சித்துதித்துச் சொன்னபடி அவனுக்குப் பணத்தை அவிழ்த்துக் கொடுத்துவிட்டுப்போனார்கள்.

---

## இரண்டாவது.

## குதிரைமுட்டைவாங்கியது.

பரமார்த்த குருவும் ஐந்துசீஷர்களும், மடத்துக்குச்சென்றபின்பு ஆற்றிலே தாங்கள்பட்ட அவதியைப் பலகாலும் சொல்லிச்சொல்லி விசனப்பட்டார்கள், அப்பொழுது மடத்தைப்பெருக்கிக்கொண்டிருந்த ஒருகண்குருட்டுக்கிழவி நடந்ததுகளையெல்லாம் விவரமாய்க்கேட்டுக் கைகொட்டி நகைத்து நீங்கள் ஆற்றைத்தாண்டி வந்தவுடனே உங்களை எண்ணிக்கணக்கேற்றினவனையிலேமோசம்வந்தது, தன்னையாகிலும் வேறொருவனையாகிலும் தப்பவிட்டெண்ணினாற் கணக்குத்தப்புந்தான் ஆனாலும் போனதுபோகட்டும், இனிமேலந்தச் சமயத்திலாவது இப்படிப்பட்ட மோசச்சங்கடம் வாராதபடிக்கு எங்களுக்குச்சகாயமாகச் சுருவாய் நானொரு உபாயம் சொல்லுகிறேன் காட்டிலே முட்டையாய்க் கிடக்கிறகாலியமாட்டுச்சாணத்தைப்பொறுக்கி எடுத்துவந்துநன்றாய்ப்பிசைந்துகூட்டிநிலத்திலே அடைபோலத்தட்டி எல்லாரும்சக்கரம்

போல அதைச்சுற்றியிருந்து நுனி மூக்குச்சாணத்திற்படக்குனிந்து அழுத்தியிருந்து பிறகுசாணியில் புதிந்திருக்கிறதுழிகளை எண்ணினால கணக்குத்தப்பாமல் இத்தனைபேரென்று வெகுசுளுவாயறியலாமே கேளுங்கள் அறுபது எழுபதுவருஷத்துக்குமுன்னே பத்துப்பெண்டுகள் கூடினவிடத்தில் தாங்கள்கணக்கேற்றினவகை இதுவாக்கும். இதறியாமல் ஏன்வீணாய்ப் பிரயாசப்பட்டீர்களென்றாள்

அவர்கள் இதுநல்ல உபாயந்தான். பணத்துக்கும செலவில்லை. ஒருவனுக்கும தோன்றாமற்போயிற்றென்று பின்பு குருவுடனே எல்லாக்காரியத்துக்கும். ஒருகுதிரைவாங்கினால் உத்தமம் ஐயா எப்படியாகிலும் உமக்குககுதிரை சம்பாதித்துக்கொடுக்கவேணுமென்று எங்களுக்கு இஷ்டமாயிருக்கிறதென்பதாக்கசகலருஞ்சொல்ல, ஒருகுதிரைவிலை எவ்வளவாயிருக்குமென்று அவர்விசாரித்தார். நூறுபொன் அல்லது ஐம்பது பொன்னிற்குறையாதென்று சொல்லக்கேட்டபொழுது, அம்மாத்திரத்துக்கு அவகாசமில்லையென்று குருவானவர் சொன்னார். இந்தப்படி இவர்கள் பலநாளும் ஆலோசனை செய்துகொண்டிருக்கையில்மேயவிட்ட கறவைப்பசு ஒருநாள் பொழுதுசாயுஞ் சமயததில் வீட்டுக்கு வாராததைக்கண்டு ஊரிலெங்கும்போய்த் தேடினார்கள் தேடினவிடததிலும் அகப்படாததினால் மறுநாள்மட்டியென்பவன் கிராமாந்தரங்களிலேதேடப்போனான்.

மூன்றுநாள்மட்டுந்தேடி எங்குங்காணாமல் மடத்துக்குவந்துகுருவைநோக்கி, ஐயா பசுவைக்காணேன், ஆகிலும அதுபெரிதல்ல. சொற்பவிலையில் நமக்குக்குதிரை யகப்பட்டதென்று சந்தோஷமாய்ச் சொன்னான். அதெப்படியென்றுகுருவும் ஆசையோடேகேட்க. காணாம்போன கறவைப்பசுவைத்தேட ஊருக்கூர் வனத்துக்குவனம கொல்லைக்குககொல்லை போய் எல்லாஞ்சோதித்துவருகையில், தேவரீருடையகடாட்சவிசேஷத்தால் ஒருபெரிய ஏரிகரைச்சார்பிலேநாலைந்துகோளிகைக்குதிரைகள்மேயவுங்கிடக்கவுங்கண்டேன். அருகேபோகப்போகநானெந்த

நாளும் காணாததுகளும் இருகையாலும் தழுவப்படாததுகளுமாகிய குதிரைமுட்டைகளைக்கண்டு இதுகளென்ன குதிரைமுட்டைகளோ அல்லவோவென்று சந்தேகப்பட்டு அங்கேவந்த ஒருவனைக்கேட்க, அவன் குதிரை முட்டைகளேயென்றும். ஒவ்வொன்றின்விலை அதிகமில்லை நாலைந்துபொன்மாத்திரந்தானென்றுமெனக்குச்சொன்னான் ஐயா இதுநல்லசமயம் சுலபத்திலேசாதிககுதிரைகள் கிடைக்கின்றதுகள், அதுகள் நாமெப்படி வளர்க்கிறோமோ அப்படிக்கெல்லாமெளிதாய் இணங்கத்தக்கவைகளாகுமென்று மட்டிச்சொல்ல, எல்லாருக்கும் அதுவேசம்மதியாகி அவனோடே மடையனென்பவனைக் கூட்டிக்கையில் ஐந்துபொன்கொடுத்துத்தாமதியாமல் உடனேபிரயாணப்படுத்தி அனுப்பினார்கள்.

சொன்னபடி மட்டியும்மடையனும் குதிரைமுட்டை வாங்கப்புறப்பட்டுப் போயினபிறகு இங்கேமூடனென்பவன் தன்மனதில ஒருசந்தேகத்தை நினைத்துக்கொண்டுவந்து மூர்க்கனையும்மிலேச்சனையும்குருவையும் பார்த்துக்கேட்டீர்களா, ஒருசமாசாரம், மட்டிமடையன் இருவரும் போயிருக்கிறதினால் அவசியம் தடையில்லாமல்நல்லசாதிக் குதிரைமுட்டை வருமென்றுவைத்துக்கொள்வோம் வந்தால் அடைகாத்த பிறகல்லவோ முட்டைபரிபவிக்கும். பரிபவித்த பின்பல்லவோ குதிரைக்குட்டியைக்காணக்கூடும் ஆனாலும ஆர் அடைகாக்கிறது, அப்பா எனக்கு ஒன்றும தோன்றவில்லை அது இருகையாலும் தழுவக்கூடாதுஅத்தனைபெரிதாய் இருக்கிறதென்றுமேனபத்துப்பதினைந்துகோழிகளைவைத்தாலும்போதாது. அதுகள் நிற்கவுமாட்டாதுகள். அப்புறம் இதற்குப் போமவழியென்ன சொல்லுங்களென்றான். என்ற சொல்லைக்கேட்டுஎல்லோரும் மிகவும் விழிப்பாட்டமாய் ஒருவனொருவனைப்பார்த்து வகைதெரியாமல் வாய்விட்டுப்பேசாமல் இருந்தார்கள். வெகுநேரஞ்சென்றபின்புகுருவானவர் நமக்குள்ளே ஆராகிலுமொருவன் அடைகாத்தலொழிய [illegible] வழிகாணோமேயென்று எதிரே இருந்த மூவரை [illegible] னியே கேட்க, அவரவர் ஒவ்வொரு போக்குச் [illegible] துலேப்பட்டார்கள். முதலாவது மூடன் தினந்தி [illegible] றுக்குப்போய் வேண்டிய தீர்த்தமெல்லாம் கொண்

வரவும், காட்டுக்குப்போய் வேண்டிய எரிகரும்பு சம்பாதித்துக்கொடுக்கவும், எனக்கு உத்தியோகமாயிருக்க நான் அடைகாக்கக் கூடுமோவென்றான், இரண்டாவது மூர்க்கன் நான் இரவும்பகலுமாகப்பிணைவாங்காமல் மடப்பள்ளியில் பத்துப்பேருக்குச் சோறாக்கவும், நாலுவிதகறிகளைச் சமைக்கவும், அதிசயமான பலகாரங்கள் பண்ணவும், வெந்நீர் வைக்கவும் அடுப்பண்டையிலே கிடந்துழைந்துக்கொண்டு சாகிறேனல்லவோ, ஆகலால் அடைகாக்கிறதற்கு என்னாலாகுமாவென்றான், மூன்றாவது மிலேச்சன் விடியுமுன்ன எழுந்திருந்து ஆற்றுக்குப்போய்த் தந்ததாவனம்பண்ணி, வாய்கொப்பளித்து முகங்கழுவிச் சுத்திசெய்து இறமத்தோடே சந்தியா அனுஷ்டானம் முடித்துக்கொண்டபிறகு, நந்தவனங்களிற் புகுந்து நாலரும்புகளெடுத்து விந்தைவிந்தையாய்த் தொடுத்து விக்கிரகங்களுக்குச் சாத்தித் தூபதீபங்காட்டித் தேவாராதனைபுரிதற்கு வேண்டிய உதவிசெய்வது என் காரியமாயிருக்கிறதினால் நான் அடைகாக்கிறது எப்படியென்றான்.

அதற்குக்குருவானவர் இதெல்லாம் உள்ளதுதானே, போனமற்றிரண்டுபேர்களாலேயும் ஆகாது அவர்களில்மடையனுக்கு இங்கேவருகிறவர்கள் போகிறவர்களை விசாரிக்கவும் அவர்கள் சொல்லும் உத்தரத்துக்கு மறுஉத்தரம் கொடுக்கவும், பலபேருங் கொண்டுவரும் வழக்குகளைக் கேட்டுத் தீர்க்கவும், எந்நேரமும் முடியாத வேலையாயிருக்கிறது கடைசியிலே மட்டியென்பவன் எதற்காவது ஏவினசமயத்தில்கடைக்குச் சந்தைக்குப் பேட்டைக்குப் போகிறவனல்லவா ஆகையால், உங்களுக்குள் ஒருவருக்கும் ஒழிவில்லைநான்மாத்திரந்தான இங்கே சும்மா விருக்கிறேன், அதனால் நான் அந்த முட்டையை மடியிலேவைத்துக்கொண்டு கையாலே தழுவிப் போர்வையாலேமூடிமார்போடணைத்து அன்போடுபேணிக்கண்ணுங்கருத்தும் இடைவிடாது அதனிடத்தில் ஊன்றிநிற்கப் பத்திரமாய் அடைகாக்கிறதைவிட எனக்கு வேறேவேலையென்ன முட்டைபரிபலப்பட்டுக்குதிரையைக்கண்டடைந்தால் அதுவேபோதும் படத்தக்கபிரயாசமெல்லாம் பார்க்கக்கூடாதென்றார்.

இந்த ஆலோசனையெல்லாம் மடத்திலே நடக்கும்போது இராத்திரி மூன்றாஞ்சாமத்தில் சந்திரோதயத்தோடேபுறப்பட்டமட்டியும், மடையனும், இரண்டரைக் காதவழிக்கப்பால் முன்கண்டு குறித்த அடையாளமான இடத்துக்குப்போய், சாம்பற்பூசணிக்காய் நிரளாய்க்காய்த்துக் கிடந்த ஏரிக்கரையைக் கிட்டினார்கள்.

கிட்டிக்கண்டு மிகவுங்களிகூர்ந்து, அங்கிருந்த குடியானவன் அருகிற்சென்று அப்பா இந்தக்குதிரைமுட்டைகளில் எங்களுக்கு ஒருமுட்டை அவசியம்கிரயத்துக்குக் கொடுக்கவேணுமென்று கெஞ்சிக்கேட்டார்கள் அவன் இவர்கள்மூடத்தனத்தைக்கண்டுகொண்டு ஓஓ இந்த உத்தமசாதிக் குதிரைமுட்டையைநீங்கள் விலைகொடுத்துவாங்கத்தக்கவர்களா இது வெகுவிலைபெற்றதாக்குமென்றுசொல்ல, போமையாபோம் இதற்கு ஐந்துபொன்தானே உள்ளவிலை நாங்களென்ன அறியோமா. எங்களுக்குத் தெரியாததுபோல நீர் ஏனசும்மா உயர்த்தி உயர்த்துப்பாடுகிறீர் கைமேலே இதோ இந்த ஐந்துபொன்னையும் வாங்கிக்கொண்டு நல்ல முட்டையாய் ஒன்று தாருமையாவென்றார்கள். அதற்கந்தப் பயிரிடுங்குடியானவன நீங்கள் நல்லகிரகஸ்தரென்று தெரியவருகிறது உங்கள் சற்குணத்தைப் பற்றி இந்த விலைக்குக்கொடுக்கச் சம்மதிக்கிறேன். நல்லது உங்களுக்குச் சரிப்போன ஒருமுட்டையைத்தெரிந்துகொண்டுபோங்கள். இவ்வளவு மலிவாய் வாங்கின விலையைமாத்திரம் ஒருவரிடத்திலும்வெளிவிடாதிருங்கவென்றான். அதைப்பற்றி எங்களுக்காகவேண்டியதென்ன. அப்படியே வெளிப்படுத்தவில்லையென்று அவர்கள் இருவரும் தங்கள் மனதுக்கேற்றபடி எல்லாவற்றிலும் பெரியதாக ஒருகாயைத்தேடித் தெரிந்தெடுத்துக்கொண்டு, மறுநாள் அதிகாலமே பலபலவென்று பொழுதுவிடியுமுன் சிற்றிருட்டிலேதானே எழுந்து மட்டிதலைமேல்முட்டையை எடுத்தும் பதனமாய்வைத்து மடையன் வழிகாட்டிக்கொண்டு முன்னேபோகையில் மட்டி காணாது கண்டதாக அதிசயித்துச்சொல்லத்தொடங்கினான்.

ஆ ஆ பெரியோர்கள் எல்லாம் தவப்பலந்தாற்கைகூடுமென்பார்கள். அதற்கத்தாட்சி இப்பொழுது பிரத்தியட்சமாகக் கண

டோம்- நம்முடைய குருநாதர் செய்துவருகிற தபோபலம் இதுதான் நூறுபொன் நூற்றம்பது பொன்பெறத்தக்க சாதிக்குதிரையை மாயப் பொடிதூவிப் பறித்துக்கொண்டு போகிறதுபோல, நாம எத்தனை சுலபமாக ஐந்துபொன்னுக்கு வாங்கிக்கொண்டு வருகிறோம் பாரென்றான். அதற்குமடையன் இதிலே ஆலோசனையேன்.

"பண்ணியபயிரில் புண்ணியந்தெரியும்" என்றுசொல்வதை நீ கேட்கவில்லையோ, நமதுகுருவானவர் உள்ளபடியே புண்ணியாத்மாவென்பது அவருக்கு இப்பொழுது கிடைத்த இந்தக்குதிரையினாலிலேயே உள்ளங்கைகனிபோலத்தெரிகிறது. இன்னுமொருதிர்ஷ்டாந்தம் என்தகப்பனானவன் பரமயோகியென்பதும் யோகசாலியென்பதும் தனக்கு நான் கிருஷ்ணவிக்ரகம்போலப் பிள்ளையாய்ப் பிறந்தினனல்லவோ தெளிவாகக்கண்டு பெருமகிழ்ச்சி கூர்ந்தானென்றுசொல்ல, மட்டி அதைக்குறித்துஞ்சந்தேகமா விரையொன்றுபோடச் சுரையொன்றுகாய்க்குமா ஆமணக்குவிரைத்தால் ஆச்சாமுளைக்குமா நல்வினை நன்மையைத்தான்தரும், தீவினை தீமையைத்தான் தருமென்றான்.

இப்படி ஆனந்தத்துடன் பேசிக்கொண்டே வெகுதூரங்கடந்து பின்பு இங்கேகுவழியிற் போகும்போது அவ்வழியோரத்தில் சாய்ந்திருந்த ஒரு மரத்தின்கொம்பு குறுக்கேபட்டு மட்டி தலையிலிருந்த பூசணிக்காய்தவறிக் கீழேநெருங்கிய புதரின்மேல்விழுந்து அதினடுவிற் கிடந்த கல்லின்மேல் விசையாய்த்தாக்கித்தகர்ந்துடைந்தது.

அப்போதந்தப்புதரிலே பதுங்கியிருந்த முசல் அதிர்ந்தெழுந்தோடியது அதுகண்டு இதோ முட்டைக்குள்ளிருந்த குட்டிப்பரி ஓடுகிறதென்று அபயமிட்டுக்கொண்டு இருவரும் அதைப்பற்றிப்பிடிக்கப் பின்தொடந்தார்கள், இவர்கள் காடுஞ்செடியும் மேடும்பள்ளமும் கல்லும்கரடும் முள்ளும்முருடும் பாராமல் ஓடவே, உடுத்தவஸ்திரம் செடிகளிலே மாட்டிக்கிழிந்து கயிறு கயிறாய்த்தொங்க, முட்கள் முதுகைக்கிழிக்க, கற்கள்காலிலுறுத்த, உடம்பெல்லாம் காயம்பட, உதிரப்பீறிட்டுப்பாய, ஊற்றிருந்துபெருகுவதுபோல வேர்வைவடிய, நெஞ்சுபதை

க்க, காதடைக்க, நாக்குவறள, தாகமதிகரிக்க, குடல்குழம்ப, இரைப்பெடுக்க, பெருமூச்சுவாங்க, ஓடியும்முசல் அகப்படாமல் அவர்கள்தவித்துத் தடுக்கிவிழுந்தார்கள் இதற்குள்ளாக முசல் கண்ணிலுங்காணக்கூடாமல் மறைந்து வெகுதூரத்தில ஓடிப்போய்விட்டது. அவர்களும் இளைப்பைப்பாராமல் எழுந்து கல்லும் முள்ளும்தைத்தகாலால் நொண்டிநொண்டி வெயிலிலேநடந்து அங்கங்கே தேடிச்சலித்துப்போய் அன்றைக்கெல்லாம் பசியுடன்பட்டினிகிடந்து அஸ்தமித்தபின்புமடத்துக்குச் சென்றார்கள்.

மடத்துவாசலில்நுழையும்போது அட அப்பா அட அப்பாவென்றுகூவி வாயிலேமோதியடித்துக்கொண்டுகீழேவிழுந்தார்கள். உள்ளேயிருந்தவர்கள் துணைக்குற்று ஓடிவந்துகைதூக்கியெடுத்து என்ன அபாயம் வந்ததென்றுகேட்க, நடந்தவர்த்தமானமெல்லாம் இருவரும் விவரமாய்ச் சொன்னபிறகு, மட்டியெனபவன் தனக்குள்ளே அதிசயித்து மற்றவர்களுடனே ஐயா நான்பிறந்தநாள்முதல் இன்றையவரையில் ஒருக்காலும் இத்தனைவேகக் குதிரையைக் கண்டதேயில்லை இதுகருப்புப்பாய்ந்தசாம்பல்நிறமாய், உயரத்திலும்பருமனிலும் முசலை ஒத்ததாய் ஒருமுழநீளமாய், இன்னம்முட்டைக்குள் கிடக்கும் குட்டியாயிருந்தாலும், இருசெவியும் விரித்துக்கொண்டு இரண்டுவிரற்கடைநீளமுடைய குறுவாலைத்தூக்கி நிலத்திலே மார்புபடாகாலையும் விரித்துநீட்டி ஓடினசுருக்கும்வேகமுஞ்சொல்லவும் நினைக்கவுங்கூடாதென்றான். அதைக்கேட்டு இவர்களெல்லாம் அங்கலாய்த்துக்கொண்டிருக்க, குருவானவர் அவர்களை அமர்த்தி "கூண்டோடேபோச்சுது குளிருங்காய்ச்சலு,, மென்றதுபோல ஐந்துபொன்போனதன்றி, அதனோடுகுதிரைக்குட்டியும் போய்விட்டதே அதுகாவலைதான் சிறுகுட்டியாயிருக்கும்பொழுதே இப்படிக்கடுமையாய் ஓட்டம்பிடித்தது இனிமேல்வளர்ந்துபருசாரமாகிறபோது எப்படிப்பாக்கமாட்டாது அச்சமில்லாமல்அத்தனைத்திடச்சித்தமாய் அதன்மேல் ஆர் ஏறியிருக்கப்போகிறார்கள், அப்பா நான் கிழவனுக்கும், அப்படிபபட்ட வாயுவேகக்குதிரை பணச்செலவில்லாமல்சும்மா இலவசத்தில் வந்தாலும்தீர எனக்கு வேண்டாமென்றார்.

## மூ ன் றா வ து.

## வாடகைமாடேறிப்போனது

பலநாள் சென்றபின்பு தூரபயணம்போகும்படி. அவசரமுண்டா யிற்று. சீஷர்கள் அவ்வளவுதூரம் நம்முடைய குருவானவர் கால்நடை யாகப் போகமுடியாது. அதிகபிரயாசமாமென்று ஒருயோசனைமாடுவா டகைக்கு அமர்த்திக்கொண்டுவந்தார்கள். அதற்குவாடகை நாளொன் றுக்கு மூன்றுபணம்கொடுக்கத்தீர்த்துப் பல அலுவலினாலே விடிந்தத ன்மேல் ஒரு சாமங்கடந்தபின் குருவும் சீஷர்களும் பயணம்புறப்பட்டு ப்போனார்கள், கடும்வெனிலென்னும் கோடைகாலமானகையால், அவர்கள் நடக்கநடக்கக் கொள்ளிகொண்டு சுடுகிறதுபோலச் சுள்ளுசுள்ளென்றுவெ யிலெரிக்க, மரம்பட்டு, குளம்குட்டை இல்லாமையால் உண்ணநீரும் ஒதுங்க நிழலுமில்லையாக வெட்டவெளியாகிய பாலைநிலத்தில் அகப்ப ட்டுக்கொண்டார்கள். அப்படியேபோகப்போக அகோரமும கடூரமு மான வெயிலின் வெப்பம்பொறுமல் பசிய இளங்கீரைத்தண்டுபோலக் கிழக்குருக்கள் துவண்டு கீழேவிழத்தலைப்பட்டார அதைக்கண்டு சீஷர் கள்மாட்டைநிறுத்தி அவரை இறக்கி அவர்வெப்பத்தை ஆற்றுதற்கு நிழலெங்குமில்லாமையால் நிறுத்தப்பட்ட மாட்டின்நிழலிலே தரையி ல்துணியைவிரித்துபயோட்டுக்கிடத்தி விசிறியில்லாததினால் வஸ்திரத் தினாலே விசிறிகொண்டாாகள். அவருக்கு அதிலேகுஞ்சம் ஆறுதலா னபிறகு குளிர்ந்தகாற்றுவீச, மறுபடியும் மாட்டின்மேலேற்றி மெள்ள மெள்ள நடத்திக்கொண்டுபோய் பொழுதுபோகுமுன்னே ஒரு சிற்றூ ரில் சென்றிறங்கினார்கள். இங்கே ஒருசிறிய வீட்டுத்திண்ணையில போயி ருக்கும்படி வாசலுக்குள் நுழைந்தவுடனே மாட்டுக்காரனுக்கு மூன்றுப ணத்தை எடுத்துக்கொடுத்தார்கள். அது அவன்போதாதென்று இதென்ன முன் உனனோடேபேசிச்சம்மதித்த நாட்கூலி மூன்றுபணந் தானல்லவோ வென்று அவர்கள்சொல்ல அவன்மறுத்து மாடுவாகனமா யேறிப்போனதற்காக உங்களுக்கு இந்தக்கூலி பொருந்தினது சரிதா ன் பிறகு நடுவழியில் வெயிலுக்குக் குடையாக உதவினதற்குக் கூலி கொடுக்கவேண்டாமாவென்று கூசல்போட இது அநியாயம் அநியா

யமென்று அவர்கள்கோபித்துக் கோரமாய்ப்பேச, அப்புறம் மாட்டுக்காரனுக்கும் அவர்களுக்கும் சண்டையாய்ப் பெரிய ஆரவாரமுண்டானதினால் ஊரார் அறிந்து ஆண்பெண்பெரியோர் சிறியோரெல்லாரும் ஒரு கூட்டமாகக்கூடி மொய்த்துவந்தார்கள். அவர்களில் நியாயக்காரனொருவன் சந்தடியைவிலக்கிவந்து கூச்சலையடக்கி இருதிறத்தார்வழக்கையும் விசாரித்து நல்லது நான்சொல்லுகிற தீர்ப்புக்குள்ளாவீர்களோ உங்கள் சம்மதியென்ன சொல்லுங்களென்று கேட்டுப்பின்பு சொல்லத்தொடங்கினான்.

நான்தான் சிலநாளுக்குமுன் தூரதேசத்துக்குப் பிரயாணமாய்ப் போகையில் நடுவழியிலே ஒருராத்திரி ஓரூரில் ஒருபெரியவிடுதியில் தங்கினேன். அங்கே வந்தவர்களுக்கெல்லாம் வசிக்கும் இடம் குடக்கூலிக்கு விடுவதன்றிச் சாப்பிடுகிறதற்குவேண்டியசோறு கறிமுதலானதுகளும் கிரயத்துக்குக்கொடுப்பார்கள் ஆகையால் உனக்கு ஏதாவதுவேணுமோவென்று அவர்கள் என்னைக்கேட்டபொழுது, எனக்குச்செலவுக்குப்பணமில்லாமையால் நான்கட்டுச்சோறு கட்டிக்கொண்டு வந்திருக்கிறேன் வேறொன்றும் தேவையில்லையென்றேன். அத்தருணத்தில் அங்குவந்தமற்றவர்களுக்கு ஒருபெரிய ஆட்டுத்தொடையை இருப்புச்சலாகையிற்கோத்து நெய்தடவித் தணலின்மேல்காட்டிப் பக்குவமாய்ச்சுழற்றிச்சுட்டார்கள். அதுசிவக்க வேகவேக அதிற் பூசியநெய்யுருகி நெருப்பில் துளித்துப்புகையத்தலைப்பட்டது. அப்பொழுது அதின்வாசனை அதிகரம்மியமானபரிமளமாயிருந்தது நான்கொண்டுவந்த கட்டுச்சாதத்தை அந்தமணத்தோடே சாப்பிடுகிறது நல்லதென்று நினைத்து அதை அப்படியே சற்றுநேரஞ் சுழற்றிக்கொண்டிருக்கும்படி உத்தரவு கேட்டேன் அவ்வாறே சுழற்றிக்கொண்டிருக்க நான்சாதத்தை அவிழ்த்தெடுத்துச் சீலையோடே ஒருகையால் அந்தப்புகையின்மேல்பிடித்து மற்றொருகையால் சீக்கிரமாய் அள்ளியள்ளி அவ்வாசனையிலே பேரின்பமாய்ச்சாப்பிட்டேன்.

பிறகுபோகவேணுமென்றிருக்கையில் விடுதிக்காரன்வாசனைமுகர்ந்ததற்காகக், கூலிகேட்டான் நான் அதற்கேது கூலியென்றேன் அவன் கொடுக்கவேணுமென்றான் நான்கொடுக்கிறதில்லையென்றுஎழுந்து

நடந்தேன். அவன் நீகொடாமற்போகக்கூடாதென்று ஆணையிட்டுத் தடுத்தான. இந்தப்படி இருவரும்வழக்கிட்டு அந்த ஊர் அதிகாரியண்டைக்குப் பிராதுக்குப்போனோம் அவனோபூரணபண்டிதன் சகலசாஸ்திரநிபுணன் அதிகபுத்திமான் மகாசமர்த்தன் மிகவும் நியாயசூட்மம் தெரிந்தவன் அந்த மகானுபாவன் பண்ணின் நியாயத்தீர்ப்புக்கேளுங்கள் கறிதின்றதற்குவிலைபணமுன்; கறிமணமுகந்ததற்கு விலைபணத்தின்மணமுமாகும் இதுதான் தீர்ப்பென்று விடுதிக்காரனை அருகே அழைத்துப்பணம் நிறைந்தபையை எடுத்து அவன்மூகநிலே அமந்த உரைத்துத்தேய்த்தான அவனும் மூக்குப்போச்சுது ஐயோ மூக்குப்போச்சுது இந்தமட்டில்வந்த கூலி போது போதுமென்றான் பார்த்தீர்களோ இதுவே நல்லநியாயமும் உத்தமநீதியுமாமல்லவா? இந்தத்தீர்ப்புத்தான் உங்களுக்கும் எப்படியென்றால், மாடேறிவதற்குககூலிபணமும், மாட்டின்நிழலிலிருந்ததற்குகூலிபணத்தின் நிழலும்போதுமானதுகள்.

ஆகிலும் மாட்டுநிழற்கூலிக்கு இப்போது அஸ்தமித்ததினால் பணநிழல்அகப்படாது அதற்குப்பதிலாகப்பணச்சத்தத்தை ஒத்துக்கொள்ளென்றுசொல்லி அவனைச் சிக்கெனப்பிடித்துப்பணப்பையைத் தூக்கி அவன்காதிலே உரமாகத்தாக்கும்படி அதினால்மோதியடித்துப்பணச்சத்தங்கேட்டையவென்றான் அவனும் ஆமையா ஆமையாகேட்டேன் கேட்டேன், காதுநோகிறதுபோதும்கூலிபோதும் அப்பா உனக்குப்புண்ணியமாகப்போகிறது, என்னைவிட்டுவிடென்றான், அந்தச்சமயத்தில் அதனைப்பார்த்துக் குருவும் உன்மாடெனக்குப்போதும் இந்தச்சஞ்சலம் இனி ஆகாது. நீமாட்டை ஓட்டிக்கொண்டுபோ இனனங்கொஞ்சந்தூரந்தான் பயணம்போகவேணும் காலமேமெள்ளமெள்ளநடந்துபோகிறேனென்று அவனைப்போகச் சொல்லிப்பின்புநியாயக்காரனைப்பார்த்து ஐயாநீர் எங்கள்வழக்கைப்பாரபட்சமில்லாமல் எள்ளுக்காய் பிளந்தாற்போலக்சரியாய்த்தீர்த்தீரென்று அவனைப்புகழ்ந்து ஆசிர்வதித்தனுப்பினார்.

—]*[—

நான்காவது.

## குதிரைபிடிக்கத்தூண்டில்போட்டது,

மறுநாள்குருவும்சிஷரும் வெயிலுக்குப்பயந்து கோழிகூவினவுடனே எழுந்து ஆயத்தம்செய்து புறப்பட்டார்கள். தளர்ந்தநடையாய்க்கடந்துபோகிறதினாலே காலநாழிகைகூட இன்னங்கடக்காதற்குள்ளே வெயிலேறினதைக்கண்டு ஒருகுளிர்ச்சியானசோலையிலிறங்கினார்கள், அங்கே இளைப்பாறிக்கொண்டிருக்கையில் மிலேச்சனென்பவன் மலேபாதைக்குப்போய்ச் சமீபமாயிருந்த ஏரியில்கால்கழுவப்போனான்,

கரையின்மேல் ஐயனார்கோயிலிருந்தது அதிலே ஆரோ ஐயனாரப்பனைக்குறித்துப்பிரார்த்தனைசெய்துமண்ணினாற்புதிதாய்ப்பண்ணிச்சுட்டுவர்ணந்தீர்ந்த ஒருபெரியகுதிரையைக்கொண்டுவந்துசெலுத்தியிருந்தார்கள் அந்தமண்குதிரையின்நிழல ஏரிநிறையத்தெளிந்திருந்ததண்ணீரில் காணப்பட்டது, அதைஏரியில்காலலம்பப்போன மிலேச்சன்கண்டு தண்ணீர்க்குள்ளேகுதிரைநிற்கிறதென்று நினைத்து ஆச்சரியப்பட்டு, பின்புகரையிலேநிற்கும் மண்குதிரைக்குச் சரியொத்தநிறமும் உயரமும் பருமனும் சாயலுமாயிருக்கக் கண்டதினால் தண்ணீரிலேதோன்றுவது அதன் நிழலாயிருக்கவேண்டுமென்று சமுசயப்பட்டான்

சமுசயப்பட்டாலும் அப்போது அடித்தகாற்றினால்தண்ணீரசைய அதிலேகாணப்பட்ட குதிரைநிழலும் அசையத்தலைப்பட்டது அதைப்பார்த்துக் கரைமேலிருக்கும் குதிரையைப்பார்க்கும்பொழுது அது அசைவொன்றுமில்லாதிருந்ததினால், நீர்க்குள்நிற்கும் குதிரைவேறென்றும் உயிருள்ளதென்றும் நிச்சயம்பண்ணினான்பின்னும் அவன் அதைஓட்டுகிறதற்கு எத்தனப்பட்டு வாயினால் கூச்சலிட்டுப்போட்டுக் கல்லைக்கொண்டெறிந்தான் எறிந்தமாத்திரத்தில்தண்ணீர் அதிகமாயாடி அலைந்தெழவேகுதிரையுமலையெடுத்துக் காலுதறி உடல்துடித்துத் துள்ளினதாகஇவன்கண்ணுக்குத் தோன்றினதினால்பயந்துகாலும் அலம்பாமல்மற்றவர்களிடத்திலே ஓடிவந்துதான்கண்டதையெல்லாம்சொன்னான்

அந்தப் புதுமையைக்கேட்டு எல்லோரும் திடீரென்றெழுந்து ஓடிப்போய் ஏரிக்குள் சுற்றிப்பார்க்குமிடத்தில் மிலேச்சன் சொன்னது மெய்யென்றுநம்பிக்கொண்டு, தண்ணீரிலிறங்கினால் தவளைகடிக்குமென்பவர்போல, அவர்கள் ஏரிநீரில் இறங்கப்பயந்து இறங்காமல் அதற்குள்ளிருக்கிற குதிரையைப்பிடிக்கும்படிக்கு ஆலோசனைப்பண்ணத் தொடங்கினார்கள். அவர்களில் ஒருவன் கொள்ளைக்கண்டால் வாயைத்திறக்கிறது குதிரைக்குச்சுபாவமானதினால், கொள்ளே வாரித்தூவைத்தால் அந்த வாசனையைக்கண்டு அந்தக்குதிரை தண்ணீரிற்குமேலே வரும். அப்போது பிடித்துக்கொள்ளலாமென்றான். மற்றொருவன் பசுமையாயிருக்கிற ஒருபிடி அருகம்புல்லைப் பிடுங்கிக்கொண்டுபோய்த் தண்ணீருக்குமேலே காட்டினால் குதிரை அதைத்தின்னத் தாவியெழும்பும். அந்நேரத்தில் பற்றிக்கொள்ளலாமென்றான். பின்னொருவன் பெட்டைக்குதிரை கனைக்கிறதுபோலக் கரைமேலிருந்தபடி கனைத்தால் குதிரை காமமுற்றுக்கொண்டு மேலேகிளம்பும். அச்சமயத்தில் தப்பாமல் கைவசப்படுத்திக்கொள்ளலாமென்றான். இன்னுமொருவன் எருமைபோய் ஏரியில்விழுந்தால்தவளைதானேகுதித்தோடுமென்பதனால், எருமைக்கடாவை ஓட்டிக்கொண்டு தண்ணீரில்விட்டால் அதுநாலுபக்கமும் ஓடியாடிக் குதிக்கும் அந்தஉபத்திரம் பொறுக்கமாட்டாமல் குதிரை கொள்ளலாமென்றான். அப்படிநாலுபேருஞ் சொன்ன உபாயங்களெல்லாம் தனக்குச்சம்மதியானதினால் மிலேச்சன் சரியல்லவென்று மறுத்து நானொரு உபாயஞ்சொல்லுகிறேன் கேளுங்கள் தூண்டில்போட்டு மீன் பிடிக்கிறதுபோல இதையும் பிடித்துக்கரைமேலிழுக்கவேண்டுமென்றான் அதற்கு அவர்களெல்லாரும் ஆம் ஆம் இதுநல்ல உபாயந்தானென்று உடன்பட்டார்கள்.

தங்களுக்குள் ஒருவன் வைத்திருந்த கருக்கருவாளைத் தூண்டில் முள்ளாகவும். வழியில் உண்ணுகிறதற்குத் தாங்கள் கொண்டுவந்த கட்டுச்சாதத்தைத் தூண்டிலின் இரையாகவும், குருவானவர் கட்டியிருந்த தலைப்பாகையைத் தூண்டிற்கயிறாகவும், அவர் கையிலே பிடிக்கிற சிஷ்யவருஞ்செய்துவைத்த பித்தளைப்பூண்கட்டிய தடியைத் தூண்டிற்கோலாகவும் ஆயத்தப்படுத்தி, எப்படியாவது நினைத்த காரியத்தை முடிக்கவேண்டுமெ

ன்று தீர்மானித்து, அப்படியே கட்டேச்சோற்று மூட்டையைக் கருக்கரிவாளின்முனையிலேகோத்து அடியிலே தலைப்பாகையைக்கட்டி அதைத் தடியிலேசுற்றி முடிந்து தண்ணீருக்குள் குதிரைகாண்கிற இடத்திலெறிந்தார்கள் அது தொப்பென்றுவிழுந்து விசையோடு மிகவும் தண்ணீர் கிளம்பினதினால் அங்கேதோன்றினகுதிரையும்துள்ளயெழுந்து தெளிந்துக் குதித்துக்கிளம்பினதுபோலக்கண்டதனால்எல்லோரும் பயந்தோடினார்கள்.

மூண்டாசியைக்கொடுத்த தடியைப்பிடித்திருந்த ஒருவன்மாத்திரம் அதைக்கைவிட்டோடாமல் நின்றான் ஏரியின் அலையமர்ந்தபின்பு அதிலுள்ள பெரியமீன்கள் மெள்ளமெள்ள அணுகிக்கட்டேச்சாத மூட்டையைக் கடித்திழுத்த சாடையைக்கண்டு, கைச்சயிக்கினைசெய்துமற்றவர்களை அழைத்துக் குதிரை இதோ, இப்பொழுதுதான் இறையைக்கடிக்கிறதென்றான். சற்றுநேரம்போனபிறகு தலைப்பாகையை இழுக்கச்சீலையும் சாதமும் போனதினால் பாகையுடனேகட்டின கருக்கரிவாளானது அங்கேமுளைத்திருந்த ஏரிக்கோரையில் மாட்டிக்கொண்டது அவன் அது குதிரைவாயில் மாட்டிக்கொண்டதாக நினைத்துக்குதிரைவாயில் தூண்டிமாட்டினபோதே குதிரைநம்முடையதாய் விட்டதென்று சந்தோஷமாய்க்கூப்பிட, அனைவருங்கூடிவந்து தலைப்பாகையைப் பிடித்திழுக்கப் பாகைபழையதாகையால் அற்றுப்போய்விட்டது- எல்லாரும் ஒருமிக்க மல்லாக்கக்கீழேவிழுந்தார்கள்.

இப்படியவர்கள் விழுந்தகறுவாயில் ஒரு கிராமத்தான் வந்து இதென்னவென்றுகேட்க, எல்லாவற்றையும்ஒழுங்குபடச்சொன்னார்கள் அதுகேட்டு அவன் இவர்கள் மவுடியத்தைக்கண்டு கரைமேலேயிருந்தகுதிரையைவஸ்திரத்தினாலே மறைக்கநீருட்குதிரைமறைந்தது அதைஅவர்களுக்குக்காட்டி அந்தமயக்கத்தைநீக்கினான்.

அப்போதவர்கள் தங்கள் குருவை அவனுக்குக்காட்டி ஐயா எங்கள் குரு சுவாமியார் தளர்ந்த வயதாகையால் ஏரிப்போவதற்குக்குதிரை ஆவசியமாயிருக்கிறது- அது கொள்ளுதற்குப் போது

மானபணம் இல்லாததினால் சுளுவிலே அதன்முட்டைவாங்கினோம் அது சேதமாய்ப் போய்விட்டது. பின்புவாடகைமாடுவைத்து அதினிமித்தம் வெகுவாகச் சஞ்சலப்பட்டோம். இப்பொழுது இப்படியாயிற்றென்று எல்லாம் விவரணமாயவனுக்குச்சொன்னார்கள் அவன் இவர்கள் கபடமறியாத நல்லமனிதர்களென்றுகண்டு மனதிரங்கி என்னிடத்தில் ஒருநொண்டிக் கிழக்குதிரை உண்டு அது உங்கள்வழிப்பயணத்துக்கு உதவும அதற்காகநீங்கள் பணங்காசு கொடுக்கவேண்டியதில்லைநான் இலவசமாகத்தருகிறேன் என்னூருக்குவாருங்களென்று அழைத்துக்கொண்டுபோனான்.

ஐந்தாவது

## குதிரையேறிப்போனது,

அந்தமனிதன் திரவியஸ்தனல்லாத ஏழையானாலும் தர்மிஷ்டனாகையால் அவர்களைச் சொன்னபடியே சமீபத்திலிருந்ததன்னூருக்கு அழைத்துக்கொண்டுபோய், அன்றிராத்திரி அவர்களுக்கு நெய்பால்தயிர் முதலானவைகளிற் குறைவில்லாமல்போசனம்விசாரித்துச் சாப்பிட்டபிறகு வெற்றிலை பாக்குப்புகையிலைமுதலானதுகளுஞ் சம்பிரமமாய்க் கொடுத்தான்.

மறுநாட்காலமே அவன்கொல்லைவெளியில்மேய்ந்து கொண்டிருந்த நாட்டுத்தட்டாகிய ஒருகுதிரையைப்பிடித்துக்கொண்டுவந்துகுருவுக்குமுன்பாகவிட்டு அதையவருக்குக்காணிக்கையாகக்கொடுத்தான் கொடுத்தகுதிரையோவயதுசென்றகிழமும், ஒருகண்பொட்டையும், ஒருகாதுமூளியும், முன்காலில்ஒருநொண்டியும்பின்கால்முட்டிகாலுமானகுரூபமாய் அந்தகிழக்குருவுக்குத்தக்கவாகனமாயிருந்தது எப்படியிருந்தாலும்குதிரைபணச்செலவில்லாமல்இலவசத்தில் அகப்பட்டதேயென்றுஎல்லாரும் அதிகமகிழ்ச்சிகூர்ந்தார்கள மட்டிகுதிரையைச் சுற்றிவந்துதடவியும், மடையன் அதன்நொண்டிககாலைப்பிடித்திழுத்துமுறுக்கியும், மூடன மொட்டைவாலைப்பற்றி உருவியும், மூர்க்கன்நொள்ளைக் கண்ணை

த்துடைத்தும், மிலேச்சன்பசும்புல்லைக்கொண்டுவந்து வாயிலேகொடுத்தும் இவ்விதமாக அதைமிகவும் பாராட்டிக்கொண்டிருந்தார்கள்.

அதற்குமேல் குதிரைமுஸ்திப்புத்தேடத்தலைப்பட்டார்கள்குதிரைகொடுத்தவன பிற்றவாயிருந்த ஒருபழஞ்சேணத்தைக்கொடுத்தான் அதில்குதிரைவாலின் மேற்மாட்டப்படும்பின்பட்டுவாரில்லாததினால் பாலைக்கொடியைத் திரித்துக்கட்டினார்கள் அப்படியேகடிவாளத்துக்கு வாரில்லாமையால், "வழியிலேகண்ட குதிரைக்கு வைக்கோற்புரிகடிவாளமென்றபழமொழிப்படிபழுதையைமுடிந்து வைத்தார்கள், தங்கப்பட்டையும் இறக்குவாரும் சம்பாதிக்க வெகுபிரயாசப்பட்டும் கிடையாததினால்மடத்துக்குச் சமீபத்திலிருந்த பேட்டைக்குப்போய் அவ்விரண்டும்முன்கால் பின்கால்களிற்கட்டுகிற அதாடி பிசாடிக்கயிறுகளுமவாங்கிக்கொண்டு வந்தார்கள் இப்படி முஸ்திப்பெல்லாம் அமைத்தபின்பு, குதிரைசவாரிபண்ணுகிறதற்குச்சோதிஷமுறைப்படிவாரசூலையைத்தள்ளி அமிர்தயோகமான சுபமுகூர்த்தமொன்றநிருணயம்பண்ணினார்கள் அந்நேரத்தில் ஊர்கூடிச் செகுத்தள்ளுகிறதுபோல ஊரெல்லாம் வந்துகூடிப் பேரிரைச்சலிட்டு வாழ்த்திப்பரமார்த்தகுருவை முதல்முதல் குதிரைமேல் ஏற்றிவைத்தார்கள் அப்பொழுது, வெண்பா,

"முன்னே கடிவாள மூன்றுபேர் போட்டிழுக்கப்
பின்னே யிருத்திரண்டு பேர்தள்ளக்-கொன்னேநால்
வேதம்போம் வாயான் விகடரா மன்குதிரை
மாதம்போய் காதவழி,,

என்கிறபடியே ஐந்துசிஷர்களில் ஒருவன் முன்புறத்திலிருந்து கடிவாளத்தைப் பிடித்திழுக்க, ஒருவன் பின்புறத்திலிருந்துவாலைப்பிடித்து முறுக்கி அதட்டியோட்ட, இருவர் பக்கங்களிலிருந்து குருவினகால்களைக் கைலாகு கொடுத்துத்தாங்க, ஒருவன்முன்னே பரமார்த்தகுருவருகிறார்பராககு எச்சரிக்கைஎன்றுகட்டியங்கூறிப் பராபரிபண்ணக்கிழக்குருவானவர் மகாசம்பிரமத்துடனே குதிரைசவாரி பண்ணினார்

இந்தப்பாஞ்சதாளக குதிரையின்மேல் உல்லாசமாக உடல் பூரிக்க வெகுதூரம் போன பிறகு நடுவழியில் வழிச்சாரி ஆயக்காரன

ஒருவன்கண்டு ஓடிவந்துமறித்தான். இவர்கள் ஏன் மறிக்கிறாயென்றார்கள். அவன்குதிரைக்கு ஐந்துபணம்ஆயங்கொடுக்கவேண்டும், அதுகொடாமற் போகக்கூடாதென்றான்.

அதற்கிவர்கள் இதென்னபுதுமை குருவேறின குதிரைக்கும் ஆயமுண்டா, வியாபாரசம்பந்தமா, உத்தியோகசம்பந்தமா, அதெல்லாமல்லவே. எங்கள்குருநாதர் தீர்ந்தவயதாயச் சரீரந்தளர்ந்திருக்கிறதினால் கால்நடையாய்நடக்க மாட்டாததைக்கண்டு ஒருபுண்ணியவான் தர்மத்துக்கொடுத்த குதிரையாக்குமிது இதற்கு ஆயம்வாங்கினதைநாங்கள் எங்குங்கண்டதில்லை ஆனாலும் அநியாயமென்று அவர்கள்கூசல்போட, அவன் அநியாயமோநியாயமோ எனக்கொன்றும் தெரியாதுபணத்தைக்கொடுத்துவிட்டுத் தான்போகவேணுமென்று மத்தியானமட்டும் மறியலில்வைத்துவிடமாட்டேனென்றதனால், தப்பிப்போகவேறேவழிகாணாமல் நாம்கொடாக்கண்டாயிருந்தாலும இவன்விடாக்கண்டனாயிருக்கிறானே ஐயோ வீண் தண்டமிதுவென்று ஐந்துபணம்கொடுத்தார்கள். அவன் விட்டுவிட்டான்.

குரு குதிரையில்லாவிட்டால் இந்தச்சஞ்சலம் வரமாட்டாதல்லவாவென்று மிகவும் தம்மைத்தாமே வெறுத்துக்கொண்டு, பின்பு இளைப்பாறும்படி சிஷர்களுடனே கிட்டவிருந்த சாவடிக்குப்போனார். அங்கே எதிர்ப்பட்ட ஒரு கிராமத்தனோடே குருவானவர் தாமேவலுவில்முறையிட்டுக் கொள்ளத்தொடங்கினார். அப்பா நான் பிறந்தநாள்தொட்டு இதுவரையிலும் ஒருநாளும்குதிரையேறினதில்லை ஒருநாளும்சிரியாதவன் திருநாளில்சிரித்தானென்பதுபோல, இன்றைக்குத்தான் முதல்முதல்குதிரையேறிவந்தேன். வந்தவிடத்தில்இந்தஅநியாயம்நடந்தது இப்படிநீதியில்லாமல் வழிபறிக்கிற கள்ளனைப்போலே பலாத்காரமாய்ச்சம்பாதிக்கிறபணம் ஆருக்காவது நன்மையாயிருக்குமா, எளவயிரெறிய வாங்கினபணம் அவனுக்குச்செரிக்குமா, நெருப்பாய்முளாதாவென்றார். அதுகேட்டு, அவன் ஐயா பெரியவரே இதுகாலத்தின்சுபாவம் இந்நாளில்பணமேகுரு பணமேதெய்வம், பணமென்றால் பிணமும்வாயைத்திறக்குமென்பதுமுன்புகேட்டோமஇப்போதுபணம்பந்தியிலேகுலம்குப்பையிலே

யென்பதர்க்குச் சரியாய்ப்பணத்தைகவிட வேறே உறவும் சினேகமுமில் லையாக்குமென்றான் இதற்கேட்டுக் குருவும் அப்பா இந்தக்காலத்திலே கஷ்டத்தில்அரைக்காசுகிடைக்கவேண்டாலும் அதைநாக்காலேநக்கியெ டுக்கக் கூசார்களென்றுசொன்னார் அவனுஞ்சந்தேகமா, அப்படி நக்கி யெடுக்கும்பொழுது அது அவர்களுக்கு நாறுகையா இதற்கு ஒரு அத் தாட்சிகேளுமென்று சொல்லுகிறான.

ஒரு இராஜா பணத்தாசையினாலே தன்சீமையில் ஒருபொழுதும் இல்லாதவரியெல்லாம் ஏற்படுத்திவைத்துபின்பு மூத்திரவரியும் வைத் தான். இது அவன்மகனுக்குச்சம்மதியாமல்குடிகளிடத்தில் இந்தநாறு கிற வரிகேட்டு வாங்குகிறது லச்சைக்கேடாயிருக்கிறதென்று தகப்பனு க்குசசொல்ல, இராஜாமகனுக்கு அப்பொழுது மறுமொழி சொல்லாம லிருந்துபலநாள்போகவைத்தவரிப்பணம பொக்கிசம்நிறையச்சேர்த்தபின் மகனை இராஜா அழைப்பித்து அந்தப்பணத்தை முகரச்சொல்லி நாறு கிறதோவென்று கேட்டான. மகன் வேறொன்றும் நினையாமல்நாறவில் லையணக்கிறதென்றான. இராஜாயிதுமூத்திரவரிப்பணமாக்குமென்றான் கேட்டீரோ பணம்வந்தாற்போதும் அது எப்படிவந்தாலும் பாரமல்ல ஐயாவென்றான்

இவ்வாறு பலபேச்சுகள் பேசிக்கொண்டிருந்த பொழுது போக்கி னபின் சாயங்காலத்தில் மீளவும் குதிரையேறிப்போய் ஒருபட்டிக்காட் டிலே தங்கினார்கள். அன்றிராத்திரி குதிரையைக்கட்டாமல் மேயவிட்டு க்காலமேபயணத்துக்குத்தேடினவிடத்தில் அகப்படாமையால், மூர்கக ன் வீட்டுக்கு வீடுஉழந்து பார்க்கையில், அதை ஒருவன்தனவளவில் கட்டிவைத்திருக்கிறான், இவனதைவிடச்சொன்னவிடத்தில் அவன் இரா த்திரி முப்பதுநாழிகையும என்பயிரில் மேய்ந்தது எனக்குவெகுசேத மாயிற்று அதனால் பரிச்சேதம் விடமாட்டேனென்றான் அதைக்குறித் து அடுத்த ஊர்நாட்டாணிடம் போய் நயபயமாய்ச்சொல்லி அமர்த்தியும் அவன் பயிர்ச்சேதங் கொடுத்தால் தானெ நான்குதிரையைவிடச்சம்மதிப் பேனென்றான். நாலுபேருங்கூடிக் குதிரைமேய்ந்த கொல்லையைப்பார் த்து மிதித்தது மேய்ந்ததெல்லாம்மதித்துப் பத்துப்பணத்துச் சேதம் எட்டுப்பணத்துச்சேதம் உண்டென்றுசொல்லக் கடைசியிலே தீர்ந்தப

டிக்கு நாலுபணத்தை வாங்கிக்கொண்டு குதிரையை விட்டுவிட்டான்.

குருவோவென்றால் வெகுவாய்ச்சலித்துக்கொண்டு நமக்கு இந்தக் குதிரை என்னத்துக்கு இதுவந்ததிலே பணச்செலவுகளெத்தனை, சஞ்சலங்களெத்தனை, சங்கைக்கேடுகளெத்தனை இதுகளெல்லாம் நமது மகிமைக்குத் தகாதப்பாவென்றுகால் நடையாய்ப் போகத்துணிந்தார் அதற்குச்சீஷர்கள் ஆ ஆ அதுசரியல்லவென்றும் கால்நடைநடக்க உம்மாலாகாதென்றும்சொல்லிக்கொண்டிருக்க, அவ்விடத்திலே ஒரு வள்ளுவப்பண்டாரம் இதெல்லாங்கேட்டுக் கிட்டவந்து கவலைப்பட வேண்டாமையாவென்றான். மேலுமவன் இந்தக்கஷ்ட நஷ்டங்களெல்லாம் குதிரையைப்பிடித்த தோஷத்தினால் வந்ததாகும். செலவோடேசெலவாக எனக்கைந்துபணங்கொடுத்தால் நான் கிரகசாந்திசெய்து அந்தத்தோஷத்தை நிவர்த்தியாக்கி விடுகிறேனென்றான். இவர்கள் செலவுக்காக அஞ்சிப்பார்ப்பது காரியமல்லவென்றுநினைத்துப் பணம்கொடுக்கச் சம்மதித்துத் தோஷத்தைக்கழிக்கச்சொன்னார்.

அப்பொழுது அந்தவள்ளுவன் இவர்கள் நமதுவலையிற்சிக்கினார்கள் ஆகையால் இவர்களைச சந்தேகமில்லாமல் நாம் ஏய்க்கலாமென்றுநிச்சயித்துப் பணத்தைமுன்னே கொடுக்கச்சொல்லிக் கழற்றிக்கொண்டு அவர்கள் கண்ணுக்கு முனபாகப்பலவித தாட்டோட்டமான சடங்குகளைச்செய்துநாநாவிதப்பச்சிலைகளையும்பறித்து அபிமந்திரித்துஎறிகிறது போலக்குதிரைமேல எறிந்துஉரக்கப்பேசாமல்மெதுவாய்மிணமிணவென்றசப்தமாக ஆ ஊ ஐயும் கிலியும் சௌவும் ஓம்சுவாகாவென்று அனேகமுறை உச்சரித்து, மும்முறை குதிரையைப்பிரதக்ஷிணம்வந்துவால்முதல் தலைபரியந்தம் அதைத்தடவி அதன் ஒற்றைககாதைக் கையினாற்பிடித்துக்கொண்டு இந்தக்காதிலேயாக்கும் தோஷமெல்லாம் தங்கியிருக்கிறது. இப்படிப்பட்ட தோஷத்தைக்கழிக்கத்தான அந்நாளில் அந்தக்காதையறுத்தார்கள் இப்பொழுது இந்தக்காதையும் அறுத்துப்போட்டால் இந்நாளில்வந்ததோஷமும் அற்றுப்போமென்றான் உடனே கெட்டரிவாளைத்தீட்டிக்கொண்டு அந்த ஒருகாதையும் திடீரென்று அறுத்

துத்தோஷந் தொடராதபடி தூரக்கொண்டுபோய் ஆழக்குழிதோண்டிப்புதைத்து மேலேமண்போட்டுக்குறிசெய்துவிட்டுவந்தார்கள் இதிலே அன்றெல்லாம் சென்றதினால் மறுநாட்காலமேவெகுதொந்தரவுபட்டு மடத்துக்குச் சென்றார்கள்.

### ஆறாவது

### பிராமணாவ்ஸோசியஞ் சொன்னது

மடத்துக்குப் போனபிறகு குருவானவர்வெகுவாய்விசனப்பட்டார்நமக்குக்கிடைத்தகுதிரைகுருபமானகுதிரையாயிருந்தும்பணச்செலவில்லாமல் வந்ததனைபற்றுங் கொஞ்சம்சந்தோஷமாயுற்று என்றாலும், இக்குதிரையினால்வழியில் அநுபவித்தசங்கடங்களையெல்லாம் நினைக்க நினைக்கத்தீராதமனக்கிலேசம் உண்டாகின்றது தெய்வச் செயலெப்படியும் இருக்கிறதல்லவாவென்றுசிந்தித்துக்குருவானவர்சீஷர்களைத்தமது சந்நிதானத்திற்கூட்டி வைத்துக்கொண்டுஞானவிஷயத்தைப்பற்றிப்பேசத்தொடங்கினார்.

தம்பிமாரே வரவர இந்தப்பிரபஞ்ச வாழ்வைப்பார்க்குமிடத்தில் முயற்கொம்புபோலவும்கானற்சலம்போலவும், சூனியமாயிருக்கின்றதென்று காண்கிறேன் தீமைகலவாத நன்மையும்கசப்புக்கலவாத இனிப்பும்துக்கங்கலவாத சந்தோஷமும் இங்கேகிடைக்கமாட்டாதுகள் ஐயோ விலைகொடுத்து வாங்காமல் உபகாரமாயக் குதிரைவந்ததென்று நாம்மிகவும் மகிழ்ந்தோமல்லவோ, அன்றுதானே இந்தப்பாக்கியத்துடனே தொடர்ந்துவந்தகிலேசங்களையும் கண்டீர்களே. ஒரு துளித்தேனைநக்குகிறதற்காக அத்தனைக்கசப்பு விழுங்கவேணுமோ, நெல்லுக்கும் உமியிருக்கிறது, எவ்வகைக்கனிகளுக்கும் தோலும் கொட்டையுமுண்டு இதெல்லாம் இயல்புதான் ஆகிலும்நான் ஒருதினத்தில் அநுபவித்தபொல்லாப்போ மிகவும் அதிகம்குதிரை ஏறுகிறதற்கு எனக்கு அதிஷ்டமில்லையாகனும் விதிக்கெதிராய்நடக்க என்னாற்கூடுமா கூடாதே ஆகலால இனி அந்தக்குதிரையை அதுவந்த இடத்திற்குத்திருப்பி அனுப்பிவிடுகிறதே காரியம் ஆகாதாகாதென்றார்.

அதற்குச் சீஷர்களெல்லாரும் ஆகாதாகாதென்று அப்படிச்சொல்லவேண்டாமையா, அதென்ன நீர்கொண்ட குதிரையோ நாங்கள்தேடினகுதிரையோ இரண்டில் ஒன்றுமல்லவே தெய்வாதீனமாய்த் தானாகவந்த குதிரையல்லவோ நாமிதைத்திரும்ப அனுப்பினால் திருவுளத்துக்கு மறுவுளமாக நடக்கிறதாகுமே ஆகலால் இது அதிகதோஷமாய் முடியாதா, குதிரையைப்பிடித்திருக்க மோஷத்தை அத்தலைவன் தேவன்கழித்த பிறகு அஞ்சத்தக்கது என்னவிருக்கின்றது ஒன்றுமில்லையென்றார்கள்

இதுகளுடனே இன்னமும் பலநியாயங்களை அவர்கள் விரிவாகச் சொல்லக் குருவும்மனந்தேறி நீங்கள் சொன்னபடியாகட்டுமென்றார் ஆனாலும் அயலூரவர் தம்மோசம்போலஇனிவாராதபடிக்கு இருமாகுதிரையைமேயவிடவொண்ணாது வீட்டிலேதானே கட்டிவிக்கவேணும், அதற்கானஇடமுங்காணோமே யென்றார். அப்போது மூர்க்கனென்பவன் இதற்காக ஆலோசனையென்ன, இக்கணத்திலே நான்போய் ஆலங்கொம்புகளை வெட்டிக்கொண்டுவந்து நாமுடைய மடத்துக்குஒருமூலையிலே நேர்த்தியானசாயமொன்று பண்ணியபடித்ததுபோலக் கட்டுகிறேனென்றான்,

என்றவுடன்புறப்பட்டுப்போய் வழியோரத்திலிருந்த பிரமாண்டமானகொடியாலின்மேலேறிநின்றுசெழிப்பாயுயர்ந்துவளர்ந்து ஒழுங்காயிருந்த கிளையைக் கோடாலியினால் வெட்டத்தொடங்கினான் ஆனாலும் இவன் நுனிப்பக்கத்திலிருந்து அடிப்பக்கத்தில் வெட்டுகிறதைக்கண்டு வழிப்போக்கனாகவந்த ஒருபிராமணன் தம்பி அப்படி நிற்கவேண்டாம் கிளையோடே நீயும்விழப்போகிறாயென்றான். அதற்கவன் இந்தத்துர்ச்சகுனமானவார்த்தையை எனக்கு நீசொல்லவந்தாயோவென்று அரையிற்சொருகிவைத்திருந்த வெட்டரிவாளால் பிராமணனை எறிந்தான் அவனும் இந்தமுரடன்பட்டறிகெட்டபித்தெட்டிறக்கறி என்றபடியே பட்டறியட்டுமென்றுவிலகித்தப்பிப்போய்விட்டான்மூர்க்கனோவென்றால் முன்னின்றபடி பின்னும் நின்று வெட்டினதினால் அரைவாசிக்கதிகமாகமரம் அறுபட்டுமளமளவென்று முறிந்துவிழத் தானும் அதனோடே விழுந்தான், அம்மம்மா இங்குவந்த அந்தப்பிராமணன்பிரபலமான சாஸ்திரிமகாபுரோகிதன் அவன சொன்னபடிக்கு ஆயிற்றென்

று கடுகவெழுந்து பிராமணனைப் பின்பற்றிக் கூவிக்கொண்டோடினான் சடுதியில் இவன்கிட்டஓடிவருகிறதைப் பிராமணன்கண்டு, இந்தப்புத்தியில்லாத மிருகம் என்னசெய்யுமோவென்று அஞ்சிநின்றான மூர்க்கன் வந்து ஒருகும்பிடுபோட்டு ஐயா, நீர்பிரபலசாஸ்திரி இன்னமொரு ஆரூடம் எனக்குச்சொல்லவேணும். நான்பரமார்த்தகுருவின் சிஷனுக்கும் அவர்மேல்எனக்கு அதிகபட்சமுண்டாயிருக்கின்றது அவருக்குத் தளர்ந்தவயதாயிருக்கிறபடியினாலே அவர்கொஞ்சநாளுக்குள் சாவாரென்று நான்பயந்திருக்கிறேன் இப்பொழுது நீரெனக்காறுதலாக அவருக்குமுடிவுகாலம் எப்பொழுதுவரும், அதற்குமுன்காணப்படும் அடையாமென்னசற்றேதயவுசெய்து சொல்லவேண்டுமென்றான்

பிராமணன் தப்புவித்துக்கொள்ளப் பலபலபோக்குச்சொல்லியும் அவன்கேளாததினாலும், விடாததினாலும் கடைசியிலே ஆசனசீதஞ்சீவன் நாசமென்றான், இவன் அதென்னஐயா அதற்கு அர்த்தஞ்சொல்லவேண்டுமென்று அலட்டிக்கேட்கஉன்குருக்களுக்குஇருப்பிடம்என்றைக்குக் குளிர்ந்து காண்கிறதோ அது அன்றைக்குச் சாவுகிட்டினதென்பதற்கு அடையாளமென்று அறிந்துகொள்ளென்பதாகப் பிராமணன் சொன்னான்.

மூர்க்கனும நமஸ்காரஞ்செய்து விட்டுப்போய்வெட்டினகிளையை மடத்துக் கிழுத்துக்கொண்டு வந்துநடந்தசெய்தியெல்லாம் விவரமாய்ச்சொன்னான குருக்கள் இதைக்கேட்டுமிகவும்விசாரப்பட்டுஜோசியஞ் சொன்ன பிராமணன்மகாசாஸ்திரியல்லவென்று சொல்லக்கூடாது, உனக்கவன்சொன்னபடியே எல்லாம்உடனேபிரத்தியட்சமாயிற்றே ஆதலால எனக்கு அவன்சொல்லியனுப்பின ஜோசியமும் தப்பமாட்டாது ஆசனசீதஞ்சீவன் நாசமென்பது நல்லயுக்தியும் அனுபவமுமான வசனங்காண் இனிஎச்சரிக்கையா யிருக்கவேண்டுமாக்குமொருக்காலு மகால் சுத்திசெய்யக் கூடாது, அதன்மேல் ஆண்டவன் விட்டபடியாகிறதென்றார்,

—]*[—

## ஏழாவது

## குதிரைமேலிருந்து விழுந்தது

சொன்ன எச்சரிக்கையோடே நெடுநாளிருந்து பின்பு சிமாமூலங்களுக்குப் போய்வந்தால் சீஷர்கள் கையிற்பணம் பறியுமொழிய மடத்திலிருந்தால் அதுவராதென்று அதைப்பற்றி ஊருக்கூர்சுற்றித்திரியக் குருவும் சீஷர்களும் புறப்பட்டார்கள்

எங்கும்போய்ச் சுற்றிக்கொண்டு ஒருநாள் அவர்கள் மடத்துக்குத் திரும்பிவருகையில், குருக்கள் அசைந்தசைந்து குதிரைமேல் ஊசலாடிக்கொண்டு வரும்பொழுது கீழே தாங்கின ஒருமரக்கொம்புபட அவர் தலைப்பாகை பின்பக்கத்தில்விழுந்தது அதைச்சீஷர்கள்எடுத்தார்களென் றெண்ணிக்கொண்டு ஒன்றும்பேசாமல் சும்மா வெகுதூரம் அவர் சென்றபின்பு தலைப்பாகைஎங்கே தாருங்களென்று கேட்டார் அது அவ் விழுந்தவிடத்திலேகிடக்குமென்று அவர்கள்சொல்ல, அவர்கோபித்துக் கொண்டு விழுந்ததெல்லாம் எடுக்கத் தேவையில்லையோ நான்சொல்ல வேணுமோவென்றார். அந்தமட்டில்மடையன் அப்படியோ அங்கேஓடிப்போய் விழுந்தபாகையை எடுத்துக்கொண்டுவருகையில் அதற்குமுன் பெய்தமழையில் செழிப்பாய் வளர்ந்திருந்த புல்லைமேய்ந்து அனுதினந் திரி குதிரைகழிந்த இளகலாகியலத்தியை அந்தத்தலைப்பாகையில் ஏந்திக்கொண்டுவந்து பத்தியுடனே குருவின்கையில் ஒப்பித்தான்.

அப்பொழுது அவர் சீசீ என்று வெகுவாய்க்கோபித்தார். அதற்கு எல்லாருங்கூடி இதேதையா விழுகிறதுகள் சகலத்தையும்எடுக்கச்சொல்லி முன்கற்பித்தீரல்லவோ, குருவார்த்தைகடக்கலாகாதென்று கற்பித்தபடிசெய்தால் இப்பொழுதுநீர் ஆயாசப்படுவானேனென்றார்கள் குருவேவென்றால் அப்படியல்லவே எடுக்கத்தகுவதும்எடுக்கத்தகாததுமுண்டு, எதையும்பகுத்தறிந்து நடக்கவேண்டுமென்றார் நாங்கள் அம்மாத்திரத்திற்குத்தக்கமனுஷரல்ல எடுக்கவேண்டியதைமாத்திரம் இன்னதென்பதாக வேறே எழுதித்தர வேண்டுமென்றுசொன்னார்கள் அவரும் எழுதிக்கொடுத்தார்.

அப்புறம் போகையில் ஈரமாயிருந்த வழுக்கு நிலத்தில் களர்ந்து நடையாய்ப் போகிற நொண்டிக்காற் குதிரை சறுக்கி விழுந்தது அத்தருணத்தில் அதன்மேலிருந்த குருவு மதவரி, அருகேயிருந்த குழியில் தலைகீழும் காலமேலுமாக விழுந்து ஒருகால் அந்தப்படியில் மாட்டிக்கொண்டு எழுந்திருக்கக்கூடாமல் கோவென்றலறி அன்பான சீஷர்களே என்னையெடுக்க வாருங்களென்று கூப்பிட்டார் சீஷர் நம்முடைச்சமயமென்று வந்து குருமுன்னே எழுதித்தந்த ஜாபிதாவை எடுத்து ஒருவனை வாசிக்கச் சொன்னார்கள் அதிலே விழுந்த தலைப்பாகை எடுக்கவும், விழுந்த வேஷ்டி உத்தரீயமெடுக்கவும், விழுந்த சட்டை குட்டை உள்ளாடைகளை யெடுக்கவும் வேண்டுமென்று அவன் வாசித்தபடியே ஒவ்வொன்றாய் எல்லாவற்றையும் குருவினிடத்திலிருந்து கழற்றி எடுத்து அப்புறம் வைக்க, குருக்கள் மாத்திரம் நிருவாணமாய் அங்கே கிடந்தார்.

அவரிப்படிக் குழியிற் கிடந்து தம்மையும் எடுக்கச் சொல்லி எவ்வளவு கெஞ்சினாலும், எவ்வளவு சலித்துக்கொண்டாலும், எவ்வளவு கடுஞ்சொற் சொன்னாலும், சீஷர்கள் இதுவும் முன்னமே நாமே ஜாபிதாவில் எழுதாததினாலே நாங்கள் எடுக்கமாட்டோமென்று ஒரே பிடிவாதமாகச் சாதித்தார்கள். மேலு மவர்கள், ஐயா குருசிரோமணியே எடுக்கவில்லையென்று வீணாய் எங்கள்மேல் கோபிக்கிறீரே நாங்கள் உம்மையும் எடுக்கும்படி எழுதினதெங்கே காட்டும் பார்ப்போம் எழுதினபடி செய்வோமே யொழிய, எழுதாததை அப்படிக் கடுகத்திருஷ்டமிடாதைப்போலவரம்புகடந்து ஒருபோதும் செய்யச் சம்மதியோமென்றார்கள் அவரும் இவர்கள் சாதனையைக் கண்டு தப்பும்வழி வேறொன்றுங் காணாமையால் ஓலையும் எழுத்தாணியும் வாங்கிக் கிடந்தவிடத்திலேதானே நான் விழுந்தாலும் எடுக்கக்கடவீர்களென்று கைகால் நடுங்கிக்கொண்டே எழுதிக்கொடுத்தார்,

எழுதினதைக் கண்டு சீஷர்களும் ஒருமிக்கப்போய் அவரை எடுத்தார்கள், அவர் விழுந்த குழியிற் சேறிருந்தபடியால் குரு உடம்பெல்லாம் சேறுபட்டு அழுக்கானதென்று சமீபத்திலிருந்த தண்ணீரிலே குளிப்பா

ட்டினார்கள். பின்புபழையபடியே உடம்பெல்லாமுடுத்துக் குதிரைமே லேற்றி மடத்துககுக்கொண்டுபோய் விட்டார்கள்.

எட்டாவது

குருவைச் சோதித்தது.

குருவானவர் குழியில்விழுந்து எழுந்திருக்கக் கூடாமற்கிடந்தசம யத்தில் சீஷர்கள் மிகவும் அஞ்சிப்பதறினதினும் அந்தப்பிராமணன்மு ன்புசொல்லியிருந்த ஜோசியத்தின்மேல் ஒருவருக்கும்ஞாபகமில்லாமற் போயிற்றுதிரும்பக்குதிரையேறினபிறகு இருப்பிடம் குளிர்ந்ததென்று கண்டு குருநாதரே விசாரப்பட்டார் ஆகிலும் மடத்துக்குப்போய்ச் சே ருமளவும் ஒன்றும்சொல்லாதேபோனார்.

தளர்ந்தவயதாகிய காலத்தில்விழுந்த அதிர்ச்சியினால் அன்றிரவி ல் நித்திரைகொள்ளாமல் துருண்டு புரண்டு கொண்டிருந்து இவர்பிரா மணன்சொன்ன ஜோசியம் அடிக்கடி நினைவிலேதோன்ற வெகுவாய்ச் சஞ்சலப்பட்டார் குதிரையிலிருந்து குழியில்விழுந்ததினால் உடம்பதிர் ந்து இப்படி ஆராட்டப்படுகிறதென்றுநினையாமல், ஆசனங்குளிர்ந்து சாங்காலங் கிட்டினதினாலாக்கும் இதெல்லாம் சம்பவித்ததென்று நிச்ச யம்பண்ணிக்கொண்டார். இந்தநினைவோடு அன்றிராத்திரி முழுதும் த மக்குள்ளேபயந்துபதறி ஒருநிமிஷமும் கண்மூடாமல்பெருமூச்சுவிட்டு மனங்கத்தளித்ததினால் விடியற்காலத்தில்சீஷர்களை அழைப்பித்தார்.

அவர்களும் வந்துபார்க்க அவருடைய கண்குழிவிழுந்தபஞ்சடை ந்ததாகவும், முகமெல்லாம் வற்றிச்சுருங்கி வெளுத்துசாயல்மாறினதாக வும். வாயுதடு உலர்ந்து நாவில் ஈரமில்லாமல்வார்த்தைகுளறவும், பிற மைகொண்டதுபோல உற்று உற்றுப்பார்க்கவும், மேல்சுவாசம் வாங்க வுங்கண்டு மிகவும்பயந்தார்கள்.

அப்பொழுது அவர்பெருமூச்செறிந்துதம்பிமாரே எனக்குமறணா வஸ்தையானது நெருங்கிவிட்டது. இனி ஆத்மாபிரிந்துகடமெழும்பிப்

போகும்போலக் காண்கிறது நீங்கள் எனக்குச் சமாதிக்குழியொன்று வகுத்து அதில் என்னை வைத்துச் சவத்தைச் சேமிக்கிறதுபோலச் சேமஞ்செய்து விடுங்களென்றார் அதைக் கேட்டவுடன் அவர்கள் சரீரம்பதறிக் கேட்க, ஓ ஓ இதென்ன ஆசனசீதம் சிவனாசமென்றகதைமறந்துபோனீர்களோவென்றுசொல்லப்பின்னும் குருவானவர் சொல்வார் நேற்று நான விழுந்தகுழியிலே நீருஞ்சேறும் மிகுதியாயிருந்தபடியினால் எனக்கு இருப்பிடத்தில் ஈரந்தாக்கியது ஆனாலும் அப்போது உடனான ஆயத்தினாலே அது எனக்குத்தோன்றாமே போயிற்று பிறகு அதிகமாய் இருப்பிடம் குளிர்ந்ததும் கண்டேன் பிராமணன் சொன்னசாஸ்திரத்தையும் நினைத்தேன் இராத்திரிமுழுதும் உடம்புவலியும் ஆராட்டமுங்கண்டு சற்றும் நித்திரையில்லாததினால்சாவுகிட்டினதென்று நன்றாய் அறிந்துகொண்டேன் இனிவேறுயோசனைவேண்டுவதில்லை சீக்கிரமாய்ச் சமாதிச்சேமத்துக்கு ஆயத்தம்பண்ணுங்களென்றார்.

அதைக்கேட்டு அவர்களும் அசத்தர்க்குரியதை நினைத்து அஞ்சினார்கள் அஞ்சினாலும் அச்சத்தைவெளியிடாது உள்ளேயடக்கிக்கொண்டு நானாவிதமாகக் குருவின்மனம் தேறும்படி ஆறுதலும் தேறுதலுமான பலபலவார்த்தைகளைச் சொன்னார்கள் என்னசொல்லியும் அவருக்கு மனக்கிலேசம் மாறவில்லையென்று தெரிந்துகொண்டு முன்பு அந்த ஜோசியசகுனசாஸ்திரக்காரனாயிருந்த அசேதனமூர்த்திமகன் அசங்கதனென்பவனால் நங்கள்குருவைப்பிடித்த சனியைநீக்கி அவர்மனதைத் தேறச்செய்யவேண்டுமென்று அவனைப்போயழைத்தார்கள்.

அசங்கதன்நடந்தவரலாறுகளையெல்லாம் விபரமாய்க்கேட்டபிறகு வந்துகுருவைப்பார்த்து உமக்குச் சம்பவித்த குறையென்ன, வந்த நோவென்ன, மனவிசாரமென்ன, மாறாதகிலேசமென்ன, என்குருவே, என்னையனே; என்பிதாவேசொல்லுமென்றுகண்ணீர்சோர, வாயிதழ் துடிக்க முகம்வெயர்க்கக்கேட்டான் அதற்கெல்லாம் ஆசனசீதஞ்சிவனாசமென்கிறவசனமேயொழியவேறொருமறு உத்தரமுங்குருவானவர் சொன்னவரல்ல அப்போதவன் நல்லது, ஆசனசீதம் சிவனாசமென்று பிராமணன் சொன்னானே. நானும் அவன் ஆசனோஷ்ணம் அவனு

க்கு நாசமாகப்பண்ணுகிறேன் அந்தப்பிராயணனை எனக்குக்காட்டுங்கள் அவனுக்கு உலக்கைப்பூசைபண்ணி அவனுடைய தோஷமெல்லாம் அடியோடே தீர்த்துப்போடுகிறேன் அவனைக்காட்டும், சீக்கிரமாய்க்காட்டுமென்றான்,

உலக்கை பூசையென்று ஒரு பூசையுண்டோ ஒருநாளும் அப்படிப்பட்ட பூசையைக்கண்டதுமில்லை கேட்டதுமில்லையே அதாவதெப்படிப்பட்டது சொல்லென்று குருவானவர் கேட்டார் அதற்கு அசங்கதன்மறுமொழி சொல்லத்தொடங்கினான். இவ்வகைப்பூசை உட்சமயம் புறச்சமயங்களிலும் காணக்கிடையாத பூசையாகும் ஞாபகமாய்க்கேட்கக்கடவீர்.

ஓரூரில் ஒருசெட்டியிருந்தான். அவன் அதிக சிவபக்திகாரன் அநுதினமும் பண்டாரங்களுக்கு அன்னம் இடவேண்டுமென்னும் ஆசையினால், அவர்களை எங்கேகண்டாலும் சுவாமி சுவாமி அடியேனுடைய சிறுகுடிசையில்பிச்சைபண்ணும்படி எழுந்தருளவேண்டுமென்று அழைப்பான். அவனுக்குமக்களில்லை கொண்டமனைவியோ வென்றால், நித்தமும் பண்டாரங்களுக்குச் சோறாக்குவதிலும் கறியாக்குவதிலும் பரிமாறுவதிலும் வெகு வருத்தப்படுவதினால்புருஷன்செய்கிறது அவளுக்குப்பொருந்தவில்லை.

ஆயினும் இதைக்குறித்துப் புருஷனுக்கு ஏதாவது வெறுப்பாகச் சொன்னால் அவன்மனப்பொறுக்கமாட்டானென்று அவளறிந்து ஒரு உபாயமெடுத்தாள்,

ஒருநாள் அந்தச்செட்டி தன்கடையிலிருந்து அவ்விடத்திலேவரக்கண்ட பண்டாரத்தை அழைத்து என்வீட்டில் இன்றைக்குப் பிட்சைபண்ண வேணுமையா வென்றான். அவனும் சம்மதிக்கவாலே இப்போது கடையிலேவேலையாயிருக்கிறேன். நீ என்வீட்டுக்குப்போய் என்மனைவியைக்கண்டு இப்படிச்சொல்லி நான்வருமளவும் எங்கும்போகாமல் அங்கேதானே தங்கியிருமென்றான், பண்டாரம் சந்தோஷமாகப்போய்ச் செட்டிசொன்னதை அவனுடைய பெண்டாட்டியோடே சொன்னான்

அதற்கவள் இனிநூறுக்காலும் இங்கே வராதவனாகுமென்று கண்டுகொண்டு ஐயா வெகுநல்லது சீக்கிரம் தானேயிருமென்று வீட்டுத்திண்ணைமேலே பாயைக்கொண்டுவந்து விரித்தாள்.

பிறகு உடனே வீட்டுமுற்றத்தை நன்றாய்ப்பெருக்கி எங்கும் சாணத்தண்ணீர் தெளித்துத் திண்ணைமெழுகித் தன்கைகால்களையும் சுத்திசெய்து ஆசாரத்தோடே நெல்லுகுத்துகிற உலக்கையைக் கையிலெடுத்துக்கொண்டாள். பிறகு அதில்நிறையச்சாம்பலைத் தடவித் தானும் அதைப்பூசிக்கொண்டு வாசலில் உலக்கையைக்கிடத்தி அதற்கு எதிரே மூன்றுமுறைசாஷ்டாங்கமாகவிழுந்து வாயைத்திறந்து உரக்கப்பேசாமல் மந்திரஞ்செபிப்பதுபோல மிணமிணவென்றாள், என்றதன்பின்பு உலக்கையைச் சாம்பல்போகும்படி துடைத்து முன்னே அதுயிருந்த இடத்திலே தானேவைத்தாள். இதெல்லாம் உற்றுற்றுப் பார்த்துக்கொண்டிருந்த பண்டாரம் வெகுவாக ஆச்சரியப்பட்டு இந்நாள்மட்டும் நான் எங்குங்காணாத அதிசயத்தை இப்போது இக்கேகண்டேன் இது என்ன பூசையம்மாவென்றுகேட்டான். அதற்கவள் ஐயா இது எங்கள் குலதெய்வத்தின் விசேஷபூசையாக்கும் இனிமேல் நீரும் நன்றாயறியப் போகிறீரென்று வீட்டுக்குள் நுழைந்துபோகையில் இது உன் தலைமேலே தானே வந்துவிடியுமென்று அமர்ந்தசத்தமாய்த் தன்னிலே தான் சொல்லிக்கொள்வதுபோலச் சொல்லிக்கொண்டுபோனாள்.

அப்படிமெய்யெனச் சொன்னாலும் அது அவனுக்குக்கேள்வியாகவேண்டுமென்று அவள்விரும்பினபடியே அந்தச்சொல்பண்டாரத்தின் காதிலேவிழுந்தது அப்போது அவன் நானதெய்வாதீனமாய்த் தப்பிப்பிழைக்கேனென்று எண்ணிக்கொண்டுசெட்டிச்சிவீட்டில்நுழைந்தவுடனேசதப்படாமல் எழுந்துலகுவாய்த்தப்பிப்போய் விட்டான

அவன்போன அடியிலேசெட்டிவந்து நானனுப்பின பண்டாரம் எங்கேயடியென்றுகேட்க. அவளும் நல்லபண்டாரத்தையல்

லவோ இக்கவிசையனுப்பினீர். அவர் வந்தவுடனே உலக்கையைத் தரச்சொல்லிக்கேட்டார். அதற்கு நானிப்போது செட்டியார் வருவார் அவருக்குத்தரவில்லாமற் கொடுக்கப்படாது சற்றே இருமென்று இப்போ பாயையும் விரித்துப்போட்டேன் பாரும். அவர் கேட்கமாட்டாமல் உடனே கோபித்துக்கொண்டு போய்விட்டாரென்றான். அதுகேட்டுச் செட்டி அடி அப்படியல்லவே பண்டாரங்கள் என்னகேட்டாலுங்கொடுக்கிறது எனக்குச் சம்மதிதானே நீபரியாயாவென்று சொல்லி, உலக்கையைக் கையிலெடுத்துக்கொண்டு பண்டாரத்தைத்தேடி அதைக் கொடுக்கும்படி தெருவிலேபோனான்.

பண்டாரமும் நடக்குங்காரியத்தை முற்றமுடியக் காணும்பொருட்டு ஒருதெருமுடுக்கில் ஒதுங்கியிருந்து, உலக்கையோடே செட்டியார் வருவதைக் கண்டபோது, இதோ இவன் என்தலைமேலே பூசைமுடிக்க வருகிறானேயென்று பயந்து ஓட்டமெடுத்தான் செட்டியும் அதுகண்டு பண்டாரமே பண்டாரமே யென்று அவனைப்பின் தொடர்ந்தோட, அவன் அதிகவிசையாய ஓட ஓடக்கடைசியில் செட்டிக்கு முதிர்ந்தவயதும் பெருத்ததொந்தியுமானதினால் இரைப்பெடுத்து ஓடமாட்டாமற் காலசலித்து அம்மட்டிலே நின்று வீட்டுக்குத் திரும்பிவிட்டான். இதுதான் உலக்கைப்பூசை இந்தப்பூசையை நான் உமக்குச் சொசியஞ்சொன்னேன். அந்தப்பிராமணன் முதுகின்மேலே முடித்தால் ஆசனோஷ்ணமாகி அவனுக்கேயல்லாமல் உமக்கு நாசம் வராதையாவென்றான்.

அதற்குப் பரமார்த்தகுருவும் சிரித்து உன்னை அசங்கதனென்றுசொல்வது நியாயமே. நீ எப்போதும் சரசபரிகாசங்களேசெய்துவருகிறாயென்றார். அவனுங்குருக்கள் சிரித்ததாகக்கண்டு பரிகாசத்தைவிட்டு மீண்டும் சொல்லத்தொடங்கினான் ஐயா பிராமணன்சொன்ன வசனம் உண்மைதான். அதற்கு அர்த்தத்தை நன்றாயாராய்ந்து தெரியவேண்டியது. இருப்பிடத்திற்குளிரமைகண்டால் சாவுக்கடையாளமென்றதுசரியே ஆயினும் வேறுகாரணமில்லாமல் ஆசனம் குளிர்ந்துபோனால்தான் அவன் சொன்னபடியாகும். நீர் தண்ணீரிலேயுஞ்சேற்றிலேயும் விழுந்தீர் அதினாலே இருப்பிடங் குளிர்ந்தது மெத்த அதி

சயமோ அப்போது குளிராமேயிருந்தால் தான் அதிசயமாகும். இப்போது இந்த வீண்கவலையை விட்டுவிடும் இனிமேல் சேற்றில் உளுக்காமலும், தண்ணீரிலே விழாமலும், மற்றொருகாரணமில்லாமலும் ஆசனசீதங்கண்டால் அந்தக்ஷணத்தில் சிவவாசம் கிட்டினதென்று நினைக்கலாம். இதுவொழிய மற்றதெல்லாம் அபத்தமையா வென்றான். அசங்கதன்சொன்னது குருவின்மனதிலே தைத்த நியாயம்போலத் தோன்றிற்று. ஆதலாற் சற்றுத்தேறியெழுந்து சாப்பிடவும் அங்கங்கே திரியவும் தலைப்பட்டார்.

இப்படிச்சிலநாள் மாத்திரம் போனபிறகு ஒருநாள் இராத்திரி நடுச்சாமத்திற்கு மேல் கனமழை ஒருபாட்டமாய்ப் பெய்தது அப்பொழுது குருவின் படுக்கைமேலே அவரிருப்பிடத்திற்குநேரே அடுத்தாற்போல மோட்டு நீரொழுக்குவிழுந்தது அது அதிக தூக்கத்தினால் அவருக்குத் தெரியாமற்போயிற்று. மழையும் மழையொழுக்கும் ஒழிந்தபின்பு குருக்கள் மெய்மறந்த நித்திரையோடே புரண்டு தமது இருப்பிடத்தில ஈரம் உறைக்கத் தூங்கிக்கிடந்தார். அப்படி ஈரக்கின குளிர்மையாலே திடுமென விழித்து மிகவும் இருப்பிடங் குளிர்ந்ததாகக்கண்டு குளிர்மைபிறக்க இப்போது வேறொரு காரணமில்லையே ஆகையால் தமக்கினிச்சாகுங்காலம் வந்ததென்று நிச்சயித்தார்.

வந்தகுளிர்ச்சிக்குச் சீஷர்களும் வேறுமுகாந்தரம் காணாமையால் படுக்கையின்குளிர்மை முதலாய்க் குருவினிருப்பிடச் சேதத்தினால்வந்ததென்று நினைத்து முன்பிராமணன் சொன்ன ஜோசியத்தின்கருத்து நிறைவேறுங்காலம் இதுதானென்று நிச்சயித்தார்கள். குருவைக்காணவந்த அஜாதிமனுஷரும இவர்களோடொத்த புத்திமான்களாகையால் அவர்களும் அவ்வாறேபேச சொன்னதெல்லாம் குரு ஒத்துக்கொண்டு தம்மைக்குறித்துக் கேட்டவர்கள் யாவருக்கும் ஆசனசீதமே சிவன்வாசமென்பதேயொழிய வேறேமறுமொழி உச்சரியாதிருந்தார்.

நாளுக்குநாள் இவர் இவ்விதமாக அடைந்திருந்த மனக்கவலையும் சரீர பலவீனமும் தாங்கமாட்டாமல் ஒருநாள் அதிகசோகமாய்க்கிடந்தார் அப்பொழுது எல்லாரும் காகூவென்று கூச்சலிட்டுத்

தலைமேற் கைவைத்துக்கொண்டு ஐயையோ எங்கள் ஆண்டார்மாண்டாரே மடிந்துபோனீரோ என்று அலறி அழுது சலச்சேமச்சடங்காசாரம்செய்து குளிப்பாட்டத் தொடங்கினார்கள்.

மடத்திலிருந்த பெரியகொட்டிநிறையத் தண்ணீர்விட்டுக் குருவை உள்ளபடி பிரேதமென்றெண்ணி எடுத்து அதிலேபோட்டு அமுக்கிச்சுற்றிப் பத்துப்பேர் கூடியிருந்து ஒருமிக்கத்தேய்த்துக் கழுவினார்கள். கழுவும்போது அவருக்கு மயக்கந்தெளிந்தாலும் தண்ணீருக்குள்ளே மூச்சுவிடமாட்டாலு கையுங்காலையும் அவர்களைப்பிடித்து அமுக்குகிறதினால் சயிக்கினை காண்பிக்கக்கூடாமலும் மூடத்தனத்தினால் அந்தமடையர்கள்கையில் அகப்பட்டுப் பரமார்த்தகுரு அநியாயமாய்ச்செத்தார்.

அதன்பின்பு அனைவரும்பெருங்கூட்டங்கூடி அவரை அலங்கரித்துத் பூந்தேர்கட்டி அதற்குள் அனைமுறித்துவைத்தும், சம்பிரமமாகச் சங்குதாரைமுழங்க எடுத்துக்கொண்டு முன்னும்பின்னும் இருபக்கமும் சிஷர்கள்நெருங்கிவந்து "ஆசனசிதம்சிவன்நாசமே" என்று பாடிக்கொண்டுபோய்ச் சமாதிக்குழிதோண்டி அதில்வைத்து அடக்கஞ்செய்தார்கள்.

பரமார்த்தனென்னும் அவிவேகபூரணகுருகதை

முற்றிற்று.

உ

கடவுள்துணை.

# பொன்னளந்த பெருமான்கதை.

'வறுமைநிலை யாமை,,

திருவிருந்தபுரம் என்னும் பட்டினத்தில் வணிகர்குலதிலகனென்னும ஒரு வைசியன் இருந்தான் இவனுக்கு வினையளந்தபெருமானென்றும், பொன்னளந்த பெருமானென்றும் இரண்டுபுத்திரருளர் இவ்விருவருட் சேட்டபுத்திரனாகிய வினையளந்தபெருமான் அதிதனவானுங்கனவானுமாகியகனகாபிஷேகனென்னும் ஒருவணிகேசனுடையபுத்திரியை மணமுடித்தான், அவ்வாலைப்பெண்ணுக்கு அபிகாயசுந்தரி என்னும்காரணப்பெயருளது தம்பியாகிய பொன்னளந்த பெருமானோ வீரங்காதிர்ப்தியன் என்றுபெயர் பகைத்த ஒருவேளாளன் புத்திரியாகிய பாக்கியசுந்தரி என்பவளை விவகாம்பண்ணியிருந்தான், இவள் பிதாவோ பண்டுதொட்டுப் பரம்பரையான செல்வக்குடும்பத்திற் பிறந்தோனாயினும் பிற்காலத்தில் அதி தரித்திரனானான், பிதாவிகத்தரித்திரனாயிருக்க மகளுக்குப் பாக்கியசுந்தரி என்று பெயரிடப்பட்டது "தடவிப்பிடிக்க மயிரில்லை தம்பிபெயர் சவரிராசன்,, என்றாற்போ லிருந்ததாயினும், அவள்மனசோ என்றுங் கிலேசமற்றுப், பொறுமைமுதலான பலசுகுணங்களாற் பாக்கியம் பெற்றிருந்தது.

இவ்விரு புத்திரரது பிதாவாகிய வணிகர் குலதிலகன் முன்னாளிற் பெரும பாக்கியசாலியா யிருந்தும், கடல்வர்த்தகத்திற்கப்பல் சேதமாகி, அதிபொருள் நஷ்டமடைந்தனாதலில் அவனது பித்திரரிருபேர்க்கும் பிதிரார்ச்சிதம் சூனியமாயிற்று, ஆயினும் வினையளந்த பெருமானுக்குப் பெண்டாட்டி வழிபாற் சீதனம் அதிகமாயிருந்ததினால் அவனதொல்லையற்றுச் சுகவாசியா யிருக்க, அவன் தம்பியோ தாரிஷ்டகாரனாய்த் தரித்திரத்தின்காலுள், மிதிபட்டு மிகு மெலிவடைந்திருந்தான் அவன் மனைவியாகிய பாக்கியசுந்தரி, குணத்தாலும் இனத்தாலும் பெருமையடைந்து கீர்த்திபெற்றிருப்பினும், தரித்திரனுக்குப் பெண்டான காரணத்தால் தட்டழிந்து அல்லற்பேய் வாயிலகப்பட்டு, உலைபவளாயிருந்தாள், இருந்தும், வறுமையிற் செம்மையாய்த் தன்பத்தாவுடன்சு

டி உள்ளன்பாய் வாழ்ந்தாள் "கப்பல்விட்டுக் கெட்டகுடிகொட்டை நூற்றுவாழ்ந்தாற்போல," காலந்தள்ளினாள்.

இவளதுவயிற்றிலே குணரத்தினன், புண்ணியரூபன் கலையகாரன், முதலாய் ஐந்து புத்திரரும், சுகுணரூபி எனனும் ஒரு புத்திரியும் செனித்தார்கள். "கொடிக்குச் சுரைக்காய் கனக்குமா," என்று சமாளித்து, இப்பிள்ளைகளை வருக்கும் அன்னபானாதிகளைச் சம்பாதிப்பதும், அவர்களை ஆசரிப்பதும், பொன்னளந்தபெருமானுக்கு நித்தியசங்கடமும் இலம்பையுமாயிருந்தன. சமுசாரம் துக்கசாகரம் என்பது அவன்காதில் என்றும் ஒலித்துக்கொண்டிருந்து அவன்மனதை வருத்திற்று. இவன் நித்தமுஞ் சிறுமையே யனுபவித்தும், வறுமைக்கடலின் கரைகாண அபேட்சித்து அகோராத்திரம் மனோசஞ்சலனாயிருந்தும், தினந்தம் தெய்வவழிப்பாடும் பக்திவொழுக்கமும் தவறாது, பகவான் என்றுதான் என்மேற் கடாட்சம்வைப்பார், அதிட்டம் என்றுதான் என்முகத்திற் குறுமுறுவல்கொள்ளும் என்ற விசாரத்துடன் "பசித்தார் பொழுதும்போம் பாலுடனே யன்னம்புசித்தார்பொழுதும் போம் போம்," என்ற தேற்றத்தனாய் விறகுவெட்டி வயிறுவளர்த்துவருவான் இவன்போல் விறகுவெட்டுங் காட்டுக்கு அபாக்கிய வாரணியம் என்று பெயர். விறகுதறிக்குந் தொழிலால் இவன் மிகக்கஷ்டமடைந்தும் "வானத்தின்மீதிருந்துமழைக்குப் பயப்படலாமா," என்றதுபோல அதிதேற்றமடைந்து அத்தொழிலில் மிகு சதுரனுமானான். விறகுசுமப்பதற்காய் அவனிடத்துள்ள ஐந்துகழுதைகள் மாத்திரமே அவனுடையதேட்டம், விறகுவெட்டப் போம்போதெல்லாம் அவன் அவற்றை உடன்கொண்டுதிரிந்து, அவற்றின்மேல்விறகேற்றி, மறிபடிபட்டினம்சென்று விறகுவிக்கிரயம் பண்ணினபின்பு, தன்வீட்டுக்கு ஓட்டிப்போய்க்கிடையிலேகட்டி, அவற்றைந்தன் புத்திரபுத்திரிகள்போல் அன்போடுபாதுகாத்துவருவான்.

இவ்வாறு கிலேசத்திற்கிடமான இப் பொன்னளந்த பெருமாளையும், அவன் மனைவியையும், அவர்கள் புத்திர புத்திரிகளையும், வினையளந்த பெருமான்கனவிலும் நனவிலும் நினைப்பதும் கடைக்கணி

ப்பதுமில்லை. 'கெட்டார்க்குறவர் கிளையிலுமில்லை வாழ்ந் தார்க்குற
வா வழியிலுமுண்டு, என்பதை விளையளந்த பெருமானைநன்றாய்ப்ப
ட்டப்பகல்போல் திருஷ்டாந்தப்படுத்தினான். அவன்காரியம் அவ்வாறி
ருக்க, அவன்மனைவி அபிகாயசுந்தரியோ பாக்கியசுந்தரி வீட்டின் அ
டுப்பிலிருந்து புகையெழும்பக்கண்டால், தன்மனசில் எரிவும்வயிற்றில்
குடைச்சலு முண்டாக, மூக்காற் பொறாமைப்புகைகாலுவாள், ஐயோ
அவள் அடுப்பிலிருந்து எழும்பும் புகைவீட்டின் கூரையிலிருந்துஎழு
ம்பாதோ என்பாள்.

இவ்வண்ணம் இவர்கள் மனசிருந்தும், இவர்கள் மனநிலையிருக்கு
ந்தன்மைபொன்னளந்தானுக்குநன்றாய்த்தெரிந்திருந்தும்அவனோ அவ
ற்றைஒருபொருட்டாயெண்ணாது அவர்களைத்தனதுள்ளத்திற்பேணிவ
ருவான், எப்படியாமானாலும்பச்சென்றிருந்தாற் சிறப்புத்தானே, என்
றாற்போல் நம் அண்ணனும் மனைவியும் எங்களைவிசாரித்துக் கடைக்
கணியாதிருந்தாலும் சீராய்ச்சிறப்பாயிருப்பது எமக்கும் பலன்தானே
என்றுசொல்லி, அவர்களைக்கனம்பண்ணி வருவான் இவன்வழக்கப்படி
அந்த அபாக்கியவாரணியம் என்னுங் காட்டுக்குச்சென்று. விறகுவெ
ட்டித்தலைபுந்தோறும் வருந்தச்சுமந்து, அவ்விறகைவிற்கும் ஊதியத்
தாற்றன்னையுஞ்சமுசாரம் பிள்ளைகளையும் தாபரித்து வருநாளிலொருநா
ள், அவன்வழக்கப்பிரகாரம் அவ்வபாக்கியாரணியத் துட்போய்விறகு
வறிப்பதற்குப் பதிலாய் வழிதமொற்றத்தால் முன்னொருபொழுதுங்கா
ணாததும் உட்செல்லாததுமான ஒரு புதுக்காட்டிட்போனான் அக்காட்
டுக்கு யோகாடவி என்னும்பேருளது அவன்தற்செயலாய் அதனுட்செ
ன்று அங்கேசந்தனச்சோலைகளையும்,செந்திருச்சாலைகளையும்கண்டு, வி
ம்மிதங்கொண்டு, அடடா இதுநான முன்னொருபொழுதேனுங் காணா
க்காடாயிற்றே, இதற்குள் என்னென்ன விலைமிருகங்களுளவோ அறி
கிலேன், திரும்புவது உத்தமமோ தரித்து விறகுவறிப்பதுத்தமமோஎ
ன்றுநாழிகைநேரம விசாரயோசனைபண்ணி. வந்ததுவருக, பகவான
அநுக்கிரகமுளதேல் ஏதிடும்பை நம்மை அணுகுமென்று தீர்மானி
த்து, விறகுச்சுமைகளைக்கொண்டுபோமபடியாகத தான்கொண்டு வந்

கபஞ்சவாலேபங்களையும் சூரியகிரணமும் நுழைந்தறியாத ஓருமாதவிமரத்தடியில் நிற்கவிட்டு, அங்குள்ளமலையடிவாரத்தினபக் கஞ்சென்று, அவ்வனம்நிற்கும் பமரங்களைத்தறித்து, விறகுபிளந்துகொண்டிகின்றான்

நிற்கவே, சட்டென அவனது நாசித்துவாரங்களையும், நயனத்துவாரங்களையும். செவித்துவாரங்களையும், மேகம்போறபடர்ந்துகதிகொண்டு பறந்த பூதூளிப்படலங்கள் வந்தடைக்க, அவன்மூச்சுவிடவியலாது ஐயோ. நான எங்கேவந்தகப்பட்டேன். எனக்குமரணவேளை சமீபித்ததோ. என்மனைவிமக்கள் பாடெப்படியாமோவென்று கிலேசித்துத், திடுக்கிட்டு நடுநடுக்கத்துடன், காலுதறக், கையுதற, வேர்வைவேர்க்கப் பின்னாகத் திரும்பிப்பார்த்தான், அப்போது ஒருகூப்பிடுதூரத்திலே ஆகாயமெல்லாம் பூதூளிபறந்து விண்மண்டலம் மண்மண்டலமாய் மறையக்கண்டோர் இவைகளென்ன. ஆகாயகாமிகளோ, பூகாமிகளோ, ஜலகாமிகளோ என்று அயிர்க்க, மல்லர்கதிமயூரகதி, வானரகதி, சசகதி, சரகதி, என்னும்ஐவகைக்கதியோடுவிரைந்துவரும் ஒரு குதிரைககூட்டத்தைக்கண்டான, அக்குதிரைகளின் சிறப்பைவருணித்துச்சொலல ஆயிரநாவுள்ள புலவோர்க்கும் அரிதாம் சிலகுதிரைகளோவெள்ளியகிரணங்களையுடையமுத்துப்போலவும், பானிலாவுமிழும் சந்திரனைபபோலவும். கண்ணைப்பகட்டும் நீலரத்னம்போலவும் நிறங்கொண்டன. வேறுசிலவோ தாமரைத்தாதுபோலவும். பொன்போலவும், காயாம்பூவைப்போலவும், நிறங்கொண்டன. இன்னுஞ்சிலவோசெங்குவளைப் புட்பங்களைப்போலவும், பச்சைக் கிளிகளைப்போலவும் நிறங்கொண்டன. இக்குதிரைகளுக்கோ, அசுவலட்சண நூல்சொல்லுஞ் சந்திரச்சுழிமுதலான குற்றமுற்ற சுழிகளின்றிச், சிரத்திலிரண்டு, நாபியில்நான்கு, மார்பிலிரண்டு என்பன முதலாய்ச்சொல்லும் பத்துச்சுழியுங்குறையாதுள்ளன அவைகளுடைய சத்தங்களோ நரி, பூனை, காகங்கள் முதலானவற்றின் குற்றமுள்ளசத்தம்போலாகாமற்கடல், மேகம் சங்கு, இடபம், பேரிகை, இவற்றின் ஓசைபோன்று அசுவநூல்கூறும்

றப்படி யிருந்தன அவற்றின்தலைமுதற் குளம்பீறும் அங்கலட்ச
ங்களோ ஒன்றிலொன்றதிகமாய் யாவராலும்விரும்பப்படத்தக்கனா

இப்பெயர்ப்பட்ட சிறந்தசிறகள், தகுந்தசுழிகள்வாய்ந்த, வுருவவ
யிடைய அக்குதிரைகளின்மேல் அம்பு, வில்லு, வாள்வேல், கோ
ம், கப்பணம், எறியீட்டி, எறியம்பு, தண்டம், சக்கரம், முதலாய
த்திரங்களை ஏந்தி அனந்தசூரிய அலங்கிருதகோலத்துடன்
டராய்த் தூக்கிய பாய்ச்சலில்வரும்பலமாவுத்த வீரரைக்கண்டான
டவுடன் அவன்கதை மெய்மறந்து, ஐயாவோ அப்பாவோ! அம்மா
வ? சத்துருக்களின் கைப்பட்டேனே என்றிபுலம்பி, மெல்லக்குனிந்
தவழ்ந்துபக்கத்திற்பதுங்கி ஆகாயத்தை அளக்கும்படியும்வானசோ
ளை அளாவும்படியும் வளர்ந்தோங்கிய ஒருசந்தனமரத்தில் ஏ
ண்டான, அம்மரத்தின்கீழ் அதோகதியானதும் பாதாளத்துக்கு
றங்குபடி யென்று சொல்லத் தக்கதுமான ஒரு பெருங்குகையிரு
து.

அக்குகையின் சமீபத்தே மேற்சொல்லப்பட் மாவுத்தரனைவரும்
து, தத்தம்பாடலங்களை விட்டிறங்கி, அக்குகைத்துவாரத்துக்கெதி
திறையேநிற்க, அவர்கள் தளத்துக்குக் கர்த்தனும் பரிவீரபூஷண
என்றுபெயர்பெற்றவனுமாகிய முதல்வன் அக்குகைக் கபாடத்தைச்
ர்ந்து, ஓர் அருஞ்சொற் சொன்னான், அச்சொல்லே அக்கதவின்பந்
த்தைவிடுவிக்கும் மூலமந்திரம் அச்சொல்லை அவன்சொல்லவே க
டந்தற்சணந் தானாய்த்திறவுண்டது திறவுண்ணவே, அவர்கள் அனை
வரும் ஒவ்வொருவராய்த் தான்தான் முதுகிலிட்ட நிதிப்பொதிகளைச்
றற்றிக்குகைக்குட் சேமித்துவைத்துத் திரும்பிவெளியேவர. உத்தண்
கெம்பீரவீரனாகிய அப்பரிவீரபூஷணன் அவர்கள் எல்லோர்க்கும்ப
றில்வந்து கபாடம் அடைக்கப்படும்படியாக மறுபடியும் வேறோர் அ
யபதத்தை உச்சாரணம்பண்ண, அதுமுன்போல இறுக்கமாய்ப்பூட்
ப்பட்டது பரிவீரபூஷணன சொல்லிய இருபதங்களையும், சந்தனமர
திலிருக்கும்விறகுதலையன் மிதுகெட்டியால் அவதானம் பண்ணுக்கே
டான.

அப்பால்மாவுத்தரனைவரும் தங்கள் தங்கள்பைகளை தூக்கித்தோளிலே தொங்கவிட்டுமாட்டிச், சூரியசந்திரர்கள் மலைச்சிகரங்களில இவர்ந்தாலொப்பத் தத்தந்துரகங்களிலேறிப், பஞ்சகலியாணி என்னும் பேர்பெற்ற குதிரைமீதேறுந் தங்கள் தலைவனைத்தலையாய்க்கொண்டு, ஒழுக்கெறும்பு வழிகொண்டு சென்றாற்போல ஒழுங்காய் முன்வந்தவழியே முறையேமீண்டனர், இப்பாற்சந்தனவிருட்சமீது, வேட்டைநாய்க்கும் வேடர்கூட்டத்திற்குந்தப்ப இனம்பிரிந்து தனித்தேறிய குரங்குபோல, ஏறியிருந்தபொன்னளந்தபெருமான் பேச்சுமூச்சற்று ஆச்சரியப்பட்டு மரம்விட்டிறங்கிக், குகையின் துவாரத்தண்டைபோய், "மந்திரஞ்சொன்னால்மாங்காய்விழுமா,, என்றுநினைந்தும் ஆனபடியாகட்டும் நமக்குவரும் நட்டமேதென்றுதேறிப்பரிவீரபூஷணன்முன்சொன்னமூலவிராக்கை உச்சரித்தான்.

உடனே அவனுக்கும் ஆச்சரிய முண்டாகும்படியாகக் கதவுதிறவுண்டது, கண்களை உள்ளேசெலுத்தினான், கண்ணொளிமழுங்கத்தக்கதாகக் குகையிலிருந்து பளீரிட்டு ஒளியானது மின்னிற்று சென்மக்குருடனுக்குக்கண் அகப்பட்டாற்போல், நாங்கள் எல்லாம் உனக்கு ஏவல்செய்யவருகிறோம், நீவந்து எங்களை ஏவல்கொள்ளென்று அங்குள்ளயாவும் தம்வாயைத்திறந்து பேசினாற்போற் பிரபைவீசின, மாணிக்கம் முத்து, மரகதம், நீலம், கோமேதகம், புஷ்பராகம், வைடூரியம், வைரம், பவளம். என்னும்நவரத்தினங்களும், ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்பூனதம் என்னும் நால்வகைபொன்களும், சங்கநிதி பதுமநிதி என்னும் இருவகைநிதிகளும, சரபபணி, இரத்தினவடம், சூடகம், பாடகம், தண்டை, சதங்கை, சந்திராரம், மோகனமாலை எனனும்பல அணிகளும், பட்டு, கம்பளம்முதலான பலவஸ்திர விகற்பங்களும், இன்னும் சொற்கடங்காத் திரவியங்களும், நெல்லிபபழம் உதிர்ந்துதரையிற் பரவுண்டாபோலக் குகைக்களத்திற் பரவுண்டிருந்தன இவற்றைக்கண்டவுடன் பொன்னளந்தபெருமான், ஓகோ! இன்றைக்கா சருவேசுர

ம்மேற்கடாட்சம் வைத்தார், ஆகா; "சீரியர்கெட்டாலுஞ்சீரியர்சீரி
, தானே; "கெட்டாலுஞ்செட்டிதானகிழிந்தாலும் பட்டுத்தானே,
ா! "சத்திரத்திற்சாப்பாட்டுக்குசாத்தையங்கார் உத்தரவுவேண்டு
, என்ற உலகப்பேச்சுப்போலஙமதுகையிற்பகவான்காட்டியதிரவிய
தமாட்டிக்கொண்டுபோக இனிக்கேட்டுக்கேள்வி என்ன; "பலதிட்
கொருமுழுக்கெனறுற்போற்,,பலவருஷவறுமைக்குஒருநாட்செல்வ
ன்று உளத்தோடுசொல்லித் தருக்குமென்னுந்தாளதுக்கு ஆனந்
கூத்தடினான், தன்கழுதைகள்மேற்போட்டுவந்தவிறகுபொதிப்பைக
ப்போய் எடுத்துவந்தான். குகைக்குட்சென்று, அட்டணைக்காலிலி
தும், குந்தியிருந்தும், முழந்தாணமடக்கியிருந்தும், கைநீட்டி வா
ரித் தனக்குப்பங்கள்சுமக்கத்தக்க அத்தனைபாரமாய்க், கைகுளிரக்
ாகுளிர மனக்குளிர அள்ளி அள்ளி அப்பைகளிலிட்டான் ஈற்றிற்
களின் வாயிற்கொஞ்சஞ் சிராய்த்தூள்களைப் தூவிப் பொத்தியபின்
ழுதைகளின்மேலேற்றினான் மறுபடியும் பரிவீரபூஷணன் முன்சொல்ல
ட்டவார்த்தையைக் கூறிக்கதவைப் பூட்டினான்.

அப்புறம் அவன் ஆனந்தபரவசமாகி, ஆ இதேகிற தெய்வம் என்
இடும் என்பதை இன்றுகண்டேன், பெரியவர் சிறியவராவர் சிறி
ர் பெரியராவர், முறைமுறை நிகழுமிது, என்பதை என்னிற்கண்
ன் என்று மகிழ்ந்துமகிழ்ந்து சங்கீதகானம்பாடி எங்காளும்போலஉ
னகடைவீதி செல்லாது மெதுவாய்த்தன்கழுதைகளை நடத்தி, வ
லேகண்டோர் சென்றோருடன் நின்று கதையாமலும் ஏதும் வினு
லும் அந்திவேளையிற் பட்டினம் புகுந்து, இனியென்ன, எங்குடி
ர்ந்தது என்னும் எண்ணத்தால் மனம்பூரித்து, வீட்டுக்குச்சொன்
ன்.

இவ்வாறு திருவிருந்தபுரம் வந்துசேர்ந்த பொன்னளந்தபெருமா
ஆனந்தக்களிப்போடு சங்கீதம்பாடித் தன் இல்லஞ்சென்றுயித
ரயும் உலகபாக்கியம் என்பதின்மணமேனும் வீசப்பெறுதபாக்கிய
தரியைக் கூப்பிட்டு, அவளைக்கொஞ்சி முத்தமிட்டு, அவளுக்கு

ஆசீர் பாகஞ்சொல்லி, அம்மணீ, இந்நாட்டொடங்கிச்சருவ சீவ தயாபரன் நம்மேல்தமது திருக்கண்ணொளி செலுத்தி, நம்மைக் கடாட்சிக்க நினைத்தனர். “சந்திரன் சண்டாளன் வீட்டிலும் பிரகாசிக்கிறான்,, என்பார்; அதுபோலவே ஏழையேம்வீட்டிலுங் கடவுள்தமது அருளைப்பாலிக்கத்தொடங்கினர் அதற்குத்திருட்டாந்திரம்உண்டு “அப்பமென்றால் பிட்டுக்காட்டவேண்டுமா,, என்று குறிப்பிற்கூறி. மாலைநேரமாயிற்று, தீபத்தையேற்று, தோட்டத்துட்போய் வருவேனென்றுசொல்லிக். கழுதைகளைக்கிடைகளிற்பிணைத்துப், பொதிச்சரக்குகளை ஒவ்வொன்றாய்த்தூக்கி முற்றத்துக்குச் சுமந்துபோய் வாய்ப்பொக்கை அவிழ்த்து மேலேதூவப்பட்டிருந்த விறகுகளையெடுத்து அடுக்களைப்புறத்தில்வீசி, அப்புறம் பொதிகளைத்தூக்கிக் கொட்டிவிட்டான் இரத்தினங்கள்பொதிந்து வைக்கப்பட்ட செப்புப்பாத்திரங்கள் ஒன்றுடனொன்று முட்டுவதினாலும் ஆபரணங்களாகிபசேமிக்கப்பட்டவெண்கலபாத்திரங்கள் ஒன்றுடனொன்று தட்டுவதினாலும், முற்றத்திலே வெண்கலக்கோட்டையில் யானைவந்தாலொத்துக்கலீர்கலீர் எனச்சத்தங்கேட்டது.

கேட்கவே பாக்கியசுந்தரி, ஓகோ மணிச்சத்தங் கேட்டாற்போலவும் வெண்கலப்பாளங்கள் ஒலித்தாற்போலவும் நம்முற்றத்திற்கேட்ட ஒலிபாது காரியம் ஏதோ இருக்கத்தான்வேண்டும், அகங்கைபுறங்கையாய் மாறினாற்போலவும் சகடக்கால் அச்சிற்சுழன்றாற்போலவும்; நம் வறுமைமாறக் காலம் வந்ததுகொலொன்று, ஐயமுஞ் சந்தோஷமாய்க்கையிற்றீபத்தோடு முற்றத்துக்கு ஓடினள் ஓடவே அவன்கையிலிருந்த விளக்கொளி, முற்றத்திலிருக்கும் இரத்தினக்குவைகள் ஆபரணக்குவியல்கள் இவற்றிலிருந்து குபீரிட்டெப் பாயும் அனந்தசூரியகிரணங்களொத்த ஒளியால் மழுங்கிற்று இருட்டுமுற்றஞ் சூரியவுலகோடொத்தது இராவென்பதின்றி என்றும் செகசோதியாய் ஒளிகொண்டிருக்கும் தேவலோகமு மொத்தது பார்த்தாள் பாக்கியசுந்தரி பார்க்கப்பார்க்க ஆனந்தம் மீறச், சந்தோஷக்கண்ணீர் சொரிந்து, இருகரங்களையும் நீட்டிப்பத்தாவைக்கட்டி முத்தமிட்டாள் மாம்பழச் சுவையோ,, பலாப்பழரசமோ கதலிப்பழக்கனியோ, இம்மூப்ப முச்சுவையில் அவளிட்ட முத்தச் சுவைக்கொப்பதுஎதுவோ, வருணித்துரைக்கபுலவரே வேண்டும.

இவ்வாறு முக்தமிட்ட பாக்கியசுந்தரி, தன்பத்தா பொன்னளந்த பெருமானைப்பார்த்து, என்பிராணநேசரே; தேவரீர், அடியேனது வினவிற்கு உத்தரஞ்சொல்லும், நம் உள்வீட்டு முத்தத்திற் கிடப்பனவை யாவை; சோமசூரியர் ஆகாயமார்க்கமாய்விரைந்து தம்சுற்றோட்டம்பண்ணுகையிற், களைத்து நிலத்திற் சரிந்துவிழுந்தனரோ; அல்லது நம் முற்றத்துள் அக்கினிபிழம்புகள்முளைத் தெழுந்தனவா, வதென்றாற் மீயன்பகவானது டூட்ச வீட்சணமுள்ளவும்நமக்மேதுங்குறைபண்ணுவ து" ஆங்கால மெய்வருந்தவேண்டாம்,, என்று நீதிசாஸ்திர சுலோகங்கூறி, ஆனந்தபாஷ்யமானது பாதாந்தம்வரைக்கும் தாரைதாரையாய் வழிபத்திரும்பவும் தன்பத்தாவை முக்தமிட்டு அயனைகன்னத்தை நனைத்து மேலினிச்செய்வதென்னவென்றனள்,

பெருமான்பிரதியுத்தரமாக, என் அன்பிற்குரியாய், நாமினி இவற்றைப் பிறரொருவரு மறியாது அந்தரங்க ஸ்தானத்திற்சேமித்துவைப்பதே காரியம், ஆதலால் இம்முற்றத்துள் ஒருபெருங்கிடங்கு வெட்டி அதற்குள் இவற்றைப்பொதிந்துவைக்கப்போகிறேன், எடுத்துவா மண்வெட்டியுடன் இருப்புப்பாரை என்றான். பாக்கியசுந்தரிபிரதிவசனமாய் ஐயா, "ஆழியிலேபோட்டாலும் அளவறிந்தே போடவேண்டும்,, என் அக்காள் அதிகாரநாயகம்வீட்டுக்குப்போய் ஒருநாழி வாங்கி அரைக்கால்நாழி நேரத்தில் திரும்புகிறேன்யென அவள்கணவன் அப்படியன்று, பெண்புத்தியாற் பேரழிவுண்டாம், "வடையைத் தின்னச்சொன்னால் தொளையை எண்ணிப்பார்த்தவன்,, கணக்காய்க் கிடங்குவெட்டமண்வெட்டிகொண்டுவா என்றால் அளந்துகொட்டநாழிவேணுமென்கிறையா நன்றாயிருக்கிறது நாழிவேண்டாம், வேறே அந்தம் இந்தம்வேண்டாம் என அவள் என் அன்பே, சாம்பலைத்தின்று வெண்ணெய் பூசுவார் என்றபழமொழியுண்டு ஆனால்நாம்வெண்ணெய்தின்று சாம்பல்பூசவேண்டுமோ, ஆண்டவன் நமக்குக்கொடுத்த பாக்கியத்தின் அளவை நீரறியவேண்டாமா. அளவுக்கு அழிவில்லை, சற்றேகையாய்ப் பொறுத்திருப்பீரும் என்று புத்திசொல்லி, அவன் பேச்சிற்சற்று மிசையாமற் பிடிவாதக்காரியாய் நொடிக்குள்மின்மறைந்தாற் போலமறைந்து விளையாள்ந்தபெருமான்வீட்டுக்குப்போய் ஏடி அக்காள், அக்காள், உங்கள் நாழியைக் கொஞ்சநாழிகைக்கு இரவலாய்க் கொடுக்கவேண்டுமென்றாள்.

அப்போது அதிசாயநாயகம் ஏனெடி காங்கள், இந்த இராத்திரியில் எல்லாரும் சயனிக்கும்நேரத்தில் உனக்கு நாழிநகு அகத்தியமென்ன கூறென்ன, இவள் உத்தரமாய்க்கொஞ்சக்கேப்பையளக்கவென்றாள் கேப்பையென்றாலும் அவளுக்கு மன்னாதாங்காத்திறம் பனைப்பிரமாணம்பெருமூச்சொன்றெறிந்து, சிறுநாழியோ வேண்டியதென, எந்தநாழியேனும் ஒருநாழி கைக்கு அகப்பட்டதைக்கொடு, நாழிகைக்குக் கிட்டாவிட்டால்மரக்காலைக்கொடு என்ன, அந்தவஞ்ச நெஞ்சிக்கு ஐயம்பிறந்ததினால் அவள் அட்டிலுட்சென்று கொஞ்சம் பலாய்பால் எடுத்து நாழியின் பின்புறத்திலே தடவிப்பத்திரம் பத்திரம்சீக்கிரம் அனுப்பினையென்று சொல்லிக்கொடுக்க, அவள்வாங்கி மின்போலப் பறந்து கணவன் முன்போய்நின்று முத்துவேறு வைரம்வேறு பிறரத்தினங்கள்வேறு பொன்னகைவேறு வெள்ளிநகைவேறு கனகைவேறாய்ச் சாதிசாதியாய்த் தரம் தரமாய்க் கூறுசெய்து அளந்து கடாரங்களிலும் குடங்களிலும் பானைகளிலும் சாடிகளிலும் சட்டிகளிலும் முட்டிகளிலும் இட்டுக்கிடங்குக்குள்வைத்து ரத்தினக் கம்பளங்களாதி வஸ்திரங்களை வகுத்து வகுத்து வீட்டிறப்புகளிலும் பிறவிடங்களிலுஞ் சொருகியும் மறைத்தும் வைத்துச் சீக்கிரந்திரும்பி நாழியைக்கொடுத்து வந்தனமுஞ்சொல்லி, வீட்டுக்குச்சென்று கணபத்தாவுக்கு என்றையிலும்பதின்மடங்கான பரிவோடு உள்ளகத்துள் வள்ளிசாய் அன்னங்கறி பரிமாறி அப்பால் தன்மக்களுக்குக்கொடுத்துத் தானும்பாசியாறிய பாக்கியசுந்தரியாய்த் தகனசயனத்துக்போனாள் அன்றைக்கே தரித்திரதேவி இனிநான் இவ்வீட்டிற் குடியிரேன் என்று சபதமொட்டிப் பிரயாணம்பண்ணினாள்,

இதனால் வறுமை நில்லாதென்பதுணர்க.

கடவுள் துணை

# காளிதாசப்புலவர் சரித்திரம்.



திருமகளும் நாமகளும் பண்டுதொட்டுமகிழ்ந்து தடைதுறைவிடமாகக் கொள்ளப்பெற்றுள்ள இப்பரத கண்டத்திலே, மகிஷவென்னும் நாட்டிலே மகிஷபுரியிலே மாகேந்திரனென்னும் அரசனொருவன் செங்கோலோச்சி வருவானாயினன் அவனும் அவன்தேவி அன்னபூரணி

பெண்பவளு மியற்றிய அருந்தவப்பயனாக அழகெலாந் திரண்டொருவடிவெடுத்தாலொப்ப ஒரு புத்திரி உற்பவமாயினள் அப்புத்திரியை அவன் கண்மணிபோலப் பரிபாலித்து ஏற்றகாலத்திலே கல்விகேள்விகளிலும் படைக்கலப்பயிற்சியிலும் அவளுக்கிணை உலகத்தில் மற்றெவருமில்லை என்று யாவரும்பாராட்டும் வண்ணம் வல்லளாக்கி வித்தியா குமரோசமென நாமகரணஞ்செய்து அவளை அவளுடன் கல்விகேள்வி முதலியவற்றில் வாதாடி வெல்லுவோர்க்கே மணமுடித்துக் கொடுப்பேன் என்று நாடெங்கும் முரசறைவித்தான் முரசொலி கேட்ட கவிவாணரும் அரசரும் காமுகரும் எண்ணிறந்தவரிசையோர் தத்தம் இஷ்ட தேவதைகளை வழிபட்டு நாட்பார்த்து நிமித்தம் ஓர்ந்து தத்தம்பதிகளை விடுத்துப் புறப்பட்டு மகிஷபுரியையடைந்து தனித்தனியே அவளுடைய சமுகஞ்சென்று வாதாடி வெள்கி ஒருவர்பின் ஒருவராய் அகல்வாரும் அவளுடைய கட்டழகைக் கண்டுருகி அவள்முகதரிசனமே பெரும்போகமென வேணவாவுற்று அங்கிருந்தே குடிகோலுவாருமாயினர் இப்படி நாட்பலகழிந்த பின்னர் அரசனுங்கவலைமிக்கவனாகி "இனி நம்புத்திரியை மணம்புரிவிக்காது வைத்திருப்பது நன்றன்று அவளுமோ பன்னிராட்டைப் பருவத்தளாயினள் எண்ணில்லாத அரசரும் கவிவாணரும் வந்து வாதாடி அவளுக்குத் தோற்று வெள்கி அகன்றார்கள் இனி அவளை வாதுசெய்யத்தக்க வல்லவர் உலகத்தில் யாவர் இருக்கின்றார் இதற்கு யாது கூறுகின்றாய் மந்திரீ," என்று தனது முதல் மந்திரியாகிய ஆத்மரக்ஷகன் என்னும் மந்திரியுடன் சூழ்ச்சிசெய்வானாயினன். இதற்கிடையில், முன்னர் அவளுடன் வாதுஞ்செய்து தோற்றோடிப்போன கவிவாணர் சிலர் ஒருங்குகூடி, "நம்மையும் இன்னும் எண்ணில்லாத அரசர் கவிவாணர் முதலியோரையும் அவமானஞ்செய்து புறந்தள்ளிவிட்ட இராஜகுமாரியை வஞ்சச்சூதினால் அவமானஞ்செய்யோமாகில் நாம் ஆண்மக்களாய்ப் பிறந்தும் பயனில்லாதவரே யாவோம், ஆதலால் அங்ஙனஞ்செய்ய ஓர் உபாயம் எண்ணுவோமாக;" என்று ஒருங்கே சூழ்ச்சிசெய்து, அதற்குக் கருவியாக ஒருவனைத் தேடிப் புறப்பட்டார்கள் அங்ஙனம் புறப்பட்டுப் போகையில், அரிகாபுரத்திலேயுள்ள அநந்தநாராயண ஐயன் என்பானுக்குப் புத்திரனும், குல மருமத்துக்கேற்ற வேதாத்தியயனத்துக்கு யோக்கியனல்லனென்று அவன்மௌட்டிக காரணமாக நீக்கப்பட்டு அவ்வூராருடைய ஆடுகளை மேய்த்துவரும்படி நியோகிக்கப்பட்டவனுமா

ஷிப அரிகர ஐயன் என்பவன் தனது மந்தைக்கு உணவின்பொருட்டு ஒரு மரக்கொம்பின்மேலேறி நுனியிலிருந்து அதன் அடியை வெட்டிக்கொண்டிருக்கக் கண்டு மகிழ்ந்து இம்மூடதிலகனே நமது கருத்தைநிறைவேற்றற்குத் தகுந்த கருவியாவான் என்றுமதித்து அவனை அணுகி அழைத்துக்கொண்டு தம்முள் ஒருவருடைய கிருகத்தைச்சேர்ந்து அங்கே அவனை உயர்ந்த பரிமளத் தயிலமிட்டு நீராட்டி, நல்லபோசனமருத்தி, களபகஸ்தூரிகளை அணிவித்து ஆடையாபரணாலங்கிருதனாக்கியார் என்ன கேட்டினும் என்னசெய்யினும் சமிக்கைகளாலன்றி வாயைத்திறந்து யாதும்சொல்லாதிருக்கும்படி உடன்படுத்தி ஒருசிவிகையில் ஏற்றித்தாமே சுமந்துகொண்டு இராஜசமுகஞ்சேர்ந்தார்கள் இதைக்கண்ட வாயிலாளர் அரசனிடம் சென்று வித்துவான்களது வரவைத்தெரிவித்தாலும் அரசன்மிக்க மகிழ்ச்சியுடையனாகிச்சபாமண்டபம்புகுந்து வித்துவான்கள் எல்லோரையும் உபசரித்து ஆசனத்திருத்தி தனது குமாருக்குச்செய்தி போக்கினன் அவளும் காலந்தாழ்க்காது எழுந்து ஆடையாபரணாலங்கிருதையாகிச்சபாமண்டபம்புகுந்து தந்தையையும் ஏனைய பெரியோரையும் வணங்கி நின்றாள் வணங்கிநின்றபுத்திரியை அரசன்பார்த்து எனக்கமைந்த புத்திரீ இங்கே இவ்வித்துவ குமாரத்தினமத்தின் மத்தியிலேவீற்றிருக்குமிப்புருஷோத்தமர் கலாசமுத்திரமெனத்தக்கவரும் இவ்வித்துவ கணத்திற்கெல்லாம் குருவுமாயுள்ளவராயு, அவர் இன்றைக்குன்னுடன் வாதாடி உன்னை வென்று மணமுடிக்கக் கருதிவந்திருக்கின்றனர் இருவருமுணர்த்துமாறே நானுன்னை வருவித்தேன்,, என்றுரைத்தான் அதுகேட்டவித்தியாகுரோசம் என்னுமங்கை குறுமுறுவலசெய்து அவர் மௌனி என்பதைமுன்னமேயுணர்ந்து கொண்டவளாகையால அவருடன் சமிக்கைகளால்வாதாடநிச்சயித்து பிரபஞ்சகாரணம் ஒன்றே எனனுங் குறிப்புத்தோன்ற ஒருவிரலைக் காட்டினாள் அதுகண்ட ஐயன் யாதுகருதியோ இருவிரலைக்காட்டினான் இதன்பொருளைப்பக்கத்திலிருந்த வித்துவான்கள் எல்லோரும் விரித்துரைத்து மேற்கோள்காட்டி உலக்காரணம் இரண்டென்று சுவபக்ஷஸ்தாபனமும்பரபக்ஷகண்டனமும் செய்தார்கள் அதற்கு அம்மங்கையும் சம்மதித்தவளாய் சங்கேதப்படி அவனுக்குமாலையிட உடன்பட்டாள் தனது புத்திரியின் இங்கிதத்தைக்கண்ட அரசன் ஆனந்தாப்தியில் மூழ்கியவனாய் கல்யாணோற்சவத்திற்குவேண்டுவன வெல்லாஞ் செய்வித்து அதிசம்பிரமமாக இருவருக்கும் மணம்முற்றுவித்தான்.

அன்றிரவு, இந்திரசயன மண்டபமெனத்தகும் அலங்காரமான பள்ளியறைக்குமணமகன் எழுந்துபோய் அங்கேயுள்ளவிநோதங்களையெல்லாங்கண்டுமருள்கொண்டுபிரமித்துச்சிறிதுநேரம்யாது செய்வதென்றுஆலோசித்துநின்றனன். உடனேதோழிகள் மணமகனுக்கென்று நவீனமாக அமைக்கப்பட்டுள்ள அம்சதூளிகாமஞ்சத்தைச்சுட்டிக்காட்டி அதிற்போய்ச்சயனிக்குமாறுசொற்றனர். அவற்றேமணமகனும் அம்மஞ்சத்திலேறிப்படுத்து அவ்வகைச்சுகமானபடுக்கையை எக்காலினும் கண்டுகேட்டறியாதவனாதலாற்சடிதியில்பிரஞ்ஞையற்றான்போன்று ஆழ்ந்தநித்திரைபோயினன். இதற்கிடையில் அங்கே அந்தப்புரத்திலிருந்த மணமகள் ஆடையாபரணலங்கிருதையாய்ச்சந்தனபுஷ்பாதிகளணிந்து இரத்தினங்கள் இழைத்ததங்கத்தட்டுகளில் அதிமாதுரியமானசிற்றுண்டிகளைத்தாதிகளேந்திக்கொண்டருகிற்சூழ்ந்துசெல்லப் பள்ளியறை போயினள். அங்கே கணவன் துயில் செய்வதைக் கண்டு, வீணையையெடுத்து மெல்ல மீட்டினள். அதற்கு அவன்விழிக்காததுகண்டு மீண்டும் சிறிதுநேரம சுதத்தோடு பொறித்தாள். அதற்குமவன் எழுந்திராமையைக்கண்டு வீணையோடு பொருந்த இனியகீதங்களைப்பாடினள்; அதனாலும் அவன் நித்திரைதெளிந்திலன. அப்பால் பாடலையொழித்துவிட்டு, தாம்பூலம் தரித்துத்தம்பலத்தை அவனுடைய வாயில்உமிழ்ந்தாள். அதனால் நித்திரை சற்றேதெளிந்தவனாகி, தான் மணமகனாயிருப்பதைமறந்து, தான் ஆட்டுக்கூட்டத்தருகில் படுத்திருக்கும்வழக்கத்தையெண்ணி ஆடுகளொன்றே தனதுவாயில மலங்கழிக்கின்றதெனவெண்ணினைந்து, தா தா மூதேவி ஆடே எனப்பிதற்றி விழித்தான்,

இம்மொழிகள் புண்ணில்வேல் நுழைந்தாலொப்ப இராஜகுமாரியினது செவியிற் புகுதலும், இராஜகுமாரி மிகுந்தசினங்கொண்டு அதனுக்கென ஒருவாளாயுதத்தைக் கைபிடித்துக்கொண்டு, அவனை அதட்டி எழுப்பி, நீ யாரடா. உன்வரலாறென்ன. உள்ளபடிசொல், அன்றேல் இக்கட்கத்தால் உன்னை துண்டிப்பேன், எனலும், ஏழையாகிய அவ்வையன், நடுநடுங்கித் தைரியங்குன்றி. உடல்பொன்றி, நாக்குழறி. சாஷ்டாங்கமாக அவள்பாதங்களில் வீழ்ந்து நமஸ்கரித்து எழுந்து அஞ்சலிஹஸ்தனாய்நின்று, தாயே, நான் அரிகர் பிரத்திலேயுள்ள அநந்தநாராயணஐயனுக்குப் புத்திரன். என்பெயர் அரிகரன. தந்தைமுதலியோர் எனது மௌடிக காரணமாக என்னை ஆடுமேய்க்கும் தொழிற்கே யோக்கியன் என்று அத்தொழிற்கு உரியவனாக்கினர். அதுவே என்

தொழில், இன்றுகாலையில் நான் ஆடுமேய்த்துக்கொண்டிருக்கையில் என்னை வித்துவான்கள் சிலர்வந்து பிடித்துக்கொண்டுபோய் அலங்கரித்து யார் என்ன கேட்கினும் வாயினாலயாதும்பேசாதிருக்குமாறு உடன்படித்திறநசிவிகையிலேற்றி, இங்கே கொண்டுவந்தார்கள் அதன்பின்னர் நிகழ்ந்தவைகளை நீயேயறிவையன்றோ, இதுவே என்வரலாறு; என்னைக்கொல்வது தருமமன்று, நான் யாதுமறியேன், என்றுகூறினான.

இவைகளைக்கேட்ட அரசகுமாரி குஞ்சிரிப்புக் கொண்டுவாளைத் தூரத்தே வீசிவிட்டு, அவனை அஞ்சாதிரு என்றுதேற்றி அவன்தெளிந்தபின்னர், அவனைப்பார்த்து, ஓபிராமணா இவ்வூருக்கு மேற்றிசையிலே புவனேஸ்வரி ஆலயமொன் றிருக்கின்றது அங்கே நீ இப்போது தானே சென்று கோயிலினுள்நுழைந்து கபாடபந்தனம் பண்ணிக கொள்ளு, சிறிது நேரத்தின்மேல் புவனேஸ்வரிவந்து கதவைத்தட்டுவாள் நீதிறப்பதில்லையென்றுகூறு காரணம் யாதென்பாள் பீஜாக்ஷிரத்தை நினைக்கச் சூலத்தால் இக்கதவின் புழைவழியாக என்னாவில்பொறிக்கவும் என்னை என்றுங்காக்கவும் உடன்படினையேல்திறப்பேனென்று கூறு ஆகற்கவள் உடன்பட்டு அவ்வாறுமுடிப்பாள் அதன்மேல், கதவைத்திற. என்று கூறினாள் அவனும் அதுகேட்டுமகிழ்ந்து. குறிக்கப்பட்டவழியேசென்றுகோயிலிலே நுழைந்துபுவனேஸ்வரியினது அருள் பெற்றுக்கொண்டு உடனேதிரும்பி அந்தப்புரம்வந்து பள்ளியறைக்கதவிற்றட்டி இராஜகுமாரியை அழைத்தான் அரசகுமாரி விழித்து, நாதனைக் குரலொலிகேட்கப்படுகின்றதே இதேது என்னும் கருத்துள,

வாக்விசேஷம் கிம்படதி.

என்னும்வாக்கியத்தைச் சொல்லிக்கொண்டு கதவைத்திறந்தாள் மேககுலமெழுந்து கரிப்பஞ்சாற்றுக் கடலினிடமாகச்சென்றுபடிந்து கருப்பஞ்சாற்றை ஆரமுகந்து மீண்டுவந்துமுழங்கின்றதுபோன்றுநின்றஐயன் செவியில் அச்சொற்கள் படிதலும், ஐயன் புளகங்கொண்டு. கருப்பஞ்சாற்றுமழை விடாதுபொழிந்தாலொப்பப் பொழிந்த அத்தியற்புதகவி மழையால் இரகுவம்சம், மேகசந்தேசம் குமாரசம்பவமென்னும் நூல்களை கப ஜலாகாரங்கள் மூன்றுமடியுமுன் நிறைந்துதேங்கின இவைகளைக்கண்ட இராசகுமாரி சொல்லற்கரியமகிழ்ச்சிகூர்ந்தவளாகியும், அவன் தன்னைத் தாயே என்றுகூவிக்காலில்விழுந்து பணிந்தகாரணத்தால் தனை அவனை நாயகனாகக் கொண்டு சுகிக்கக்

கூடாமையை நினைந்துவியசனமுற்று அவனைப்பார்த்து உன்னைநான நாயகனாகவரித்தேன் அப்பால் நினைவாயினின்றும் எழுந்ததுஷ்டவாசககாரணமாக உன்னைக் கொல்லுதற்கு முயன்றேன், நீஉண்மைக்கூறித்தாயே என் முறைகொண்டு விளித்து எனபாதகத்தில்வீழ்ந்தனை அதனால் உன்னைச சேருவதுதகுதியன்று ஆகையால இனிமுதலாக நீகாளிதாசனெனைப் பெயர்புனைந்து எங்குமவிளங்கி இராசபூச்சியதையுடையனாகவாழ்க,என்று ஆசிகூறி அவனை அனுப்பினள் அவன்போனபின்னர் அரசகுமாரி புவனேஸ்வரியினது ஆலயத்தையடைந்து அத்தேவியைவணங்கிஅவளருளால் காசிவடிவமபெற்றுப்போஜராஜனுடையநகரஞ்சென்று, காளிதாசனைச்சேர்ந்து சுகிக்கும் கிருத்துடையளாகி அங்கே வாசம்பண்ணுவாளாயினள்

இங்ஙனமாக, அங்கே இவளிடத்தி லனுமதிபெற்றுப்போன காளிதாசன்சிலகாலமாகத்தேசசஞ்சாரஞ்செய்து அங்கெல்லாம் தன்னைக் கவிசிங்கமென நாட்டிப் பெயர்படைத்து, ஈற்றில், ஆங்காங்கும் பரிசாகப் பெற்ற யானை குதிரை சிவிகை குடை கொடி ஆலவட்டம் சாமரம் பரிசனங்கள் முதலியனசூழவோர்யானைமேலேறி, வாச்சியங்களொலிசெய்யத் தாராநகரஞ் சேர்ந்து போசனுடைய அவைக்களம் புகுந்தான்,

அவ்வேளையில், போசராசன்பூஜாமண்டபத்திலே பூசையுரிவானாயினன் சபாமண்டபத்திலேவித்துவான்கள்மாத்திரமிருந்தார்கள் காளிதாசன் தான் புகுந்திருப்பது அரசனுடையசபாமண்டபமாயிற்றே யென்பதைச்சிறிதும்சிந்தியாமல் உத்தண்டநடையுடையவனாய்ச் சபைநடுவே சென்றான் அதுகண்டவித்துவான்கள் சிங்கத்தைக்கண்ட யானைக்குழாம்போலத் திகைத்தெழுந்து நின்றார்கள், காளிதாசன் அவர்களை உட்காரும்படிசெய்துதானுமோர் ஆசனத்திலேவீற்றிருந்து, அவர்களுக்கெல்லாந்தானே தாம்பூலங் கொடுத்துத்தானும் தாம்பூலந் தரித்துக்கொண்டு அவர்களுடன் அளாவுவானாயினன் அப்போதுவித்துவான்களெல்லோரும் அன்றுகாலையில் அரசன் சங்கரகவியென்பாரொருவனுக்குப் பாத்திராபாத்திரம நோக்காதுபன்னிரண்டுலக்ஷப்பொனகொடுத்ததைப்பற்றிக் குறைகூறி முறையிட்டார்கள் காளிதாசன் அதனைக்கேட்டு நகைத்து, நீங்கள் அதன் பொருட்டு வியசனப்படுவது அறியாமை, எங்ஙனமெனின், அரசனைசங்கரகவிக்குப்பரிசாகக்கொடுத்தது ஓரிலக்ஷமே அப்பால் அரசன்செய்வது ஸ்ரீசங்கரன் பூசையாதலின் அப்பெயர்தரித்த அப்பூஜாகாலத்தில்வந்தமையால் நாமவிசேஷம்பற்றியும், பூஜாகாலத்திலேஉருத்திராக்ஷத்தானஞ்செய்வதுகடனாத

லாலும் பன்னிருருத்திரர்க்கும் தனித்தனி ஓரிலக்ஷமாகச் சங்கற்பித்துப் பன்னிரிலக்ஷமுமாகப் பன்னிரண்டிலக்ஷம்பொன் அக்கவிக்குக் கொடுக்கக்கடவராக, என்றான், இதைக்கேட்ட வித்துவக்குழாம் காளிதாசனுடைய சாதுரியத்தையும் அரசனுடைய விவேகத்தையுந் தங்கள் அறியாமையையுங் கண்டு ஆச்சரியமும்சந்தோஷமும் வெட்கமும் அடைந்தவராய்மேற்கூறத்தக்கது யாதெனத்தெளியாது மயங்கியிருந்தார்கள் இதற்கிடையில்போசராசனும்பூசையைமுடித்துக்கொண்டு அந்தப்புரஞ்சென்றுமீண்டுவரும்போது காளிதாசன்சொன்னசமாசாரஞ்செவியிற்பட்டது பட்டமாத்திரத்தில் அரசன் ஆச்சரியவசத்தனாய்த் தனது அக்கருத்தை உள்ளபடி அறிந்துச்சொன்ன இவன் நரன்றானோ, அன்றி ஈசனோ, என ஐயமுற்றுச்சிறிதுநேரம்ஸ்தம்பித்து நின்று ஈற்றில, அவனைப் பார்க்கவேண்டுமென்று ஆவலுற்று விரைந்து சபையிற்புகுந்தான்' அரசனைக்கண்டகாளிதாசனும் மகிழ்ந்துமங்கள ஆசி கூறினான்,

அரசன் காளிதாசனைக் கண்டமாத்திரத்தில் சொல்லுதற்கரிய வந்தனஞ் செய்யமறந்து, நெடுநாட் பிரிந்திருந்த காதலி தனது நாயகனை ஆவலோடுங்கையைப்பிணித்து இழுத்துச் செல்வதுபோலத்தனது கரங்களால் அவன்கரத்தைப்பிடித்து அழைத்துக்கொண்டு அந்தப்புரஞ்சேர்ந்து அங்கே காளிதாசனை ஓர் ஆசனத்திலிருத்தித் தானுமோராசனத்திலேவீற்றிருந்து அவன முகத்தைப்பார்த்து பிராமணோத்தமரே உமது திருநாமத்தால் பெருமையுற்றுள்ள எழுத்துக்கள் எவை, எம்மை நினைந்து கவலையுற்றாற்றாது வருந்துவது எத்தேசம் உம்மைநினைந்துகவலையுற்றிருக்கும் ஜனங்கள்யாவர்(பெயர் ஊர்குலம்வினவியபடி) என்றான், அதற்குக்காளிதாசன் தனதுபெயரைக்காளிதாசனென * அரசனுடையகையிலெழுதினான் அரசன் அதனைப்படித்து அன்புமீதூரப் பெற்றவனாய்க் காளிதாசனுடையபாதங்களில் வீழ்ந்து நமஸ்கரித்தான் அப்பால் இருவரும் மிகசினேகம்பூண்டு நானாவிஷயங்களிற் சல்லாபஞ்செய்துகொண்டிருக்கையி

---

மூன்று வினாக்களும் விடைகொடாது ஒன்றற்குமாத்திரம்விடை கொடுத்தது, காளிதாசன் வரலாற்றை அரசன் நெடுங்காலமாகப்பிறர் வாய்க்கேள்வியால் உணர்ந்திருந்தானாகையால்மற்றையவினாக்களுக்கு விடை அநாவசியகமென்பதுகருதியென்க

ல்-மாலைக்காலஞ்சமீபித்தது "அதுகணடு அரசன், சூரியன்கடலிலாழ்ந்தான், என்னுங்கருத்துள்ள.

"பரிதிபதபயோதிதௌ,,

ன்பதை ஒருசுலோகத்துமுதலடியாகச் சொன்னான் இச்சமயத்திலங்கிருந்த வித்துவசிரேஷ்டையாகிய சீதையென்பவள், 'வண்டுகள் தாமரைமலரி லடங்கின, என்னுங்கருத்துள்ள,

"ஸரஸிருஹராமுதரேஷு-மத்தப்ருங்க.,

என்பதை இரண்டாமடியாகச் சொன்னாள் இவைகளைக்கேட்டிருந்த வித்துவ சிரேஷ்டனாகிய பாணகவியென்பாளொருவன் "உத்தியானவனத்திலிரானின்ற பறவைகள் பரப்பொந்துகளிலடங்கின,, என்னுங் கருத்துள்ள.

"உபவந்தருகோடரேவிஹங்க.

எனமூன்றாமடியைச் சொன்னான் அதுகேட்ட, அரசன்காளிதாசனைநோக்கி, உத்தமகவியே, நீர் நான்காமடியைச் சொல்லுமென்றான் காளிதாசன் அதற்கிசைந்து "உவதிகளிடத்தில் மன்மதன்மெல்லமெல்லவரத் தலைப்பட்டான, என்னுங்கருத்துள்ள,

"யுவதிஜநேஷு-சனை சனைரநங்,
என நான்காமடியைச் சொன்னான். (உவதி-கரு-வயசுப்பெண்)

வெய்யவன்சென்று மேவினன்பாற்கடல்
செய்யதாமரைச் சேக்கையவண்டினம்
துய்யகோடரந் துன்னினபுட்குலம்
பையவேவாதியர்ப் பற்றினன் காமனே,

இதனைக்கேட்ட அரசன்முன்னைய மூன்றடிகளைப் பார்க்கிலும் நான்காமடியே சொல்லிரசம் பொருளிரசம் சந்தரசமுதலியனவற்றால் விசேட்டமுற்றிருப்பது கண்டுமிக்க சந்தோஷமுடையனாகிக் காளிதாசனைப்பார்த்து நீர்சரசுவதியின் அமிசாவதாரிணறிமற்றன்று,, உமதுதிருவாக்கால் மாலைக்காலத்தை முற்றுகவருணித்தருளுமென்றான், அதற்குக் காளிதாசனும் நன்றென்றிசைந்து வியசனமிக்குள்ளவனுடைய கல்வியறிவு எவ்வாறு மழுங்குமோ அவ்வாறு தாமரைப்பூவின் காந்தியும் அந்நிய தேயத்தைய டைந்தமானி எவ்வாறு கீழ்மை யடைகின்றானோ அவ்வாறுவண்டுகளும் கொடுங்கோல்மன்னன் எவ்வாறு உலகத்தைவருத்துகின்றானோ அவ்வாறு இருளும் உலோபிகளிடத்துள்ளசெல்வம் எவ்வாறு சன்மார்க்கத்தில் பிரயோசனப்படாதோ அவ்வாறு கண்களுமிருங்கின்றன என்னுங்கருத்துள்ள,—

வியசரிச இவ்வித்தியாகூஷீ யசேகபங்கஜ ஸ்ரீர்க்குணி இவ்விதேசே கைங்யமாயாமதிப்ருங்கா குர்ருபதிரிவலோகம் பிடயதயந்தகர் ரோதனமிவக்ருபணஸ்ய வியர்த்ததாமேதிராக்ஷ

துன்பினூற்றடக்குண்டவர்கல்விபோற் சோதிமாய்க்கது தாமரைமாமலர் தன்புலாமபிறநாட்டிடைமாணிபோல் மாண்புபொன்றினவண்டினஊானன அன்பிலாமற மன்னவராலேபோல் ஆதியக்கம் பார்ந்தது வல்வினூள் இன்பிலாதபுன் லோபிகள்செல்வம்போலினைமுற்றன கண்களிரண்டுமே.

என்னுமிச்சுலோகத்தைச் சொல்லிமுடிக்கான் இதனைக்காளிதாசன்சொல்லுந்தோறும் அரசனுக் கண்டாய் பெருமகிழ்ச்சி இத்துணையதென்று சொல்லுதலெளிதன்று இதற்குக்கைம்மாறாக உமக்குயானசெய்யத்தக்கதுயாதுமென்னிடத்திலில்லையே 'என்றுகாளிதாசனைக் கட்டித் தழுவுவான் உம்மோடு சமமாகயான் வீற்றிருக்கத் தகுந்தவனோ என்றுகூறிக்கீழே அவனுடைய பாதங்களினருகே உட்காருவான் அவர்க்கு உபசாரங்கள் பலசெய்வான் நீர் சிறியேனைத்தேடிவர என்னதவஞ்செய்தேன் என்பான்யானபெற்றபேறுபோல் உலகத்தில்யாவன்பெற்றான் என்பான் இவ்வாறே அரசன் அவனைப்பலவாறு புகழ்ந்துகொண்டாடியுபசரித்தான்

கற்றார்முற்கல்வி யுரைத்தல் மிகவினிதே
மிக்காரைச்சேர்தல் மிகமாண முன்னினிதே
எட்டுணையானு மிரவாதுதானீதல்
எத்துணையுமாற்ற வினிது

என்றபடிகல்வியறிவினது அருமை பெருமைகளை ஆராய்ந்தும்வேட்டும் சீர்தூக்கியு மறியவல்ல பிரபுக்களே வித்துவான்களைக் கனம்பண்ணுவார்கள் மாணிக்கத்தினது பெருமையை அறியாதாரிடத்திலமாணிக்கத்தை விற்கப்போகும்ரத்னவணிகர்போன்று இந்நாளில் வித்துவான்கள்தமது கல்வித்திறமையைக் கல்வியென்னுஞ்சொல்லையேனுஞ்செவ்வே யறியாதபோலிப் பிரபுக்களிடம் காட்டப்போய் மதிப்பிழந்து மீள்வர்கல்வித்திறமைகாட்டி நன்குமதிப்பும் பரிசும்பெற விரும்புவோர்சந்திரனையுங் கங்கையையுந் தரித்த கடவுளைப்பாடிக இந்நாளிலே போஜன அவனையன்றிமற்றியாவனுள்ளன் அதுநிற்க அப்பாற்காளிதாசன் தன்னை அரசன்மிக்க உபசாரஞ்செய்து கனப்படுத்துவதைச் சகிக்கமுடியாதவனாய் அரசனைப்பார்த்து ஸ்துதியாக வாக்கிசொல்லத் தொடங்கினான் அதுவருமாறு,—

"ஒருவரை ஒருவர் உபசரிக்கவேண்டுவது சிநேகம் உண்டாகும்வரையுமே சிநேகம் உண்டாயபின்னருமன்று உண்மையான சிநேகருக்குச் செய்யும் உபசாரம் பரிகாசம்போலும் என்னுங்கருத்துள்ள சுலோகம் இது,—

உபசாரகர்த்தவ்வியோ யாவதநுத்பந்நஸௌஹ்ருதா, புருஷ, உத்பந்நஸௌஹ்ருதாநாமுசார, கைதவம்பவதி
வந்திக்க நட்பு வருங்காறும் வந்தபின்
வந்திப்பு நிந்திப்பா மற்று,

இதனைக்கேட்ட போஜன் மகிழ்ச்சி கூர்ந்து அச் சுலோகத்திற்காகப் பொன்விளை நிலங்கள் சிலவற்றைக் காளிதாசனுக்குத் தத்தஞ்செய்தான்,

அப்பால் காளிதாசன் தனக்கு அரசனாலே தத்தஞ்செய்யப் பட்ட ஸ்வர்ண நிலங்களின் அருமையையும், அதனால் வரும் அளப்பரும் ஊதியத்தையும், அரசனுடைய இணையில்லாத ஔதாரிய குணத்தையுங் கண்டு, பேரானந்தமும் பெருவியப்புமுடையனாகி அரசனுடைய குணாதிகளைவியந்துகூறத் தொடங்கினான்,

மனத்துக்கின்பந்தரும் உத்தம பாடல்களைச் சொல்லும் புலவருடையசிரமத்தையும், அப்பாடல்களிலே யுள்ள பலவகை இன்பங்களையும் கற்ற விவேகிகளே யன்றி மற்றோர் அறியார் எங்கனமெனில், பிள்ளைப்பெற்றால் வரும் சுகதுக்கங்களை மலடி அறியாதது போலென்க, என்னுங்கருத்துள்ள சுலோகம் வருமாறு,—

ஸுகவே, சப்த ஸௌபாக்யம் ஸத்கவிர் வேத்திநாபர, நவிவந்த்யா விஜாநாதிபராம் தௌஹிருத ஸம்பதம்

குழவி பெறுமருமை கூன்மலடி தேரா
வழுவில் கவிபாடும் வன்மை-செழுமைபெறு
சொல்விரச மந்தம் சுவையென் பனவெல்லாம்
வல்லவரல் லாரறியார் மற்று

இச்சுலோகத்தை அரசன் கேட்டு, இக்கவிமேகம் இல்லையாயின் நாம்செழிப்பதில்லை, என மனத்துள்மதித்து அன்றுமுதலாக்காளிதாசனை முன்னையிலும் சதமடங் கதிகமான அன்புகொண்டுசிநேகித்து வருவானாயினான் இப்படி வருநாளில், முன்னேகாளிதாசனைச்சேர்ந்து சுகித்தல் வேண்டுமென்னும் விரதக் கோடு விலாசவதியென்னும் பெயர்பூண்டு தாசியுருக்கொடு வந்து இப்போ ஜராஜனுடைய தாராநகரத்திலே வசிப்பவளாயின இராஜகுமாரியின் கண்வலைபபட்ட காளிதாசனை அவள்வீட்டுக்குப் போக்குவரவுடையவனாயிருப்பதை வித்துவான்கள்

றிந்து அவன்மேற் குற்றமுற்று அவனைத்தீண்டுதற்கும் அருவருத்திருந்தார்கள்

இதனை அரசன்கண்டு வித்துவான்களைப்பார்த்து நீங்கள்பிராமணோத்தமராகிய காளிதாசகவியைத் தீண்டுதற்கு அருவருத்துத்திரிவது யாதுகாரணம்பற்றியென்று வினவினான், வித்துவான்கள் அவனுடைய ஒழுக்கந்தீயதென்று காரணங்காட்டினார்கள் அதுகேட்ட அரசன் ஆச்சரியவசத்தனாகி, கலாசமுத்திரமாகியகாளிதாசகவி வேசிகமனஞ்செய்ய உடன்பட்டதென்னை, காளிதாசகவிக்கு நற்புத்திபோதிக்க யாவருளர், எனச்சிந்தித்திருந்தான் இங்ஙனஞ் சிந்தித்திருக்கும் அச்சமயத்திற் காளிதாசன் தற்செயலாய் அரசன்சமுகம் வருவானாயினன்வந்தபோது அரசனுடையமுகக்குறியால் அவனுடைய உள்ளக் கருத்தை அறிந்து அவனைப்பார்த்து, திரிபுரதகனராகிய ஸ்ரீருத்திரமூர்த்திமேலும் கூசாது அம்புதொடுக்கத் தலைப்பட்ட மன்மதனை சிற்றறிவும் சிறுதொழிலுமே இயல்பாகிய குணங்களாகவுடையஎளியரார்மேல் பாணந்தொடுக்குந் துணிவையும் விரைவையுஞ்சொல்லவும்வேண்டுமோ, என்னுங்கருத்துள்ள

சேதோபுவ்ச்ச பலதாபராஸங்கே காவகதாமானுஷலோகபாஜாம், யத்தாகசிலஸ்ய புராம்விஜேதுஸ்தா விதம்மானுஷ லோகபாஜாம்

முப்புரங்கள் செந்தழலில் மூழ்குவித்தமுக்கணன்மேல்
செப்புமதன் பாணஞ் செலவிடுத்தான் - அப்பதகன்
சிற்றறிவும் புன்றொழிலுஞ் சேருநரார்மேல்வாளி
எற்றிடுகை நூதனமலா றிங்கு,

என்னு மிச்சுலோகத்தைப்பாடினான் இதனைக்கேட்டமாத்திரத்தில் அரசன் தன்மதிற்குடிகொண்டிருந்தசிந்தாகுலமெல்லாம் தினகரனைக்கண்ட இருள்போல இல்லாதொழியமிக்கமகிழ்ச்சியுடையனாகித்திரவிய சாலாதிபதியைக்கூவியழைத்து அச்சுலோகத்தை எழுதி அவன்கையிற்கொடுத்து, இச்சுலோகத்திலுள்ள அக்ஷரங்கள் எத்தனையோ அத்தனைலக்ஷம்பொனளந்து இக்கவிசிரேஷ்டருக்குக் கொடுப்பாயாக ,, என்று ஆஞ்ஞாபித்தான் அதனைக்கேட்டுக்காளிதாசன்போனங்கமுற்றமீண்டும்ராஜாவை ஸ்துக்கத்தொடங்கி ' அஷ்டலக்ஷ்மிவிலாசனே இராஜாதிராஜனாகியபோஜமகாராஜனே, அண்டகோடிகளெல்லாமுனது எல்லையில்லாத கீர்த்தியினால்ஒரேமயமாய்வெளுத்திருப்பதுபற்றி திருநாராயணர்தமது திருப்பாற்கடலைகாணாதவராகித் தேடியலைகின்றார் சிவபெருமான்தமதுகைலாசகிரி லாசகிரிஎவ்விடத்துளதெனவினவித்தி

கின்றார் அவ்வாறே இந்திரன்தனது ஐராவதத்தையும், பிரமன் அன்னத்தையும் இராகு சந்திரனையும் தேடியுழலுகின்றனர் திருமாலமோரையெடுத்துக்கொண்டு, சிவன் நெற்றிக்கண்ணைத் திறந்துக்கொண்டும் பிரமன் நீருடன்பாலைக்கலந்துகொண்டும், ஏனையோர் உபாயங்கண்டறியாவலுந் திரிவது இம்மயக்கத்தாலன்றோ "என்னுங்கருத்துள்ள

"மகாராஜஸ்ஸ்ரீமான்ஜ்ஞகியசஸாதேதவளிதேபய, பாராவாரம்பரமபுருஷோயம் ருகயதேகபரதிகைலாஸம்கரிவரமபௌமம் குலிசப்ருக்ஷாநாதம் ராஹூ, காலபவநோஹிம ஸமதுநாநீரக்ஷீரே கருஹீஸ்வாமிகலகதீரயாதி ந்ளீ கஜன்மாசக்ரம் த்வாது சர்வாநடதி ஜலதிதீர்ஸம்ப்ரமாச் சக்கிரபாணி;' சர்வாறுத்துங்வசலாங்கஹுதிபசுபதிபால நேத்ரேணபசயங்வயாப் தேத்வக்கீர்த்திகாங்க்யாத்ருஜகதிந்ருபதே

என்னுமிச் சுலோகங்களையும், "ஓ பண்டிதராஜரத்நமே, இங்ஙனஞ்சிறந்துநிறைந்துள்ள உனதுகீர்த்தியைப்பிரமதேவன் நிதானங்கண்டறியவிருப்புற்று ஒரு நிறைகோலெடுத்து அதில் உனதுகீர்த்தியை ஒருதட்டிலிட்டு மற்றதட்டில்கைலாயகிரியைத்தூக்கிவைத்தான் அக்கிரியினது கீர்த்திக்குச் சமமாகாததுகண்டு அதனுடன் இடபதேவரைத் தூக்கிவைத்தான் அங்ஙனமும்சமமாகாமைகண்டு உமாதேவியாருடன் சிவபிரானையும் தூக்கிவைத்தான், அங்ஙனமத்தட்டுத்தாழ்ந்திலது. அதுகண்டுகங்கையையேற்றினன். அதனாலும் சமப்பட்டதில்லை, அப்பால் மதியையும் ஏற்றிவைத்தான், அதுவும்சமமாகிற்றில்லை ஈற்றில ஆதிசேடனையும் தூக்கிவைத்தான அவ்வகையிலும் உனதுகீர்த்திசமநிறையாகாததாயிற்று" என்னுங்கருத்துள்ள

"விதவத்ராஜசிகாமணே துலயிதும்தாதாத்வதீயம்யசகா, கைலசம்ச நிரீக்ஷபதக்ரலகுதாம்நிக்ஷிப்தவாந்பூர்த்தயே உக்ஷாணம்ததுபாயமாஸகசாம் தந்மூர்த்திகங்காஜலம்தஸ்யாக்போணி புங்கவம்து பரிஸபாரமஸாதாதிதிகம்

இச்சுலோகத்தையும் நாரதர் கோபாலனை ஒருசமயத்தில்கண்டு கோபாலா நீ சுவர்க்கத்தைவிட்டு எங்கே போகின்றாயென்ன அதற்குக் கோபாலன் நாரதரைப்பார்த்து ஐயா போஜனுடைய கீர்த்தியைக்கேட்ட காமதேனுவேங்கி மெலிந்துபோயினமையால்பாற்சுரவாதொழிந்தது ஆதலால் அதனகன்றுக்குப் புல் அறுக்குமாறு பூமிக்குபோகின்றேன என்றான் அது கேட்ட நாரதர்கோபாலனைப்பார்த்து கோபாலா பூலோகத்துச்செய்திகேட்டுநாளாக அறியாய்போலும் பூலோகத்திலேயுள்ள புல் எல்லாம் போஜராஜனுடையசத்துருக்களால் கவ்வப்பட்டன

வன்றோ இதனை நீயறியாதிருந்தது ஆச்சரியமென்றுகூறினானென்னுங் கருத்துள்ள.

ஸ்வர்க்காத்கோபாலகுத்திர வ்ரஜவஸீஸுமுமே பூகரோகாமதே நோ, வத்ஸஸ்யாமேதுகாமதிகரணசயமதுநாமுக்கதுக்சமநதஸ்யாச்ரு ச்வாஸ்ரீ போஜராஜப்ரசுரவிதாணம்லரீடசுஷ் கஸ்கஸோஸ்யர்த்சஸ்ஹி ப்ரயாஸ்கதத்பிக தரிபி, சர்விதம்சர்வமுர்வமுர்வயாம் என்னும்

இச்சுலோகத்தையும் பாடிப்புகழ்ந்தான் இவைகளைக்கேட்டபோஜராஜன்சொல்லுதற்கரிய மகிழ்ச்சிகூர்ந்துமுன்போலவே மீண்டும் அசுநாலக்ஷமாகவேபொன்னைவாரி வழங்கினான் அவ்வாறு சிலதினங்கள் கழிந்துவருகையில் ஒருநாள் சதுர்வேதங்களையுமையந்திரிபறக்கற்றுவல்லவராகிய பிராமணர்சிலர்போஜனது குணங்களைக்கேள்வியுற்று அவனுடையநகரஞ் சேர்ந்தார்கள் அங்கேவந்தமாத்திரத்தில் அரசனைக்காணப்போகும்போது இவனுக்கு பிரீதியாகிய ஒரு பொருளுடன் போய்க்காணுவதன்றோ அழகென்னுமெண்ணமதோன்றிற்று தோன்றவே அரசனுக்குபிரீதியாகியபொருள்யாதென்று வினவியபோது கவியேயவனுக்குப் பிரீதியானபொருளென வறிந்து அவ்வாறே கவியொன்று செய்யத்தொடங்கித் தனியிடந்தேடி ஒருங்குகூடிப்பலவாறுயோசித்துஈற்றிலொருவாறு முதலிரண்டடிகளும் பொருள்தேடி அப்பொருளுக்கேற்ற பதங்களை ஆராய்ந்து அமைத்தனர் அப்பால்கடையடிகளைமுடிக்கயாதும புலப்படவில்லை பலவாறு யோசித்தும் ஒன்றுந்தோன்றாமையால் கவலைமிகப்பெற்று இன்றைக்கு இதுமுடியாது நாளைப்பார்ப்போம் என்றுகூறிவெளியேபோந்தனர் அங்ஙனம்போகையில் காளிதாசன் நாள்தோறும் புவனேசுவரி ஆலயத்துக்கு போய்வரும்வழக்கப்படி அங்குப்போய்தரிசனைமுற்றி மீண்டுவந்தான் அச்சமயத்திலே காளிதர்சனைச்சுட்டிக்காட்டினகாட்டலும்வேதியர்விரைந்து காளிதாசனை அணுகி மங்கள ஆசிகூறினார்கள் அதற்குப்பிரதிபாகக் காளிதாசனும் வந்தித்தான் அதன்பின்னர் அவ்வேதியர்கள் அவனைப்பார்த்து உத்தமகவியேயாம்உச்சரமேசசந்தம் வேதங்களிலேயாம் அறியாததுயாதுமில்லை அசசெல்வம் எமக்கிருந்தும யர்முன்னைநாட்செய்த தவக்குறையால் இச்செனமத்தில் போஜனத்துக்கு அலைபவர் ஆயினும் எமக்கோகவி செய்யும் வல்லபமில்லை அன்றியும் உம்போலும் உத்தமகவிகளுக்கே அரசன் மழைபோலத் திரவியங்களை வழங்குகின்றான் எமபோலும் வேதவிற்பன்னரைக் காணின்யாதுசெய்வானோ அறியேம் ஆயினும் அவனைக்காணப்புகும்போது அவனுக்கு

ப்பிரீதியாகிய ஒரு பொருளைக்கொடுக்கக்காண்டிக்க மாபாதகனை அ
வள்க்குவப்பாகியகவியொன்று செய்துகொண்டுபோகக்கருத்துற்றேம்
கருத்துற்றும் எங்கருத்துப்படிகவிமுடியவில்லை பாதிக்கவியாமித்திரம்
ஒருவாறு அமைந்தது அப்பால் அடுத்தபாதியையுமுடித்து முழுக்கவி
யாக்கவெமக்குயாதுந்தோன்றவில்லை ஆகலால் அக்குறையை நீரேமு
டித்துக்கருவீராக அதற்குஉமதுசம்மதமெப்படியென்றார்கள் அதுகேட்
டகாளிதாசன் அவர்கள்மேல்திருவுளங்கூர்ந்து அங்கணீங்கள் அமைத்த
கவியைச்சொல்லுங்கள்பார்ப்போம் என்றான் அவர்களும்உடனே அக்கு
றைக்கவியைச்சொன்னார்கள் அதுவருமாறு.—போஜராஜனாகிய இந்தி
ரனே எமக்குப்போஜனங்கொடும் அதுவும்மெய்பருப்புடனிருத்தல் வே
ண்டும்" என்னுங்கருத்துள்ள

போஜனம்தேஹி ராஜேந்த்ர க்ருதஸூபஸமன்விதம்,,

என்பது அதுகேட்டகாளிதாசன் புஞ்சிரிப்புற்று நன்றாயிருக்கிறதுஉங்க
ள்வேண்டுகோளின்படிமற்றஅடிகளையும்முடித்துத்தருகிறேனை எழுதி
க்கொள்ளுங்கள்என்று ஆஞ்ஞாபித்து

"சரற்காலத்துச்சந்திரகாந்திபோலும்வெள்ளிய எருமைத்தயிரு
ஞ்சேர்த்துக்கொடுப்பீராக என்னுங்கருத்துள்ள,

மாஹிஷஞ்சசரச்சந்த்ரசந்திரிகாதவளம்ததி

என்னுங்கடையடிகளைச்சொன்னான் பின்னர்வேதியர்கள் அக்கவி
யைமன்னம்பண்ணிக்கொண்டு அரசனுடையசமுகஞ்சேர்ந்தார்கள அர
சனுமவர்களையுபசரித்துநீங்கள்வந்தகருமமெப்பாதென்றுவினவ வேதியர்
அரசனைப்பார்த்துமண்டலேஸ்வரா ஒருகவிசெய்துகொண்டு வந்தோம
அதனைச்சிரவணஞ்செய்தருளுவீராக என்றுவேண்டினார்கள்கவிப்பிரி
யனாகிய அரசன்களிகூர்ந்துவேதியரைப்பார்த்துசொல்வீர்களாக வென்
றுவேண்டினார்கள்கவிப்பிரியனாகிய அரசன்களிகூர்ந்துவேதியையைப்பார்த
துசொல்வீர்களாகவென்றான் அவர்கள் இன்றுநமதுமிடிநீங்கிற்று எ
ன்று உள்ளத்தில் எண்ணிக்கொண்டு அக்கவியை எடுத்துப்பாடினார்க
ள் அரசன் அதனைக்கேட்டுப் புன்னகைக்கொண்டு நீர் செய்துவந்
தகவியில்முன்னைய அடிக்குயாதுங் கொடுக்கத் தக்கதென்றுபின்னைய
அடிக்கே பொருள்கொடுக்கத்தக்கது அவ்வாறே அவ்வடிக்காக அ
க்ஷரத்துக்கு இலட்சம்பொன்வேறையாகப்பெற்றுக்கொண்டுசெல்லுமி
ன் என்று கூறினான் வேதியர்கள்குருடனுக்குவேண்டிதுகண் என்று
லர்போ எவ்வடிக்காயினுமாகுக எமக்கு வேண்டுவதுதிரவியமேவென
மனத்துள்மகிழ்ந்துபொன்னைவாங்கிப் பொதிபாக்கிக்கொண்டு தம்மில்
லகதுக்கேகினார்கள் அப்பால் காளிதாசன் அரசனசமுகம் புகுதலும்
அவனைபபார்த்து இக்கவியின் கடையடியையிபற்றிக்கொடுத்தவர் நீ

ரன்றோ என்று எடுத்துக்கூறினுன் காளிதாசன் அரசனைபபார்த்து அ காவினிமையையும்ஸகைகாடின்னியத்தையும்சேத்திரத்தின் துகூர்மை யையும்கவிரசத்தையும அனுபவித்தவரே அறிவர் என்னும்கருத்துள்ள

"அதாவ்யமதுரிமானம்குசகாடின்யதசோன்துதைக்ஷண்யம்சகவி தய. பரிபாகம்லயநுபமரிலிகோவிஜாநாதி,

எனுமிச்சுலோகத்தையெடுத்துக்கூறினுன். அதுகேட்ட அரச னுடன்மை உண்மையென்றமெச்சி அவனையும் அவனுறையையு முச்சி மேற்கொண்டான் இப்படிஅரசன் தினந்தோறும் காளிதாசனமேலதிக ரித்த அன்புகொணடு அவனைச்சனமாதித்துவருநாளில் ஒருநாள் அரச சமுகத்தில்காளிதாசன்புக அரசன்வழக்கத்துக்குமாறுக எழுந்து மரி யாதைசெய்வாமலும்மிருந்தான் அதுகண்டகாளிதாசன் முகமும்மன மும்கருத்து இதகாருமில்லாத இவ்வவமதிப்புக்குக்காரனமெனனை என் றுசிந்தித்துநின்றுன்.

அப்போது, "வித்துவான்கள்செய்துவருகின்றமுக்ருபேதமேஇவ் வனம் அரசன்செய்தமைககுககாரணமாமன்றி, வேறுயாயாம்தேனு அர சனுடையஅநிர்பதிக்கேதுவாகச் செய்ததொனறில்லேயே, அதனை அரச ன்தானேயுணர்ந்துகவலட்டும்,, என்மனத்துட்சமாதானம்செய்துகொண் டுசனபயைவிட்டுநீங்குமளவில, அங்கேயொருதராசுஇருப்பக்கண்டு அத னைப்பார்த்துச்சொல்லுவானபோன்றுசிலேடையாக, ஒருசுலோகஞ்சொ னனுன் அதுவருமாறு.. "ஓ,,தராசே,உனதுசெயல்மிகவும்வியர்க்கர்பா லதுபெரிய வஸ்துவைக்கீழாகவும் சிறியவஸ்துவை மேலாகவும்செய்கி ன்றனையே இருதென்னை, என ஒருவாரும் "ஏ. நியாயாதிபதீ பெரி யோரைக் கீழாகவும், சிறியோரைமேலாகவும்மதிக்கின்றனையே உனது நியாயாதிபதித்துவ மிருந்தபடிஎன்னை,, எனமற்றொருவாரும் பெருள் கொள்ளத்தக்க,

'ப்ராப்ய ப்ரமானபதவீம் கோனுமாஸளதுலேபலேபஸ்தேநய வீகரிஷ்டமதஷ்தாத்ததிதாமுச்சைஸத்ரகுருஷே.

சமநிலைநின்றார்க்குந்தகநிறையைக்காட்டுஞ்
சமரசனேயானுர்மராசே-அமையவரும்
அற்பமனைமேலாக்கி ஆருங்கன்மதனை
எபபடிக்கீழாக்கினைநீயீண்டு

இச்சுலோகத்தால் அரசனைக் கண்டிக்கவழியும்காளிதாசன்தனது மனத்துயிருக்கு எல்லைகாணுகவனுகிமீண்டும் அரசனைப்பார்த்துயாரும் தமதுதேசம்பென்னும் ஆசைப்பற்றிப் பிறதேசம் போகுங்கால் வியச

னப்படுதல் ஆச்சரியம்தமது முன்னோரால்தோண்டப்பட்ட உப்புநீர்க்கி ணற்றில் தமதுகிணறாயிற்றே என்று முரிமையால் தாகம்தணிப்பரோ என்னுங்கருத்தமைந்த.

யஸ்யாஸ்திசர்வத்ரகதிஸ் ஸகஸ்மாத்ஸ்வதேச ராகேணஹியா திகேதம் தாதஸ்யகூபோயமிதிப்ருவாணா, க்ஷாரம்ஜலம்கேபுருஷா: பி பந்தி

ஆருவர்நீர்க் கூபமே யாயிடினுமெந்தையிது
பாரறியத்தொட்டதொரு பணயினால்நீரதனை
புண்பேனெனவொருவ னுண்ணுமோபாணகரை
என்பேருர் என்பதெவன்

என்னுமிச்சுலோகத்தைச் சொல்லிவிட்டுத் துக்கத்தோடும் அரச னுடைய சபையை விட்டகன்று காசிவீதிநோக்கிச் செல்லுகையில் உ டைந்து பிளவுபட்டமுத்தானது செம்பஞ்சுக்குழம்பினால் பொருத்தப்ப டுமாறுபோல அஞ்ஞானத்தினால் பிரிக்கப்பட்ட நம்மிருவரையும் சந்தி செய்ய வல்லுநன் எமமகான் எனனுங்கருத்தையடக்கி,

அவஜ்ஞாஸ்புடிதம் ஸமீகர்த்தும்கஈஸ்வர: ஸம்திமகாயாதிஸ்புடி தம் லாக்ஷாலேபேலமௌக்திகம்
எனனுமிச்சுலோகத்தை யியற்றிப் படிக்கொண்டு சென்றான்

அப்பாலரசனும் ஊடல்கொண்ட மங்கையினது மனத்தைப்போ லும் மனமுடையனாகிய அவைக்களம விட்டகன்று அந்தப்புரஞ்சென் றுகூம்பியமுகத்துடன்மஞ்சத்திற் படுத்திருந்தான் அப்போது அவனு டையதேவிலீலாவதிவந்து அவன்முகத்தைநோக்குமளவில், அதுவமுக த்துக்குமாறாகப்புலர்ந்திருப்பக்கண்டு, பிராணநாதரே அடியாள் முக மும்தமதுதிருவதனமும் உதயாதித்தனும் அதனபிரதிவிம்பமும்போன் றிருத்தற்குமாறாகச சூரியன்முன்னாசந்திரனைபொத்து இன்றுதம துமுகமபுலர்ந்திருத்தற்குக் காரணம்யாது. என்றாள், அதுகேட்டரசன் பெருயை,காளிதாசகவி இன்று எமது அவைக்களம்புக்கபோது அவரை என்றும்போலுபசரிக்காது அவமதித்திருந்தேம் அதனால் அவர்கோபி த்து உடனேசபையைவிட்டுநீண்டனர்., எனஆதியோடந்தமாக அங்கு நிகழ்ந்தயாவுங்கூறினான அப்பால், அரசி அரசனைப்பார்த்து, "நாயகரே அறிவிற்சிறந்தவரம இப்படி அவரை அவமதித்தல்தகுமா, கூடிப்பிரியே ல் எனபது மூதுரை, பூண்டசிநேகம் பங்கபபட்ட விடத்திலும் சிநேகம் பூணாதிருத்தல் நன்று எங்ஙனமெனின் ஒரு வனுக்குப்பிறவி தொட்டுண்டாய கணைகள் பின்னர் இடையிலே கெடுமாயின் அவ

னுக்குண்டாகும் துக்கம் மிகப்பெரிதாம், பிறவிக் குருடனுக்கோ துக்கம் மிகச்சிறிதாம், அதுபோல ஒரு முறை நட்டணைப்பின்னர்ப்பங்கப்படுவாயின் அதனாலுண்டாகுந்துன்பம் ஆற்றற்கரிதாகுமன்க, அங்ஙனமாகவும் காளிதாசனோ சரஸ்வதியினது அமிசாவதாரியாயுள்ளவனாதலின் அவன்விசேஷபூசிதையைக்குரியவன் ஆதலின், தாம் அவனை அவமதிக்கலாம் வெறுக்கலாமோ,, என்றாள் இவற்றைக்கேட்ட அரசன் மிக்கமகிழ்ச்சியுடையவனாகி என் அமிர்தமே, என்போலும் பாக்கியசாலியாவனுள்ளன் யானேபெற்றபேறுயாவர்பெற்றார் உன்னைப்போலும்மந்திரினக்குமேலாயாவன் நன்றுசொற்றனை உன்னைமணமுடித்தபயன் இன்றுதானே பெற்றேன நீகூறியவையாவும் உண்மையே உனது இஷ்டப்படிநாளை உதயத்திலேகாளிதாசகவியைவரவழைத்துச் சமாதானம் பண்ணுகிறேன்,, என்றுகூறி அவளையும் அவளுடையவிவேகத்திற்காகமெச்சி, எப்போது சூரியோதயமாகுமென்னும் ஆவலுடன் உண்டுசுகித்து நித்திரைபோயினன்

அடுத்தநாட்காலையில் அரசன்நித்தியகடன்களை முடித்துவழக்கம்போலச்சபாமண்டபம்புகுந்தான் அப்போது அங்குள்ளவித்துவக்குழாம் சந்திரனில்லாத தாரகைக்குழாம்போலக் காளிதாசனில்லாமையாற்பொலிவற்றிருப்ப அரசன் அதனால்மனம்வாடிபக்கத்திலிருந்தசேவகரைவிளித்துக்காளிதாசகவியை கடிதுசென்று அழைத்துவம்மின் என்று ஆஞ்ஞாபித்தான அவ்வாறே அச்சேவகரும் காளிதாசகவியிடஞ்சென்று அஞ்சலிசெய்து, அரசன்தம்மை அழைத்துவருமாறு எம்மைப்பணித்தான, எழுந்தருளுக என்றார் அது கேட்டகாளிதாசன் அலங்கிருதனாகி அரமனையைநோக்குச் செல்லுகையில், நேற்று அரசனால்அவமதிக்கப்பட்டநாம் இன்று அங்குபோகல்தகுமா, யாதுபற்றி அரசன் எம்மை அழைத்தான், அரசன் தகன் இதுகாறும் அன்பினாலுபசரித்துச் சம்மானித்து வந்த வித்துவான்களையெல்லாம் தூரத்துதற்குக் ருத்துக்கொண்டானோ, என்னும்கருத்துள்ள,

யஸ்யம்ருபோதுராசேணஸம்மாயதிஸம்பதி, தயஸதஸ்யோ
த்ஸ ரயணாயதம்தே ராஜவல்லபா.,, என்னு

மிச்சுலோகத்தைச்சொல்லி, இன்னும், நாடோறும் நாம் அரசனாற் சன்மானிக்கப்பட்டு வந்தும், மாயாவியாகிய மனஸ்ஸாகத்தினால் துவேஷிக்கப் பட்டேம் குணவான்களாகியமந்திரிகளிடத்தில் யோசனையில்லாது அரசியற்றும் அரசன் எங்கேயிருக்கி

றானே அஃதெல்லாம் துஷ்டரிருப்பரன்றிச் சத்துருக்களு மிருப்பார்க ளா, இரார், என்னுங்கருத்துள்ள,

"அவிவேகமதிர்ந்ருபதிர் மந்த்ரிஷு குணவத்ஸு வக்ரிதக்ரீவ; யத்ர கலாஸ்ச பலாஸ் தத்ர கதம் ஸஜ்ஜநாவஸர" என்னுஞ்

சுலோகத்தையுஞ்சொல்லிச்சென்று அரமனைவாயிலையடைந்தான் அப்போது அரசன், காளிதாசன்செல்லும் அரவங்கேட்டு ஆசனத்தை விட்டெழுந்து, ஐந்து ஆறடிதூரம் எதிர்சென்று உபசரித்துத்தனது கரத்தால் அவன்கரத்தைப்பற்றி அழைத்துப்போய்த்தக்கதிலிருத்தித்தானுமிருந்தான் அப்போது அங்கிருந்தகவிவாணருடையமுகமெல்லாங்கரிந்தன, அதற்கேதுவாகவரசனும், காளிதாசனைநோக்கி, உத்தமகவிசிரேஷ்டரே நீர் இன்றைக்கித்தனைநேரந்தாழ்த்துவந்ததென்னை அவைமேரநீரில்லாதசபையுமொருசபையாகுமா என்றுபலவாறுபுகழ, இருவரும் பிரிந்துகூடியதலைவியுந்தலைவனும்போன்று, அன்புப்பெருக்க முடையராகி, வழக்கம்போல அற்றைப்பகலைக்கழித்துமீண்டனர், அன்றுதொட்டுச்சிறிதுகாலங்கட்டோடுகழித்துவருகையில், காளிதாசனுடையசத்துருக்களாகியகவிவாணர்தம்முள்விளைந்தபொறாமைகாரணமாக ஒருநாள்யாவரும் ஒருங்குகூடிசசூழ்ச்சிசெய்து, அரசனுடையபாங்கியருள் ஒருத்தியை அழைத்து, நங்காய்நெடுங்காலமாக அரசனுடையசமஸ்தானத்துவித்துவான்களாகவும அவருக்கு உற்றநண்பர்களாகவுமிருந்த எங்களுக்குக்காளிதாசன்சனீஸ்வரனைப்போற்குறுக்கிட்டான் அவனால எங்கள்கீர்த்திகெடும்வருவாய்க்குமபங்கம்வந்தது இது உனக்குத்தெரிந்த விஷயமே. அவனைக்கல்வியளவில்வெல்லத்தக்க அத்துணைவல்லவர்கள் உலகத்திலில்லை, ஆகலால்நீஒருசூழ்ச்சிசெய்து அவனைப்பரதேசம்போகுமாறுசெய்வையேல் உனக்குப்பரிசுகொடுப்போம் என்றார்கள், அவள் அதுகேட்டுமகிழ்ந்து, புத்தியுண்டாயின்சாதித்தற்கரியதுயாது எனக்குப்பொன்னாலாய ஆரமொன்றுதருவீர்களாயின் உங்களிஷ்டப்படிமுடிக்கிறேன் என்றாள், அவ்வாறே அவர்களும் ஓராரத்தை அவர்களுக்குக்கொடுத்து அவளைத்தூண்டிவிட்டுச்சென்றார்கள்; அவள் அதனைப்பெற்றுக்கொண்டுசமயம்பார்த்திருக்குநாளில் ஒருநாள், அரசன் அவளைத்தன்கால்களைவருடுமாறுபணித்துநித்திரைசெய்தான், அப்போது அவள் தன்கருத்தை நிறைவேற்றுவதற்கு இது வேதகுந்தசமயமெனவூகித்து, அரசனுடையகால்களைநித்திரைச்சோர்வினால் இடை இடையே விடுத்துப்பிடிப்பாள்போன்றுநடித்துப்பிடித்து, நித்திரைமீதூர்ந்து கனவிற்புலம்புவாள்போல; "காளிதாசன் காமவிகாரங்கொண்டு பாங்கியருக்கரி

த்து அந்தபுரத்திலேலீலாதேவியுடன் இரமிக்கின்றான்,, என்றநடித்தூக்கூறினாள், அதுகேட்டஅரசன் தனுக்குற்று, நித்திரையைவிட்டெழுந்து; தரங்கவதீ என்று அவள்பெயரைச்சொல்லிவிளித்து, நீயுந்துயிலுகின்றனையோ என்றான், அதற்கு அவள் அப்போதுதான்துயில்விட்டெவிழிப்பவள்போல்விழித்துநடிப்பாகயாதுமறியாதவள்போலத்திகைத்துநின்றாள், அப்பால் அரசன் அப்பஞ்சணையிற்றானேயிருந்து, “இவள்கண்டதோகனவுகளவிலேமுன்னர்க்காணுதகொன்றும்தோன்றாதன்றே, இவள்கண்டகனவுதேவாநுஞ்ஞைபால்வந்தகனவின்று, என்றுதேவிலீலாவதிகற்பிற்சிறந்தவளாகவும் அங்ஙனஞ்செய்யாளே காளிதாசனேகாமவிகாரமுடையவனென்பதில் சந்தேகமுமில்லை. காமிகளுச்குநியதியில்லையென்பதும் ஆன்றோர்வாக்காயிற்றே அவன்தாசியுருத்தரித்தற்குமொருப்படுவான், எப்படியிருப்பினும்இதனைப்பரீக்ஷித்து நிச்சயித்தல்வேண்டு, மெனமனத்துள்முடிவுசெய்துகொண்டு அடுத்தநாட்காலையில் அரசன்தனக்குச்சுரநோயுண்டாயிற்று எனநடித்துப் படுத்திருந்தான், அதனையறிந்துகாளிதாசனும்அரசனைபார்க்கவந்திருந்தான் அப்போது அரசனுடையதேவிலீலாவதியும்பயற்றம்பருப்பும் அரிசியுங்கலந்துபாகஞ்செய்தபத்தியவுணவைப்பாங்கிதரங்கவதிபால் எடுப்பித்துக்கொண்டு அங்குவந்தாள் அரசன் அதனிடத்துள்ளபயற்றம்பருப்பைப்பார்த்துச்சொல்லுவான் போன்றுசிலேஷார்த்தம் பயக்குமாறு, இப்பருபபுவெட்கமற்று ஆடையின்றி இங்குவந்திருக்கின்றதே, என்னுங்கருத்தமைந்த,

“முத்கதாளீகதவரீளாகவிம்பு விதுஷாம்கதம்,, என்னு

மிவ்வடியையியற்றிச்சொல்ல, காளிதாசன் அதனைக்கேட்டுபிறவிக்குருடன்முன்னர் ஒருபெண் ஆடையின்றிவந்தாற்றோஷமாமோ என்னுங்கருத்தமைந்த,

“தேவ்பாய்யமீபவர்த்திந்யே என்னு

மிக்கடையடியை உத்தரபாதமாகச்சொல்லி அச்சுலோகத்தைப்பூரணஞ்செய்தான் இதைக்கேட்டமாத்திரத்தில் எல்லாமறிந்தலீலாவதிமந்தஹாஸஞ்செய்தாள்,மந்தஹாஸம்-புன்னகை அதனைகுறிக்கொண்டஅரசன், நாமபினைத்ததற்கும்இவள்புன்னகைசெய்தகற்கும்பொருத்தமாயிற்று, ஆயினும்பெண்களுடையமனநிலையையாவர் உணரவல்லவர் எனமனத்துள்மதித்துக்கோண்டுகொபாதிக்கனுதிக்குற்றமற்காளிதாசனைநோக்கி ஏகாளிதாசா நீ எனக்கு மிக்கநண்பனாயிருப்பினும் அதனை காரியபொருட்படுத்துகின்றிலேன். நீபிராமணனாயினை அதனால்

உன்னைச்சிரச்சேதம்பண்ணுவிக்கின்றேன். இனிநீஎனதுதேசத்தில் ஒருசிறிதுநேரமுமிருக்கலாகாது என்தேசத்தை இக்கணத்திற்றானே விட்டு அகலக்கடவை, மறுமாற்றமின்றித் தூரநடவென்று கடிந்து சொன்னான், இவ்வாறேபாவிகளாகிய அக்கவிவாணருடையஏவலின்வழி ச்செய்தமகாதுஷ்டையாகிய பாக்கியின்துவஞ்சவுரையினால் அரசனவெகுண்டு. நிரபராதிகளாகியகாளிதாசன் மேலும் லீலாவதிமேலும் அபவாதமேற்றி. லீலாவதியைபாதுஞ்செய்யாது, காளிதாசனைத்தனதுசமுகம்விட்டோட்டினான் காளிதாசனும் இது தெய்வசம்மதமெனநினைத்து விலாசவதிவீடுபோய்ச்சேர்ந்தான்,

இவ்வாறு வீடுபோய்ச்சேர்ந்த காளிதாசனை விலாசவதிஎதிர்சென்றுபசரித்து அழைத்துப்போய்ப் பஞ்சணைமீ திருக்குமாறுசெய்து. தானும் அருகில உட்கார்ந்து அவனைநோக்கி எனது பிராணநாதரே, எந்நாளும் இவ்வளவுசீக்கிரமாக அரமனையைவிட்டு வீட்டுக்குவாராத நீர். இன்றுவந்தகாரணம்யாது- உமதுமுகம்புலர்ந்திருப்பதுயாதுபற்றி எனக்கேட்டனள் அதுகேட்டுக்காளிதாசன், அவள் முகத்தைப்பார்த்து பிரியாய், உன்னைப்பிரிதற்குக்காலம்வந்ததே உன்னை எவ்வாறு பிரிந்தாற்றுவேனா என்பதே என்மனத்தை அராவுவதுஎன்றான் அதுகேட்டவிலாசவதி, இடியேறுகேட்டநாகமபோல நடுநடுங்கி, ஐயோ, என பிராணநாதரே இவ்வுரைகளை என்னிடத்தில் மனங்கூசாது எவ்வாறு கூறத்துணிந்தீர். நீர்பிரிந்தால்என்உயிர்தரிக்குமோ அன்பரே, இன்று அரசன்சமுகத்தில் நடந்ததுயாது அடியாளுக்கு ஆதியோடந்தமாகக் கூறுமென்ன. காளிதாசன அவளைநோக்கி. நங்காய. எனதுசத்துருக்களாகிய வித்துவான்கள்செய்த வஞ்சச்சூதினால் அரசன்மயங்கி, என்னைத்தனது தேசத்தினின்றும் ஓடிப்போகுமாறும் போகாதுதரிக்கின சிரபங்கதண்டம்அடையுமாறும்கடிந்துஆஞ்ஞாபித்துவிட்டான ஒன்றைநாம்நினைத்திருக்கமற்றொன்றுவந்து கூடுவதும்அங்ஙனமின்றி அதுவேவருவதும் நினையாமலிருக்க நன்மைகள்வந்து சேருவதும் ஈசனவிதிப்படியன்றி எமது எண்ணப்படியன்று ஆதலால்யான அரசனுடைய ஆஞ்ஞைப்படி அந்நியதேசம்போகப் பிரியாவிடைகொடுப்பாயாக எனனுங்கருத்துள்ள,

அகடிதகடிதா நிக யதிகடிதாநி துர்க்கடீகுருதே. ருதிரேவதாநி கடயதியாநி புமாந்நேவசிந்தயதி

என்றுமிச் சுலோகத்தையும், நொய்தாகியபுல்லானதுகற்றையாகத்திரண்டுமுறுக்கப்பட்டபோதுமதங்கொண்டயானைகளையும்கட்டற்கு

ளைப்பதுபோல. புன்கவிகளாகிய சத்துருக்களுடையதிரண்டபொருமையால் யான் இவ்வாறு துன்பத்திற்கு ஆளாயினேன். என்னுங்கருத்துள்ள.

பஹுநாமல்பசாராணாம் சமவாயோதுரத்யய, த்ரணைர்விவிதிய தேரஜ்ஜுர்ப்பத்தியந்தேமத்திந்தர,

என்னுமிச்சுலோகத்தையுஞ்சொன்னான் அதுகேட்டவிலாசவதி குறுமுறுவல்கொண்டு. "இதற்குககாரணம் அஞ்சனீர், அஞ்சாதீர் நீர்எனதுவீட்டிலேதானே சகலவிதசுகங்களோடும மறைந்து வாளஞ்செய்யலாகும், ஆகலால்நீர்பரதேசஞ்செல்லவேண்டுவதில்லை, எனறுநன்றென்றுகூறிக்காளிதாசனுமதற்கிசைந்து அங்கேதானே இருப்பானாயினான்

இப்படியிருக்கையில்லொருநாள் அரசனுடையதேவிலீலாவதிநிலாமணிமுற்றத்திலேநின்றுகுறுநடைகொண்டாள அப்போதுமாலைக்காலமாதலின். காளிதாசன் மாறுவேஷம்பூண்டுபுவனேஸ்வரி ஆலயத்திற்குப்பூசைகாரனுமாறுவிதிவழியேசென்றான, அவனுடையநடையினால் அவனைக்காளிதாசனெனவுணர்ந்தலீலாவதிஅரசனிடம்போய், என்பிராணநாயகரே தாம்என்னுடையவந்துசகலாபித்திருக்கற்குமனோரஞ்சகனாகவராகிச் சிறிதுகாலமகாளிதாசனுடன்நட்டநணபுஇப்போதுயாதாயிற்றென்றுகேட்டாள் அரசன அவளைநோக்கி. பிரியய்காளிதாசன் இனந்தோறுமபாங்கியுருகதரித்து அந்தப்புரத்துக்குவந்து உன்னுடன்ரமித்துப்போயினனென்றெனக்கேள்வியுற்றநான், அதனைநிச்சயிக்கும்பொருட்டுச் சிலகாலத்துக்கு முன்னொருநாள்சுரங்கொண்டேன்போன்றுநடித்துப்படுத்திருக்கையில காளிதாசனும நீயுமநேர்முகமாய்எனமுன்னாவரநேர்ந்ததைநீயுமறிவையன்றோ அப்போதுநானசொன்னமுற்பாதிச்சுலோகத்துக்குப்பிற்பாதியாகக்காளிதாசன கூறியதைக்கேட்டு நீமந்தஹாஸஞ்செய்தமையால்நானசந்தேகித்து அவனைஊரைவிட்டு ஓடுமாறுகட்டளையிட்டேன் உனனைத்தக்ஷிணிபதத்தால் கொலைசெய்யாது விடுத்தேன். இதுவே காளிதாசனைநானபிரிந்ததற்குக்காரணமெனறான அதுகேட்டதேவி, நாயகரே, நன்றுசொற்றீர், உம்மாலேதழுவப்படும் எனதேகம்பிறர்தேகத்தைத்தீண்டுதற்கும ஒருப்படுமோ, மாதர்களெல்லோரும் உம்மைச்சேருதற்குந்தவஞ்செய்ய முன்னைஊழ்வலியால் எனக்குக்கிடைத்தற்கிட்டுதற்கரிய உமதுசேர்க்கையைநான்தள்ளிவிட்டுப பிறனொருவனைத் தேடப்புகின் என்புத்தி என்னபுத்தியாமோ, இனியான் இருந்தென்ன இறந்தென்ன,' ஆ ஜகதீசா எனபதிவிரதாதன் மத்தை இக்கணத்தில் நாட்டேனாகில் உயிர்விடுவதில் ஐயமில்லை என்றாள் நன்றென அரசனும் மற்றைநாளுதயத்திலே பழுக்கக்காய்ச்

சிய இருப்புப்பலகைகளை ஏவலாளரால்பரப்புவித்து,தேவியைநோக்கி இதனமேல்நடந்துவரக்கடவை, அன்றேல்கொல்லுவன்என சராசனத்தை எடுத்துநாண்பூட்டி அம்புதொடுத்து ஆயத்தனானான் அவ்வாறே அவளும்ஸ்நானஞ்செய்துசூரியதரிசனம்பண்ணிநமஸ்கரித்து எழுந்து வந்து புஷ்பசயத்தின்மீது நடந்து உலாவுவாள்போன்று மும்முறை அவ்விருப்புப் பாளத்தின மீதுநடந்துமயிலென ஒதுங்கினால் கற்புநெறிதவறாத உத்தமிகளுக்கு அக்கினியுந்தண்ணென்றால் பொறுமையாம் வசிட்டமுனிவரது தேவியாங்கோதைபோலுங் கற்பினாற்சிறந்த உத்தமபத்தினிகளை வாளாதூற்றும் பாவிகளுக்கு நாப்புழுத்தழுகுதல் முதலிய கொடியநோய்கள் இம்மையிலும் மறுமையிலும் இரௌரவாதி நரகங்களுமேகிடைப்பனவென்பதைத் துணிதல்வேண்டும் அதனிடையிங்ஙனமவள் நடந்துசென்றமாத்திரத்தில் அரசன் அச்சமும் வெட்கமுமேலிட்டுபெற்றவனாகி நடுநடுங்கிக்கண்களினின்றும்கண்ணீர்வாராநிற்கக்கழுகழுத்து அவளை அணுகி தேவி யான் ஆராயாமற் செய்தபிழையைப்பொறுக்கக் கடவை என்று இரந்துஅப்பால் பாவியேன்யாதுசெய்தேன் கவே, காளிதாச, கவிகோடிமகுடமணே, என்னுஞ்சொற்களையன்றி வேறியாதுங்கூற அறியாதவனாகிச் சோகித்துப்பேய்கோட்பட்டான் போன்று கணந்தோறும் கவே, கவேஎனப்பிதற்றிக்கீழேவிழுந்து புரளந்தலைப்பட்டான் அதுகண்டதேவிதனதுகையினாலே சிறிதுஜலத்தை யெடுத்து அரசனுடையமுகத்திலே தெளித்து அவனுக்குப் பிரஞ்ஞை உண்டாக்க அரசன்விழித்தெழுந்துகாளிதாசனுக்குத் தானசெய்தது அநீதியே என்று அவளுக்குச்சொல்லி மிகப்பரிதபித்து அவனையெப்போது காண்பேன், என்குற்றத்தைஎவ்வாறுநீக்குவேன், என்னைப்போலும் மூர்க்கன்உலகிலுளனே, எனப்பலவாறுகூறித் தன்னைத்தானே நிந்தித்திருந்தான். அரசனுக்குக் காளிதாசனைப் பிரிந்ததுக்கம்இம்மட்டில் நீங்கிற்றின்று. அரசன் அவனை ஒவ்வொரு சமயத்தினினைத்து அன்றுமுழுதும் அதுவேகவற்சியாய் ஊண் உறக்கம் ஒழித்துவாளாவிருப்பான் தனது சமுகத்து வித்துவான்களை நிந்திப்பான் ஏவலாளரைக்கடிவான் இப்படிச்சிலகாலங்கழித்துவருகையில் ஒருநாள் அஸ்தமயனகாலத்திலே அரசனுந்தேவியும் நிலாமண் முற்றத்திலே சல்லாபவினோதராயிருந்தனர் அப்போது இருட்படம்நீக்கி உதயமாகுஞ்சந்திரனையும் தன்முன்னரிக்கும் லீலாவதியினுடைய முகத்துக்குச்சிலபெருமான சட்டையிடமாத்தரித்தசந்திரனைஉவமிக்கப்படத்தக்கது, என்னுங்கருத்துள்ள,

"துளண அணு அணு ஸாஇக்ளிவஸோரமசஹைசதம்சகுளபாவே

என்னும் இப்பாதிச்சுலோகத்தைச்சொன்னான் இதனைக்கேட்டுச்ச மீபத்திலிருந்த வித்துவான்களெல்லாரும் அதனைமுடிக்கற்கு ஏதுவறி யாதவர்களாகி அரசனிடம்விடைபெற்று சாதுரியமாக அங்குநின்றும் நீங்கி இல்லந்தேடிப்போயினர் அங்குநிகழ்ந்தவைகளையெல்லாம் ஒற்றரா ல் அறிந்த காளிதாசன் நூதனகவிவாணன்போல் வேஷம்பூண்டு அவ் வித்துவான்களை இடைவழியில்நிறுத்தி அவர்களுடன்அளாவினன் அப்போது வித்துவான்கள் அரசன்சொன்ன சுலோகவடிவைச்சொல்லி இதனை முடியும்பார்ப்போம் என அவனிடம்கடாவினர் அதற்குக் கா ளிதாசன்பிரயத்னமின்றிச் சமுத்திரம் எவ்வாறு சமமாகுமெனனுங் க ருத்தமைத்து,

"அணுஇதிபம்ணயதிகஹ அணுகிதம்ஸப்பதிபதி சதம்ஸ,,

என்னும்உத்ரபாகத்தைச் சொன்னான் அரசன்யாதொருதக்ககார ணமுமின்றிப் பூர்வபாகத்தைச் சொல்லாமே எனகாம் கொண்ட மயக் கமனைத்தும் எம்மைக்கெடுத்தது எப்படியிருக்கினுமிருக்குக என்றுகூறி அவ்வுத்தரார்த்தத்தை வித்துவான்கள் மனனம்பண்ணிக்கொண்டு அ ந்நூதனகவிவாணனைப்பார்த்து நீர்காலை உதயத்தில் அரமனைவாயிலில் வந்திரும் என்றுகூறிவிட்டுச்சந்தோஷத்துடன் தத்தம் வீடுகளுக்குச் சென்றார்கள் அடுத்தநாட்காலையில் வித்துவான்கள் அரசனுடைய அ வைக்களம்புகுந்து தாங்கள் மனனம்பண்ணிவந்த சுலோகபாகத்தைக் கூறிப் பிரசங்கிக்க அரசன்மகிழ்ந்து இதுகாளிதாசனவாக்கே எனநிச்ச யித்துப்பதினைந்துலக்ஷம்பொன் பரிசளிக்குமாறு ஆஞ்ஞாபித்து விட்டு சேவகரை அழைத்து அரமனை வாயிலில் வித்துவான்களுக்கிடையே யாரேனும் பிணக்குநிகழுமாயின அவர்களெல்லோரையுமொருங்கே கொணர்மின்என இரகசியமாய்க்கட்டளையிட்டான் அப்பால்வித்துவா ன்கள் அப்பதினைந்து லக்ஷம்பொன்னையும்பெறுதற்கொண்டு அரமனை வாயிலை யடைந்தார்கள் அங்கேகாளிதாசனாகிய நூதனகவிவாணன் தன க்குரியசிரேஷ்டபாகத்தைப்பிரித்துக்கொடுத்துவிட்டுஅப்பாற்செல்லுமா றுகேட்டான் அதுகேட்டவித்துவான்கள் சிரேஷ்டபாகமுனக்கு எவ் வாறுவருமென்று வாதிக்க, கலமெழுந்தது அதுகண்டு சேவகர் அவர் களையாவரையும் ஒருங்குபற்றி அரசன் முன்னர் கொடுபோய்விடுத் தனர் அங்கே கபடமெல்லாம் வெளியாயின வெளியாகவே அரச ன்காளிதாசனை யுணர்ந்து அவன் பாதங்களில் வீழ்ந்து நமஸ்கரி த்[illegible] யாதுபுரிந்த பிழைகளைப் பொறுப்பீராக என்று வே

ண்டினன் வேண்டவேகாளிதாசன் தனது மெய்வடிவைக் காட்டி அரசனைத்தழுவ அன்புபெருகி இருவரும் அந்தப்புரஞ்சென்றுலீலாவதி முன்னிலையில் கூடிப்பிரிந்தார் கூடிப்பிரிந்தாற்போலக்கொண்டாடிமகிழ்ந்திருந்தனர்

இவ்வாறுசிலகாலங்கழிந்து வருகையிலொருநாள் பவபூதியென்னுமொருமகாபண்டிதன் அரசன்சபைக்குவந்து அங்கேதனக்குச்சமமானவித்துவான் எங்குமில்லையென்று தருக்கிக்கூற அங்கிருந்தபாணுகவி எழுந்துநகைத்துப்பவபூதி உன்கைவரையகற்றவல்லபாண மிங்கிருப்பதைக் கண்டிலை கொல்லோ என்றான் அதுகேட்டபவபூதி பாணா. இங்கிருக்கும் காளிதாசகவிதானுமெனக்குநிகராகான் என்றால் நீயோவெனக்குநிகராவாயென்றான் அதுகேட்டகாளிதாசன் ஏ. பவபூதி எண்ணிப்பேசக்கடவை வித்துவான்களால்நிறைந்திருக்கும் இச்சபைக்குநாயகமாகச் சிவபிரான்போலவீற்றிருக்கும் இராஜேந்திரனேநம்மிருவரையுஞ்சீர்தூக்கித்தராதம்மியங்களையறிய வல்லனென்றான் அதுகேட்ட அரசன் அவர்களைநோக்கி சாயங்காலத்தை வருணிப்பீர்களாக என்றான் அவ்வாறே இருவரும் உடன்படமுதலிலே பவபூதிவருணிக்கத்தொடங்கினான் அது வருமாறு,—"சந்திரவிம்பம் முத்துக்களா லலங்கரிக்கப்பட்டது ஆகாசத்தில் நக்ஷத்திரங்கள்பரவின மதனவில் அசையாதுநின்றதுமந்தமாருதமோய்ந்தது சண்பகக்கொடியசைதலொழிந்தது பின்னர்எவ்வாறாயினவோ அறியேம் என்னுங்கருத்துள்ள

முக்தாபூஷணமிந்துபிம்ப மஜனிவ்யாகீர்ணதாரம்நப. ஸ்மாரம்சாபமபேத சாபலம்பூதிந்திவரே முக்தீதேவ்யாலீனம்மலகண்டமந்தாணிதம் மந்தாநிலைர்மந்திதம் நிஷ்பந்தஸ்தபகாசசம்பகலதா ஸாபூந் நஜாநேத்த.

என்னுமிச்சுலோகத்தைச்சொல்ல காளிதாசன் எழுந்து அரசனே என்கவியைச் சற்றே கேட்கவென்று விண்ணப்பித்து "சந்திரமண்டல மியர்த்தது பூமாலைபாற்கட்டிண்ட விருட்குலம் குலைந்தது முன்னைரே. தாமரைப்பூமந்தஹாஸஞ் செய்யத்தலைப் பட்டுவிட்டது குண்டலவதித்தனம் ஓய்ந்தது நீலோற்பலமிரண்டும் குறுக்காகக்குவிந்தன பவளமோசை உள்ளடங்கினது பின்னர்யாது நிகழ்ந்ததோ அறியேம் சந்திர

னால் விழுங்குண்டவிருள் இவ்வகைத்து." என்னுங்கருத்துள்ள

ஸ்விந்நம் மண்டலமைந்தம் விலுலிதம் "ஸ்ரக்பாரநத்தம் தம. ப்ரவராகேவ ப்ரதமானகைஷ்கசிகா லீலாயிதம் ஸுஸ்மிதம். சாந்தம் குண்டல தாண்டவம் குவலயத்வந்த்வம் திரோமீலிதம் வித்ருமவீத்க்ருதப்ந ஹ்ருதோஜந்மஸிமாஸி இதி

என்னுமிச்சுலோகத்தைச் சொன்னான் இருவர்சுலோகத்தையுங் கேட்ட அரசன் அவ்விரண்டினையுஞ் சீர்தூக்கிப்பார்த்து பவபூதிகவிவாணனே யன்றிக காளிதாசகவிக்கு இணையாகானென்றான். அதுகேட்டபாணகவி, காளிதாசனைப் பின்யாவனென்பீர் என்ன, அவன்சரசுவதியின் அமிசாவதாரியென, அங்கிருந்தபவபூதி கோபாவேசனாய் அரசனைப்பார்த்து. நன்றுகூறினை பக்ஷபாதகம் பண்ணுகின்றனையே யென்றான் அப்போது காளிதாசன் அரசனை நோக்கி, மண்டலேசா. இவ்வபகீர்த்தி உனக்குவேண்டாம். புவனேசுவரி யாலயத்திற்குப்போய், அவள்சந்நிதியில் ஒருதராசில் இருவர் சுலோகத்தையுமிட்டு நிறுக்க எது தாழ்கின்றதோ அதுவே சிறப்புடையதென ஒருபக்ஷம் துணிவோமென்ன. அரசனும் நன்றெனக்கண்டி புவனேஸ்வரி யாலயத்திற்குயாவருடனும் எழுந்துசென்று. அங்கே ஒருதராசையெடுத்து நாற்றி. அதிலிருவர் சுலோகத்தையுமிட்டு நிறுத்தான், அப்போதுகாளிதாசனுடைய கவிவைக்கப்பெற்ற தட்டுத்தாழ்தலும், புவனேஸ்வரிதானணிந்திருந்த மாலையினின்றும் உதிர்ந்து திருமேனியிற்படிந்துடத்த பூஞ்சுண்ணத்தை நகத்தினால் எடுத்துப்பவபூதியினுடைய சுலோகமிருந்த தட்டிலிட்டு இரண்டையுஞ்சம மாக்கினாள் அதுகண்ட காளிதாசன் புவனேஸ்வரியைப் பார்த்து, ஏ கருணாகடாட்சி சிறியேன் பாக்கியமே பாக்கியம் அடியேனும் பவபூதியுமலைவுற்று, என் சுலோகத்தையும் பவபூதியின் சுலோகத்தையும் தராசிலிட்டுநிறுக்கும்போது. அவனுடையதட்டு மேலெழும்பியதுகண்டு, அவன் உன்னிடத்துவைத்தபத்தியினால் அவன்மேல் நீகொண்டிருக்கும் அன்பு இத்துணையதென்றுகாட்டுமாறு, உனதுமேனியிற்படிந்துகிடந்தமகரந்தத்தை எடுத்து இட்டுத்தட்டைச் சமமாக்கினையே. பக்தவற்சலையென்பதை இன்றுகண்டேன் என்றுதுதித்தான், அத்துதிசுலோகம்,

"அஹோமே ஸௌபாக்கியம் மமசபவபூதேவசபணிதிம்கடா யா மாயோபய ப்ரதிபலதிசஸ்யாம லயிமங்கிராம, தேவீசதயஸருதிக விதகல்ஹார சலிகாமதுளீ மாதுர்யம் க்ஷிபதிபரிபூர்க்யைபகவதீ

எனபதும் இதுகேட்டபவபூதி அடியற்றமாமபோலக் காளிதாச னுடைய பாதங்களில்விழுந்துநமஸ்காரிக்க,காளிதாசன்நீசூரதகாலததை கருதித்து வருணித்த சுலோகத்தில அக்காலத்துரிமைகளெல்லாவற்றுகி ய தாழும்பூவினைசெய்திவைக்கூற மறந்தனையாதலின், உனகவி எனகவி க்குச்சமமாகாது போயிற்றென்ன, அவனும் மெய்யேயென்று ஒப்பினு ன் அப்பால் அரசன இருவரையுந்தகுதிக்கேற்பச் சன்மானிதது நடா த்திவந்தான்,

இப்படிவருகையிலொருநாள்அரசன்காளிதாசனை நோக்கி, உமது வாயால் உதயகாலத்தை வருணியீராக வென்ன,காளிதாசனநன்றென வெழுந்து, ஓர்இரசவாதிகானசெய்யுமவாதத்திலுணடாகும்பஸ்மத்தை உணடுநிறம்பெற்றுலொப்ப கீழ்த்திசை பொன்மோகையைப் பொருந்தி யது மூடர்கூட்டத்திலகபபட்ட கலைவலானபோன்று சநதிரனவிளங்கி ஞன முயற்சியற்ற அரசர்போலத் தாரகாகணம்ஒளிமழுங்கிமறைந்தது வணககமற்றவர்களுடைய மனம்போலத்தீபங்கள பிரகாசித்தன என்னு ங்கருத்துள்ள,

இப்படிவருகையி லொருநாள் அரசன் காளிதாசனை நோகஙி, உமதுவாயால் உதயகாலத்தை வருணியீராக வெனன காளிதாசன நன றெனவெழுந்து, "ஓர் இரசவாதிகானசெய்யுமவாதத்திலுணடாகும் பஸ்மததை உணடுநிறம்பெற்றுலொப்ப, கீழத்திசை பொனமோகையைப் பொருந்தியது மூடர்கூட்டததிலகப்பட்ட கலைவலானபோன்று சந்திரன்விளங்கிஞன, முயற்சியற்ற அரசர்போலத தாரகாகணம ஒளிமழுங்கிமறைந்தது வணக்க மற்றவர்களுடைய மனமபோலததீபங்கள் பிரகாசித்தன, என்னுங்கருத்துள்ள,

அபூத்விம்காப்ராசீ ரஸபதிரிவமாஸ்ய ககம்கத்ச்சாயஸ்சம்கோ புதஜன இவஸ்ராமியஸ்தலி, க்ஷிணுத்க்ஷீணுதாராந்ருபதய உவாநுத யமபாநமி வாராஜமதேவிநய ரஹிதாநாமிவ சுணா,

என்னுமிச சுலோகத்தைச்சொன்ஞன அதுகேட்ட அரசன் மகிழ்ந்து அடசரத்துக் கோரிட்சம பொனனுகப் பரிசளித்தான்,

மற்றொருநாள் அரசன காளிதாசனைப்பார்த்து உமக்குச்சரஸ்வதியினது அருள்மிகுதியு முணடென்ப துணைமையாயின, நான் இங்கிருந்தபடியே சாகுமாறு பாடுமென்றுன் அதுகேட்டகாளிதாசன் பதைபதைத்து பூலோகரட்சகா யாதுகூறினுய், உயிரைப்பிரிந்துடல் நிற்குமாயினனன்றோ நானுன்னைச் சாகுமாறுபாடுவேன் அஃதொழியவேறுயாது

கூறினும் செய்வேன் அதனைமறதருள் என்றான் என்றலும், அரசன்சினந்து என்சமுகம் விட்டகலக்கடவை என்றான் உனை இறக்கப்பாடுவதினும் அகன்றிருப்பதெனக்குப்பெரும்பாக்கியமென்று காளிதாசன்கூறிக்கொண்டு அந்நாட்டைவிட்டகன்று அதற்கணித்தாகிய ஒருசிற்றூரையடைந்து அங்கேவாசஞ் செய்வானாயினான். சிலகாலமாயினபின்னர், அரசன்காளிதாசனது ஞாபகம்வரப்பெற்று, அவனைத்தேடுமாறுவேற்றுருத்தாங்கி ஊர்கள்தோறுஞ்சென்று ஆங்காங்குஞ்சிறிதுகாலந்தங்கி, ஈற்றிலேகாளிதாசன்வாசஞ்செய்திருக்கும் சிற்றூரையடைந்தான் அங்கேகாளிதாசன் கடைவீதிவழியே செல்லும்போது வேற்றுருத்தாங்கிய அரசன் எதிர்ப்படக்கண்டு, தன்னான்முன் ஒருபோதும் அவ்வூரிலே காணப்படாதவனாகத் தோற்றலின், நீஎவ்வூராயென்றான அரசனும் அவனையுணராகு யான்தாராபுரி வாசியென்றான் அதுகேட்டுஅரசன் க்ஷேமாதிகளெப்படி என்றுகாளிதாசன வினவினான அதுகேட்ட அரசன, காளிதாசனைக்கண்டுணரும்படி தான் உபாயமாக எதிர்ப்பட்டார் யாவரிடத்தும் வழக்கமாகக் கூறுகின்றபடிகாளிதாசன் இறந்து வெகுநாளாயினவே என்றான் அவ்வாசகம் காளிதாசன் செவிக்குக்காய்ச்சிய லோகநீராக, பதைபதைத்து, தாராநகரம் நிராதாரமாயத தத்தளிக்கவும், சரஸ்வதி கொள் கொம்பற்றகொடிபோல் வருந்தவும், பண்டிதர்கள் ஒருங்கேநல் கூறவும் போஜன் இறந்தானே, என்னுங்கருத்துள்ள'

அப்யதாரா நிராதாரா நிராலம்பா சரஸ்வதி, பண்டிதாகண்டிதா
சர்வே போஜராஜா திவங்கதே.

இச்சுலோகத்தைச் சொன்னான், சொற்றலும் பொய்பாவாக்காதலின் அரசன் இறந்து கீழ்விழ்ந்தான் அதனைக்கண்டாலும்காளிதாசன் முன்னையிலும் பதின்மடங்கு நடுநடுங்கி அவனை அரசனெனவுணர்ந்து எனபொருட்டா ஈதடைந்தனை என்போலும்பாவியானவன், எனக்கவன்று, அவனைத்தூக்கி மார்போடணைத்துக்கொண்டு, முன்பாடிய சுலோகத்துக்கு மறுதலையாக,

அப்யதாரா சதாதாரா சலாலம்பா சரஸ்வதீ, பண்டிதாமண்டிதா
சர்வே போஜராஜாபுவங்கதே,

என்னுமிச் சுலோகத்தைச்சொல்ல, அரசனுமிர்பெற்றுத் தானும் எதிர்தழுவினான் அப்பால் இருவரும் அவ்வூரைவிட்டுத் தாராநகரஞ்சேர்ந்தனர்,

அப்பால் ஒருநாள் அரசன்வீதிவலம்வரும்போது ஒரு ருக்குமிணி மகுத்திக்கொண்டிருந்தாள் அதுகண்ட அரசன் உலக்கையைப்பார்த்து முசலமே, ஏன்தளிர்க்காதிருக்கிறாய் என்னுங்கருத்துள்ள

"முசலகிசலயம்தேதத்க்ஷணாத்யந்நஜாதம்,,

என்றவடியை மனத்திலெண்ணிக்கொண்டு சபைக்குவந்துகாளிதாசனுக்கு அவ்வடியைச்சொல்ல, அதற்குக் காளிதாசன் உத்தரமாக அமுதுங்கற்பும் ஒன்றாகக்கூடி உருவெடுத்துள்ள உத்தமியினுடையபூங்கரத்தால்தழுவப்பெற்றும் அம்முசலமும்தளிர்த்ததில்லை அதுகாட்டிற்பிறந்ததன்றோ, காட்டிற்பிறந்தவர்கள்சுகமறிவார்களோ, அறியார்கள் ஆதலினன்றோ கிட்டற்கரிய உத்தமியினால் தழுவப்பட்டதளிர்ப்பினும் அதுதளிர்த்ததில்லை என்னுங்கருத்துள்ள,

"ஜகதிவிதிதமேதத்காஷ்டமேவாஸிநாநந்தஸப்ஸிலஸத்யந்காந்தேவர்த்துமேகாஷி, குவலயதளநேத்ரீ பாணிசங்கோசஸவேஸ்மிந்முசலகிஸலயம்தே தத்க்ஷணாத்யந்நஜாதம்.

என்னும் சுலோகத்தைச்சொன்னான் அப்பால் ஒருநாள் ஒருதீர்த்தயாத்திரிகன், அரசனைசமூகத்தில்வந்து, உம்மிடத்துள்ளவித்வான்களை என்னோடு கங்காஸ்நானத்திற்கு அனுப்புதல்வேண்டுமெனன, அரசன் அதற்கிசைந்து விருப்பமுள்ளோர் எல்லோருமபோகுக எனப்பொருளுங்கொடுத்து ஆஞ்ஞைசெய்தான், அவ்வாறே எல்லோரும் போகக், காளிதாசன்மாத்திரமபோகாது அங்கேதானே யிருப்பானாயினன்.

அடுத்தநாட்காலையில் வழக்கம்போலக் காளிதாசகவிசபாமண்டபம்புகக்கண்ட அரசன, வித்வான்கள் எல்லோருங்கங்காஸ்நானத்தின்பொருட்டுக் காசிக்குப்போய்விட்டார்களே, நீர்மாத்திரம்போகாததங்கியகாரணம் என்னை என்றுகாளிதாசகவியைக்கேட்க, அதற்குக் காளிதாசகவி அரசனைப்பார்த்து, சகலசாஸ்திரங்களையும் அலைவறக் கற்றுத்தெளிந்தநீர் இங்ஙனம் என்னைப்பார்த்துக்கேட்டது எனக்குப் பேராச்சரியத்தைவிளைக்கின்றது எவனுடைய இருதயகமலத்தில் சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்றாரோ அவனிடத்திலேயே சகலதீர்

த்தங்களுமிருக்கின்றன எவனிடத்திலே சிவபெருமான்கோயில்கொள்ளவில்லையோ அவனே தீர்த்தயாத்திரை முதலியன செய்தற்குரியவன் என்னுங்கருத்துள்ள.

"தேயாம்தி தீர்த்தேஷு பிரதாயேசம் போர்த்தூரஸர்த்திநம்
யஸ்யகௌரீஸவரஸ் சித்தே தீர்த்தம் போஜபரபஹிஸ,,

என்னுமிச்சுலோகத்தைச்சொல்ல அரசன்கேட்டு மகிழ்ந்துமௌனஞ்சாதித்தான்,

இப்படியே அரசன் நாள்தோறும் காளிதாசனுடையவாயினின்றும்வெளிப்படும் அரும்பொருட்கவிகளாகிய நறுந்தேனைச்செவிவாயிலாலேபருகிக்களித்துவருகையில் அரசன்சமுகத்துப் புனைகவிஞர்செய்தவஞ்சச்சூதினால் காளிதாசனமீது அரசன்மீனமும் அந்தாப்துகாட்டநேர்ந்தது அதனைக்காளிதாசன் அறிந்து அரசனுடைய நகரைவிட்டுவெளிப்பட்டு அல்லாளதேசஞ்சென்று அத்தேசத்தரசன்சபையிற்புகுந்து அங்குத்தன்வரலாற்றைச்சொல்ல, அரசன்மகிழ்ந்து நீபோஜராஜனிடத்திலிருந்துபெற்ற சன்மானத்தினுமுமடங்கதிகமான சன்மானத்தோடுமிங்கேதானே இருக்கக்கடவீர் உமதுகீர்த்தி எனதுகாதுக்கெட்டிய நாள்முதலாக உம்மைக்காணவேணுமென்று நானகொண்டபேராவுக்குஉமதுவரவால் இன்று எல்லைகண்டேன் என்று பலவாறுமுகமனைகூறியுபசரித்துத் தனபக்கத்திலிருக்கிகவிஞரேயிற என்கவிக்கலிதீர ஒருகவிசொல்லியருளுமென்றான அவ்வாற்றகாளிதாசனுமெழுந்து சபையைவந்தனங்கூறியடக்கி, அரசனைபார்த்து "நரேந்திர உமதுபகையரசனுடையபட்டணத்திலேசஞ்சரிக்கின்ற ஒருவேட்டுவது. வீதிகளிலே சிந்திக்கிடக்கின்றஇரத்தினங்களைக் கருங்காலிகட்டையிலுண்டாய தழலெனவெண்ணிச் சாம்பிராணியை அதிலிட்டுக்கண்ணைமூடி ஊத, அவள்வாயினின்றும் வரும்சுவாசம்நறுபவாசனையாய்க்கமழ. அஃதுணர்ந்த வண்டுகள் அச்சாம்பிராணியின்மேல்வந்துமொய்க்க. அவற்றைப்புகையென்றெண்ணுகின்றாள்,, என்னுங்கருத்துள்ள

"அல்லாள க்ஷோணிபால்த்வத்வடஹிதநகரேசஞ்சர மதிகிரா
கிர்ணாநாதாயரத்நாந் யுருத்கதிராங்காரசங் காகுலாமசீக்ஷிப்த்வா ஸ்ரீகம்

க்ஷிப்த்வா ஸ்ரீமடகம்டம்தது பரிமுதுகுளீபூத நேத்ராதமம்தீவான்
ஸாமோதாநுயாதைர்மதுகர நிகரைர்த்தூமஸம்காசபிபர்த்தி,,

என்னுமிச்சுலோகத்தைச்சொல்ல, அரசன்மகிழ்ந்து அக்ஷரத்து
க்கோடிலக்ஷமாகப்பொன்னைவாரி வழங்கினர் அப்பால்களிதாசன் அ
வ்வல்லாளதேசத்தரசனிடத்திற்றனேமிக்கசம்பிரமமாகவிருந்துவிளங்கி
வருநாளில், தன்னைக்காளிதாசன்பிரிந்தவனாறே அவனபினனே சொல்
லப்பகபற்றகருத்தினனாய்த் தாராநகரத்திலரசுபுரிந்திருந்த போஜமகா
ராசன காளிதாசனுடையபிரிவைச் சகிக்கமுடியாதவனாகி, தனது பிர
தானியொருவனை அல்லாளதேசத்துககுப்போக்கிக்காளிதாசனை அழை
த்துவருமாறு ஆஞ்ஞாக்கான அவ்வாறே அப்பிரதானிகாளிதாசனி
டஞ்சென றுகருத்தைவிட, காளிதாசன, தானகொண்டிருந்தகோபந்த
ணிந்து போஜனிடஞ்செல்ல ஒருப்பட்டவனாகி, அல்லாளநாட்டு வேந்த
னிடஞ்சென்று பிரியாவிடை பெற்றுக்கொண்டு, போசனுடையநகரஞ்
சார்ந்து உக்கியானவனத்திற்போயிருந்தான். அதனை அறிந்தபோஜன்
அங்கேபோய்க் காளிதாசனைவணங்கி உபசரித்தான் அவ்வளவில் இரு
வரும் முன்போலநேசராகி அந்தப்புரஞ் சென்றார்கள். அங்கேகாளிதா
சன்விருந்தருந்தி ஆசிகூறி விடைபெற்றுத் தனதுபிரிவை விட்டுக்
கேளிச்சுகித்து முன்போலக்காலக்கழிவுசெய்து வருகையில். ஒரு
அரசன், பரத்தைகவரிவீசககாளிதாசனைப்பக்கத்திருத்திமஞ்சத்தின்மீ
துபடுத்திருப்பானாயினன் அப்போதுகாளிதாசன் அவ்வேசியைப்பார்த்
துவருணிக்கத்தொடங்கி, கூந்தலைப்பார்த்துஸ்தனங்கள் அஞ்சுகின்றன
ஸ்தனபாரத்தைக்கண்டு கூந்தல் அஞ்சுகின்றது. கசமும் குசமுமாகிய
அவ்விரண்டையுங்கண்டு அல்குல் அஞ்சுகின்றது. மதிமுகத்தாளே இ
வற்றையெல்லாஞ்சந்திசெய்து பரித்துநிற்கும் உனதுவல்லமை வியக்கற்
பாலதே., என்னுங்கருத்துள்ள,

கசபாரத் குசபார குசபாராத்பீமேகசபாரகசகுசபாராஜ்ஜகம்கோ
யம் சநத்ராநநேசமத்கார

என்னுமிச்சுலோகத்தைச் சொல்லக்கேட்ட அரசன், நானும்சொ
ல்லுகிறேன் கேட்பீராக என்றுகூறி, * முகத்தைக்கண்டுபாதங்கள் பீ
தியடைகின்றன, வார்த்தையினால் அதரமும்தந்தபங்திகளும் அச்சமெ

ய்துகின்றன, கசமும் குசமும் நயனமும் இடையைக்கண்டு பயமடைகின்றன என்னுங் கருத்துள்ள,

கூந்தலைப்பார்த்து ஸ்தனங்கள் அஞ்சுகின்றன என்பது எங்ஙனமோவெனில்—கூந்தல்மேகத்துக்கும். ஸ்தனங்கள்மணற் குன்றுகளுக்கும் உவமிக்கப்படுவனவாதக, மழைபெய்யின்மணற்குன்று அழிதல் இயல்பென்னு மேதுப்பற்றி என்க,

கூந்தல் ஸ்தனங்களைக் கண்டஞ்சுகின்றது என்பது எங்ஙனமோவெனில், கூந்தல்-கரும்பாம்பு, ஸ்தனம்-யானை, யானைப்பாம்பு அஞ்சுவதுபற்றி எனக.

கசகுசங்களாகிய அவ்விரண்டையுங்கண்டு அல்குல் அஞ்சுவது எங்ஙனமெனில், கசம்-கூந்தல் கூந்தலுக்குக் கொன்றைக்காய் உவமை குசம்-ஸ்தனம், ஸ்தனத்துக்குடமுவமை அல்குல்பாம்புக்குவமை, ஆகவேபாம்பு கொன்றைக்காயைக்கண்டு சத்துருவென்று திரித்துணர்ந்தஞ்சுதலும், குடத்திலடங்குதலுமியற்கை யாதலினென்க.

முகத்தைக்கண்டு பாதங்கள் அஞ்சுதல் யாங்ஙனமோவெனில், சந்திரனைக்கண்டு தாமரை கூம்புத லியற்கை யாதலாலென்க,

வார்த்தையினால் அதரமும் தந்தபங்திகளும் அஞ்சுதல் எங்ஙனமோவெனில், கிளிமொழியைக்கேட்ட கொவ்வைக்கனியும் மாதுளம்வித்தும் அஞ்சுமென்பது கிளிக்கு அவையுணவாதல் பற்றியெனும் வருணனையாலென்க, கொவ்வைக்கனி அதரத்துக்கும் மாதுளம் வித்துப்பல்வரிசைக்கும் உவமைகள்.

கூந்தலுக்கு இருளுவமை இடைக்குமின்னுவமை மின்னல இருள்கெடுதலால கூந்தல் இடைகஞ்சு மென்றறிதனக, இனி, குசத்துக்கு யானையும இடைக்குச்சிங்கமு முவமையாதலின் சிங்கத்துக்கு யானையஞ்சுமெனக, கணமானுக்குவமையாதலின்மான்சிங்கத்தைக்கண்டஞ்சுதலியற்கை

வதநாத்பதயுகளீயம் வசநாததராஸ்சதந்தபங்திதல்ச, கசதகுசயுகளீயம்லோசனயுகளம் சமத்யத்ராஸதி.

என்னுமிச் சுலோகத்தைச்சொல்லி என்னுடையதே சிறப்புடையது என்று அரசன்கூற, காளிதாசன் தன்னுடையதேசிறப்பான்மிக்கது என்ன, இருவரும்போலி மலைவுற்றுச் களித்தனர். அப்பால் ஒருநாளிரவில் அரசன் நகர்ச்சோதனையின் பொருட்டு

வீதிகள்தோறுஞ் சென்றுலாவிவருகையில் ஒருவீட்டிலே ஒருபிராமண
ன்தனது மனைவியினது மடிமீது தலையைவைத்துச் சயனிப்பதையும்,
அப்பார்ப்பனிக்கருகிலே ஒருமகவு சந்தனக் குழம்புநிறைந்ததங்கப்பா
த்திரத்தில் விழுந்துவிளையாடுவதையுங்கண்டு மனத்திற்குறித்துக்கொ
ண்டு அதனை மறைத்து அக்கினிமயமாகிய அனற்சட்டியெனச்சுட்டித்
தனதுவித்துவான்களுடையவிவேகத்தைப் பரீக்ஷிக்குங் கருத்துடைய
னாகி மற்றைநாட்காலையில் சபைக்குவந்தபோது வித்துவான்களை விளி
த்து சென்றஇரவில் நாம்நகர்வலம் வந்தபோதுஒருவீட்டிலேஒரந்தண
ன்தனதுமனைவியினது மடியிலேதலையைவைத்து நித்திரைபோக அவ
ன்மகவுபக்கத்திலிருந்த ஒருகனற்சட்டியில் விழுந்து விளையாடக்கண்
டோம்என்றுகூற அதுகேட்டகாளிதாசன்நீர்கூறியதுநெருப்பேயாகுக அ
தனுள்நீரடைந்த ஆச்சரியம் ஆச்சரியமன்று பதிவிரதையானவள் தன
துமடியில்நாயகன் நித்திரைசெய்ய அவளுடையமகவு சமீபத்திலிருக்கு
ம் அனற்சட்டியில்விழுந்துவிளையாடினும் அஞ்சுவளோஅஞ்சாளெங்
ஙனமெனில்அக்கினிபகவான் தான் அம்மகவைத்தகிக்கின்தன்னைப்பதிவி
ரதாக்கினிதகித்துவிடுமேயெனஅஞ்சுவனன்றோ என்னுங் கருத்துள்ள,

ஸுதம்பதம் தமரஸமீக்ஷ்யபாவகே போதயாமாஸபதிம்பதிவ்ரா
தா ததாபவத் தத்பதிபக்திகௌரவாத் ஹுதாசநஸ்சந்தநபங்கசீதல.

என்னுமிச்சுலோகத்தைக்கூறிச் சந்தனமென அரசனுடையகுடி
ப்பையும் சுட்டாதுசுட்டினான். இதனைக் கேட்ட அரசன்கழிபெரும்
மகிழ்ச்சியில் பரவசனாகி காளிதாசனைப்பற்றிக் கோடாகத்தழுவினின்
று ஈற்றில்தெளிந்தான்.

இவ்வாறு வருகையில், போஜனுடைய நாட்டிலே காட்டுமிருகங்க
ள்வந்து பயிர் முதலியவைகளை அழிக்கத்தலைப்பட்டனஅதுகண்டு பிரசை
கள் அரசனிடம்போய் முறையிட்டார்கள். குடிகளுக்குவந்த துன்பத்
தைத் தனக்குவந்தாக நோக்குமியல்பினனாகிய போஜன், குடிகள் சொ
ன்ன குறையைக்கேட்டுச் சிறிதுநேரமுஞ்சகிக்க வாற்றாது உடனே வே
ட்டைக்காயத்தனாகிநகரத்தைவிட்டுவெளிப்பட்டு, நாடுகள்தோறுஞ் செ
ன்றுமிருகங்களைத்தேடி வதைசெய்துகொண்டும், வேடரால்பலமிருகங்

களை வலைப்படுத்திக்கொண்டும் பாணத்துக்கும் வலைக்கும் தப்பிக் காடு போய் அடைந்தமிருகங்களைத் தொடர்ந்து காட்டிற்புகுந்தான். அங்கே நெடுநேரமாக வேட்டஞ்செய்ததைமயால் தாகமுறப் பெற்றுத் தடாகந் தேடி நீரருந்தி அதன்சார்பிலுள்ளசோலையிலிருந்து களைநீக்கினன் அப்பொழுது ஒருகுரங்கு ஒருநாவல்மரத்திலேறிக் கொம்புகளை அசைத்துத் தனது இயற்றைக்குணத்தைக்காட்ட, அக்கொம்புகளில் பழுத்திருந்த பழங்கள் அத்தடாகத்து நீரிலே குளுகுக்குளு என்விழுந்தன, பக்கத்திலிருந்த அரசன் அவ்வொலிக்குறிப்பை மனனம் பண்ணிக்கொண்டு காட்டினின்றும் மீண்டு நகரஞ்சேர்ந்தான். அடுத்தநாட்காலையில் அரசன் சபைக்குவந்து தான் காட்டிலிருந்து அவதானித்து வந்தவொலியை "குளுகுக் குளுகுக் குளு,, என்றதொருசுலோக பாதக்கூறுபோலச் செய்து இதனைப் பூரணஞ் செய்வீர்களாக வென்று வித்துவான்களிடம் கூறிக்கேட்டான். அதுகேட்டவித்துவான்க ளெல்லோரும் இதுதென்னை யெனறுபரிகசித்து மயங்கித் திகைக்க, காளிதாச னெழுந்து ஐயனே, நீர்குறித்தது, "பழுத்த கனிகளால் நிறைந்திருந்த நாவல்மரத்திலேகுரங்கேறிக் கொம்புகளைக் கம்பிதஞ்செய்ய அதன் பழங்கள் நீரிலேவிழுந்தவொலிக்குறிப்பேயாம், என்னுங்கருத்துள்ள,

ஜம்பூபலானி பக்வாக் பதந்திவிமலேஜலே,

க்பிகம்பித சாகாப்யோ குளுகுக் குளுகுக் குளு,,

என்னுமிச் சுலோகத்தைச்சொன்னான். இதைக்கேட்ட மாத்திரத்தில் அரசன அன்பாலும் அச்சத்தாலும் மெய் நடுநடுங்கிநாத்தழு தழுத்து ஆனந்தக்கண்ணீர் பொழியக்காளிதாசனுடையபாதங்களில்விழுந்து, குருநாதா இன்றே உனது மெய்வடிவை யுணர்ந்தேன், பிறர் மனத்திலுள்ளதை யோர்ந்து சொல்லும் வல்லமையுடைய உன்னைச்சாமானியனாகிய என்னுடன்சமமாக்கி வைத்திருந்த என் அறியாமை இருந்தவாறென்னே, எனப்பலவாறு துதித்துக் கொண்டாடினன்.

அப்பால் முன்பனிக் காலத்தோரிரவில் குளிர்வாடையால்நலிவுற்ற அரசன், கனற்சட்டியை யணுகிக் குளிர்காலந்திருக்கும்போது, அக்கனற்சட்டியை யெவ்வாறு வருணிக்கலாமென்றுசிந்தித்துப் பார்த்தும் தக்கவாறு புலப்படாமையால், நாளை யுதயத்தில் இத்தனைக் காளிதாசனிடங் கெட்போமென்று முடிவுசெய்து குளிர்நீங்கியபின்படுத்துறங்கி, விடியற்காலத்திலெழுந்து, நித்தியக்கடன்களை முடித்துக்கொண்டு ச

யையிற்பிரவேசித்து, காளிதாசனைப் பார்த்து, கவிசிரேஷ்டரே உமது திருவாக்கால் கனற்சட்டியை வருணிக்குமாறு பிரார்த்திக்கின்றேன் என்றான், நன்றெனக் காளிதாசனு மெழுந்து அரசனைப்பார்த்து, "மண்டலாதிபதி, கனற்சட்டியானது இரும்பினா லமைக்கப்பட்ட தாயினும், அதனிடத்துள்ள விசேஷகுணங்களினால் அதனை வித்துவான்களினது மனத்துக்குவமிக்கலாம எவ்வாறெனில் வெகுலோகையா யிருத்தலாலென்க (பகுலோஹா என்பது, பகு-லோகாஎனவும், பகுல-ஊஹா எனவும இருவகையாகப் பிரிக்க, முறையே மிகுவலிய லோகத்தா லமைந்ததெனவும், நுண்ணியவிவேகமுடையவரெனவும் பொருள்படும்) உஷக்காலத்துச் சூரியனுடையதேர்க்கால்போலவும் கூட்டப்பட்ட சாதகபபுள்ளைப்போலவு மிருக்கின்றது(ஸுகடிதசக்கரா என்பதுபூட்டப்பட்டதேர்ச்சக்கரமெனவும், கூட்டப்பட்ட சாதகப்புள்ளெனவும்பொருள்படும்) இன்னும்கனற்சட்டியானது நீறுபூத்த தழல்போலும் திருமேனியையுடைய சிவனுக்கும் சமமாகத்தக்கது,, எனனுங்கருத்துள்ள

"கவிமதிரிவ பஹுலோஹா ஸுகடித சக்ராப்ரபாதவேளேவ ஹ
ரமூர்த்தி ரிவஹஸந்திபாதி விதூமா நிலோபேதா,,

என்றயிச் சுலோகத்தால் வருணித்தான அதற்காக அரசன்காளிதாசனுக்கு அக்ஷரமொன்றுக்கு லக்ஷம்பொன்மேரையாகக் கணக்கிட்டுப்பரிசளித்தான்,

அப்பால் ஒருநாள் அரசன் தனது பாரிகளிலொருத்தியாகிய கமலையென்பவளுடன்சூதாடப்புகுந்துதான்தோற்கின் அன்றிரவு அவளுடைய அந்தப்புரத்தில்சயனிப்பன என்று சபதமொட்டிச் சூதாடியபோது தோற்றான், அதனால் அன்றிரவு சந்திரமுகியினுடைய அந்தப்புரத்துக்குப் போகும் முறைக்குமாறாகக்கமலையினுடைய அந்தப்புரம் போகவேண்டியவனானான், அச்சமையத்தில் பட்டத்துத்தேவியாகிய லீலாவதியுந்தன்னுடைய அந்தப்புரத்துக்குவருமாறுவேண்டி அரசன்பால்தூதுபோக்கினாள், இவ்வாற்றால் அரசன் அம்மூவரையும் எவ்வாறுதிருப்திசெய்யலாகும் என்னுஞ்சிந்தனையுடையவனாகி ஒருதலைத்துணிவுமின்றியிருந்தான் அடுத்தநாட்காலையில்வழக்கம்போல அரசன்சபைக்குப்போய் அங்கிருந்த வித்துவான்களைப்பார்த்துச்சென்ற இராமுழுதும் நித்திரையற்றேன் என்னும் இவ்வளவேகூறக்காளிதாசன்நிகழ்ந்தவைகளையெ

ல்லாம்சுலோகமாக்கி எடுத்துக்கூறினான் அதுகேட்ட அரசன்வெட்கித் தலைகுனிந்தான்,

சிலநாட்கழிந்தபின்னர் புதிதாக அரசன் தான் அமைப்பித்த ஒரு மாளிகையிற் குடிபுகுகவேண்டிப் பிரயத்தனங்கள்செய்தான் அப்பொழுது அம்மாளிகையில்ஒருபேயிருத்தலையுணர்ந்த அரசன் அதனை அங்குநின்றும்ஓட்டவேண்டி மாந்திரிகர்களைவரித்து ஓட்டுமின் என்ன அவர்கள் எல்லோரும்தத்தம் மந்திரவலியைக்காட்டியும் அதனையகற்றமுடியாதவர்களாகி அப்பேய்க்கே இரையாகிமாண்டார்கள் அதனால் அரசன்மிக்ககவலையுடையனாகிக்காளிதாசனோடு அதனைக்குறித்துச்சூழ்ச்சிசெய்ய காளிதாசன், ✻ ஐயனே இதன்பொருட்டுநீர்கவலவேண்டாம்நானே அதனையோட்டவல்லேன் என்று அரசனுக்குத்திடமொழிகூறி அம்மாளிகைக்கேகி அங்கிருந்துபுவனேஸ்வரியை நோக்கிச்செபம்செய்துகொண்டிருந்தான் அப்போதும்பேய் சினந்தெழுந்துவந்துகாளிதாசன்முன்னர்நின்று உலகம்குவிதம் என்னுங்கருத்துள்ள,

'சர்வஸ்யத்வே

என்னும்வாக்கியத்தைச்சொல்லிற்று இங்ஙனங்கூறிய பைசாசத்தைக்காளிதாசன் பார்த்துசெல்வம்வறுமை என்பவற்றிற்குநற்புத்தி தீப்புத்தியே ஏதுவாகும் எனனுங்கருத்துள்ள,

✻இவ்வாறு ஒருமையிலவிளித்துநீர் எனப்பன்மையிற்கூறுதல்வழுவேயாயினும் அவ்விளி உயர்வுகுறித்ததாதலானும் சிவனேநீர், என ஆன்றோரும்கூறியிருத்தலானும் இழுக்காது,

"ஸுமதிகுமஸ் ஸம்பதாபத்திஹேது,

என்னுஞ்சுலோகத்தைச்சொன்னான் அவ்வளவில் அப்பேய்மீண்டுபோய் இரண்டாஞ் சாமத்தில் திருமபிவந்து விருத்தனும் ஆடவனும் என்னுங்கருத்துள்ளஓர்வாக்கியத்தைச்சொல்லிற்று அதுகேட்டகாளிதாசன் இளம்பெண்கள் ஆடவருடைய சேர்க்கையால்விருத்தரைநீக்குகின்றார்கள் என்னுங்கருத்துள்ள,

"ஸஹபரிச யாத்யஜ்பதேகாமி ரூப்ய

என்னும் வாக்கியத்தைச்சொன்னான் உடனே அதுபோய்மறைந்து மூன்றாஞ்சாமம்தோன்றிஏககோத்திர (ஏகோகோத்திரே) என்றது அதற்குக்காளிதாசன் ஒருகுலத்திற்பிறந்தவன் எனபான அக்குலமனைத்தையும் காப்பவனே எனனுங்கருத்தமைந்த,

"ப்ரபவதிபுமான்யகுடும்பம் பிவதி

என்னும்வாக்கியத்தைக் கூறப்பைசாசம்மறைந்தது அப்பால்நாலாஞ்சாமத்தில் அப்பைசாசம்திரும்பிவந்து;

"ஸ்திரீபுவச்ச,

என்றுகூற அதற்குக்காளிதாசன்ஒருஸ்திரீபுருஷனைப்போற்சகஜாதிகாரத்தையும்வகிப்பவளாயின்விநசிக்குமென்னுங்கருத்தடங்கிய,
"ப்ரபவதியர்தாபூர்த்திகேக்ஷேம்நஷ்டம்,

என்னும்வாக்கியத்தைச்சொன்னான் அவ்வளவிலேபைசாசம் இவனைவெல்லுதலரிது எனச்சிந்தித்துச் சந்தோஷித்துப்பக்கமேவெனக்காளிதாசனை அழைத்து உனக்குவேண்டுவதைக்கேள் தருதும் என்றது அதற்குக்காளிதாசன நீ இவ்விடம் விட்டகல்வதே எமக்குவேண்டியவரமென அதுநன்றெனக்கூறி அக்குடினின்றும் அகன்றுபோயது இதனைக்கண்ட அரசனாச்சரியவசத்தனானான்.

இதன்பின்னர் ஒருநாள் அரசன் ஸ்நானத்தின் பொருட்டுத் தனக்குரியபூந்தடாகத்துக்குப் போய்ப்படித்துறையில் நின்றான் அப்போதரசனுடைய பூசைக்காகவே தீர்த்தமெடுத்துப்போகவந்த அந்தப்புரத்துச்சேடியொருத்தி அரசனைக்கண்ணுற்றுக்காமலகரியால்தன் வசந்தப்பி இடையிற்றாங்கிய தங்கக்குடத்தைச்சோரவிடுத்தாள் அஃது அப்படித்துறையில்விழுந்துருண்டோடும்போது, டம்டம் டடண்டம்டடண்டமென்னுமொலியுடன் ஒலிற்று அவ்வொலிக்குறிப்பை அரசன்மனனம்பண்ணிக்கொண்டுஸ்நானாதிகளை முடித்துச்சபைக்குப்போய்ச்சேர்ந்தான் அங்கேகாளிதாசன்வந்திருப்பக்கண்டு அவனைப்பார்த்து அவ்வொலிக்குறிப்பைமாத்திரஞ் சொன்னான் அதனைக்கேட்டகாளிதாசன் நிகழ்ந்தவற்றையெல்லா முடனறிந்துகண்டானபொன்று.

"ராஜாபிஷேகே மதவிஹ்வலாயா ஹஸ்தாச்யுதோ ஹேமகடோயுவத்யோ, ஸோபாநமார்க்கேஷுகரோதிசப்தம டம்டம்டடமடம் டடடம்டடம்டம்

என்னுமிச்சுலோகத்தைச்சொன்னான இச்சுலோகத்துக்கும் அரசன் அக்ஷரத்துக்கு லக்ஷமேரையாகவே பொன்னைவாரிப்பரிசாக வழங்கினான்மற்றொருநாள அரசனவீதிவழியாகச் சிற்றுலாப்போகையில் ஒருபாத்தைமாதுபங்காடிக்களிற்றுநிற்ப அதனைககண்ணுற்ற அரசன்தன பக்கத்தில்நிற்கின்றகாளிதாசகவியைப்பார்த்துப்பங்காட்டதனைவருணித்தருளுமெனஎன்றெனக்கா அதாசனும்வருணித்தான அஃதியாதெ

ணில் பந்தாடுமிச்சுந்தரிதனதுபந்தைப்பார்த்து ஏபந்தேநீ எனதுஸ்தனங்களுக்கிணையாவையோ இணையாகாய் ஏன்வீணிலே என்னை உன்ஸ்தனத்திற்குச்சமமாகச்சேர்த்துக்கொள் என இரந்துபாய்கின்றாய்தூரபோவெனக் கூறியடிப்பதுபோலப்பந்தை அடிக்கின்றாள் அதுகண்டகருநீலமலர்கள் யாசிக்குமதரித்திரைப்போலமேலிருந்து அவள்பாதங்களில் விழுந்தனஎன்னுங்கருத்துள்ள,

பயோதராகாரதரோஹிகந்துக
கதாணரோஷாயதேமுஹுமுஹு
இதிவனேத்ராக்ரதிபீதமுத்பலம்
ஸ்திரீயாப்ரஸாதாயபபாதபாதயோ

என்னும் இச்சுலோகமென்க இவ்வாறேகாளிதாசன்நாள் தோறும் இண்மைநுண்மையனபாதிகளாற் சிறந்தசிங்காரகவிகள்சொல்லி அரசனைமகிழ்வித்து அவனிடம்குவை குவையாகப்பொன்னைப்பரிசாகப்பெற்றுவந்ததுமன்றி இடையிடையே அநேகநூல்களையும் இயற்றியவந்தான் நாடகாலங்காரத்திலும்காளிதாசன்வல்லவன் என்பது அவனாலியற்றப்பட்ட சகுந்தலைநாடகம்விக்கிரமோர்வசிநாடகம் மாளவிகாக்கினிமித்திரநாடகம்முதலியவற்றாலுணரப்படும்மற்றை எப்பாஷையிலும் அவ்வகைச்சிறந்தநாடகநூல் கிடையாவென ஆய்ந்தோர்கூறுப.

பௌராணிகரூபமாகச்செய்யப்பட்டநூல்கள் இந்நூற்றொடக்கத்திலே கூறப்பட்டனகாண்க தோத்திர ரூபமாக வியற்றப்பட்ட நூல்கள் சியாமளாதண்டகம்கவுரிசதகம் முதலியனகருவிநூல்களாக இவனாலியற்றப்பட்டநூல்கள் சுருதபோதம்நானார்த்த சப்தரத்தினம்சந்திரலோகம்முதலியன இவையேயன்றிசமயநூல்கள் சுத்தசந்திரிகாவியாக்கியானம் முதலியன.

போஜராஜனுடைய பிரியகவிகள்காளிதாசன் பவபூதிதண்டி என்னுமூவரே இவருள்காளிதாசனே சிரேஷ்டனென்பன் இவன் இற்றைக்கு ஆயிரத்துநானூறுவருஷங்களுக்குமுன்னர் இருந்தவனென்பது அநேகர் துணிபு

இக்கவிசிரேஷ்டன்கல்வியான்றபெரியோனாயினும் பரத்தையர்கமனத்தை நீக்காதவனென்பதைக்கேட்க அநேகர் குற்சிதமெய்துவர் அரசன் இவன்மேல் இடையிடையே வெறுப்புற்றிருந்ததைக்குமதுவேகாரணம் அரசன் அங்ஙனம்வெறுப்புக்காட்டியும்காளிதாசன அப்பரத்தையர்கமனத்தைக்கைவிட்டிலன்பரத்தையென இங்குயாம்பேசு

துபாத்தையுருக்கொண்டுபோந்து அவனுடன் மறைந்துவந்து சுகித்தி ருந்த அரசகுமாரியை அன்று இவனுக்குமரணகாரணமா யிருந்ததும் பாக்கையர் கமனமே இவன்சுற்றில் அரசனைப்பிரிந்து தனக்குரிய அரசகுமாரி வீட்டுக்குப்போகாது நவீனமாக ஒரு பாத்தைவீட்டுயே ச்சேர்ந்தான் அப்போது அரசன் இவனுடைய வரவைநெடுநாளாக பார்த்திருந்தும் வெளியாகாமைகண்டு நவீனமாக ஒருசுலோகபாதி யைச்செய்து இதனைப்பூரணஞ்செய்ய வல்லாருக்கு என அரசிற்பாதி கொடுப்பேன் என்றுமுரசறைவித்தான.

அச்சுலோகபாதம் வருமாறு,—

தாமரைமலரினிடமாகத் தாமரை உற்பத்தியாகிமலர்ந்திருப்ப துகாணப்படுகின்றது என்னுங்கருத்துள்ள,

குஸ்மோ குஸமோற்பத்தி,

த்ருஸ்யதே தவத்ருஸ்யதே.

என்பதுஇதனை அப்பரத்தைமாது காளிதாசனுடையபள்ளியறை மேல் காஸ்மாட்டுசுவரிலே மையினால்வரைந்துவிட்டாள் அவன்நித்தி ரைவிட்டெழுந்தபோது எதிரில் அச்சுலோக பாதம்புலப்பட்டது உட னே அதன்உத்தரபாதத்தை எழுதிப் பூரணஞ்செய்துபோயினன்.

அதுவருமாறு,—எ, பெண்ணே, போஜனதுமுகமாகியதாமரைம லரிலே நயனமாகிய இருதாமரைமலர்கள் காணப்படுகின்றனவே என் னுங்கருத்துள்ள,

ஹே நாரீ தவ முகாத்போஜ

நேத்ர இந்தீவரத்வயம்.

என்பதுஅதுகண்ட பரத்தைமாது பொருளவாவின்வாய்ப்பாட்டு க்கிசைந்திப்பாளாயினள் இவனைநாம் கொல்லோமாயினஎமக்கு இராச்சிய ஞ்சித்திக்காது எப்படியும் அவனேசெய்தானென்பதுஅரசனுக்குப் புல ப்படும்புலப்படவே அவனுக்குப்பரிசுகொடுக்கஉடன்படுவான் ஆதலால் இன்றிரவில்அவனைக் கொலைசெய்துமுற்றத்தில்புதைத்துவிட்டு நாளையு தயத்திலேசுலோகத்தோடுஅரசன்சமுகம் புகுவோம் என்இவ்வாறு சி ந்தித்து முடிவுசெய்துகொண்டுகாளிதாசன் சயனித்தவுடன்வாளால் அ வனைககூறிட்டு முற்றத்தில் புதைத்துவிட்டு அடுத்தநாட்காலையில் சு லோகத்தோடுஅரசன்சமுகஞ்சேர்ந்தாள் அதனை அர[illegible]கண்டமாத்தி

ரத்தில்இஃதுயாவர்செய்த என்றுவினவ அப்பாதகியானே செய்தேன் என்றாள் அதுகேட்ட அரசன்விம்மிதமுற்று பாதகி, கொன்றையாவெறையா வென்று அதட்டிவினவ பாதகிதிகைத்தாள் அரசன் அவளைச்சிறைப்படுத்திவிட்டு அவள் வீட்டுக்குச் சென்றுபரிசோதிக்கையில் அவனுடைய உடலத்துண்டங்கள் அகப்பட்டன அரசன்தான் பெற்றிருந்த நகைவிகாரத்தினால்காளிதாசனுடையதலையை எடுத்துக்கையில் ஏந்திக்கொண்டு நடந்ததைச்சொல்லென்ன அதுவும்நிகழ்ந்தவாறு கூறிற்று அப்பால்அரசன் துக்கசாகரத்தில் மூழ்கித்தேறி அபரக்கிரியைகளை முடிப்பித்தான் அவளையுங் கொல்வித்தான்ஈற்றில் அரசன்தானும்கொலைசெய்துகொண்டிருந்தான் இவற்றைக்கேள்வியுற்றவித்தியாகுரோசனை என்னும் அரசகுமாரியும் வேசியுருக்கொண்டு காளிதாசனை இணைபிரியாது சுகித்திருந்தவளுமாகிய கற்பின்மிக்காள், அரசன்இறந்தவிடத்திற்கோடி அவனையும் காளிதாசனையுமெழுப்பிச்சிறிதுகாலம் உச்சீவித்து வாழ்ந்திருக்கச்செய்தாள்எனக்கன்னபரம்பரையாகப பலர்கூறுகின்றனர். இந்தப்பிராமாணியம், வேறுசிலர்இன்னும்சிலவாறு கூறுப.

காளிதாசப்புலவர் சரித்திரம்.

முற்றிற்று.